# சீர்மிகு
# சிவகங்கைச் சீமை

*(சிவகங்கைச் சீமை பற்றிய முதல் வரலாற்று நூல்)*

**டாக்டர் எஸ்.எம்.கமால்**

வெளியீடு:

**பசும்பொன் மாவட்ட கலை, இலக்கிய**
**வரலாற்று ஆய்வு மையம்,**
மன்னர் மேனிலைப்பள்ளி வளாகம்,
சிவகங்கை - 630 561.

First Edition : February 1997
© Author : Dr. S.M.Kamaal
Paper : Maplitho 16 Kg.
Pages : 22 + 338 = 360

# சீர்மிகு சிவகங்கைச் சீமை

(சிவகங்கைச் சீமை பற்றிய முதல் வரலாற்று நூல்)

# SEERMIGU SIVAGANGAI SEEMAI

(The First Historical Book of Sivagangai Zamindari)

**Price: Rs.90**

■ Publisher: V.Srirengarajan, Founder - President, Pasumpon District Art, Literature & Historical Research Centre, Rajahs Schools, Sivaganga. ■ Printer: Mass Typhographic, Chennai - 600018 ■ Wrapper Designer: Bhavani Shankar, Chennai.

# சமர்ப்பணம்



*செங்கண் மறவரது சீற்றமும் ஏற்றமும்*
*இழைந்த சிவகங்கைச் சீமை வரலாறு*
*நூலுருப் பெற நாளும் உதவிய வேலு*
*நாச்சியாரது வீர வழியினர் மேதகு*
*ராணி இராஜலட்சுமி நாச்சியார் அவர்களுக்கு*

## நெஞ்சம் நிறைந்த
## நன்றிக்குரியவர்கள்:

1. சிவநேயச் செல்வர், திருத்தொண்டர். திரு. வே.ஸ்ரீரங்கராஜன் பி.ஏ.,
   தலைவர்,
   பசும்பொன் மாவட்ட கலை இலக்கிய வரலாற்று ஆய்வு மையம்,
   சிவகங்கை.

2. புலவர் டாக்டர் திரு செ.இராசு, கல்வெட்டியல் துறை,
   தமிழ்ப் பல்கலைக்கழகம்,
   தஞ்சாவூர்.

3. செந்தமிழ்ப்புலவர் டாக்டர் திரு. புரட்சிதாசன்,
   வசந்தமகால், 17 வடக்கு போக் சாலை,
   சென்னை-17.

4. திரு. வி.எஸ்.குமரகுரு பி.ஏ.பி.எல்.
   மேலாளர், சிவகங்கை தேவஸ்தானம்,
   சிவகங்கை.

5. ஆணையர் மற்றும் அலுவலர்கள்
   தமிழ்நாடு அரசு ஆவணக்காப்பகம்,
   சென்னை-8.

# நூலாசிரியர்



முதல்வரிடமிருந்து பரிசு பெறுகிறார் ஆசிரியர்.

மறவர் சீமையின் தலைநகரான இராமநாதபுரத்தில் பிறந்தவர். நாற்பது ஆண்டுகள் தமிழ் நாடு அரசுப் பணியில் சிறப்பாக பணியாற்றி ஓய்வு பெற்றவர். கலை, இலக்கியம், வரலாறு, அகழ்வாய்வு, கல்வெட்டு, செப்பேடு ஆகிய துறைகளில் நல்ல ஆய்வும் அனுபவ முதிர்வும் உடையவர்.

ஆய்வாளர், நூலாசிரியர், பதிப்பாளர், இதழாசிரியர், வானொலி வடிவ எழுத்தாளர், சமுதாயத் தொண்டர், தென்னிந்திய வரலாற்றுப் பேரவை (வேலூர்), தென்னிந்திய வரலாற்றுக் காங்கிரஸ், தமிழ்நாடு வரலாற்று காங்கிரஸ் (சென்னை) அனைத்து இந்திய ஆவணக் காப்பாளர் இயக்கம் (புதுடெல்லி) ஊர்ப்பெயர் ஆய்வுக் கழகம் (திருவனந்தபுரம்) தமிழக தொல்லியல் கழகம் (தஞ்சாவூர்) ஆகிய அமைப்புக்களில் ஆயுள் உறுப்பினராகப் பணியாற்றி வருகிறார்.

மதுரை வட்டார, வரலாற்று ஆவணக் குழுவிற்கு தமிழ்நாடு அரசினால் நியமனம் செய்யப்பெற்று கடந்த ஏழு ஆண்டுகளாக மதுரை மாவட்ட ஆவணக் காப்பகத்துடன் தொடர்பு கொண்டுள்ளார்.

இதுவரை, இவர் வரைந்து வெளியிட்ட ஏழு நூல்களில் மூன்று நூல்கள் தமிழ்நாடு அரசினரால் சிறந்த நூல்களாக தேர்வு செய்யப்பெற்று 1989, 1991, 1994 ஆகிய ஆண்டுகளில் நடைபெற்ற திருவள்ளுவர் திருநாள் அரசு விழாவில் முதல் பரிசும், பாராட்டு இதழ்களும் வழங்கப்பட்டுள்ளன. 1988-ல் சென்னை சீதக்காதி அறக்கட்டளையினர் நடத்திய மாநில அளவிலான நூல் போட்டியில் ''முஸ்லிம்களும் தமிழகமும்'' என்ற நூல் பதினாயிரம் ரூபாய் பரிசும் பாராட்டும் பெற்றது.

# அட்டையில்...

முன் அட்டை:

*சிவகங்கை அரண்மனையின் முகப்புத் தோற்றம்.*

*சிவகங்கைச் சீமையின் முதல் மன்னர் சசிவர்ணத் தேவரின் சிற்பம்.*

*சிவகங்கை அரண்மனையின் முகப்பில் அமைந்துள்ள ராணி வேலு நாச்சியார் சிலை.*

பின் அட்டை:

*விடுதலைப் போரில் முதல் களப்பலியான சிவகங்கைச் சீமையின் இரண்டாவது மன்னர் முத்துவடுகநாதத் தேவர்.*

# பொருளடக்கம்

# இந்த நூலைப்பற்றி...

நாடு விடுதலையடைந்து பல ஆண்டுகளாகி விட்டன. பழமை ஒளியும் புதுமை உயிர்ப்பும் ஊடாடிய புதிய சிந்தனை, புதிய பார்வையுடன் படைப்புகள் பல வெளி வந்து இருக்க வேண்டும். அவைகளில் சிறப்பாக தாயகத்தின் உண்மை வரலாறும் இடம் பெற்றிருக்க வேண்டும். ஆனால் மன நிறைவு தரும் வரலாற்று நூல்கள் மிகக்குறைவான எண்ணிக்கையில் வரையப்பட்டுள்ளன. பதினைந்தாவது நூற்றாண்டு முதல் பதினெட்டாம் நூற்றாண்டு வரையிலான தமிழக வரலாறு இன்னும் சரியாகத் தொகுக்கப்படவில்லை.

விஜயநகரப் பேரரசின் பிடிப்பு, திருநெல்வேலி தென்காசிப் பாண்டியர்கள், மதுரை, தஞ்சை, செஞ்சி நாயக்கர் அரசுகள், தஞ்சை மராத்திய அரசு, மறவர் சீமை சேதுபதிகள், சிவகங்கை மன்னர்கள், திருநெல்வேலிச் சீமைப் பாளையக்காரர்கள், முதுகுளத்தூர், சிவகங்கை மறவர்கள் கிளர்ச்சி, வேலூர் சிப்பாய்களின் புரட்சி என்பன போன்ற வரலாற்றுப் பிரிவுகளை மக்கள் அறிந்து கொள்ளும் வகையில் ஆய்வு நூல்கள் வரையப்படாதது வேதனைக்குரியது. இந்த நிகழ்வுகளின் அடிநாதமாக அமைந்துள்ள நாட்டுப்பற்று, அன்னிய எதிர்ப்பு உணர்வு, சமூக நல்லிணக்கம், மனித நேயம் ஆகிய மனிதக் கூறுகளைப் புரிந்து கொள்ளாத நிலையில், புலர்ந்து வரும் இருபத்து ஒன்றாவது நூற்றாண்டின் புதிய இலக்குகளை திட்டமிடுவது இயலாத ஒன்று.

இந்தக் குறைபாட்டினை நன்கு உணர்ந்த சிவகங்கை ராணி மேதகு இராஜ லெட்சுமி நாச்சியார் அவர்கள் தனது முன்னோர்களான சிவகங்கைச் சீமை மன்னர்களின் வரலாற்றுப் பகுதியினையாவது விரிவாக வரைவது என்ற அவர்களது பெருவிருப்பினை அண்மையில் என்னிடம் தெரிவித்தார்கள். தமிழக வரலாற்றிற்கு தகைமை சேர்க்கும் இந்த சீரிய முயற்சியினைப் பாராட்டி அவர்களது விழைவினை நிறைவு செய்யும் வகையில் இந்த நூலினைத் தொகுத்துள்ளேன்.

சிவகங்கைச் சீமையின் வரலாறு பதினெட்டாம் நூற்றாண்டிலிருந்து தான் தொடங்குகிறது என்றாலும் இந்த வரலாற்றிற்கு உதவும் ஆவணங்கள் மிக

மிகக் குறைவு. கி.பி.1728 முதல் தொடங்கிய இந்தத் தன்னரசு பற்றி தொன்மையான சான்றாவணங்கள் எதுவும் கிடைக்காத நிலை. எனினும் மிகவும் முயன்று சிவகங்கை சமஸ்தான தேவஸ்தான ஆவணங்களில் சிவகங்கை அரச வழியினரான திரு. பாப்பாத்துரை என்ற திரு. ஸ்ரீரங்கராஜன் அவர்கள், நாலுகோட்டைப் பாளையக்காரர் வழியினரான செல்வ ரகுநாதன் கோட்டை, முத்தமிழ்ப் புலவர் டாக்டர் புரட்சிதாசன் ஆகியோரிடம் உள்ள ஆவணங்கள் சென்னையில் உள்ள தமிழ்நாடு ஆவணங்கள் காப்பகத்தில் ஆவணத் தொகுதிகள் மற்றும் படமாத்தூர், நாலுகோட்டை, சக்கந்தி, அரண்மனை சிறுவயல், காளையார்கோவில், அரளிக்கோட்டை, விருபாட்சி ஆகிய ஊர்களில் கள ஆய்வுகளில் கிடைத்த செப்பேடுகள் மற்றும் குறிப்புகளை கொண்டு இந்த நூல் உருவாக்கப்பட்டுள்ளது.

சிவகங்கை மன்னர்களது நாட்டுப்பற்று, சமுதாயப் பணிகள், தமிழ்த் தொண்டு, சமயப்பொறை ஆகிய அருஞ்செயல்களுடன் சிவகங்கைச்சீமை மண்ணின் மாண்பு, தொன்மை, மக்களது மொழிப்பற்று, விடுதலை உணர்வு ஆகிய பல நிலைகளையும் சுருங்கிய வடிவில் குறுகிய கால வரம்பில் தொகுக்கப்பட்டுள்ளது. எனினும் எல்லாவகையிலும் நிறைவு பெற்ற நூலாக அல்லாமல் சிவகங்கைச் சீமை வரலாறு பற்றிய முதல் நூல் என்ற வகையில் வரலாற்று வாசகர்களும் ஆய்வாளர்களும் இந்த நூலுக்கு வரவேற்பு வழங்கி இன்னும் பல வழி நூல்கள் வெளிவருவதற்கு உதவ வேண்டும் என்பது எனது வேண்டுகோள்.

மேலும், ஏற்கனவே பல சமுதாயப் பணிகளில் மிகுந்த முனைப்புடன் ஈடுபட்டு தொண்டு புரிந்து வருகின்ற சிவகங்கை ராணி மேதகு இராஜலட்சுமி நாச்சியாரவர்கள் சிறந்த வரலாற்று உணர்வுடன் இந்த வரலாற்று நூல் வெளிவருவதற்கு ஆக்கமும் ஆதரவும் அளித்தமைக்கு அவர்களுக்கு எனது நெஞ்சார்ந்த நன்றியினைப் புலப்படுத்திக் கொள்கிறேன். அத்துடன் இந்தப் பெருமுயற்சிக்குப் பின்னணியாக விளங்கிய எனது அருமைச் சகோதரரும் சிவநேயத் திருத்தொண்டருமான பாப்பாத்துரை என்ற ஸ்ரீரங்கராஜன் அவர்களுக்கும் இந்த நூலினை அழகிய வரலாற்றுப் பெட்டகமாக அமைத்துக் கொடுத்த சென்னை மாஸ் டைப்போ கிராபிக்ஸ் நிறுவன உரிமையாளர் திரு. வி.எஸ்.சுரேஷ் பி.இ. அவர்களுக்கும் எனது நன்றிகள்.

இராமநாதபுரம்,
25 டிசம்பர் 1996

எஸ்.எம்.கமால்
நூலாசிரியர்

# பதிப்புரை

மிகப் பழமையான நாகரீகங்களில் தமிழர் நாகரீகமும் ஒன்று என்பது உலகு ஒப்புக் கொண்ட உண்மை. ஆனால் வரலாற்று உணர்வு சிறிதும் இல்லாத சமுதாயம் தமிழ் சமுதாயமே என்றால் அது மிகையாகாது.

மிகப் பழமையான நாகரீகமான கிரேக்க நாகரீகத்தின் வரலாற்றை குறித்து வைக்க தூசிடைடீஸ் (Thucidides) கிடைத்தது போல் நமக்கு ஒருவர் கிடைக்கவில்லை. பெரும்பாலும் வழி வழிச் செய்திகளை நம்பியே நமது வரலாறுகள் வாழ்ந்து கொண்டிருப்பது வேதனைக்குரிய விஷயம். கல்வெட்டுகள், செப்பேடுகள், ஓலை முறிகள் போன்ற வரலாற்றுப் பொக்கிஷங்களை பேணி காக்கத் தவறி விட்டோம்.

கோயில்களில் உள்ள கல்வெட்டுகளை பெயர்த்தும் தகர்த்தும் பூசியும் பெரும்பாலும் சிதைத்து அழித்து வருகிறோம். செப்பேடுகள் போற்றப்படாமல் மாறி வரும் சமுதாய அமைப்பில் 'பேரீச்சம்பழ வண்டி'களை நாடி அடைக்கலம் புகும் நிலையும் உருவாகி விட்டது.

கல்விக் கூடங்களில் வரலாற்றை விரும்பிப் படிக்கும் மாணவர்களின் எண்ணிக்கையும் அருகிக் கொண்டே வருவது கண்கூடு. விஞ்ஞானப் பாடங்களுக்கு உள்ள மரியாதை சரித்திரப் பாடங்களுக்கு இல்லாமற் போய்விட்டது.

வரலாற்று ஆய்வாளர்கள் என்று களத்தில் இறங்கியவர்கள் அடிக்குறிப்புகளையும், செவி வழி செய்திகளையும், நாடோடிப் பாடல்களையும் மட்டும் வைத்து நாட்டின் வரலாறு இதுதான் என்று மனம்போன போக்கில் எழுத துணிந்து விட்டார்கள். பெரும்பாலும் அப்படிப்பட்டவர்களின் நோக்கமெல்லாம் ஒரு குறிப்பிட்ட நோக்கத்தோடு வரலாற்றை தன் பக்கம் திருப்பும் முயற்சியாகவே முடிந்து விட்டது.

சிவகங்கை சீமையின் வரலாறு என்பது இன்றைய பசும்பொன் முத்துராமலிங்கத் தேவர் மாவட்டத்தின் வரலாறே ஆகும். இந்தப் புதிய மாவட்டத்தின் வரலாறு முறையாக தொகுக்கப்பட வேண்டும் என்பது

எங்கள் மையத்தின் ஆசை. இந்த ஆசையை நிறைவேற்றி வைப்பது யார்? இதை தீர்மானிப்பதில் எங்களுக்கு எந்தச் சிரமமும் இருக்கவில்லை. அத்தகைய எண்ணம் எழுந்ததும் எங்கள் நினைவிற்கு வந்தவர் டாக்டர் எஸ்.எம்.கமால். இந்த மாவட்டம் பிரிக்கப்படாமல் இராமநாதபுரமாக இருந்தபோது அதன் தொடர்புடைய வரலாற்று நூல்களை எழுதி அரசாலும் ஆய்வாளர்களாலும் பாராட்டப்பட்டவர்.

உடல் நலிவுற்ற நிலையிலும், உளச் சோர்வின்றி இந்த அருமையான நூலை எழுதி முடித்த அவருக்கு தமிழ் சமுதாயம் கடமைப்பட்டிருக்கிறது என்றால், மிகையாகாது.

இந்தப் பணியில் எங்கள் மையம் இறங்க உற்றுழி உதவியும் உறுபொருள் கொடுத்தும் ஆதரவு நல்கிய கல்விக் காவலர் சண்முக மாமன்னர் ஈன்றெடுத்த பொற்புடை பெருமாட்டி மேதகு சிவகங்கை ராணி ராஜலக்ஷ்மி நாச்சியார் அவர்களுக்கு எங்கள் ஆய்வு மையத்தின் சார்பில் நன்றி சொல்ல கடமைப்பட்டுள்ளோம்.

சிவகங்கையில் உள்ள மகாத்மா காந்தி நினைவுப் பூங்கா அறக்கட்டளையினர் இந்த நல்ல பணியில் தங்கள் பங்கு சிறக்க வேண்டும் என்ற நல்ல நோக்கத்தோடு ரூ.15,000/- (ரூபாய் பதினைந்தாயிரம்) கொடுத்து உதவிய பெருந்தகைமைக்கு அதன் அறங்காவலர்களான,

மேதகு ராணி ராஜலக்ஷ்மி நாச்சியார் (தலைவர்)
மேதகு ரகுராஜ துரை (பொருளாளர்)
திரு ஏ.மா.சுதர்சன நாச்சியப்பன் (துணைத்தலைவர்)
தியாகி திரு அரு.சதாசிவம் (செயலர்)
தியாகி திரு கே.இராமசாமி
திரு ஜனாப் எம்.எஸ்.அப்பாஸ்

ஆகியோருக்கும் நன்றி சொல்ல கடமைப்பட்டுள்ளேன்.

வே.ஸ்ரீரங்கராஜன்
(தலைவர்)
பசும்பொன் மாவட்ட
கலை-இலக்கிய வரலாற்று ஆய்வு மையம்.

சிவகங்கை
10.12.1996

# அணிந்துரை

முனைவர் **கோ.விசயவேணுகோபால்**, எம்.ஏ., எம்.லிட்., பி.எச்.டி.,
(முன்னாள்) பேராசிரியர் & தலைவர், கலை வரலாற்றுத்துறை,
மதுரை காமராசர் பல்கலைக்கழகம்.

''சேதுநாட்டு வரலாற்றுச் செம்மல்'' டாக்டர் எஸ்.எம்.கமால் அவர்கள் இப்போது ''சீர்மிகு சிவகங்கைச் சீமை'' எனும் வரலாற்று நூலை எழுதி வெளியிட்டிருக்கின்றார். பெரிய மறவர் சீமையின் வரலாற்றில் நாட்டஞ்செலுத்தி வந்தவர், இப்போது சின்னமறவர் சீமை வரலாற்றில் நாட்டஞ்செலுத்தி நல்லதொரு நூலை நமக்கு அளித்துள்ளார். மொத்தம் பதின்மூன்று இயல்கள் கொண்ட இந்நூலின் முதல் பதினொரு இயல்களில் சங்க காலந்தொடங்கி இருபதாம் நூற்றாண்டு வரையிலான சிவகங்கைச் சீமையின் தோற்ற வளர்ச்சிகள் குறித்த வரலாறு தக்க முதன்மை, துணைமைச் சான்றாதாரங்களோடு விளக்கப்பட்டுள்ளது. 12 ஆவது இயல் இந்திய விடுதலைப் போராட்டத்தில் சிவகங்கைச் சீமையின் பங்கு பற்றி விளக்குகிறது. 13 ஆவது இயல் சிவகங்கை வரலாறு குறித்து முன்னர் எழுதப்பட்ட நூல்களைப் பற்றிய விமர்சனமும் விளக்கமுமாக அமைந்துள்ளது.

சிவகங்கைச் சீமை பற்றிய அனைத்துச் செய்திகளையும் உள்ளடக்கியதாகவும், நடுநிலையோடு எழுதப்பட்டதாகவும் இந்நூல் அமைந்துள்ளது. ஆசிரியர் தொகுத்துத் தந்துள்ள முதன்மை, துணைமை ஆதாரங்கள் அவர்தம் உழைப்பினை நமக்குப் புலப்படுத்துகின்றன. முதன்முதலாக ஆசிரியர் அரிதின் முயன்று தொகுத்தளித்துள்ள செப்பேடுகள் வரலாற்றாய்வாளர்கட்கும், சமூகவியல் ஆய்வாளர்கட்கும் கிடைத்த ஒரு புதையல் என்றே சொல்லலாம். ஆசிரியர் ஏற்கனவே சேதுபதிகளின் செப்பேடுகளை வெளியிட்டுப் புகழ்பெற்றவர். இப்போது சிவகங்கைச் செப்பேடுகளை வெளியிட்ட முதல் வரலாற்று ஆசிரியராகவும் சிறப்புப் பெறுகிறார்.

ஆசிரியர் 11 ஆவது இயலில் எடுத்துக்காட்டியுள்ள தமிழ்ச் சிற்றிலக்கியங்கள் பற்றிய செய்திகள் சிவகங்கை மன்னர்களின் தமிழ்த்தொண்டு பற்றி விளக்குவதோடு, தமிழ் இலக்கிய ஆய்வாளர்கட்குப் பல புதிய செய்திகளையும் தருகின்றன. வீரமாமுனிவர் எழுதிய ''பரமார்த்த குருக்கள் கதை''யே தமிழில் முதல் உரைநடைநூல் எனக் கருதப்பட்டு வருவதை மாற்றும் வகையில் முத்துக்குட்டிப் புலவர் எழுதிய ''வசன சம்பிரதாயக் கதை'' வீரமாமுனிவருக்கு முன்னரே எழுதிச் சிங்கப்பூரில் வெளியிடப்பட்டுள்து என்று எடுத்துக் காட்டியுள்ளார். இந்நூலை விரைவில் மீண்டும் அச்சேற்ற நூலாசிரியரே ஆவன செய்ய வேண்டும்.

ஆசிரியர் இறுதியில் கொடுத்துள்ள இணைப்புகள் இலக்கிய, சமூக, கோயில் வரலாற்று ஆய்வாளர்கட்கும் பெரிதும் துணை செய்யும் தகவல்கள். ஆசிரியருக்கு நம் பாராட்டுக்கள்.

ஆசிரியர் எழுதியுள்ள இருநூல்கள் ஏற்கனவே பரிசுகள் பெற்றுள்ளன. இந்நூலும் அவ்வாறே பரிசு பெறும் என நாம் நம்புகிறோம்.

ஆசிரியர் இன்னும் பலப்பல நூல்கள் இதுபோல எழுதி வழங்க வேண்டுமென விழைகின்றேன். ஆசிரியருக்கு என் நல்வாழ்த்துக்கள்.

அன்பன்,

கோ.விசயவேணுகோபால்

மதுரை.
16.12.96




**வரைபடம் 1:** *பிரிக்கப்படாத இராமநாதபுர மாவட்டத்தில் சிவகங்கை மற்றும் இராமநாதபுர ஜமீன்தாரி.*




**வரைபடம் 2:** ***1801-ல் சிவகங்கை ஜமீன்தாரி***

# நாலு கோட்டையார் கொடி வழி *

வேங்கன் பெரிய உடையாத் தேவர்
என்ற வெங்குத் தேவர்

- சலுகை பெரிய உடையாத் தேவர்
  - திரியம்பகத் தேவர் (மக்கள் விவரம் இல்லை)
  - சசிவர்ணத்தேவர் (கி.பி. 1730-1742)
    - அகிலாண்ட ஈசுவரி நாச்சியார்
      - பெண்
      - பெண்
      - பெண்
      - பட்டாபி ராமசாமித் தேவர்
      - சுவர்ண கிளைத் தேவர்
    - பூதக்காநாச்சியார் (மராத்தி நாச்சியார்)
      - முத்து வடுக நாத தேவர் (கி.பி.1736 - 1772)
  - லவிலோசனத்தேவர் (மக்கள் விவரம் இல்லை)
- பூதகத்தாய்

வேலுநாச்சியார்
|
சக்கந்தி வேங்கன் பெரியஉடையாத் தேவர்

வெள்ளை நாச்சியார்
|
குழந்தை நாச்சியார் என்ற பூதக்கா நாச்சியார்
(இறப்புடன் கொடி வழி முடிந்தது)

1. மதியார் அழகத் தேவர் (இறப்பு கி.பி.1583)
2. தளவாய் தேவர் (இறப்பு கி.பி.1599)
3. வெங்குத் தேவர்
4. குமாருத் தேவர்
5. வேண்டாதாகா தேவர்
6. பெரிய உடையாத் தேவர்
7. குப்பணத் தேவர்
8. அதிகுந்த தேவர்
9. வெங்குத் தேவர்
10. நட்டணத் தேவர்
11. வேங்கன் பெரிய உடையாத் தேவர்

* (சிவகங்கை தேவஸ்தான ஆவணங்களின்படி)

# நாலுகோட்டை கொடி வழி *

**1**

(முதல் மனைவி பெயர் தெரியவில்லை)

1) திரியம்பகத் தேவர்

2) லவலோசனத் தேவர்

3) சசிவர்ணத் தேவர்

அகிலாண்ட ஈசுவர நாச்சியார்

முத்து வடுகநாதத் தேவர்

ராணி வேலுநாச்சியார்

வெள்ளச்சி நாச்சியார்

சக்கந்தி வேங்கன் பெரிய உடையாத் தேவர்

**2**

சிந்தாமணி நாச்சியார்

செல்வ ரகுநாதத் தேவர்

சேதுபந்தன நாச்சியார்

1) பெரிய உடையாத் தேவர்

2) சசிவர்ணத் தேவர்

3) வடுகநாதத் தேவர்

4) கிருஷ்ணசாமித் தேவர்

5) சொக்கலிங்கத் தேவர்

**3**

கோவானூர் நாச்சியார்

1) பூவலகுத் தேவர்

2) சேனாபதித் தேவர்

* (செல்வ ரகுநாதன் கோட்டை ஆவணங்களின்படி)

# சிவகங்கைச் சீமையின் சீரிய தமிழ்க்காசு




சசிவர்ணத்தேவர் காலத்தில் வெளியிட்ட ஒரு தாமிர பட்டயத்தின் மூலம் சிவகங்கையில் அக்கசாலை (நாணய சாலை) செயல்பட்டதைப் பற்றி அறிய முடிகிறது. அந்த அக்கசாலையில் எந்தவித நாணயம் வெளியிடப்பட்டது என்று அறிந்துகொள்ள சான்றாக சிவகங்கையில் இரண்டு செம்புகாசுகள் கிடைத்துள்ளன. இந்தக் காசு சசிவர்ணத்தேவர் சிவகங்கைச் சீமைக்கு மன்னரானவுடன் மக்களின் புழக்கத்திற்காக வெளியிட்டிருக்கலாம். செம்புக்காசின் முன்பக்கத்தில் ஒரு சிவலிங்கம் காணப்படுகிறது. லிங்கத்திற்கு அழகூட்ட, இதன் மேல் பகுதியில் ஒரு தொடர்மாலை போடப்பட்டுள்ளது. பின்பக்கத்தில் தமிழில் 'சசிவறனன' என்று மூன்று வரிகளில் எழுதப்பட்டுள்ளது. காசிலிங்கம் காணப்படுவதால் மன்னர் சிறந்த சிவஞான பக்தராக இருக்க வேண்டும் என்பதில் ஐயமில்லை. சிவகங்கைச் சீமையைத் தோற்றுவித்தவர் சசிவர்ணத் தேவரே ஆகும். இந்தக் காசிலிருந்து மன்னன் பெயர், சமயம், வணங்கிய தெய்வம், தமிழ் எழுத்தின் வளர்ச்சி ஆகிய பல அரிய செய்திகளை அறிந்துகொள்ள முடிகிறது.

தகவல்: அளக்குடி ஆறுமுக சீதாராமன்,
தஞ்சை-7.

# 1. சிவகங்கைச் சீமை
# அறிமுகம்

வடவேங்கடம் தென்குமரி ஆயிடைத் தமிழ் கூறும் நல்லுலகம் என்பது தமிழகத்தின் வடக்கு, தெற்கு எல்லைகளைச் சுட்டும் பழம்பாடல் ஆகும். கடந்த ஈராயிரம் ஆண்டு வரலாற்றில் பெரும்பகுதி, இந்த பரந்த நிலப்பரப்பை ஆண்டு வந்த முடியுடை மன்னர்கள் - சேரன் அல்லது பொறையன், சோழன் அல்லது வளவன், செழியன் அல்லது பாண்டியன் என்று குறிக்கப்பட்டுள்ளனர். இந்த முத்தமிழ் மன்னர்களில் சங்கம் வைத்து தமிழ் வளர்த்த பாண்டியனது நாடு, தமிழகத்தின் தெற்குப் பகுதியில் அமைந்து இருந்தது. சோழ நாட்டின் தென் எல்லையை வட வரம்பாகவும், சேர நாட்டின் கிழக்கு எல்லையான மேற்குத் தொடர் மலையை மேற்கு எல்லையாகவும், வங்கக் கடலின் விரிந்த கரையை கிழக்கு எல்லையாகவும் கொண்டிருந்தது.

காலச் சுழற்சியில், பாண்டியரது வாளின் வலிமையைப் பொறுத்து இந்த எல்லைகளில் பெருக்கமும், சுருக்கமும் ஏற்பட்டதை வரலாற்றால் அறிகின்றோம். மாறவர்மன் சுந்தர பாண்டியன் தஞ்சையும் உறந்தையும் செந்தழல் கொளுத்தி சிதம்பரத்தில் வீராபிஷேகம் செய்து கொண்டான். இன்னொரு பாண்டியன் வடக்கே, நெல்லூர் வரை சென்று வாளால் வழி திறந்தான், எனப்புகழப்பட்டான்.[1] கோச்சடையான் குலசேகர பாண்டியன் குடநாட்டை வென்று கொல்லங்கொண்டான் என்ற விருதைப் பெற்றான்.[2] இவர்களது பழமையான கோநகரான கபாட புரத்தையும் தமிழ் மணக்கும் பொதிகை மலையையும், வங்கம் தரும் முத்துக்களையும், வால்மீகி இராமாயணம் சிறப்புடன் பேசுகின்றது. பஞ்ச பாண்டவர்களில் ஒருவரான அர்ஜுனன், பாண்டியனது மகளை

1. Pudukottai Inscriptions Nos. 439, 440
2. ARE 120/1926-27/Page 90

மணந்தான் என மகாபாரதம் குறித்துள்ளது. அசோகச் சக்கரவர்த்தியின் கல்வெட்டுக்களும் மெகஸ்தனிஸ், கௌடில்யர் ஆகியோரது நூல்களும், மகா வம்சம் என்ற இலங்கை வரலாறும் இவர்களது தொன்மையைத் துலக்கும் வரலாற்று ஆவணங்களாக அமைந்துள்ளன.

பதினொன்றாம் நூற்றாண்டில் மலர்ந்த சோழப் பேரரசு, வடக்கே, வடுக, கலிங்க நாடுகளை கைப்பற்றியதுடன், கங்கைச் சமவெளியில் தங்களது புலிக்கொடியை பறக்க விட்டது. தெற்கேயுள்ள பாண்டியரையும் வென்று பாண்டிய நாட்டை சோழ நாட்டின் ஒரு பகுதியாக மாற்றிக் கொண்டது. அப்பொழுது பாண்டிய நாடு, சோழ பாண்டிய மண்டலம் எனப் பெயர் பெற்று இருந்தது. மூன்றாவது குலோத்துங்க சோழனுக்குப் பிறகு சோழப் பேரரசு சிதைந்தது.[3] வடக்கே சாளுக்கியர், நுளம்பர், சம்பு வரையர் ஆகிய குறுநில மன்னர்கள் எழுச்சிப் பெற்று, சோழப் பேரரசை சிறுகச்சிறுக சிதைத்து அழிவு பெறச் செய்தனர். இந்தச் சூழ்நிலையில் பாண்டியர்களும் தங்களது பழமையை எய்துவதற்கு முயன்றனர். என்றாலும் அப்பொழுது இருந்த குலசேகர பாண்டியனுக்கும், சுந்தரபாண்டியனுக்கும் ஏற்பட்ட பூசல்களினால் வடக்கே இருந்த டில்லி பேரரசின் வலியகரங்கள் பாண்டிய நாட்டில் குறுக்கிட்டன. மதுரையில் டில்லி சுல்த்தானின் படையணியும் கி.பி.1323-முதல் நிரந்தரமாக நிலைகொண்டது.[4] இதன் தொடர்பாக அமைந்த மதுரை சுல்தான்கள் என்ற தென்னரசு உருவாகி பாண்டிய நாட்டிலும் சோழ, தொண்டை மண்டல நாட்டுப் பகுதிகளிலும் அமைந்து கி.பி. 1378-ல் முடிந்தது.[5] இந்த சுல்தான்களது கல்வெட்டுக்கள் திருக்கோலக்குடி, கண்டதேவி ஆகிய ஊர்களில் உள்ளன.

வடக்கே ஆந்திர நாட்டில் தோன்றிய விஜயநகரப் பேரரசின் வலிமை வாய்ந்த கரங்கள் தெற்கு நோக்கி நீண்டன. பாண்டிய நாட்டில் மதுரை சுல்தான்களை வென்று வடுகர்களது ஆட்சியை கி.பி. 1378 ல் நிறுவின.[6] இவர்களது ஆட்சி கி.பி.1736 வரை நீடித்த பொழுது இவர்களது அரசப் பிரதிநிதிகளாக ஒரு காலகட்டத்தில் ஆட்சி செய்தவர்கள் மாவலிவாணாதிராயர்கள். இவர்கள் கி.பி. பத்து, பதினோராவது நூற்றாண்டுகளில் சோழநாட்டில் இருந்து பாண்டிய நாட்டில் குடி புகுந்தவர்கள். போர் மறவர்களான இவர்கள் தங்களைப் பாண்டிய மறவர்கள் என்று கூட சொல்லிக் கொண்டனர். பாண்டிய மன்னர்களது சிறந்த அலுவலர்களாகவும் சாமந்தர்களாகவும் பணிபுரிந்து சாதனை படைத்தனர். பாண்டியநாடு, சோழ பாண்டிய மண்டலமாக, சோழர்களது ஆட்சிப் பரப்பாக அமைந்து இருந்த பொழுதும், அவர்களது

---

3. Hussaini. Dr - SAQ History of Pandya Country
4. Ibid - 113
5. Srinivasa Ayyangar.S. Dr. South India and her Mohamaden Invaders (1921) Page: 223-29
6. வேதாச்சலம்.வெ. - பாண்டிய நாட்டில் வாணாதிராயர்கள் (1987) பக். 56

மேலாண்மையை ஏற்ற குறுநில மன்னர்களாகவும் விளங்கினர்.

ஆதலால் கி.பி. பதினைந்து, பதினாறாவது நூற்றாண்டுகளில் சிவகங்கைச் சீமை உள்ளிட்ட சேது நாட்டுப் பகுதிகளிலும் அவர்களது ஆளுமை பரவி இருந்தது. இதனை உறுதிப்படுத்தும் வகையில், அவர்களது கல்வெட்டு, திருப்பத்தூர், காளையார் கோவில், மானாமதுரை, இளையான்குடி, ஆகிய ஊர்களில் உள்ளன. மாறவர்மன் குலசேகர பாண்டியன் (கி.பி. 1268-1311) ஆட்சியில் கங்கை கொண்ட சூரிய தேவனாதிராயன் என்பவர் இளையான்குடி, திருக்கோட்டியூர், திருக்கானப்பேர், துகவூர் ஆகிய ஊர்களில் திருக்கோயில் பணிகள் செய்துள்ளார்.[7] திருப்புத்தூர் வட்டார இரணியமுட்டத்து ஆற்காட்டு ஊரினரான திருவேங்கடத்து உடையான் வாணாதிராயன் என்பவர், அழகர் கோவிலிலும், பொன்னமராவதியிலும் பல திருப்பணிகளை மேற்கொண்டிருந்தார்.[8] கோனாட்டைச் சேர்ந்த மதுரைப் பெருமாள் வாணாதிராயர் திருப்புத்தூரையடுத்த சதுர்வேதி மங்கலத்தில் பாண்டிய மன்னன் பெயரால் திருமடம் ஒன்றை நிறுவினார்.[9] கிழக்குக் கரையை அடுத்த முத்தூர்க் கூற்றத்து கப்பலூர் மாவலி வாணாதிராயனையும், வடவல்லத் திருக்கை நாட்டு இந்திராவதநல்லூரில் காலிங்கராய வாணாதிராயன் பற்றியும் கி.பி.1264-ம் வருட ஸ்ரீ வைகுண்டம் கல்வெட்டு குறிப்பிடுகிறது.[10] திருமாலிருஞ்சோலை நின்றான் வாணாதிராயன் பற்றியும், சுந்தரத்தோள் மாவலி வாணாதிராயனது காளையார் கோவில் திருப்பணி பற்றியும் முறையே திருப்பெருந்துறை, இளையான்குடி கல்வெட்டுக்களும், செப்பேடுகளும் தெரிவிக்கின்றன. இவர்கள் ''மதுராபுரி நாயகர்'', ''பாண்டியகுலாந்தகர்'' என்ற விருதுகளையும் பெற்று இருந்தனர்.

இவர்களைப் போன்று பாண்டிய நாட்டில் அரசியல் சூழ்நிலைகளினால் தன்னாட்சி பெற்ற மறக்குடிகளின் தலைவராக சேதுபதிகள் தங்களது ஆட்சியை கிழக்குக் கடற்கரையை ஒட்டிய பகுதியில் தோற்றுவித்தனர். இவர்களது ஆட்சியின் பரப்பு மறவர் சீமை அல்லது சேது நாடு என வழங்கப்பட்டது. கள்ளர் நாட்டை வட எல்லையாகவும், வேம்பாற்றை தெற்கு எல்லையாகவும், மதுரை மாநகரை அடுத்த புறநகர்ப் பகுதியை மேற்கு எல்லையாகவும், விரிந்த வங்கக் கடற்கரையை கிழக்கு எல்லையாகவும், இந்த நாடு கொண்டிருந்தது. நெய்தலும், பாலையும், குறிஞ்சியும், முல்லையும், மருதமும் மயங்கிய ஐந்திணைகளுடன்

---

7. வேதாசலம்.வெ - பாண்டிய நாட்டில் வாணாதிராயர்கள் (1987) பக்: 29-30

8. Inscriptions No.584/A, 585, 587/1902.

9. வேதாச்சலம்.வெ - பாண்டிய நாட்டில் வாணாதிராயர்கள் (1987) பக்: 45-46

10. மேலது - பக்: 91

அமைந்த இந்த நாட்டில் வில்லேர் வாழ்க்கை விழுத்தொடை மறவர் விழைந்து வாழ்ந்த பகுதியாக விளங்கியதால், நூலாசிரியர்கள் சிலர் இதனை மறவர் சீமை என்று வர்ணித்துள்ளனர்.

நாட்டுப்பற்று மிக்க நாடோடி இலக்கியம் ஒன்றில் இந்த நாட்டை,

"முப்போகம் விளையும் இந்த சீமை
முசியாத வைகை நதி சேர்ந்த இந்த சீமை
பனங்காடு பெருத்தது இந்த சீமை
பத்துநிலை ஏரிகளும் மெத்த உண்டு
கல்லுப்படாததொரு சோறும் அதிலே
முள்ளுப்படாத மீன் மறவர் சீமை
காசி முதலாக திரிந்தாலும் மறவர்
சீமைபோல ஒரு தேசம் கிடையாது."

இங்ஙனம் சிறப்பாக வர்ணித்துள்ளது.[11]

தொன்மையான காலம் தொட்டு கன்னித் தமிழகத்தில் காவிரிக்கும், வைகை ஆற்றுக்கும் இடைப்பட்ட குறிஞ்சியும், முல்லையும், நெய்தலும், பாலையும், மருதமும் மயங்கிய ஐந்திணை பகுதிகளில் இவர்கள் மிகுதியாக வாழ்ந்து காலப்போக்கில் பாண்டிய நாட்டின் பெரும்பான்மையினராக வாழ்ந்து வந்தனர். இவர்களில் ஒரு பகுதியினர் கிழக்கு நோக்கி கடலையும் கடந்து ஈழத்தின் வடபகுதியில் நிலை கொண்டனர்.[12] இன்னொரு பகுதியினர் தெற்கே சென்று, பொருனை ஆற்றையும், பொதிகை மலையையும் அடுத்த வளமான பகுதிகளில் குடியேறினர். இந்த குடியேற்றங்கள் 10 அல்லது 11-ம் நூற்றாண்டுகளில் நடைபெற்றதாக தெரிய வருகிறது.

## சேதுபதிகளான செம்பியர்

அங்கெல்லாம் இவர்கள் கோட்டைகள் அமைத்தபாங்கே பின்னர் இவர்களது குடி வழிப்பிரிவுப் பெயர்களாக ஏற்பட்டது. ஆப்பனூர் நாடு, கொண்டையன்கோட்டை, உப்புக்கோட்டை, ஒரிக்கோட்டை, குறிச்சிக்கோட்டை, அகத்தா நாடு, செம்பிநாடு என்பன அந்த முதல் ஏழு பிரிவினர்களது கொடி வழியாகும்.[13] பின்னர் மரம், கிளை, கொத்து என்ற உட்பிரிவுகளும் தோன்றின. அவை (1) மரிக்காகிளை, (2) பிச்சர் கிளை,

11. கான்சாயபு சண்டை - சரசுவதி விலாசம் பதிப்பு. கொழும்பு
12. Prof. Velu Pillai - Maravar Community in Northern Ilankai. Paper presented at Madras Seminar.
13. Thurston - Castes and Tribes of South India (1909) Vol. V - P: 52

(3) தொண்டைமான் கிளை (4) சித்திரமா கிளை, (5) தனிச்சா கிளை, (6) கார்புத்திர கிளை, (7) காத்திர கிளை என்பன. இந்த குடி மக்களது முதல் குடிமகன் தான் மறவர் சீமையின் மகிபதி - சேதுபதி மன்னர்கள். இவர்கள் செம்பி நாட்டு பிரிவைச் சேர்ந்தவர்கள்.[14] சோழநாடு அல்லது செம்பி நாட்டில் இருந்து வந்தவர்களாதலின் இவர்களுக்கு செம்பிநாடன் என்ற விருதும் உண்டு. இவர்களது குடிமக்களின் பெரும்பான்மையினர் கொண்டையன் கோட்டை மறவர் என்பதும் அவர்களில் உட்பிரிவு காரண மறவர் என்பதும் இங்கு குறிப்பிடத்தக்கது.

மறம் என்ற மாண்பான தமிழ் சொல்லின் இலக்கண, இலக்கிய வடிவாக வாழ்ந்தவர்கள் மறவர்கள். வஞ்சம் இல்லாத நெஞ்சும், விஞ்சுகின்ற மானஉணர்வும், தஞ்சமாக கொண்டவர்கள் இவர்கள். மன்னன் உயிர்த்தே மலர் தலை உலகம் என்ற மரபிற்கு ஏற்ப தமிழ் மன்னர்களது நால்வகை படையாய் அமைந்து அட்டமங்கலங்களுக்கும் உரியவர்களாக வாழ்ந்தவர்கள். வாளும் தோளும் துணை எனக்கொண்டும், நாளும் நாடுகாத்து, வீடு பேறுஅடைவதே அவர்களது வாழ்க்கையாக இருந்தது. அவர்கள் கொட்டிய குருதி ஆற்றில் தமிழ் மன்னர்களது கொடி, தமிழகத்திற்கு வெகு தொலைவில் உள்ள முன்னீர் பழனத்தின் பன்னீராயிரம் தீவுகளில் எல்லாம் பட்டொளி வீசி பறந்தது. தமிழரது பண்பாட்டையும் பாரம்பரியத்தையும் உலகம் அறிய பறை சாற்றியது. சோழர், பாண்டியரது பேரரசுகள் எழுந்து பரந்து நின்று, பல நூற்றாண்டு, வரலாற்றை பற்றி நுகர்வதற்கு இந்த வீர மறவர்கள் தான் காரணம் என்பது சொல்லாமலே விளங்கும்.

பாண்டிய, சோழ ஆட்சியின் நாட்டுப் பிரிவுகளான நாடுகள், வள நாடுகள் கூற்றங்கள் மறவர் சீமை என்ற இந்தப் பொதுப் பெயரின் அடக்கமாக அமைந்திருந்தன. அவை ஒல்லையூர் நாடு, கோனாடு (இன்றைய திருமெய்ய வட்டம்) கானாடு, சுரபி நாடு, அதளையூர் நாடு, சூரக்குடி நாடு, (காரைக்குடி வட்டம்) திருமலை நாடு, புறமலை நாடு, கல்வாசல் நாடு, இரணிய முட்டநாடு (திருப்பத்தூர் வட்டம்), இடைவளநாடு, தென்னாலை நாடு, தேர்போகி நாடு, (தேவகோட்டை வட்டம்) கானப்பேர் நாடு, மங்கல நாடு, கல்லக நாடு (சிவகங்கை வட்டம்) புனல்பரளை நாடு, பொலியூர் நாடு (மானாமதுரை வட்டம்) உருவாட்டி நாடு இளையாங்குடி வட்டம்) இராஜசிங்க மங்கல நாடு, அஞ்சு கோட்டை நாடு, தாழையூர் நாடு, களவழி நாடு (திருவாடானை வட்டம்) செவ்விருக்கை நாடு, கீழ்செம்பி நாடு, கோடி நாடு (இராமநாதபுரம் வட்டம்) வடதலைசெம்பி நாடு, கிடாத் திருக்கை நாடு, ஆப்பனூர் நாடு

---

*14. கமால் Dr. எஸ்.எம். சேதுபதி மன்னர் செப்பேடுகள் (1993) செப்பேடு 43. பக்: 389*

(முதுகுளத்தூர் வட்டம்) வேம்பு நாடு, அளற்று நாடு, (கமுதி வட்டம்) பருத்திக்குடி நாடு, கருநிலக்குடி நாடு (திருச்சுழியல் வட்டம்).

இவைகளின் உட்பிரிவுகளாக இராஜேந்திர மங்கல வளநாடு, வரகுண வளநாடு, கேரள சிங்க வளநாடுகளும், ஒல்லையர் கூற்றம் பாகனூர் கூற்றம், கானப்பேர் கூற்றம், முத்தூர் கூற்றம், மிழலை கூற்றம், துகவூர் கூற்றம் என்ற துணைப்பிரிவுகளும் இருந்து வந்துள்ளன. சேதுபதிகளின் ஆட்சியில் இவைகளில் ஒரு சில மறைந்தும், வேறு சில புதிதாக அமைந்தும் இருந்தன. இத்தகைய மாற்றங்களுக்கும் தோற்றங்களுக்கும் காரணமாக இருந்தவர் முத்து விஜய ரகுநாத சேதுபதி ஆவார். (கி.பி. 1710-28) இவரது ஆட்சிக் காலத்தில் சேதுபதி சீமை பாண்டிய நாட்டைத் தொட்டு அமைந்திருந்ததுடன், சோழவள நாட்டின் வடகடற்கரைப் பகுதியிலும் நீண்டு விரிந்து திருவாரூர் வரை இருந்ததால் நாட்டின் நிர்வாக அமைப்பை செம்மைப்படுத்த வேண்டிய கட்டாயம் இந்த சேது மன்னருக்கு ஏற்பட்டது.[15]

சேது நாட்டை எட்டு வருவாய்ப் பகுதிகளாகவும், எழுபத்து இரண்டு இராணுவப் பிரிவுகளாகவும், பிரித்து அவைகளுக்கு ஏற்ற நாட்டுத் தலைவர்களையும், பாளையக்காரர்களையும், ஊரகப் பணியாளர்களையும் இந்த மன்னர் நியமனம் செய்தார். இதற்காக மதுரைச் சீமையில் இருந்து பட்டோலை பிடித்து எழுதும் வேளாளக் குடிகளையும், சேது நாட்டில் குடியேறச் செய்தார். நாட்டுக் கணக்குகளை எழுதிப் பராமரித்துவர இவர்கள் பயன்படுத்தப்பட்டனர். இத்தகைய செயல் மாற்றங்களின் பொழுது கடமை உணர்வுடனும் இராஜவிசுவாசத்துடனும் மன்னருக்கு உறுதுணையாக இருந்த செயல் மறவர்களில் குறிப்பிடத்தக்கவர் நாலுகோட்டை பாளையக்காரரான பெரிய உடையாத் தேவர் ஆவார். தமிழக வரலாற்றில் சிறப்பான இடத்தை பின்னர் பெற உள்ளவர் இவர் என்பதை, அன்றைய சூழ்நிலையில் யாரும் எதிர்பார்த்து இருக்க முடியாது.

## நாலு கோட்டைப் பாளையம்

திருமலை இரகுநாத சேதுபதி மன்னர் ஆட்சியின் பொழுது (கி.பி. 1645-78) சேது நாட்டின் வடமேற்குப் பகுதியில், அரசுஇறை தண்டல் செய்வது மிகுந்த மந்தமாக இருந்தது. இதனைத் தவிர்த்து, மற்ற பகுதிகளைப் போல தண்டல் பணிகளை மேற்கொள்ள தகுதியான ஒருவரை நாலுகோட்டைப் பகுதிக்கு நியமனம் செய்ய வேண்டிய

---

15. Raja Rama Rao - Manual of Ramnad Samasthanam (1891) P: 236

நிர்பந்தம் எழுந்தது. அங்குள்ள மக்கள் பெரும்பாலும் கள்ளர் இனத்தவராக இருந்ததாலும் அவர்களில் மன்னர் விரும்பிய தகுதியுடையவர் யாரும் இல்லாத காரணத்தினாலும் புகலூர் வட்டகையில் உள்ள உத்தமனூரைச் சேர்ந்த மன்னரது உறவினர் ஒருவரை அந்தப் பணிக்கு நியமனம் செய்தார். வரலாற்று சிறப்புடைய சோழபுரத்திற்கு அண்மையில் கோட்டை ஒன்றினை அமைத்து அந்த பாளையக்காரர் அங்கிருந்து செயல்பட்டார். அந்த கோட்டை தான், பின்னர் நாலு கோட்டை என வழங்கப் பெற்றது என நம்பப்படுகிறது.[16]

இன்றும் இந்த ஊரில் சேதுபதி மன்னரது செம்பிநாட்டுக் கிளையைச் சேர்ந்த இருபது குடும்பங்கள் மட்டும் இருந்து வருகின்றன. அண்மைக்காலம் வரை சிவகங்கை அரண்மனையில் நடைபெற்ற அனைத்துக் காரியங்களிலும் இவர்கள் கலந்து கொண்டு தங்களது பாரம்பரிய உறவினைச் சுட்டும் வகையில் உலுப்பை போன்ற மரியாதைகள் செலுத்தி வந்தனர் என்பதும் கள ஆய்வின் பொழுது தெரிய வந்தது.[17]

அந்த பாளையக்காரரின் வழியினரான பெரிய உடையாத் தேவருக்கு மூன்று மனைவிகள் இருந்தனர். முதல் மனைவியைப் பற்றிய விவரம் கிடைக்கவில்லை.

இரண்டாமவர் இராமநாதபுரத்தைச் சேர்ந்த சங்கர குமாரத் தேவர் என்ற போர் மறவரது மகள் சிந்தாமணி நாச்சியார் என்பவர். ஒருமுறை சேதுபதி மன்னரைச் சந்திக்க இராமநாதபுரம் சென்றபொழுது, தமது தந்தையைப் போன்று, வாள் சண்டையிலும், சிலம்பு விளையாட்டுகளிலும் இளைஞர்களைப் பொருதி, தோல்வியுறச் செய்த இந்தக் கன்னியின் பேராற்றலில் மனதைப் பறி கொடுத்த இவர், சிந்தையை நிறைத்த சிந்தாமணியைக் கவர்ந்து வந்து நாலுகோட்டையில் திருமணம் செய்து கொண்டார். மூன்றாவது மனைவி கோவனூர் நாச்சியார். கோவனூர் சென்று இருந்தபொழுது, அந்த யுவதியின் அற்புத அழகின் கவர்ச்சியில் மயங்கி அந்தக் கன்னிகையை மணந்தார் என்பது செவி வழிச் செய்தி. வேறு சில ஆவணங்களும் இதனை உறுதிப்படுத்துகிறது.[18] முதல் மனைவியின் மூலம் பிறந்தவர், சசிவர்ணத் தேவர். ஏனைய இரு மனைவிகளில் - சிந்தாமணி நாச்சியார் மூலம் பிறந்த செல்வ ரகுநாததேவர், கோவனூர் நாச்சியார் மூலம் பிறந்த பூவுலகுத் தேவர், லவலோசனத் தேவர், திரியம்பகத் தேவர் ஆகிய நான்கு மக்களையும் விட அழகிலும், ஆற்றலிலும் சசிவர்ணத் தேவர் சிறந்து காணப்பட்டார்.

---

16. சிவகங்கை சமஸ்தான ஆவணங்கள்.
17. கள ஆய்வின்போது நாலு கோட்டை கிராமத்து முதியவர் திரு. சங்குத் தேவர் (வயது 81) வழங்கிய செய்தி.
18. செல்வரகுநாதன் கோட்டை (தற்பொழுதைய சிவரக்கோட்டை) ஆவணங்கள்.

ஆதலால் இவரைச் சேதுபதி மன்னர் தமது மருமகனாக வரித்துக் கொள்வதற்கு முடிவு செய்தார். மன்னரது முடிவு பெரிய உடையாத் தேவருக்கு பெருமகிழ்ச்சியை அளித்தது. சேதுபதியின் மகள் அகிலாண்டேஸ்வரி நாச்சியாருக்கும் சசிவர்ணத் தேவருக்கும் இராமநாதபுரம் அரண்மனையில் திருமணம் சிறப்பாக நடைபெற்றது.[19]

சேதுபதி மன்னரது திருமணத் தொடர்புக்கு இன்னொரு காரணமும் இருந்தது. தளவாய் என்ற இரண்டாவது சடைக்கத்தேவர் சேதுபதியான பொழுது, அவருக்குப் போட்டியாக கூத்தன் சேதுபதியின் மகன் பெத்தன்னா என்ற தம்பித் தேவர், கலகக்கொடி உயர்த்தியதைப் போன்று இப்பொழுது கிழவன் சேதுபதியின் வைப்பு மகன் பவானி சங்கரத்தேவர், முத்து விஜயரகுநாத சேதுபதி பட்டம் சூடியதை எதிர்த்து சேது நாட்டு மக்களின் ஆதரவைத் திரட்டினான். தொண்டமானும் பவானி சங்கரத் தேவருக்கு ஆதரவாகச் செயல்பட்டார். மேலும் சேதுநாட்டில் வடக்கே காளையார் கோவிலை அடுத்த செருவத்தி பாளையக்காரரைப் போன்ற வடக்கு வட்டகைப் பாளையக்காரர்களை கண்காணித்து கட்டுக்குள் வைத்துக்கொள்வதற்கு அரசியல் நெருக்கத்தை விட குடும்ப உறவு மிகவும் பயனுள்ளதாக இருக்கும் என்ற எண்ணத்தில் சேதுபதி மன்னர் நாலுகோட்டை உடையாத் தேவரின் மகனை, தனது மருமகனாக்கிக் கொண்டார். இந்த உறவின் காரணமாக, தனது சம்பந்தியான பெரிய உடையாத் தேவரது அரசியல் தகுதியை 'முன்னூறு போர் வீரர் தளபதி' பதவியில் இருந்து 'ஆயிரம் போர் வீரர்களது தளபதியாக' பதவி உயர்வு அளித்தார். தனது மருமகன் சசிவர்ணத் தேவரையும் வெள்ளிக் குறிச்சிக்கு ஆளுநராக நியமனம் செய்தார்.[20]

வெண்ணெய் திரளும்போது தாழி உடைந்தது என்பது ஒரு வழக்கு. இணக்கமான சூழ்நிலை உருவாகும்போது எதிர் மறையான நிகழ்வுகள் ஏற்படுவதை குறித்து இவ்விதம் சொல்வது உண்டு. தனது மூத்த மகனுக்கு சேதுபதி மன்னரது மகளை மணம் செய்வித்து மனம் மகிழ்ந்த பெரிய உடையாத் தேவரது மனநிறைவு நீடிக்கவில்லை. அவர் நோய் வாய்ப்பட்டார். அந்த நோயிலேயே அவரது வாழ்க்கை முடிந்துவிட்டது. நாலுகோட்டை மக்கள் மட்டுமல்லாமல், இராமநாதபுரம் சேதுபதி மன்னரும் இந்த இழப்பினால் மிகுந்த வேதனைக்குள்ளானார். குறிப்பாக பெரிய உடையத் தேவர் மரணம் சேது நாட்டின் பாதுகாப்பிற்கு ஏற்பட்ட பலவீனமாக அப்பொழுது கருதப்பட்டது. இருபத்து ஐந்து ஆண்டுகளுக்கு முன்னர் சேது நாட்டின் வடக்கு காவல் அரணான

---

19. Raja Rama Rao - Manual of Ramnad Samasthanam (1891) P: 237
20. Ibid. P: 239.

திருமயம் கோட்டை சேதுபதி சீமையின் பாதுகாப்பு நிலையில் இருந்து விடுபட்ட பிறகு, நாலுகோட்டை பாளையம் அந்த பாதுகாப்புச் சங்கிலியில் வலுவான இணைப்பாக இருந்து வந்தது, அதுவும் பெரிய உடையாத்தேவரது செம்மையான கண்காணிப்பால்.

பெரிய உடையாத் தேவர் மரணத்தினால் துடி துடித்து துவண்டு வருந்தியவர் சிந்தாமணி நாச்சியார் ஆவர். பத்து ஆண்டுகளுக்கு முன்னர் பலவந்தமாக இராமநாதபுரத்தில் இருந்து கவர்ந்து வந்து பெரிய உடையாத் தேவர் அவரைக் கட்டாய திருமணம் செய்த பொழுது அடைந்த வேதனையை விட பன்மடங்கு துக்கத்தில் ஆழ்ந்து வருந்தினார். இத்தனை காலமாக பெரிய உடையாத் தேவர் அவர் மீது கொண்டிருந்த பாசம், பற்று, அன்பு, காதல் எல்லாமே நொடி நேரக் கனவாகக் கரைந்து விட்டதை நினைக்கும் பொழுது இந்த உலகத்தில் வாழ்வதற்கு எந்த நியாயமும் இல்லையென அவருக்குப் பட்டது. தேவருடன் வாழ்ந்த பத்தாண்டு வாழ்க்கையின் முத்திரையாகப் பெற்றெடுத்த ஏழு வயதுப் பாலகன் செல்வரகுநாதன் இருப்பது உண்மைதான். தந்தையைச் சரியாக அறியாத பாலகனுடன் பயின்று விளையாட உடன் பிறவாத சகோதரன் சசிவர்ணம் இருக்கிறானே! பிள்ளைப் பாசத்துடன் அவனை வளர்ப்பதற்கு சிற்றன்னை கோவனூர் நாச்சியார் இருக்கின்றாளே! ஆனால் அவளுக்கு... தனக்கு ஒரே பிடிபாடாக இருந்த கணவன் போன பிறகு... சிந்தாமணி நாச்சியாரது சிந்தனை இவ்விதம் சிறகடித்து பறந்தது.

அந்த பெரிய வீட்டின் முகப்பில், அகலமான நாற்காலி ஒன்றில் படுத்து அயர்ந்து உறங்கி கொண்டு இருப்பவர் போல காட்சியளித்த பெரிய உடையாத் தேவரது அலங்காரம் செய்யப்பட்ட உடலில் அவரது கண்கள் பதிந்து நின்றன.

சிறிது நேரத்தில் தாரை, தப்பட்டை முழங்கின. வாங்கா வாத்தியம் நீண்டு ஒலித்தது. சங்கு முழங்கியது. பெண்களது குலவை சத்தம். நடைமாத்து சேலைகள் தொடர்ச்சியாக விரிக்கப்பட்டன. துக்கம் விசாரிக்க வந்த கூட்டம், மெதுவாக நகர்ந்தது. நாலுகோட்டைப் பாளையக்காரரின் இறுதிப் பயணம் தொடங்கியது. நாலுகோட்டை ஊருக்கு கிழக்கே உள்ள கந்தமாதனப் பொய்கைக் கரையில் அந்திம கிரியைகளுக்கு ஏற்பாடு செய்யப்பட்டன. சந்தனக் கட்டைகளால் அடுக்கி அமைத்த சிதையில் தேவரது சடலம் வைக்கப்பட்டது. ஏற்கனவே, தெளிக்கப்பட்ட நெய்யில் குளித்த தீயின் நாக்குகள், பயங்கரமாகக் கொழுந்து விட்டு எரியத் துவங்கின. சிறிய துரும்பு கூட தனது கணவரது உடலுக்கு தீங்கிழைக்க கூடாது என எண்ணும் சிந்தாமணி நாச்சியார், தனது கணவர் உடலைச் சுற்றி தீக்கொழுந்துகள் தொடர்வதை எப்படி சகித்துக் கொள்வார்? தனது அன்பு மகன் செல்வ ரெகுநாதனை ஒருமுறை பற்றி அணைத்து மிகுந்த வாஞ்சையுடன் முத்தங்கள் சொரிந்தார். அவர் அணிந்து இருந்த நகைகளை அவனது கைகளில் திணித்து விட்டு கணவரது சிதையினுள்

புகுந்து செந்தழலில் மறைந்து விட்டார்.[21]

பெற்ற தந்தையையும், வளர்த்த தாயையும் இழந்து தனிமை ஆகிவிட்ட சசிவர்ணத் தேவரது கண்களில் வழிந்த கண்ணீர், ''ஆத்தா... ஆத்தா'' என்ற செல்வரெகுநாதனது அவலக்குரலுடன் அடங்கி விட்டது.

## இராமநாதபுரத்தில்

இந்த நிகழ்ச்சிகளால் பாதிக்கப்படாது புழுங்கிய மனத்துடன் அலைந்துகொண்டு இருந்த பவானி சங்கரத் தேவர், இப்பொழுது தனது முயற்சிகளைத் தீவிரப்படுத்தினார். ஆனால் சேதுபதி பட்டத்தில் இருந்து மன்னரை அகற்றுவது என்பது அவ்வளவு எளிதான காரியம் அல்லவே! பவானி சங்கரத் தேவருக்கு உறுதுணையாக இருந்த புதுக்கோட்டை தொண்டைமானிடம் சேது நாட்டின் மீது போர் தொடுப்பதற்கான ஆள் பலமும், பொருள் வசதியும் இல்லை. ஆதலால், அப்பொழுது சேதுபதி மன்னருக்கு நிகராக ஆற்றல் பெற்றிருந்த அண்டை அரசுகளான மதுரை நாயக்கரிடம், முயற்சித்தும் பலன் இல்லாததால், தஞ்சை மன்னர் துல்ஜாஜியிடம் உதவி கோரினர். அவரும் சில நிபந்தனை அடிப்படையில் சேது நாட்டுப் போருக்கு படை உதவி அளிக்க முன் வந்தார்.[22] அதாவது பவானி சங்கரத் தேவர் போரில் வெற்றி பெற்று சேதுபதியானவுடன் சேதுநாட்டின் வடபகுதியினை - தெற்கே பாம்பாற்றில் இருந்து வடக்கே திருவாரூர் வரையான வளமிக்க நிலபரப்பை தஞ்சை அரசிடம் ஒப்படைத்து விடுதல் வேண்டும் என்பது முக்கியமான நிபந்தனை.

படை உதவி பெற்று பவானி சங்கரத் தேவர் சேது நாட்டில் அறந்தாங்கிக் கோட்டையை திடீரெனத் தாக்கி கைப்பற்றியதுடன் சேது நாட்டின் வடபகுதியை சேதுபதி மன்னரிடமிருந்து துண்டித்து விட்டார். இந்த ஆக்கிரமிப்பை அகற்றுவதற்காக பெரும் படையுடன் சேதுபதி மன்னர் அறந்தாங்கி நோக்கிப் புறப்பட்டார். அங்கு போரில் ஈடுபட்டு இருக்கும்பொழுது அவரை அம்மை நோய் தாக்கியதால் அவர் இராமநாதபுரம் கோட்டைக்கு திரும்ப வேண்டியதாயிற்று. சில நாட்களில் அந்த நோய்க்கு சேதுபதி மன்னர் பலியானார்.[23] அடுத்து, பவானி சங்கரத் தேவர் எளிதாக இராமநாதபுரத்தைக் கைப்பற்றியதுடன் புதிதாகப் பட்டம் சூடிய சுந்தரரேசத் தேவர் என்ற சேதுபதியைக் கொன்றுவிட்டு அவரே சேதுபதியானார்.[24] அவரது பதினெட்டு ஆண்டு கால பகல் கனவு இப்பொழுது நிஜமாகிவிட்டது. பவானி சங்கரத்

21. செல்வரகுநாதன் கோட்டை ஆவணங்கள்
22. Raja Rama Rao - Manual of Ramnad Samasthanam (1891) P: 239
23. Ibid. P: 240
24. Ibid.

தேவரது தந்தை கிழவன் சேதுபதி முப்பத்திரண்டு ஆண்டுகள் அமர்ந்து ஆட்சி செய்த சிறப்பான அதே அரியணையில் அமர்ந்தார்.

அப்பொழுது வெள்ளிக் குறிச்சியின் ஆளுநராக இருந்த சேதுபதியின் மருமகனான சசிவர்ணத் தேவர் பதவியை இழந்தார். தனது அவல நிலையைத் தெரிவிப்பதற்காக அவர் தஞ்சாவூர் மன்னரிடம் சென்றார். அப்பொழுது, இராமநாதபுரம் சேதுபதி பட்டத்திற்கு அருகதையுள்ள கட்டத்தேவரும் (இறந்துபோன சுந்தரேச தண்டத் தேவரது சகோதரர்) அங்கு வந்து இருந்தார். இருவரும் அவர்களுக்கு ஏற்பட்டுள்ள இக்கட்டான நிலையைத் தஞ்சை மன்னரிடம் விளக்கியதுடன் பவானி சங்கரத் தேவரது கொடுங்கோல் ஆட்சியை அகற்ற படை உதவி கோரினர்.[25]

பவானி சங்கரத் தேவர் முன்னர் இவ்விதம் உதவி கோரி வந்ததும் அவருக்கு உதவி புரிந்து ஏமாந்ததும் மராட்டிய மன்னரது மனதில் பளிச்சிட்டது. எச்சரிக்கை உணர்வையும் தோற்றுவித்தது, என்றாலும், இழந்த நாட்டுப் பகுதியை சேதுபதியிடமிருந்து மீட்க வேண்டுமென்ற எண்ணம் அவரது உள்ளத்தில் ஓங்கி நின்றது. ஆதலால், தஞ்சாவூர் மன்னர் சேது நாட்டு இளவல்களது கோரிக்கையினை ஏற்றுக் கொண்டார். ஆனால் அதே பழைய நிபந்தனையை ஒரு சிறு மாற்றத்துடன்.

தஞ்சையிலிருந்து பெரும்படை சேது நாட்டை நோக்கி புறப்படும். பாம்பாற்றின் வட கரையை அந்த படையினர் வந்து அடையும் பொழுது அதன் ஒரு அணி மட்டும் நிலை கொள்ளும். மற்றவர்கள் தொடர்ந்து முன்னேறி இராமநாதபுரம் கோட்டையைப் பிடித்து, சசிவர்ணத் தேவரும், கட்டத் தேவரும் கோட்டைப் பொறுப்பை ஏற்றுக் கொண்டவுடன் தஞ்சை படைகள் திரும்பி பாம்பாற்றில் வட கரைக்கு வந்துவிடும். அங்கு நிலை கொண்டுள்ள அணியுடன் சேர்ந்து அந்தப் பகுதியின் பாதுகாப்பில் ஈடுபடும். அதாவது ஒரு புறம் உதவி; மறுபுறம் சேதுநாட்டின் பாம்பாற்றுப் பகுதி தஞ்சை மன்னரது ஆளுகைக்குள் தானே அமைந்துவிடும்.

இதுதான் அந்த நிபந்தனை. பவானி சங்கர சேதுபதியிடமிருந்து சேது நாட்டை மீட்க வேறு வழியில்லை. சசிவர்ணத் தேவரும், கட்டத் தேவரும் அந்த நிபந்தனைகளுக்கு ஒப்புதல் அளித்தனர். தஞ்சைப்படை தெற்கு நோக்கி புறப்பட்ட செய்தி இராமநாதபுரம் கோட்டைக்கு எட்டியது. பவானி சங்கரத் தேவர் அவசரமாக ஓரளவு படைகளை திரட்டியவாறு விரைந்து சென்றார். இரண்டு படைகளும் ஓரியூர் அருகே

25. Raja Rama Rao - Manual of Ramnad Samasthanam (1891). P: 240

பொருதின. வெற்றி தஞ்சை படைகளுக்கு. பவானி சங்கர சேதுபதி கைது செய்யப்பட்டு தஞ்சைக்கு கொண்டு செல்லப்பட்டார்.[26]

இராமநாதபுரம் கோட்டை மீட்கப்பட்டது. சேது நாட்டில் பதட்டமும், பயமும் நீங்கி மீண்டும் அமைதி நிலவியது. ஆனால் சேதுபதி பட்டத்தை யார் சூட்டிக் கொள்வது? விஜய ரகுநாத சேதுபதியின் மகளை மணந்தவர் சசிவர்ணத் தேவர். பவானி சங்கரத் தேவரால் கொல்லப்பட்ட சுந்தரேச சேதுபதியின் இளவல் கட்டத்தேவர். இந்த இருவரது கூட்டு முயற்சியினால் சேது நாட்டில் அமைதி திரும்பியது. இருவருமே சேது பட்டத்திற்கு உரியவர் என்பதில் மாற்றுக் கருத்து இல்லை. அப்படியானால் சேதுபதியாவது யார்? இந்த வினாவிற்கு விடை காண முயன்றனர். இருவரும் ஆட்சியாளர்களாக மாறுவதைத் தவிர வேறு வழியே இல்லை. வரலாற்றின் போக்கை தடுத்து நிறுத்தும் வலிமை யாருக்கு உண்டு!

இத்தகைய இக்கட்டான நிலை சேது நாட்டில் முன்பு ஒரு முறை ஏற்பட்டது! கூத்தன் சேதுபதி இறந்தபொழுது அவரது இரண்டாவது மனைவியின் மகன் தம்பித் தேவருக்கு அரசுரிமை மறுக்கப்பட்டு இரண்டாவது சடைக்கத் தேவர் தளவாய் சேதுபதி என்ற பெயரில் ஆட்சிக் கட்டிலில் அமர்ந்தார். தம்பித் தேவரது கிளர்ச்சி பயனளிக்காததால் அப்பொழுது மதுரை மன்னராக இருந்த திருமலை நாயக்கரிடம் தம்பித் தேவர் முறையீடு செய்தார். திருமலை நாயக்கர் மிகவும் முயன்றும் சமரசம் செய்ய இயலாததால், கடைசியில் சேதுநாட்டு பிரிவினைத் திட்டத்தை அளித்தார்.

காளையார் கோவில் பகுதி தம்பி தேவருக்கும், திருவாடானை பகுதி தனுக்காத்த தேவருக்கும், இராமநாதபுரம் பகுதி திருமலை தேவருக்கும் என பிரித்து கொடுக்கப்பட்டது.[27] இது நிகழ்ந்தது கி.பி. 1745-ல். ஆனால் தம்பித்தேவர் சில மாதங்களில் காளையார் கோவிலில் காலமானார். அதனை அடுத்து, சில மாதங்களில் தனுக்காத்த தேவரும் திருவாடானையில் மரணமுற்றார். சேதுநாடு மீண்டும் திருமலை சேதுபதியின் தலைமையில் ஒன்றுபட்டது. பல சாதனைகள் எய்துவதற்கு காரணமாக அமைந்தது. இப்பொழுதும் அது போலவே சேது நாடு இரண்டாவது முறையாக இரண்டு பிரிவுகளாக, இரண்டு அரசுகளாக பிரிவு பெற்று இயக்கம் பெற்றன. பிரிவினை என்றாலே பலவீனம்தான். ஆனால், அப்பொழுது பிரிவினையைத் தவிர வேறு வழி இல்லை.

---

26. Raja Ram Rao - Manual of Ramnad Samasthanam (1891). P: 240
27. Ibid. P: 239

மதுரையைக் கடந்தவுடன் கிழக்கு நோக்கி சேதுநாட்டை ஊடறுத்துச் செல்லும் வைகையின் தென்கரை வட கரையை ஒட்டி கிழக்கே எமனேஸ்வரம் வரையிலான பகுதி புதிய நாட்டின் தெற்கு எல்லையாகக் கொண்டு, பின்னர் வடக்கு நோக்கி சென்று பிரான்மலையில் கிழக்குச் சரிவு வடக்கு எல்லையாக நிர்ணயிக்கப்பட்டது. இதில் அடங்கிய பகுதி சேதுநாட்டின் பரப்பில் சரிபாதி பகுதியாக இல்லாவிட்டாலும் ஐந்தில் இரண்டு பங்கிற்கும் அதிகமான நிலப்பரப்பாக அமைந்து இருந்தது. நில அளவை முறையும் அதற்கான வசதியும் இல்லாத காலம் அது. ஆதலால் இந்த புதிய சீமையினை, பழைய சேதுபதி சீமையின் ஐந்தில் இரண்டு பங்கு என்றும், பழைய இராமநாதபுரம் சீமை ஐந்தில் மூன்று பங்கு என்றும் பொதுவாக சொல்லப்பட்டது. இது நிகழ்ந்தது கி.பி.1728-ல்.



# 2. சீமையாளும் உரிமை சசிவர்ணருக்கே

ஏற்கனவே வழக்கிலிருந்த சேதுபதி சீமை, பெரிய மறவர் சீமை என்றும் புதிய சீமை, சின்ன மறவர் சீமை என்றும் வரலாற்று ஆசிரியர்களால் குறிக்கப்பெற்றது. மேலும் இந்த புதிய சீமையின் அங்கங்களாக மான வீர மதுரை, திருப்புவனம், படைமாத்தூர், பாகனேரி சக்கந்தி, நாலுகோட்டை மல்லாக்கோட்டை, பட்டமங்கலம், அரளிக்கோட்டை, சத்துரு சங்கார கோட்டை, திருப்பத்தூர், பாலையூர், எழுவன்கோட்டை, இரவிசேரி, தென்னாலைக் கோட்டை, காளையார் கோவில், ஆகிய பாளையங்கள் இருந்தன. இந்த பாளையங்களுக்கு தலைமை இடமாக ஒரு புதிய ஊரும் நிர்மாணிக்கப்பெற்றது. அதுதான் இன்றைய பசும்பொன் முத்துராமலிங்கத் தேவர் மாவட்டத்தின் தலைநகரான சிவகங்கை ஆகும்.

ஏறத்தாழ முந்நூறு ஆண்டுகளுக்கு முன்னர் காடாக இருந்த இந்த பகுதியில் சிவகங்கை நகர் அமைந்ததற்கான கதை ஒன்று பரவலாக பேசப்பட்டு வருகிறது. நாலுகோட்டையிலிருந்து சசிவர்ணத் தேவர் ஒருநாள் இந்த காட்டுப்பகுதிக்குள் வந்தபொழுது ஒரு தவசீலர் தியானத்தில் இருப்பதைக் கண்டு அவரை தரிசிக்க அருகில் சென்றார். அப்பொழுது அங்கு தவசிக்கு பதில் ஒரு பெரிய வேங்கை காணப்பட்டதாகவும், அதனை கண்டு அஞ்சாமல் அந்த தவச் செல்வரைத் தேடிய பொழுது வேங்கை மறைந்து முனிவர் தென்பட்டதாகவும் அவர் சசிவர்ணத் தேவருக்கு ஆசிகள் வழங்கியதாகவும் அவரது வேண்டுகோளின்படி அங்கு ஒரு ஊரணி தோற்றுவிக்கப்பட்டது என்பது அந்தக் கதை - இதே கதை இன்னும் மாறுதல்களுடன் சில பகுதிகளில் வழக்கில் உள்ளன.

இந்தக் கதையின் உண்மையான பின்னணி என்ன என்பதை சம்பந்தப்பட்ட மன்னர் சசிவர்ணப் பெரிய உடையாத் தேவர் அவர்களது சக ஆண்டு ஆயிரத்து அறுநூற்று ஐம்பதில் பிரமாதீச வருடம் சித்திரை இருபத்து ஒன்றாம் தேதி (கி.பி. 1733) வழங்கிய செப்பேட்டு வாசகம் தெரிவிக்கின்றது. இந்தச் செப்பேட்டில்,

> ''.... சாத்தப்ப ஞானிகள் வெள்ளை நாவலடி ஊத்தில் தவசு இருக்கையில், நாம் கண்டு தெரிசித்ததில் உங்களுக்கு நல்ல யோகமும் புதிய பட்டமும் வந்து, நீ யானை கட்டி சீமையாளுவாய் என்று விபூதி கொடுத்து, தஞ்சாவூர் போகும்படிக்குத்திரவு கொடுத்தபடிக்கு, நான் போய் புலி குத்தி... அவர்கள் ஒத்தாசையால் இராமநாதபுரம் பவானி சங்கு தேவனை ஜெயம் செய்து, வீரத்தின் பேரில் கோவானூரில் இருந்த சாத்தப்ப ஞானியவர்களைக் கூட்டி வந்து பூசை பண்ணின ஊத்தில் திருக்குளம் வெட்டி, சிவகெங்கை என்ற பேரும் வரும்படியாகச் செய்த திருக்குளத்துக்கும் வடக்கு காஞ்சிரங்கால், தென் வடலோடிய புத்தடிப் பாதைக்கு கிளக்கு, பண்ணிமுடக்கு பள்ளத்துக்கு தெற்கு, பாலமேடு தென்வடலோடிய பாதைக்கு மேற்கு, இந் நான்கெல்லைக்குள்பட்ட காட்டுக்குள் இந்த சாத்தப்ப ஞானியாருக்கு தவிசுக்கு மடம் கட்டிக் குடுத்து இந்த மடத்தில் குருபூசை செய்தும், நவராத்திரி, சிவராத்திரி, பூசைக்கு நாலு கோட்டை சோளபுரம் ஆறாம் குளம் கண்மாய்க்களுக்கு கிழக்கு, அந்தக் கண்மாய் பெரிய மடை கிழமேலோடிய வாய்க்காலுக்குத் தெற்கு கருங்காலக்குடி தர்மத்துக்கல்லான சரகணை தென்வடலோடிய பாதைக்கு மேற்கு மருதவயல் கண்மாய் நீர்ப்பிடிக்கு வடக்கு இந்த பெருநாங்கெல்லைக்குள்பட்ட மருத வயல்... சகலமும் தான சாதனமாக...''

என்று[28] சாத்தப்ப ஞானியாரது ஆசி பெற்றதும், பின்னர் அவருக்காக திருக்குளம் வெட்டி திருமடம் கட்டியதான சாதனம் செய்து கொடுத்ததும் குறிப்பிடப்பட்டு உள்ளது.

அது முதலில் சிவனது கங்கை போல புனிதமான நீர்த் துறையாக கருதப்பட்டு சிவகங்கைக் குளமென வழங்கப்பட்டது. அந்தக் குளத்தின் மேற்கு மூலையில் புதிய அரசின் தலைமை இடமான கோட்டை அமைக்கப்பட்டதும், பின்னர் சிவகங்கைக் கோட்டை எனவும் பெயர் பெற்றது. அதனைச் சுற்றி நாளடைவில் எழுந்த மக்கள் குடியிருப்பு சிவகங்கை நகராயிற்று.

மதுரை மாநகரை தொண்டித் துறைமுகத்துடன் இணைக்கும் பெரு வழியும், திருநெல்வேலிச் சீமையிலிருந்து, ஸ்ரீவில்லிபுத்தூர்,

---

28. சிவகங்கைச் செப்பேடு.

அருப்புக்கோட்டை, மானவீர மதுரை, தொண்டி வழியாக சோழ நாட்டை இணைக்கும் பழைய வாணிகச் சாத்து வழியும் இணையும் இடத்தில் புதிய சிவகங்கைக் கோட்டை நிர்மாணிக்கப்பட்டது. ஏறத்தாழ இராமநாதபுரம் கோட்டை அமைப்பை போன்றே செவ்வக வடிவில், ஆனால் அகழி இல்லாமல் இருபது அடி உயரமும், இரண்டு அடி அகலமும் கொண்ட சுற்றுச் சுவரினால் அந்தக் கோட்டை அமைக்கப்பட்டது. ஒரே முகப்பு வழியை உடைய இந்த கோட்டையில் மன்னரது மாளிகை நடுப்பகுதியிலும், மாளிகையை ஒட்டி ராஜராஜேஸ்வரி அம்மன் ஆலயமும், தெற்கில் அரச மகளிரது குடியிருப்பும் வடக்குப் பகுதியில் நீராழிக்குளம், உல்லாச மண்டபங்கள் ஆகியவைகளும் நிர்மாணிக்கப்பட்டன. சசிவர்ணத் தேவரது துணைவியார், அகிலாண்ட ஈசுவரிநாச்சியார் திருமணமாகி கணவருடன் நாலுகோட்டை வந்தபொழுது அவரது வழிபடு தெய்வமாகிய இராமநாதபுரம் அரண்மனையில் உள்ள ராஜராஜேஸ்வரி அம்மன் ஆலயத்தில் இருந்து பிடிமண் எடுத்து வந்து நாலுகோட்டை மாளிகையில் வைத்து வணங்கி வந்ததாகவும், அங்கிருந்து சிவகங்கை அரண்மனை அமைத்தபொழுது, அதே புனித பிடிமண்ணை பீடத்தின் அடியில் வைத்து அதன் மீது இந்த ராஜராஜேஸ்வரி பீடம் முதலிலும், பின்னர் தெய்வத் திருமேனி ஸ்தாபிதமும் செய்யப்பட்டதாகச் சொல்லப்படுகிறது.

இந்த புதிய சீமையின் முதலாவது மன்னர் சசிவர்ண பெரிய உடையாத் தேவர். இவருக்கு இரு மனைவியர் இருந்தனர். ஒருவர் இராமநாதபுரம் சேதுபதி மன்னரது மகள் அகிலாண்ட ஈஸ்வரி நாச்சியார். மற்றவர் பூதக்காள் நாச்சியார். முதலாமவருக்கு மூன்று பெண்களும், பட்டாபி ராமசுவாமி, சுவர்ணகிளைத் தேவர் என்ற இரு ஆண் மக்களும் இருந்தனர். இவர்கள் இருவரும் இளமையில் காலமாகி விட்டனர் என்று ஊகிக்க முடிகிறது. இதன் காரணமாக இரண்டாவது மனைவியை மணந்து அவர் மூலம் முத்து வடுகநாதர் மூன்றாவது மகனாகப் பிறந்தார் என்றும் தெரிய வருகிறது. நாலுகோட்டை பெரிய உடையாத் தேவரது முதல் மனைவியாரது மைந்தர் என்ற பொருளில் பெரிய உடையாத்தேவர் என்ற விகுதியும் ''அரசு நிலையிட்ட'' என்ற விருதும், தொன்மையான சேதுபதி மன்னரது குடும்பத்தைச் சேர்ந்தவர் என்பதை குறிக்கும் ''விஜய ரகுநாத'' என்ற தொடரும் இணைந்து இந்த மன்னரது அரசு ஆவணங்களில் ''அரசு நிலையிட்ட விஜய ரகுநாத சசிவர்ண பெரிய உடையாத்தேவர்'' என குறிக்கப்பட்டு வரலாயிற்று. இவரது ஆட்சிக் காலத்தை அறுதியிட்டு சொல்லும் ஆவணம் எதுவும் கிடைக்காத காரணத்தினால், இந்த மன்னர் கி.பி. 1749 வரை ஆட்சி செலுத்தியிருக்க வேண்டும் என வரலாற்றில் ஏற்றுக் கொள்ளப்பட்டுள்ளது. பொதுவாக இவரது ஆட்சி அமைதியும், வளமையும், மிகுந்த காலமாக அமைந்திருந்தது. அதிலும் குறிப்பாக அண்மையில் உள்ள மதுரைச் சீமையின் அரசியலில் குழப்பங்கள் கலந்து



சசிவர்ண பெரிய உடையாத் தேவரால் கட்டப்பட்ட அரண்மனையின் ஒரு பகுதி.



சிவகங்கை மன்னர்களின் குலதெய்வம் ராஜராஜேஸ்வரி அம்மன் கோயிலின் தோற்றம். மன்னர்கள் முடிசூட்டிக் கொள்ளும் மண்டபம் வலப்புறம் அமைந்திருக்கிறது.

மக்கள் அல்லோலப்பட்ட சூழ்நிலையில், இந்த புதிய சின்ன மறவர் சீமை எவ்வித பிரச்சனையுமின்றி மக்களது ஆன்மீக, சமுதாய நற்பணிகளில் அக்கறை கொண்ட அரசாக செயல்பட்டு வந்து இருப்பது ஒரு அரிய சாதனையாகும். இதற்கு ஏதுவாக அமைந்த அன்றைய தமிழக அரசியல் வரலாற்றையும் ஓரளவு அறிந்து கொள்வது இங்கு அவசியமாகிறது.

சிவகங்கைச் சீமை என்றதொரு புதியதொரு அரசு உதயமான பொழுது தமிழகம் முழுமைக்கும் கடந்த முன்னூற்று ஐம்பது ஆண்டுகளாக ஒரே தன்னரசாக மதுரையையும், திருச்சியையும் கோநகராக கொண்டு ஆட்சி செய்து வந்த மதுரை நாயக்கர் அரசு அப்பொழுது அஸ்தமனத்தை எட்டிக் கொண்டிருந்தது. அந்த அரசின் கடைசி ராணியாக விளங்கிய ராணி மீனாட்சியின் தற்கொலையுடன் அந்த அரசு கி.பி. 1736-ல் முற்றுப் பெற்றது. அந்த ஆட்சிக் கட்டிலில் அமருவதற்கு ஆசைப்பட்ட ராணியின் உறவினரான பங்காரு திருமலையின் முயற்சிகள் ஒரு புறம் இருக்க, தமிழகம் முழுவதற்குமான மேலாண்மை உரிமையை ஐதராபாத் நிஜாமிடமிருந்து பெற்றிருப்பதாக கூறிக்கொண்டு ஆற்காடு நவாப் பதவிக்கு சாந்தா சாகிபு ஒரு புறமும், வாலாஜா முகமது அலி மற்றொரு புறமுமாக போட்டியிட்டு திருச்சி, மதுரைச் சீமை மக்களை ஆட்டிப் படைத்ததுடன், தாராபுரத்தில் இருந்து, களக்காடு வரையிலான பாளையக்காரர்களை தங்களது கட்டுப்பாட்டிற்குள் கொண்டு வர இந்த நவாபுகள் பலவாறு எத்தனித்தனர்.

தமிழகத்தில் அரசின் சலுகைகளுடன் வியாபாரம் செய்து லாபம் ஈட்டுவதில் முனைந்திருந்த பிரெஞ்சு கிழக்கிந்திய கம்பெனியும் ஆங்கில கிழக்கிந்தியக் கம்பெனியும் முறையே இந்த ''போட்டி நவாப்புகளை'' ஆதரித்து அவர்களுக்கு தங்களது தற்காப்பு படைகளை கொடுத்து உதவி, அரசியல் ஆதாயம் பெற முயன்றதுடன் தமிழக அரசியலின் தலை விதியை நிர்ணயிக்கும் காரணிகளாகவும் விளங்கினர். இத்தகைய குழப்பமான சூழ்நிலையில் சிவகங்கைச் சீமையின் சின்ன மறவர் அரசு இயக்கம் தடையேதுமில்லாத நிலையில் அடுத்துள்ள சேதுபதியின் ஆட்சிக் கூறுகளை அடியொற்றிப் பின்பற்றியவாறு நடைபெற்று வந்தது.

சீமையின் நிர்வாகத்தில் சசிவர்ணத் தேவர் மிகுந்த கவனம் செலுத்தி வந்தார். ஏற்கனவே தமது மாமனார் முத்து விஜய ரகுநாத சேதுபதி மன்னரால் வெள்ளிக்குறிச்சி மாகாணத்தின் ஆளுநராகப் பணியாற்றிய முன் அனுபவம் அவருக்கு இப்பொழுது கை கொடுத்தது. பாதுகாப்பாக பல புதிய பாளையங்களைத் தோற்றுவித்து, புதிய பாளையக்காரர்களும், காவலர்களும் நியமனம் செய்யப்பட்டனர். தேச காவல், தலங்காவல், திசை காவல், தெற்கத்தியான் காவல் என்ற அமைப்புகள் சிறப்பாக இயங்கின. பண்டைய ஆட்சிக்காலம் தொட்டு இருந்து வந்த நாட்டு பிரிவுகள் மாற்றமில்லாமல் தொடர்ச்சி பெற்றன. இந்த புதிய சீமையில் ஒல்லையூர் நாடு, கானாடு, புறமலை நாடு, திருப்பத்தூர் நாடு, தாழையூர்

நாடு, தென்னாலை நாடு, இராஜகம்பீர நாடு, சுரபி நாடு, கானப்பேர் நாடு, பாலையூர், மங்கல நாடு, புனல்பரளை நாடு, கல்லக நாடு என்ற நாடுகள் அமைந்து அணி செய்தன.

இவைகளுக்கு அடுத்து சிறு பரப்பு, வள நாடாகும். கேரள சிங்க வளநாடு, ராஜேந்திர மங்கல வளநாடு என்பன போன்று. இவைகளுக்கு இணையான இன்னொரு தொகுப்பு கூற்றம் எனப்பட்டது. இந்த புதிய சீமையில் கானப்பேர் கூற்றம், முத்தூர் கூற்றம், பாகனூர் கூற்றம், துகவூர் கூற்றம் என்பன அன்றைய வழக்கில் இருந்த கூற்றங்கள் ஆகும். இந்த பழமையான நிலப்பரப்புகளைத் தவிர மாகாணங்கள் என்ற புதிய தொகுப்பும், பின்னர் இருந்து வந்தது தெரிய வருகிறது. சிவகங்கைச் சீமையின் ஆவணங்களிலிருந்து இந்த மாகாணம் என்ற ஊர்த் தொகுப்பு மிக பிற்பட்ட கால அமைப்புகள் என்பது தெரிய வருகின்றன. அவை திருப்புவனம், முத்து நாடு, எழுவன் கோட்டை, அழகாபுரி, மேல மாகாணம், நாலு கோட்டை, எமனேஸ்வரம், பொன்னொளிக் கோட்டை, பாளையூர் என்பனவாகும்.

இந்த மன்னரது ஆட்சியில் திருக்கோயில் தர்மமாக பல ஊர்கள் இறையிலியாக வழங்கப்பட்டன. அன்றாட பூஜை, நைவேத்தியம் போன்ற கைங்கர்யங்களுக்கும் வேறு பல திருப்பணிகளுக்கும் இந்த ஊர்களின் வருவாய் பயன்படுத்தப்பட்டது. மேலும் திருமடங்களும், அன்ன சத்திரங்களும் இந்த மன்னரது தண்ணளியில் தங்களது திருப்பணிகளைச் சிறப்பாக தொடர்ந்து வந்தன. இவரது இந்த நற்பணிகளுக்கு ஊக்குவிப்பும், உரிய ஆலோசனையையும் வழங்கி உதவும் பிரதானியாக முத்துகுமார பிள்ளை என்பவர் பணியாற்றி வந்தார்.[29] தனது இறுதி காலத்தை இவ்விதம் சிறந்த ஆன்மிகப் பணிகளில் செலவழித்து வந்த இந்த மன்னர், ஒரு நாள் பிரான்மலை சென்றார். மங்கை பாகர் சுவாமியையும் தேங்குழல் அம்பிகையையும் தரிசனம் செய்து விட்டு பல்லக்கில் சிவகங்கை திரும்பிக் கொண்டிருந்தார். மறைந்திருந்து குறிபார்த்து எறிந்த எதிரி ஒருவனது கட்டாரி தாக்குதலினால் உயிர் துறந்தார்.

சிவகங்கைத் தன்னரசைத் தோற்றுவித்த சசிவர்ண பெரிய உடையாத்தேவரது செம்மையான ஆட்சி கி.பி. 1749 வரை (இருபது ஆண்டுகள்) நீடித்தன. புதிய சிவகங்கைச் சீமை பல துறைகளிலும் முன்னேறுவதற்கு வழிவகுத்தது. ஒரு நாட்டின் வரலாற்றில் இருபது ஆண்டுகள் என்பது ஒரு சிறு கால வரம்புதான். என்றாலும், மன்னர் சசிவர்ணத் தேவர், தமது முந்தைய சேதுபதி சீமையின் தொண்டிந் துறைமுகம், வெள்ளிக்குறிச்சி ஆளுநர் பணிகளில் பெற்று இருந்த நிர்வாக

29. செல்வரகுநாதன் கோட்டை ஆவணங்கள்.

அனுபவத்தைப் பயன்படுத்தியும், சேதுபதி மன்னரது சேது நாட்டு ஆட்சி முறைகளை நடைமுறைப்படுத்தியும் வந்தார். அன்றைய நிலையில், சிவகங்கைச் சீமை மக்களது ஆன்மீக வளர்ச்சியை ஊக்குவிக்கும் சாதனைகளைச் செயல்படுத்துவதாக இருந்தது. இந்த மன்னர், மக்களது வழிபாட்டுத் தலங்கள், திருமடங்கள், அன்னசத்திரங்கள் ஆகியவை சிறப்பாக பராமரிக்கப்படுவதற்காக, தக்க தொகையினை வருவாயாக, பெறத்தக்க ஊர்களையும், ஏந்தல்களையும் இறையிலியாக - சர்வ மான்யங்களாக அந்த அமைப்புக்களுக்கு வழங்கினார்.[30]

கி.பி.1729 முதல் கி.பி. 1749 வரையிலான கால கட்டத்தில், ஏராளமான அறக்கொடைகள் இந்த மன்னரால் வழங்கப்பட்டதற்கான குறிப்புகள் மட்டும் சிவகங்கை தேவஸ்தான பதிவேடுகளில் காணப்படுகின்றன. கல்லிலும், செம்பிலும், ஓலைப் பட்டயங்களிலும் கைச்சாத்திட்டு வழங்கப்பட்ட இந்த ஆவணங்களில் பல, சரியான பராமரிப்பும், கவனமும் இல்லாமல், கால நீட்சியில் அழிந்து கெட்டுப்போயின. மிகவும் அரும்பெரும் முயற்சியில் சேகரிக்கப்பட்ட இந்த சர்வமான்ய, தான சாதன பட்டயங்கள் சில இந்த நூலில் கொடுக்கப் பட்டுள்ளன.

கிடைக்கப் பெற்றுள்ள தகவல்களின்படி, இந்த மன்னர், இளையான்குடி இராஜேந்திர சோழீஸ்வர ஆலயம், மதுரை மீனாட்சி சுந்தரேசுவரர் ஆலயம், காளையார் கோவில் வாள்மேல் நடந்த அம்மன் கோவில், திருவாரூர் தியாகராஜ சுவாமிகள் ஆலயம், அலட்சிய ஐயனார் ஆலயம், அழகச்சி அம்மன் ஆலயம் ஆகிய திருக்கோயில்களின் பால் மிகுந்த ஈடுபாடு கொண்டிருந்தார் என்பது தெரிய வருகிறது. எமனேஸ்வரம் சத்தியவாசக சுவாமி மடம், திருவாவடுதுறை மடம், மானாமதுரை பிருந்தாவன மடம், தமிழ்ப்புலவர்கள், வடமொழி வியாகரண பண்டிதர்கள் மற்றும் பல தனியார்களும் இந்த மன்னரது தண்ணளியில் அறக்கொடைகள் பெற்று வாழ்ந்து வந்தனர் என்பது வெள்ளிடை.

இதோ அந்த அறக்கொடைகளின் பட்டியல். (கிடைத்துள்ள குறிப்புகளின்படி)

## அறக்கொடை பெற்றவர்கள்

### 1. திருக்கோயில்கள்

| | | |
|---|---|---|
| கி.பி. 1732 | சித்துஊரணி (எமனேஸ்வரம் வட்டம்) | இராஜேந்திர சோளீஸ்வரர் ஆலயம் இளையான்குடி. |

---

30. சிவகங்கைச் சீமை செப்பேடுகள்.

| | | |
|---|---|---|
| 1733 | அந்தனேந்தல் (காளையார் கோவில் வட்டம்) | வாள்மேல் நடந்த அம்மன் கோவில் காளையார் கோவில் |
| 1738 | முடவேலி (எமனேஸ்வரம் வட்டம்) | கறுத்தப் பால அழகச்சி அம்மன் திருக்கோயில் |
| 1734 | திருவுடையாபுரம் | இளையாங்குடி ராஜேந்திர நாயனார் திருக்கோயில். |
| 1740 | தெ.புதுக்கோட்டை | திருவாரூர் தியாகராஜ சுவாமிகள் ஆலயம் |
| 1747 | பட்டம் தவிர்த்தான் (பார்த்திபனூர் வட்டம்) | அலட்சிய ஐயனார் கோவில் |
| | மங்கை ஏந்தல், புலவன் ஏந்தல் | மதுரை மீனாட்சி சுந்தரேஸ்வரர் ஆலயம். |

## 2. திருமடங்கள்

| | | |
|---|---|---|
| 1733 | எமனேஸ்வரம் | சிதம்பரம் சத்திய வாசக சுவாமியார் மடம் |
| 1745 | வஞ்சிக்குளம் | திருவண்ணாமலை பிருந்தாவன மடம் |
| | | மானாமதுரை பிருந்தாவன மடம் (இனாம்) |
| | வடக்குசந்தனூர் | பிருந்தாவனம் மடம் அக்கிரஹாரம், |
| 1751 | நாதன்வயல், பாணன் வயல் | திருவாரூர் பண்டார சந்நதிக்கு |

## 3. தமிழ்ப்புலவர்கள் மற்றும் சான்றோர்கள்

| | | |
|---|---|---|
| 1728 | எலிக்குளம் | சங்கர ஐயர், தர்மாசனம் |
| 1730 | குன்னக்குடி ஏந்தல் (மங்கலம் வட்டம்) | தர்மாசனம் |
| 1732 | செக்ககுடி சிரமம், | சத்தியாதபிள்ளை, ஜீவிதம் |
| | வடமலையான் | நயினார் முகமது, ஜீவிதம் |
| | பாப்பாகுடி சோழகிரி | வடமலை ஐயங்கார், தர்மாசனம் |
| | கூடன்குளம் காமனிதேரி | அருணாசலம் செட்டி, இனாம் |
| | | சிற்றம்பலக் கவிராயர், ஜீவிதம் |
| | | தேவராஜ ஐயங்கார், தர்மாசனம். |
| கி.பி 1733 | குணப்பன் ஏந்தல் | திருவேங்கடம் ஐயங்கார் |
| | செல்ல சமுத்திரம், நாகன் ஏந்தல், | ஊழியமான்யம் |
| | (எமனேஸ்வரம் வட்டம்) | தர்மாசனம் |

| | | |
|---|---|---|
| | எமனேஸ்வரம் | சிதம்பரம் சத்திய வாசக சுவாமிகள் மடம், தர்மம் |
| | கிழனூர் (எமனேஸ்வரம் வட்டம்) | அனந்த கிருஷ்ண சாஸ்திரி |
| | சவரப்பள்ளம் | ஊழியமான்யம் |
| | வேம்பங்குளம் (பார்த்திபனூர் வட்டம்) | தர்மாசனம் |
| | மேலக் கொன்னங்குளம் | மங்கைநாத கவிராயர் |
| | ஏனாதி (எமனேஸ்வரம் வட்டம்) | தர்மாசனம் |
| | கொன்னன்குளம் | திருவாவடுதுறை, சுப்பிரமணிய பண்டாரம் |
| | வாணியரேந்தல் (மாறநாடு வட்டம்) | சங்கர சாஸ்திரி |
| | குருவி ஏந்தல் (மாறநாடு வட்டம்) | தர்மாசனம் |
| | கட்டான் ஏந்தல் (பார்த்திபனூர் வட்டம்) | அழகர் ஐயங்கார் |
| 1734 | அகர ஏந்தல் (எமனேஸ்வரம் வட்டம்) | தர்மாசனம் |
| 1737 | சுந்தர நடப்பு (காளையார் கோவில் வட்டம்) | சேஷாச்சலம் ஐயங்கார் தர்மாசனம் |
| | வாலக்காடு ஏந்தல், சக்கையன் ஏந்தல், சுண்டக்குறிச்சி | கரியமாணிக்க பட்டர், இனாம் கருப்பன் செட்டி வகை, இனாம் அழகன் ஐயன் |
| 1738 | செங்குளம் படைக்கு வீங்கி, ஆவன்குளம், பிலார் பீச்சப் படக்கி, பன்னீர்குளம் | சுப்பிரமணிய ஐயர், இனாம் சுப்பு ஐயர், இனாம் நாராயண ஐயர், இனாம் |
| | குரவந்தி | அனந்த நாராயணன் |
| 1739 | மேலக்குறிச்சி கள்ளர்குண்டு | அருணாசலம் செட்டியார், இனாம் அனந்தகிருஷ்ண ஐயங்கார், தர்மாசனம். |
| | பாணன் ஏந்தல் | அழகாத்திரி ஐயங்கார், தர்மாசனம். |
| | மாணிக்கனேந்தல் (சாக்கை வட்டம்) | கோபாலதீட்சிதர், தர்மாசனம் |
| கி.பி. 1740 | மருதாணி வயல் (சாக்கை வட்டம்) | இராமா சாஸ்திரி, தர்மாசனம் |
| | குட்டி வயல், செட்டி வயல் | குப்பு ஆசாரியார், தர்மாசனம் |

| | | |
|---|---|---|
| | வாணியேந்தல் (அமராவதி வட்டம்) | சுப்பு ஐயன், தர்மாசனம் |
| | உம்மாங்கல் | லட்சுமண ஐயங்கார், தர்மாசனம் |
| | தெ.புதுக்கோட்டை | சுப்புஐயர், லெட்சுமி அம்மாள், தர்மாசனம் |
| 1741 | கருவேலகுறிச்சி செங்கமடை | அனுமந்தராயன் சேரி அழகிரி சாஸ்திரி |
| | ஆச்சனக்குடி | ஊழியமான்யம் |
| | பாரூர் ஓடை | முத்துகுமரா பிள்ளை, இனாம் |
| 1742 | பெருஞ்சானி சாமா பாப்பன் | குப்பன் செட்டியார், ஜீவிதம் |
| | ஏந்தல் (மங்கலம் வட்டம்) | ஊழியர் மான்யம் |
| 1743 | உதாரப்புளி (மங்கலம் வட்டம்) | தர்மாசனம் |
| 1745 | அலவன்குளம் செங்குளம் | சொக்கநாதப்புலவர், ஜீவிதம் சீனிவாச சாரியார், அழகிரி ஐயங்கார், (மானாமதுரை) |
| | பள்ளிச்சேரி (மங்கலம் வட்டம்) | பெருமாள் ஐயர், ஜீவிதம் |
| | நத்தை பொறுக்கி | சீனிவாச ஐயங்கார், தர்மாசனம் |
| 1746 | காடன் ஏந்தல் பன்னீர்க்குளம் | பரமசாஸ்திரி, தர்மாசனம் தர்மாசனம் |
| 1747 | செந்தட்டி ஏந்தல் (மாறநாடு) | ஊழியமான்யம் |
| | கமுதக்குடி. சோலையார் | இராமலிங்க சுவாமிகள் |
| | ஏந்தல் (பார்த்திபனூர் | திருவேங்கடத்தய்யர், தர்மாசனம் |
| | வட்டம்) வரிசை ஏந்தல் (மாறநாடு வட்டம்) | தர்மாசனம். |
| | சாமடை இருப்பன் ஏந்தல் (மங்கலம் வட்டம்) | விசுவநாத ஐயர், தர்மாசனம் |
| 1748 | வாகைக்குளம் கங்கை | கருப்பஞ்செட்டி வகை, இனாம் |
| | கொண்ட ஏந்தல், பாவயன் | அழகர் ஐயங்கார், இனாம் |
| | ஏந்தல், சிறுவாணி வயிரமுடி | அண்ணாசாமி ஐயங்கார், இனாம் |
| | ஏந்தல், சின்ன கொண்டுமுடி. | வேங்கட முத்து ஐயர், ஊழியம். |

இந்த அறக்கொடைகளை வழங்குவதில் அக்கறை கொண்டிருந்த மன்னர் சசிவர்ணத் தேவரைப் போல் அவரது அரசமாதேவியான அகிலாண்ட ஈசுவரி நாச்சியாரும் மிக்க ஆர்வத்துடன் இருந்து வந்தார். இராமநாதபுரம் சேதுபதி மன்னரது புதல்வியார் என்ற வகையில் சேதுபதி மன்னர்களது அரச பிராட்டிகளுக்குரிய ஆன்மிகப் பிடிப்பு, இவருக்கும் இருந்தது என்பதை அவரது பெயரால் வழங்கப்பட்ட கீழ்க்கண்ட அறக்கொடைகளில் இருந்து அறிய முடிகிறது.

இராணி அகிலாண்ட ஈஸ்வரியின் அறக்கொடைகள்:

திருக்கோயில்கள்

| | | |
|---|---|---|
| கி.பி. 1732 | சித்துஊரணி (எமனேஸ்வரம் வட்டம்) | இராஜேந்திர சோளீவரர் ஆலயம் இளையான்குடி. |

தனியார்கள்

| | | |
|---|---|---|
| கி.பி. 1733 | இளமனூர் (எமனேஸ்வரம் வட்டம்) | ஊழியமான்யம் |
| 1742 | பாப்பான் ஏந்தல் (மங்கலம் வட்டம்) | ஊழியமான்யம் |
| | அறுவாணி (மங்கலம் வட்டம்) | ஊழியமான்யம் |
| 1743 | புலிஅடி (மங்கலம் வட்டம்) | அனந்த ஐயர், இனாம். |

இந்த ராணியார், மன்னர் சசிவர்ணத் தேவரது இறப்பிற்கு முன்னரே கி.பி. 1744-ல் இறந்து இருக்கலாம் என்பதையும் இங்கே ஊகிக்க முடிகிறது. மன்னரது நிலக்கொடைகள் பற்றி கிடைத்துள்ள சில செப்பேடுகளின் உண்மை நகல் இங்கு கொடுக்கப்பட்டுள்ளது.

## 1. சிவகங்கைச் செப்பேடு

இந்த மன்னர் வழங்கியுள்ள செப்பேடுகள் பல. ஆனால் நமக்கு கிடைத்துள்ள இந்த மன்னரது நான்கு செப்பேடுகளில் முதலாவது இது. 18.4.1733 தேதியன்று, சிவகங்கை திருக்குளத்தின் கரையில் சாத்தப்ப ஞானியாரது மடத்தில் குருபூஜை, பரதேசி நித்தியபூஜை, நவராத்திரி பூஜை, சிவராத்திரி பூஜை ஆகிய நடத்தி வைப்பதற்கு ஏதுவாக மருதவயல் ஏந்தல் சர்வ மான்யமாக வழங்கப்பட்டதற்கான தானசாசனம் இது. மதுரை நீதி மன்றத்தில் உள்ளது.

1. ஸ்ரீ சுபமஸ்து சாலிவாகன சகாப்தம் 1655 கலியுக சகாப்தம்
2. 4834 இதின் மேல் செல்லா நின்ற பிரமாதீச ஸ்ரீ சித்திரை மீஉ
3. 21ந்தேதி புதன் கிழமையும் பவுர்னமியும் சுவாதி நட்சித்திரமும் விருச.
4. பலக்கினமும் கூடிய சுபயோக சுபதினத்தில் ஸ்ரீமன் மகா மன்
5. டலேசுரன் தளவிபாடன் பாசக்கி தப்புவராய கண்டன்
6. மூவராய கண்டன் கண்டநாடு கொண்டு கொண்ட நாடு குடாதான்
7. பாண்டி மண்டல தாபநாச்சாரியான் சோளமண்டல சண்டப் பிரச
8. ண்டன் ஈளமண்டலமும் கொண்டு யாழ்ப்பாண பட்டணமும் கெச
9. வேட்டை கண்டருளிய ராசாதி ராசன் ராச பரமேசுவரன் ராச
10. மார்த்தாண்டன் ராசாக்கள் தம்பிரான் ரவிகுலசேகரன் தொட்டிய
11. தளவிபாடன் ஒட்டியர் மோகம் தவிள்த்தான் துலுக்க தளவிபாட

12. ன் சம்மட்டிறாயன் இவுளி பாவடி மிதித் தேருவார் கண்டன்
13. அசுபதி கெசபதி நரபதி பிரிதிவி ராச்சியம் அருளா நின்ற சேது
14. காவலன் சேது மூல துரந்தரன் ராமானாத சாமி காரிய துரந்தரன்
15. இளம் சிங்கம் தளம் சிங்கம் சொரிமுத்து வன்னியன் தொண்டி
16. யன் துறைகாவலன் வைகை வழநாடன் தாலிக்கி வேலி...
17. கொட்டமடக்கி அரசராவணராமன் யெதுத்தார்கள் மார்பில் ஆணி
18. சிவபூசை துரந்தரன் செம்பி வளநாடன் காத்துரான குலோத்து
19. துங்கன் சோள நல்லூர் கீள்பால் விரையாத கண்டனிலிருக்கும்
20. இரண்ணிய கர்ப்ப அரசுபதி ரெகுநாத சேதுபதி புத்திரன்
21. விஜய ரெகுநாத சேதுபதி அவர்கள் மருமகன் குளந்தை நகராதிபதி
22. யன் பெரிய உடையாத் தேவரவர்கள் புத்திரன் ஸ்ரீமது
23. அரசு நிலையிட்ட முத்து விஜய ரெகுநாதச் சசிவர்ண பெரிய
24. உடையாத் தேவரவர்கள் நாலு கோட்டையிலிருந்து வேட்டைக்
25. கு வந்த இடத்தில் கோவானூர் ராசபாச அகம்படிய தாரரான வீர
26. ப்பன் சேருவை மகன் சாத்தப்ப ஞானி வெள்ளை நாவலடி ஊத்தில்
27. தவசிருக்கையில் நாம் கண்டு தெரிசத்ததில் உங்களுக்கு நல்ல யோகமும்
28. புதிய பட்டமும் வந்து நீ யானை கட்டி சீமை ஆளுவாய் யென்று விபூதி கொ
29. டுத்து தஞ்சாவூர் போகும்படி உத்திரவு கொடுத்தபடிக்கு நான் போய் புலிகு
30. த்தி அவர்கள் கொடுத்த ஒத்தாசையால் றாமனாதபுரம் பவானு சிங்கு
31. தேவனை செயம் செய்து வீரத்தின் பேரில் கோவானூரில் இருந்த சாத்தப்ப
32. ஞானியைக் கூட்டி வந்து பூசை பண்ணின ஊத்தில் திருக்குளம்
33. வெட்டி சிவகங்கை என்ற பேர் வரும்படியாக செய்த திருக்குளத்துக்கும்
34. வடக்கு காஞ்சிரங்கால் தென்வடலோடிய புத்தடிப் பாதைக்கு கிளக்கு பன்னி
35. முடக்கு பள்ளத்துக்குத் தெற்கு பாலமேடு தென்வடலோடிய பாதைக்கு மேற்கு
36. இந்நாங் கெல்லைக்குட்பட்ட காட்டுக்குள் இந்த சாத்தப்பஞானி
37. யாருக்கு தவசுக்கு மடங்கட்டிக் குடுத்து இந்த மடத்தில் குரு பூசை செய்
38. தும் பரதேசி நித்திய பூசை நவராத்திரி சிவராத்திரி பூசைக்கு நாலு
39. கோட்டை சோளபுரம் உள்கடையில் ஆறாங்குளம் கண்மாய்
40. கரைக்கு கிழக்கு அந்தக் கண்மாய் பெரிய மடை கிழமேலோடிய வாய்க்
41. காலுக்கு தெற்கு கருங்காலக்குடி தர்மத்துக் கல்லான சரகணை தென்
42. வடலோடிய பாதைக்கு மேற்கு மருதவயல் கண்மாய் நீர்பிடிக்கு
43. வடக்கு பெருநாங்கெல்லைக்குள்பட்ட மருதவயல்யேந்தலும்

44. நஞ்சை புஞ்சை மாவடை மரவடை திட்டுத்திடல் கீழ்நோக்கிய
45. கிணர் மேல்நோக்கிய மரம் சகலமும் தான சாதனமாக வரியிறை
46. ஊதியமும் சகலமும் சர்வ மானியமாக
47. (ஆறுமுகம் சகாயம்) கட்டளையிட்டபடியினாலே கல்லும் காவேரியும்
48. புல்லும் பூமியும் ஆதிசந்திருர்க்கம் வரைக்கும் புத்திர பவுத்திர பாரம்பரையாய்
49. ஆண்டு அனுபவித்துக் கொள்ளக் கடவாராகவும் ராசகுரு சாத்தப்பையா
50. என்று பேர் கொடுத்து சிங்கமுகத்தரணயல் திருசங்கு...
51. சங்கு சேகண்டி காவிக்குடை செண்டா அன்னக்கொடி விரு
52. தும் குடுத்திருப்பதால் இந்த தர்மத்தைப் பரிபாலனம் பண்ணி
53. ன பேர்கள் காசியிலும் ராமேசுவரத்திலும் கோடி சிவலிங்கப் பிரதிஷ்டை, கோடி பிரம்ம பிரதிஷ்டையும் பண்ணி
54. ன சுகத்தை யடைவார்கள் யிந்த தர்மத்துக்கு அகிதம் பண்ணி
55. னவன் கெங்கைக் கரையில் காராம் பசுவையும் பிராமண ஸ்ரீயையும்
56. சிசுவையும் வதைபண்ணின தோசத்தில் போகக் கடவாராகவும்
57. யிந்த தர்மசாதனம் யெளுதினேன் ராயசம் வேலாயுதம் உத்திரவுப்படிக்கு இந்த பட்டயம் வெட்டித் தந்தது.
58. தாயுமான ஆசாரி மகன் தையல் பாகம்.

## 2. இளையான்குடி செப்பேடு

இளையான்குடியில் உள்ள ராஜேந்திர சோழீஸ்வரர் ஆலயத்துக்கு கி.பி.1733 திருவுடையாபுரம் என்ற ஊரினை சர்வமானியமாக வழங்கியதை இந்த செப்பேடு குறிப்பிடுகிறது. இதனை வழங்கியவர் மன்னர் சசிவர்ண பெரிய உடையாத் தேவர்.

1. ஸ்ரீமன் மகாமண்டலேசுபரன் அரியபுரத்
2. ளவிபாடன் பாசைக்கி தப்புவறாயிர கண்டன் மூள
3. றாயர் கண்டன் கண்டநாடு கொண்டு கொண்டநாடு குட
4. தான் பாண்டி மண்டல தாபனா சாரியன் சோழ
5. மண்டல பிறதிக்ஷணாபானாசாரியான் தொண்ட மண்
6. டல பிரசண்டப் பிறசண்டன் ஈளமுங் கொங்கும் யா
7. ள்ப்பாண பட்டணமும் கேயு மண்டலமு மளித்து கெ
8. சவேட்டை கொண்டருளிய றாசாதிறாசன் றாசபரமேசுபர
9. ன் றாசமாத்தாண்டன் றாசகெம்பீரன் றாசகுலசேகரன் இ
10. வுடி பாவடி மிதித்தேறுபார் கண்டன் சாவக்காற கண்
11. டன் சாமித்தொராகிய மிண்டன் பஞ்சவற்ண றாய
12. றாவுத்தன் பனுகுவார் கண்டன் சொரிமுத்து வண்
13. ணியன் திலதனுதல் மடல் மாதர் மடலெழுதும் வரு
14. சுமுகன் காமிகா கந்தப்பன் சங்கீத சாயுத்தி

15. ய வித்தியா வினோதன் வீரதண்டை சேமத்தலை
16. விளங்கு மிறுதாளினான் வில்லுக்கு வீமர்பரிக்
17. சூநகுலன் பரதநாடகப் பிறவீணன் வலியச்சருவி
18. வளியிடக்கால் நீட்டி தாலிக்கு வேலி தத்துறாதிய
19. ள் மிண்டன் இளஞ்சிங்கம் தளசிங்கம் ஆத்துபாச்சி
20. கடல்ப்பாச்சி மதப்புலி அடைக்கலங் காத்தான் து
21. லுக்கர் மோகந் தவிள்த்தான் துலுக்கர் தளவா
22. டன் ஒட்டியர் மோகந் தவிள்த்தான் ஒட்டியர் தள
23. விபாடன் வீரலெட்சுமி விசைய லெட்சுமி காந்
24. தன் அனுமக்கொடி கெருடக் கொடி விளக்கும் வி
25. ருதாளினான் செங்காவிக் கொடையோன் கயனா
26. த சுவாமி காரியர் துரந்தரன் காளை நாயகர் துர
27. ந்தரீகான் சேது மூல தராதரீகாரன் சேது இ
28. லட்ச துரந்தரீகறான் தொண்டித்துறைக் காவ
29. லன் சிவபூசா துரந்தரீகாரன் துஷ்ட்ட நிக்
30. க சிஷ்ட்ட பரிபாலகன் அறி
31. வுக்கு அகஸ்த்தியர் பொறுமைக்கித் தன்மர் ப
32. கை மன்னர் கேசரி இரணியகப்ப யாசியான
33. சேது வம்மிச துரந்தரீகறன் பிறிதிறாச்சிய
34. பரிபாலனம் பண்ணியருளின ஸ்வத்ஸ்ரீ வத்ஸ்ரீ
35. சாலிய வாகன சகார்த்தம் 1655 ற்மே
36. ல் செல்லா நின்ற பிறமாதீசா ஸ்ரீ மாசிமீ
37. ய உ புனல்ப் பிரளைய நாட்டில் அறுங்குல
38. தி பாறாள்ள பெரிய உடையாத் தேவரவர்
39. கள் புத்திரன் அரசு நிலையிட்ட விசைய ரெகு
40. னாத பெரிய உடையாத் தேவரவர்கள் துகவூ
41. ர் கூத்தத்தில் கடாதிருக்கை நாட்டில் இ
42. ந்திறாவதான நல்லூறான இளையான்குடி
43. யில் சுவாமி றாசேந்திர சோளீசுபர நா
44. யனாருக்கு மன மகிள்ந்த வேணுகோபலர்
45. ரெண்டு சன்னதிக்கிம் பூசை நெய்வேதினத்து
46. க்கும் திருவுடையாபுரம் கிறாமம் தாராபூரு
47. வமாக சறுவமானியமாக ஆதிசய்வமாகி
48. யகாசியபர் கோத்திரமும் போதாயின சூத்திர
49. முமான கயிலா நம்பியார் புத்திரன் சுப்பி
50. றமணிய நம்பியார் கைய்யில் பூறுவபட்சம் பூ
51. றண(அ)ம்மாவாசியும் சோமவாரமும் சுக நட்
52. செத்திர சுபயோகமும் கூடிய சந்திர கெரென
53. புண்ணிய காலத்தில் தானம் பண்ணிக் கொடுத்த கிரா
54. மம் திருவுடையாபுரத்துக் கெல்கை அதிக
55. ரைக்கி கிளக்கு சித்தாத்துக்கு வடக்கு அரியா

56. ண்டிபுரம் குளக்காலுக்கு மேற்கு நெடு ஊரணி
57. த் தென் கடக் கொம்புக்கு தெற்கு இன்னாங்
58. கெல்க்கிகி யுள்ப்பட்ட திட்டு
59. திடல் நஞ்சை புஞ்சை மேல் னோக்கிய மரம்
60. கீள் னோக்கிய கிணறு வருதீபனாட செபம்மசிலது
61. வடாசாணம் சகல சமுதாய பிராத்தியும் அதி
62. சந்திறாக்கமும் புத்திர பவுத்திர பவுத்திர பாரம்பரி
63. யமாக சாமி சன்னதியமுக்கு பூசை நெய்வேதி
64. ணம் பண்ணிக்கொண்டு சுகத்திலே இருப்பா
65. றாகவும் இந்த தற்மத்தை பரிபாலணம் பண்
66. ணிக் கொண்டு வந்த பேர்கள் காசியிலேயும்
67. ராமேசுபரத்திலேயும் கோடி சிவலிங்க பிறதிஷ்
68. ட்டையும் கோடி விறும்ம பிறதிஷ்ட்டையும் பண்
69. ணின பலனை யடைவார்றாகவும் இதுக்கு யா
70. தாமொருதன் அகிதம் பண்ணினவன் கா
71. சியிலே காறாம் பசுவையும், குருவையும் வ
72. தை பண்ணின்ன தோசத்தில் போகக் கடவ
73. ரறாகவும் இந்த தற்மசாதனம் எழுதினே
74. ன் விசுவனாசாரி குமாரன் வீரபத்திர ஆ
75. சாரியென் உ. தாநபாலநயோர் மத்யே
76. தாநாத் சிரேயோநுபாலநம் தாநாத் ஸ்வர்க்க
77. ம் அவாப்நோதி பாலநாத் அச்சுதம் பத
78. ம் ஸ்வதத்தாத் த்விகுணம் புண்யம் பரதத்தா
79. நபாலநலம் பரதத்தாபஹாரேண
80. ஸ்வத நிஷ்பலம் பவேத்

## 3. இமயனீசுரம் செப்பேடு

சிதம்பரத்தில் இருந்து இயமனீசுவரத்துக்கு வருகை தந்த சத்தியவாசக சுவாமியார் அவர்களை, அங்கு மடம் உண்டு பண்ணிவித்து, அந்த மடத்தைப் பராமரிக்க மன்னர் சசிவர்ண பெரிய உடையாத் தேவர் அவர்கள், 26.11.1734 தேதியன்று அந்த வட்டாரத்தில் உள்ள நஞ்சை நிலங்களை தான சாதனமாக வழங்கியுள்ளதை அறிவிக்கும் பட்டயம் இது.

தடாதகை நாடு என்ற உட்பிரிவும், இளையான்குடி பெரியகண்மாய் தாமரைமடை, பகையறவென்றான் ஏந்தல், செட்டி ஊரணி, அருணையூர் குளக்கால், சாக்காரையில் நீர்த்தாவு, கல்லூரணி ஏந்தல் ஆகிய நீர் ஆதாரங்களும் அவைகளின் எல்லைகளும் இந்த செப்பேட்டில் குறிப்பிட்டு இருப்பது ஆய்வாளர்களுக்கு அரிய செய்தியாகும். இந்தச் செப்பேடு சென்னை அரசு அருங்காட்சியகத்தில் உள்ளது.

1. சுவஸ்திமன் மகா மண்டேலேசுரன் அரியாயிர தளவிசைய பாசைக்குத் தப்பு வாகண்டன்.
2. மூவாயிர கண்டன் கண்டநாடு கொண்ட கொண்ட நாடு குடாதான் பாண்டி மண்டலத்
3. தாபநாச்சாரியான் சோள மண்டல பிரதிட்டாப நாச்சாரியன் தொண்டமண்
4. டல சண்டப்பிறசண்டன் யீளமும் கொங்கும் யாள்ப்பா ணமும் எட்டித்திசை வேட்டை கண்
5. டருளிய ராச ராசன் ராச பரமேசுரன் ராச மாத்தாண்டன் ராச கெம்பீரன் எம்மண்டல
6. முங் கொண்டருளிய ஒட்டியர் தளவிபாடன் யொட்டியர் மோகந்தவிள்த்தான்
7. மலைகலங்கினும் மனங்கலங்காதான் மறைப்புத்திரர் காவலன் குறும்பர் கொட்டமட
8. க்கிய ராச குலதிலகன் ராசாக்கள் தம்பிரான் அரசராவண ராமன் அதம பிரகண்டன்
9. தாலிக்குவேலி தரியலர்கள் சிங்கம் வடகரைப்புலி வைகை வளநாடன் தேவை
10. நகராதிபன் சேதுகாவலன் சேது ராச்சிய துரந்தரன் தொண்டியந்துறை சத்திர பிரதாபன்.
11. திரை கொள்ளுங் காவலன் ராமனாத சுவாமி காரிய துரந்தரன் சேமத் தலை விளங்குந்தாளினான்.
12. செங்காவிக்கொடி செங்காவிக்குடை செங்காவிச் சிவிகை யாளி அன்னக்கொடி
13. கெருடக்கொடி சிங்கக் கொடியை யுடையான் யிவுளி பாவடி மிதித்தேறு
14. வார்க் கண்டன் முல்லை மாலிகையான் யிரவிகுல சேகரன் பஞ்சகால பயங்கரன்
15. பரதேசி காவலன் தடாதகை நாட்டில் செம்பிவள கரதல நகராதிபன் சிவ
16. பூஜை குருபூஜை மகேசுவர பூஜை மறவாத வாசாதிபன் அசுபதி கெசபதி நரபதி யிரண்ணிய
17. கெற்பாரன் விசைய ரகுநாத சேதுபதி யவர்களுக்கியல்பான அரசு நிலையிட்ட
18. விசைய ரகுநாத குழந்தைச் சசிவர்ண பெரிய உடையாத் தேவரவர்கள் பிறுதி ரா
19. சச்சிய பரிபாலனம் பண்ணி யருளா நின்ற சாலிய வாகன சகாத்தம் ''1655 கலியப்த''
20. 4834 யீதன் மேல் செல்லா நின்ற ஆனந்த ஸ்ரீ கார்த்திகை 26. தீ பூர்வ.
21. பச்சம் சுக்கிர வாரம் தசமியும் புனர்பூச நட்செத்திரமும் பால வாகரணமும்

22. சுக்ர நாட யோகமும் கூடிய சுபதினத்தில் ராச ஸ்ரீ சசிவர்ணப் பெரிய உடையா.
23. தேவர் மகாராசாவர்கள் பூலோக கயிலாயமாகிய சிதம்பரத் திலிருந்
24. தெழுந்தருளியா நின்ற சத்திய வாசக சுவாமி யாரவர்களுத் தடாதகை நாட்டி
25. லியமனீச்சுரம் தலத்தில் தான சாதனப் பட்டயமெழுதிக் குடுத்தது தான சாதனப்
26. பட்டயமாவது வைகை நதி வடகரையில் சுலுத்தாமியார் பள்ளிக்கும் வடக்கு
27. யிதன் மேற்கு வடகிழகோடிய உண்டு பாதைக்கும் மொட்டைப்புளிப் பண்டாரம்.
28. மனைக்குக் கிழக்கு யிதர்கடுத்த அழகப்ப மணியக்காரன் வீட்டு உண்டு பாதைக்குத் தெற்கு.
29. யீசுவரன் கோவிலுக்குத் தெற்கோடிய பெரும்பாதைக்கு மத்த மயிலை நம்பி.
30. யாரக்கிரகாரத்துக்கு மேற்கு யின்னான் கெல்கை குள்ளாகிய நிலத்தில் மட தர்மம்
31. உண்டு பண்ணி வித்து அந்த மடத்துக்குச் செல தருபாஷண மும்சர்வ மானிய
32. உம்பள நிலமை சுவாத்திய நிலைமை யாவது உய்ய வந்தா ளம்மன் கோவில்
33. மடைப் பாசானத்தில் தெற்கோடிய செக்கடிக் கவலில் நஞ்சைத் தரம்பெரும்
34. படி மூவிரையபடி 50 1/2 யும் யிதற்கு தென்கிழக்கோடிய வண்டல் கொடி
35. க்காக்கவலில் பெரும் பச்சேரியில் விரையடி பதிங்கலமும் மடதர்மத்துக்கு வான்
36. பயிர்த் தோட்டம் அக்கானரத்துக்கு கிழக்கு வான்பயிர்த் தோட்டத்தில் ரெண்டு
37. தோட்டமும் மடதர்ம ஊழிய அளமாகாணம் சிவியார் தோட்டக்காரர்
38. பத்துக்குடியும் அளமாகாணச் சிலவிற்குச் சிறுதேட்டு பணவகைக்கும்
39. யிளையான்குடி பெரிய கண்வாய்த் தாமரை மடை பாஷாணம்
40. உட்கடை பகையர வென்றான் ஏந்தல் குளங்களுக்கு...
41. ட்சி ஏந்தல் யெல்கை... செட்டி ஊரணிப் பாதைக்கும் கிளக்கு அருணையூர்
42. குளக்காலுக்கும் சோதுகுடி எல்லைக்கு தெற்கு கருஞ்சுத்தி கண்வாய் அரணையூர்.
43. சுக்கானூர் நீர்த்தாவுக்கும் மேற்கு கல்லூரணி ஏந்தல் எல்லைக்கு வடக்கு இன்னாங்.
44. கெல்கைக்குள்பட்ட நஞ்சை 2
45. 38 குறுக்கம் 361ம் இதுக்குள்ளாகப்பட்ட மாவடை மரவடையும்

*அனுபவ*

46. *வித்துக் கொள்கிறது பைங்குனி குருபூசைக் கட்டளைக்கு ராமலிங்க காலால்...*
47. *...சங்கராந்திப் பொங்கலுக்கு கட்டளை உள்ளிட்ட பச்சை யமுதுபடிஅமு*
48. *தும்படியும் கிரைய வகையும்... தீபாவளி பண்டிகைக் கட்டளைக்குவஸ்திரம்*
49. *எண்ண கிரைய வகைக்கு... நவராத்திரி கட்டளைக்கு கிரைய...*
50. *ம் சிவராத்திரி கட்டளைக்கு வஸ்திரமும்.... அவல் களம் தயிர் களமும்*
51. *மடதர்மத்துக்கு ஊறுகாய்க்கி, மாஙகாய ஞ்ழும் நெல்லிக்காய் யகனமும் இந்தப்படிக்கி.*
52. *கட்டளையாக நடந்து வரும்படிக்கிப் பத்திக்கொண்டு ஆதிசந்திர பூர்வமாக*
53. *கல்லும் காவேரியும் புல்லும் பூமியும் உள்ள வரைக்கும் மீனாட்சி சுந்தரேசுவரர் ராமனாதசு*
54. *வாமி பர்வத வர்த்தினி சன்னிதான விளக்கம் போல யிந்த தர்மம் பரிபாலனம் பண்ணிக் கொ*
55. *ள்ளுவாராகவும் யிந்தபடிக்கு சத்திய வாசக குரு சுவாமியாருக்கு சசிவர்ண மகாராசா.*
56. *அவர்கள் கட்டளையிட்ட பட்டயத்துக்கு.*

## 4. பெருவயல் செப்பேடு

*இராமநாதபுரம் சேதுபதி சீமையில் பெருவயல் கிராமத்தில் சேதுதளவாய் வயிரவன் சேர்வைக்காரர் உண்டுபண்ணி வைத்த ரெணபலி முருகையா ஆலயத்தில் பூசை, நிவேதனம், திருமாலை, திருவிளக்கு தர்மத்துக்கு மன்னர் சசிவர்ணத்தேவர் 4.8.1738 தேதியன்று தொண்டியை அடுத்த திருவெத்தியூர் ஊரினைச் சர்வமான்யமாக வழங்கியதைத் தெரிவிக்கும் தான சாதனப்பட்டயம் இது. இந்த தானம் அப்பொழுது ஆட்சியிலிருந்த முத்துக்குமார விசைய ரகுநாத சேதுபதிக்குப் புண்ணியமாக வழங்கப்பட்டிருப்பது சேதுபதி மன்னருக்கும் சிவகங்கை மன்னருக்குமிடையில் இருந்த உறவின் நெருக்கத்தைக் குறிப்பதாக உள்ளது.*

*(இந்தப் பட்டயம் தளவாய் வயிரவன் சேர்வைக்காரரது வழியினரும் பாரத ஸ்டேட் வங்கியின் அருப்புக்கோட்டை கிளை மேலாளருமான திரு. எம்.மீனாட்சி சுந்தரம் அவர்களிடம் உள்ளது.)*

1. *ஸ்வஸ்திஸ்ரீமன் மகாமண்டலேஸ்வரன் அறியராயிரதள விபாடன் பாசைக்கு தப்புவா*
2. *ர் கண்டன் கண்டணாடு கொண்டு கொண்டநாடு கொடாதான்*

பாண்டிமண்டல

3. த்தாப னாசாரியன் சோளமண்டலப் பிரதிஷ்டா பனாசாரியன் ஈழமும் கொங்கும் யாழ்ப்பா
4. ணமும் கெஜவேட்டை கொண்டருளிய ராசாதிராசன் ராசகம்பீரன் ராசபரமே
5. சுவரன் ராஜமார்த்தாண்டன் ராசகுலசேகரன் ராஜகுலதிலகன் சொரிமுத்து வன்னியன்
6. கொடைக்கு கர்ணன் பரிக்கு நகுலன் வில்லுக்கு விசையன் இவுளி பாவடி மிதித்து ஏறுவா
7. ர் கண்டன் கொட்டமடக்கி வையாளி நாராயணன் உருகோல் சுரதான் பகை.
8. மன்னர் சிங்கம் பகைமன்னர் கேசரி துஷ்ட நிக்கிரக சிஷ்ட பரிபாலனன் வீரகஞ்
9. சுகன் வீரவளநாடன் சிவபூசா துறந்தரன் மன்னரில் மன்னன் மறுமன்னர் காவலன் வே
10. தியர் காவலன் அரசராவண ராமன் அடியார் வேலைக்காரன் பாதள விபாடன் சாடிக்கா
11. ரர்கண்டன் சாமித்துரோகியர் மிண்டன் பஞ்சவர்ண ராய ராவுத்தன் வீரவெண்பா மா
12. லை இளஞ்சிங்கம் தளம்சிங்கம் பகைமன்னர் சிங்கம் மதப்புலி அடைக்கலங் காத்த
13. என் தாலிக்கு வேலி சத்திராதியள் மிண்டன் வன்னியர் ஆட்டம் தவிழ்த்தான் மேவலர்
14. கள் கோளரி மேவலர்கள் வணங்கும் இரு தாளினான் துரக ரேபந்தன் அனும கேதனன்
15. கெருட கேதனன் பரதநாடக பிரவீனன் கருணாகடாட்சன் குன்றினுயர் மேரு
16. வில் குன்றார் வளைமேளித்தவன் திலத நுதல் மடமாதர் மடல் எழுத வரு சுமுகன்
17. விசயலெட்சுமி காந்தன் கலை தெரியும் விற்பனன் காமினி கந்தப்பன்.
18. சத்திய பாசா அரிச்சந்திரன் சங்கீத சாகித்ய வித்யா விநோதன் வீர
19. தண்டை சேமத்தலை விளங்கும் இரு தாளினான் சகல சாம்புராஜ்ய லெட்சு
20. மினிவாசன் இராமநாத சுவாமி காரிய துறந்தரன். ஸ்வஸ்திஸ்ரீ சாலி வாகன சகா
21. ப்தம் 1661 இதன்மேல் செல்லா, நின்ற காலயுக்தி நாம சம்வச்சுரத்து உத்தி
22. ராயணத்தில் வருஷ ரிதுவில் ஆவணி மாசத்தில் கிருஷ்ணபட்சத்தில் சுக்கிர வாரமும்
23. அமாவாசையும் கூடின சூரியோத ராக புண்ணிய காலத்தில் சேதுகாவலன்

24. வங்கி சாதிபனான புனல்பிரளய நாட்டில் இருக்கும் குளந்தை நகராதிபனா
25. ன பெரிய உடையாத் தேவரவர்கள் புத்திரன் ஸ்ரீ விசைய ரகுநாதப்பெரி.
26. ய உடையாத் தேவரவர்கள் பெருவயலிலிருக்கும் சாத்தப்பன் சேருவைகா
27. காரன் புத்திரன் சேது தளவாய் வயிரவநாதன் சேருவைகாரன் உண்டு பண்ணி
28. விச்ச சுப்பிரமணிய ஸ்வாமியான பெருவயல் ரணபெலி முருகய்யாவுக்கு பூசை
29. நிவேதன திருமாலை திருவிளக்குக்கு முத்துக்குமாரு விசைய ரகுநாத சேதுபதி.
30. காத்த தேவரவர்களுக்குப் புண்யமாக பெருவயல் தானத்தார் தலத்தாரிடம் சேது.
31. வில் ரெண்ணியோதக தாரபூர்வமாக கொடுத்த கிராமத்துக்கு யெல்கையாவது கானாட்டா.
32. ங்குடி குளத்துக்கும் ஆற்றங்கரைக்கும் சின்ன வட்டானத்து அளத்துக்கும் மேற்கு
33. கடுக்களூர்க் கண்மாய்க்கும் ஷை வயலுக்கும் வடக்கு புதுப்பையூர் வயலு
33. லுக்கும் தெற்கோடிய ஆற்றுக்கும் கிழக்கு அக்கிரகாரம் குளத்தூர் வயலுக்கும்
34. கீழை கரும்பூர் வயலுக்கும் சீவநதியேந்தல் கண்மாய்க்கும் தெற்கு இன்னா
35. ங்கெல்கைக்குள்ளிட்ட திருவெத்தியூர் ஊரது புரவு நஞ்சை புஞ்சை
36. மாவட்ட மரவடை திட்டுதிடல் ஊரணி உடைப்பு வுள்கிடையேந்தல்
37. நிதி நிகேஷப ஜெலதருபாஷாண அக்கிர பிராம்மிய சித்தி சாத்தியமென்று சொ
38. ல்லப்பட்ட அஷ்டதேஜாம்மியங்களும் ரணபலி முருகய்யாவுக்கு
39. சருவமான்யமாக பூசை நெய்வேத்தியத்துக்கு கொடுத்த படினாலே ஆசந்திரா
40. ரக சாமியாய் சந்திராதிசந்திர பிரவேஷம் உள்ளவரைக்கும் அந்த கிராமத்தை
41. க் கொண்டு பூசனை வேளை 5/6 திருமாலை திருவிளக்குக் காட்சி வராத
42. படிக்கு நடப்பிச்சுக் கொண்டு வரக்கூட வாராகவும் அந்த சுப்பிரமணிய
43. ப் பிரதிஷ்டையும் அந்தக் கிராமத்தையும் பரிபாலனம் பண்ணின பேர்க
44. ள் காசியிலே கோடி சிவலிங்க பிரதிட்டையும் தனுக் கோடியிலே
45. கோடி பிரம்மப் பிரதிஷ்டையும் கோடி கன்னியாதானம் பண்ணின

46. சுகுதத்தை அடைவாராகவும் இந்த ரணபலி முருகையாவுக்கு நடக்கிற திரு
47. வெத்தியூருக்கு அகிதம் பண்ணினவன் கெங்கையிலேயும் தனுக்கோடி
48. யிலே கோடி பிராம்மணரை வதை பண்ணின தோஷத்தை அடைவாராகவும்.
49. ஸ்ரீ வஸ்தி.
50. ......................
51. ......................
52. யிந்த தர்மசாசனம் எழுதினேன் ராயசம் தேவ ராய பிள்ளை புத்திரன்
53. சொக்கனாதன் இந்தவிதம் இந்தப்படிக்கு தாம்புரசாசனம் எழுதினேன்.
54. சென்ன வீரபண்டாரம் புத்திரன் சென்ன வீரப்பன் எழுத்து பெருவயலில் திருப்ப.
55. ணி காணியாட்சி மங்களேஸ்வர குருக்கள் கையில் தானஞ் செய்து குடுத்தது.

## 5. அரளிக் கோட்டை செப்பேடு

மன்னர் சசிவர்ணத்தேவர், தமது பிரதானியாக கிருஷ்ணபிள்ளை தாண்டவராய பிள்ளையை நியமனம் செய்து முத்திரை மோதிரம் வழங்கிய ஆணையைக் கொண்ட பட்டயமிது. கி.பி.1747ல் வழங்கப்பட்டுள்ளது. தாண்டவராய பிள்ளையின் தந்தை காத்தவராய பிள்ளையும் நாலு கோட்டைப் பாளையம் பெரிய உடையாத் தேவரது அட்டவணைக் கணக்கராக இருந்தார் என்ற விவரமும் இந்தச் செப்பேட்டில் இருந்து தெரிய வருகிறது.

(இந்தச் செப்பேடு சிவகங்கை வட்டம் அரளிக்கோட்டை கிராமம் எஸ்.இராமகிருஷ்ணன் என்பவரிடம் உள்ளது.)

1. பிரபவ வருடம் சித்திரை மாதம் 16 தேதி
2. மகாராஜ மானிய அரசு
3. நிலையிட்ட சசிவர்ண பெரிய உ
4. டைய தேவர்களது கிஷ்ணபிள்ளை
5. தாண்டவராய பிள்ளைக்கி
6. பட்டயம் கொடுத்தபடி பட்டய
7. மாவது பாளையப்பட்டு முதல்
8. தன் தகப்பன் காத்தவராய பிள்
9. ளை நம்மிட தகப்பனார் மேற்படி உடை
10. யா தேவர் நாள் முதல்அ
11. ட்டவணை கணக்கும் எழுதி காரு
12. வாரும் பார்த்து வந்தபடியானாலே

13. தானம் பாளையப்பட்டு முதல் சம
14. ஸ்தாநம் உண்டாகிய வரைக்கும்ந
15. ம்மிட மனசுக்கு இருக்க அறமனை கா
16. ரியம் கூடிவரும் படியாய் திவ்குசா
17. ஆகம செளஸ காரிய முமொடு
18. உத்திரவாகமங்கள் செய்த படியினா
19. லே சிவகங்கை சமஸ்தான சீமை
20. அதிகாரம் பிறக்க சொல்லி முத்திரை
21. மோதிரம் கட்டளையிட்ட படியினாலே
22. சிவகங்கை சமஸ்தானம் உள்
23. ள வரைக்கும் புத்திராபுத்திரன் வழி
24. வழி வம்சமாக அதிகாரம் செ
25. ய்து அரண்மனை காரியமும் பிறதாவுமும் தானும்
26. நடந்து கொள்ளச் சொலி மேற்படி தாம்புர
27. பட்டயம் கட்டளையிட்டோம் அந்தப்படி
28. நடப்பிச்சு கொள்ளவும்.

# 3. இறவாப்புகழ் கொண்ட இரண்டாவது மன்னர்

புதிய சிவகங்கைத் தன்னரசின் இரண்டாவது மன்னராக முடிசூட்டிக் கொண்டவர் முத்துவடுகநாத பெரிய உடையாத் தேவர் என்பவர். மன்னர் சசிவர்ணத் தேவரது முதல் மனைவி அகிலாண்ட ஈசுவரி மூலம் பிறந்த பட்டாபி இராமசாமி, சுவர்ண கிளைத் தேவர் என்ற இரு ஆண்மக்கள், மன்னர் மறைவதற்கு முன்னதாகவே காலமாகி விட்டனர். ஆதலால், முத்து வடுகநாதர் மன்னராகும் வாய்ப்பை பெற்றார். மறைந்த மன்னர் சசிவர்ணத் தேவருடைய இரண்டாவது மனைவியின் மகன். அப்பொழுது அவருக்கு வயது இருபத்து ஒன்று. பதவிக்கு ஏற்ற வயது தான். ஆனால் நிர்வாகத்துக்கு மிகவும் புதியவராக இருந்ததால் அவரது தந்தையின் ஒன்றுவிட்ட சகோதரர் செல்வ ரகுநாதத் தேவர், முத்து வடுகநாத தேவருக்கு நிர்வாகத்தில் துணை புரிந்து வந்தார். இந்த இளைய அரசுக்கு பல சோதனைகள் காத்து இருந்தன. அவைகளில் ஒன்று தஞ்சை மராட்டிய மன்னரது படையெடுப்பாகும். இராமநாதபுரம், சிவகங்கை ஆகிய இரண்டு சீமைகளுக்கும் உரிய அனுமந்தக்குடி பகுதியை தஞ்சாவூர் படைகள் திடீரென்று ஆக்கிரமித்துக் கொண்டன. ஏற்கனவே கி.பி. 1728-ல் சசிவர்ணத் தேவரும், இராமநாதபுரம் கட்டத்தேவரும் பாம்பாற்றுக்கு வடக்கேயுள்ள சேது நாட்டின் நிலப்பரப்பை தஞ்சை மன்னருக்கு தாரை வார்த்துக் கொடுத்திருந்தும், பேராசை காரணமாக அப்பொழுது தஞ்சை மன்னராக இருந்த பிரதாப் சிங் பாம்பாற்றை கடந்து சேது நாட்டிற்கு வடக்கே உள்ள விரிசுழி ஆற்றின் கரையில் இருந்த அனுமந்தக் குடி வரை ஆக்கிரமித்து விட்டார். அந்த அக்கிரமச் செயலுக்கு புதுக்கோட்டை தொண்டைமானும் துணை புரிந்தார்.[31]

---

31. Rajayyan. Dr. K. - History of Madura (1974) P: 50

செய்தியறிந்த முத்து வடுகநாதரும், செல்வ ரகுநாதத் தேவரும் இராமநாதபுரம் கோட்டைக்கு விரைந்து சென்று சேதுபதி மன்னரைச் சந்தித்தனர். முடிவு அடுத்த மூன்று நாட்களில் மறவர் படை திரண்டது. சிவகங்கை மறவர்களும், சேதுபதி சீமையின் மறவர்களும் அஞ்சு கோட்டையில் சந்தித்து அணிவகுத்தனர். சேதுபதி மன்னரது வீரத் தளபதியான வெள்ளையன் சேர்வைக்காரர் தலைமையில் அனுமந்தக்குடி நோக்கி அந்த படைகள் புறப்பட்டன. மறவர் சீமைக்குரிய மகோன்னத வீரத்துடன் போர் புரிந்து வெற்றியுடன் ஆக்கிரமிப்பாளர்களைத் துரத்தி விட்டு வெற்றியுடன் திரும்பினர்.[32] ஒரு வகையாக இந்த முதல் சோதனையில் இளம் மன்னர் முத்து வடுகநாதத் தேவர் வெற்றி பெற்றுவிட்டார். என்றாலும், சிவகங்கை ஒட்டியுள்ள மதுரை, திருச்சி, தஞ்சாவூர் சீமைகளில் ஏற்பட்ட அரசியல் குழப்பங்களின் தாக்கம் சின்ன மறவர் சீமையிலும் எதிரொலித்தன.

அழிந்த கண்மாயில் மீன்பிடிப்பவர்களைப் போன்று தமிழக அரசியலை தங்களது சுயநலத்திற்குப் பயன்படுத்திய சந்தா சாகிபும், மராட்டியர், ஹைதராபாத் நிஜாம் ஆகியோர் ஒன்றன் பின் ஒன்றாகத் தளர்ந்தவுடன் நிஜாமினால் அங்கீகரிக்கப்பட்ட அன்வர்தீன் திருச்சியை தலைநகராகக் கொண்டு கர்நாடக நவாப் ஆனார். ஏற்கனவே சந்தா சாகிபால் மதுரைச் சீமை அரசினை இழந்த மதுரை நாயக்க இளவல் விஜய குமாரனும் அவரது தந்தை பங்காரு திருமலையும் சிவகங்கை சீமையில் புகலிடம் பெற்றிருந்தனர்.[33] இப்பொழுது இருவரும் திருச்சி வந்து இருந்த நிஜாமை சந்தித்தனர். அவருக்கு கட்டுப்பட்டு இருப்பதாகவும் மதுரைச் சீமைக்கு கப்பமாக ஆண்டு ஒன்றுக்கு முப்பது லட்சம் ரூபாய் செலுத்துவதாகவும் ஒப்புக்கொண்டனர். நிஜாமும் அவர்களது கோரிக்கையை ஒப்புதல் அளித்து அவர்களுக்கு உதவுமாறு நவாப் அன்வர்தீனைப் பணித்தார்.[34] ஆற்காட்டிற்கு அவர்களை அழைத்துச் சென்று அவர்களுக்கு ஆசை வார்த்தை கூறிய அன்வர்தீன் ஒரு நாள் பங்காருவை விஷம் கொடுத்து கொன்றார்.[35] சதாரா சிறையிலிருந்து விடுதலைபெற்று மராட்டிய படைகளுடன் திரும்பிய சந்தா சாகிப், நவாப் அன்வர்தீனை ஆம்பூர் போரில் கொன்ற பின்னர், திருச்சிக் கோட்டையைக் கைப்பற்றினார். அவரது தளபதி ஆலம்கான் மதுரையைப் பிடித்தார். உள்ளூர் மக்களது உணர்வுகளை மதித்தவராக மதுரையின் முந்தைய அரசு வழியினரான விஜய குமாரனை மதுரைக்கு மன்னராக நியமித்து அவருக்கு துணை புரிய முடேமியா என்ற தனது தளபதியையும் நியமனம் செய்தார். பின்னர்,

32. Diary Consultations Vol.9. P: 60
33. Rajayyan Dr. K. - History of Madura (1974) P: 69
34. Ibid - P: 87
35. Ibid - P: 88

முடேமியா - விஜய குமாரனை கொல்ல முயன்றபொழுது அவர் மீண்டும் தப்பி சிவகங்கையில் தஞ்சம் பெற்றார்.[36]

இதற்கிடையில் ஆற்காடு நவாப் ஆகிவிட்ட சந்தா சாகிபுக்கும் அன்வர்தீன் மகன் வாலாஜா முகமது அலிக்கும், இடையில் நடைபெற்ற போர்களின் இறுதிக் கட்டமாக பி.பி. 1751-ல் திருச்சி கோட்டைப் போர் ஏற்பட்டது. ஏற்கனவே மைசூர் மன்னரது திவான் நஞ்ச ராஜாவுக்கு விட்டு கொடுத்திருந்ததை ஒட்டி மைசூர் படைகள் மதுரையைக் கைப்பற்றின. கூப் சாகிப் என்ற அவரது தளபதியின் தலைமையில் நிலையற்ற மதுரையின் நிலை அண்மையிலிருந்த சிவகங்கை அரசுக்கு பெருத்த மனக் கவலையை அளித்தது. மதுரைக்கு ஆபத்து என்பது தென்பாண்டிய நாடு முழுமைக்கும் பாதிப்பை ஏற்படுத்தக் கூடியது என்பதை உணர்ந்து இருந்த மறவர் சீமை மன்னர்கள், தக்க ஆலோசனைக்குப் பிறகு தங்களது பிரதானிகள் வெள்ளையன் சேர்வையையும், தாண்டவராய பிள்ளையையும் படைகளுடன் மதுரைக்கு அனுப்பி வைத்தனர். மறவர்கள் மதுரைக் கோட்டையைச் சூழ்ந்து தாக்கி, தளபதி கூப் சாகிபை முறியடித்தனர். மதுரையின் மன்னராக விஜய குமாரனுக்கு மீண்டும் முடிசூட்டித் திரும்பினர்.[37] சில மாதங்களில் மறவர் படை தங்களது சீமைக்கு திரும்பிச் சென்றவுடன், மயானா என்ற மதுரைத் தளபதி, மதுரையை மீண்டும் பிடித்துக் கொண்டார். உடலுறுதியும் உள்ளத்துணிவும் இல்லாத விஜய குமாரன் மீண்டு சிவகங்கைக்கே ஓடி வந்தார்.[38] மறவர் படை மீண்டும் சென்று மதுரையை கைப்பற்றியது என்றாலும், அவர்களது கட்டுப்பாட்டில் கோட்டையை வைத்து இருந்துவிட்டு தளபதி மயானா என்பவர் பொறுப்பில் விட்டுத் திரும்பினர்.[39]

இதற்கிடையில், தமிழக அரசியலின் மிக முக்கிய சதுரங்கக் களமாக திருச்சி மாறியது. திருச்சி கோட்டையைப் பிடிக்க பிரெஞ்சுக்காரர் உதவியுடன் சந்தா சாகிபு முயன்றார். எதிர் அணியான வாலாஜா முகம்மது அலிக்கு ஆங்கிலேயர் உதவியுடன் மைசூர் திவான் நஞ்சராஜா ஏராளமான பொன்னும் பொருளும் படை உதவியும் அளித்தார். மேலும் தஞ்சை மன்னரது ஆதரவும், புதுக்கோட்டை தொண்டைமானது ஒத்துழைப்பும் வாலாஜாவிற்கு இருந்தது. இவர்கள் இருவரும் ஏற்கனவே சந்தா சாகிபின் தாக்குதலை அனுபவித்தவர்கள் அல்லவா?

ஏற்கனவே தமக்கு ஒத்துழைப்பு வழங்குமாறு மறவர் சீமை மன்னர்களை,

36. Rajayyan Dr. K. - History of Madura (1974) P: 104
37. Raja Rama Rao T. - Manual of Ramnad Samasthanam (1891) P: 241
38. Rajayyan Dr. K. - History of Madura (1974) P: 144
39. Hill. S.C. - Yosufkhan - The Rebel Commandant (1931) P: 26-41.

வாலாஜா முகமது அலி கேட்டுக் கொண்டார். இந்த சூழ்நிலைகளில் மறவர் சீமையின் உதவியும் ஒத்துழைப்பும் யாருக்கு அளிக்கப்பட வேண்டும்?

தமிழக அரசியலை அலைத்துக் கொண்டிருந்த இந்த பூதாகரமான பிரச்னையில் மறவர் சீமை முழுமையாக ஏதாவது ஒரு அணியில் சேர்ந்து கொள்ள வேண்டிய கட்டாயம். அவ்விதம் செய்யாமல் தனித்து நிற்பது அறிவுடைமையாகாது. அப்படியானால் எந்த அணியில் சேருவது? மறவர் சீமையின் பரம்பரை பகைவர்களான புதுக்கோட்டைத் தொண்டமானும் தஞ்சாவூர் மன்னரும் முந்திக் கொண்டு நிற்கும் முகமது அலியின் அணியிலா?

மன்னர் முத்து வடுகநாதர் பிரதானியுடன் ஆலோசனை செய்தார். அடுத்து சேதுபதி மன்னருடன் கலந்து முடிவிற்கு வந்தார். வழக்கம் போல், இரண்டு மறவர் சீமைகளும், ஆற்காட்டு நவாப் பதவிக்கு நியாயமான உரிமையுள்ள சந்தா சாகிபை ஆதரிப்பது என்பது தான் அந்த முடிவு. இந்த முடிவுக்கு நியாயமான காரணம் மட்டுமல்லாமல் சந்தா சாகிபின் முந்தைய நடவடிக்கையைக் கொண்டும் அவருக்கு சாதகமாக இந்த முடிவு செய்யப்பட்டது.

முன்னர், திருச்சி நாயக்கப் பேரரசின் ராணியான மீனாட்சிக்கு உதவுவதற்கு முன் வந்த சந்தா சாகிபு, திருச்சி சீமையின் பெரும் பகுதியை ஆக்கிரமித்து இருந்த மைசூர் படைகளை விரட்டி அடித்ததுடன் மதுரை சீமைப் பாளையங்களையும் தாக்கி பாளையக்காரர்களிடம் கப்பம் பெற்றார். ஆனால் மதுரையை அடுத்துள்ள மறவர் சீமைகளை ஒன்றும் செய்யவில்லை.[40] குறிப்பாக சந்தா சாகிபுக்குப் பயந்து சிவகங்கையில் பங்காரு திருமலையும் அவரது மகன் விஜயகுமாரனும் அரசியல் தஞ்சம் பெற்று இருப்பதை அறிந்து இருந்தும், சிவகங்கையை அவர் சாடவில்லை. இத்தகைய நடுநிலையான நோக்குடைய சந்தா சாகிபுவிற்கு உதவ மறவர் சீமை மன்னர்கள் முன் வந்தனர். அவர் மேற்கொண்ட திருச்சிராப்பள்ளி முற்றுகைக்கு துணைபுரிய நான்காயிரம் மறவர்கள் ஸ்ரீரங்கம் சென்று நிலை கொண்டனர்.[41]

இந்தப் போருக்கு முழுமையும் பொறுப்பு ஏற்றுக்கொண்ட பிரெஞ்சு கிழக்கு இந்திய கம்பெனி, சந்தா சாகிபுக்கு போதிய படையணிகளையும் தளவாடங்களையும் அளிக்க இயலவில்லை. மற்றும், இந்த முற்றுகையில் ஈடுபடுத்தப்பட்ட பிரெஞ்சுத் தளபதிகள், சந்தா சாகிபிற்கு கட்டுப்படாமல் கோழைத்தனமாக நடந்து கொண்டனர். இதனால் போரின் கடுமை பிசுபிசுத்தது. மறவர் சீமை அணிகள் வெறுப்புடன் சீமை

40. Rajayyan Dr. K. - History of Madura (1974) P: 72
41. Rajayyan Dr. K. - History of Tamil Nadu (1972)

திரும்பினர்.[42] அடுத்து தோல்வியுற்ற சந்தா சாகிபுவை ஆதரிப்பதாக நடித்த தஞ்சைத் தளபதி மானோஜி; அவரை 17.06.1752-ல்[43] நயவஞ்சகமாக கொன்று தீர்த்தான். தமிழக அரசியலில் அன்னியர்களின் ஆதிக்கம் அடித்தளம் பெற்றதை இந்த நிகழ்ச்சி தெளிவாக அறிவுறுத்தியது.

தமிழக அரசியலில் தனிமைப்பட்டு தவிக்கக்கூடாது என்பதற்காக சந்தாசாகிபு அணியுடன் இணைத்துக்கொண்ட சிவகங்கை இராமநாதபுரம் மன்னர்களது நிலை வேதனைப்படத்தக்கதாக இருந்தது. இதே நிலையில் தஞ்சை மன்னர் மறவர் சீமையை சீண்டிப் பார்க்க முயன்றார். இதனை அறிந்த நவாப் முகம்மது அலி, தஞ்சை அரசின் படை உதவி, மதுரை, திருநெல்வேலி பாளையக்காரர்களை அடக்க தேவைப்படுவதால், மறவர் சீமை மீது போர் தொடுப்பதைக் கை விடுமாறு தஞ்சை மன்னரை அறிவுறுத்தினார்.[44] என்றாலும், நவாப்பினது அறிவுரையைப் புறக்கணித்துவிட்டு, தஞ்சையின் மராத்தியப்படை மறவர் சீமைக்குள் புகுந்தது. தளபதி மானோஜி தலைமையில் நிகழ்ந்த இந்த ஆக்கிரமிப்பிற்கு புதுக்கோட்டைத் தொண்டமானும் தன்னால் ஆன உதவியைச் செய்யத் தவறவில்லை. ஆனால் விரைவில் மறவர்கள் மராத்திய ஆக்கிரமிப்பாளர்களை அனுமந்தக்குடிப் பகுதியிலிருந்து துரத்தி அடித்தனர்.[45]

ஆனால் மீண்டும் மே.1755-ல் கூடுதலான மராத்தியப் படைகள் அனுமந்தக்குடி மாகாணத்தின் ஒரு பகுதியை ஆக்கிரமித்துக் கொண்டன. உடனே ஆங்கில கம்பெனி கவர்னர், தளபதி காலியத்தை தஞ்சைக்கு அனுப்பி வைத்து, தஞ்சைப் படைகளை, திரும்பப் பெற்று மதுரைப்படை எடுப்பிற்கு உதவுமாறு கேட்டுக்கொண்டார்.[46] அப்பொழுது மதுரையில் முகாமிட்டிருந்த ஆங்கிலத் தளபதி ஹெரானை மன்னர் முத்து வடுகநாதரும் சேதுபதி மன்னரும் நேரில் சந்தித்து தஞ்சை மன்னரது தொல்லைகளைத் தெரிவித்ததுடன், கும்பெனியாருடன் நேசத்தொடர்புகள் கொள்வதற்கு இணக்கத்தையும் அறிவித்தனர். மறவர் சீமையில் ஆங்கில கம்பெனியார் வணிகத் தொடர்புகள் கொள்வதற்கு ஏற்றவாறு தமது கடற்கரைப் பகுதியில் இரண்டு தீவுகளைக் கொடுத்து உதவுவதாகவும் சேதுபதி மன்னர் தெரிவித்தார்.[47] மறவர் சீமை மன்னர்களது நேசநிலைக்கு தளபதி ஹெரான் ஒப்புதல் அளித்ததுடன் தற்பொழுது தாம் நெல்லைப் படையெடுப்பை முடித்த பிறகு, மறவர்

---

42. Rajayyan Dr. K. - History of Tamil Nadu (1972) P: 122
43. S.C. Hill - Yousufkhan The Rebel Commandant 1931
44. Military Consultations - Vol. 4/26-3-1753. P: 49-50
45. Tamil Nadu Archieves Diaries Vol. A. P: 260
46. Military Consultations Vol.4/4.6.1755. P: 89
47. Raja Rama Rao.T - Manual of Ramnad Samasthanam (1891) P: 238.

சீமை பற்றி கம்பெனி தலைமையிடத்திலும், நவாப்பிடமும் பரிந்துரை செய்வதாக உறுதியளித்தார். அத்துடன் திருநெல்வேலிப் படையெடுப்பிற்கு உதவுமாறு மறவர் சீமை மன்னர்களைக் கேட்டுக் கொண்டார்.

அடுத்த சில நாட்களில், சிவகங்கை, இராமநாதபுரம் மறவர்களைக் கொண்ட படைகள் சேதுபதி மன்னரது சகோதரர் சுப்பராயத் தேவரது தலைமையில் திருநெல்வேலி புறப்பட்டது.[48] ஆங்கிலேயரது சேவைக்கென்றே தங்களை அர்ப்பணித்திருந்த புதுக்கோட்டை தொண்டமானும், தஞ்சை மன்னரும் மறவர்களுடன் கிழக்கிந்தியக் கம்பெனியார் தொடர்பு வைத்துக் கொள்வதை வெறுத்ததுடன் அந்த கூட்டணியில் இருந்து விலகி, தளபதி மயானாவை திருச்சிராப்பள்ளியின் நவாப்பாக அங்கீகரித்துச் செயல்படப் போவதான எதிர்ப்பைக் கூறி மிரட்டினர். இந்த எதிர்பாராத சூழ்நிலையைத் தவிர்ப்பதற்காக திருநெல்வேலி நகருக்கு ஐந்து கல் தொலைவில் வந்துவிட்ட மறவர் அணியைத் திரும்பிச் செல்லுமாறு தளபதி ஹெரான் உத்திரவிட்டார்.[49]

அப்பொழுது, சென்னைக் கோட்டையின் கும்பெனியாரது புதிய கவர்னராகப் பதவி ஏற்ற பிகாட் என்பவர் தளபதி ஹெரானது செயல்பாட்டிற்கு ஏற்புடையவராக இல்லை. புதிய கவர்னர் அரசியல் கொள்கையில் மாற்றம் செய்ய விரும்பாமல், சிவகங்கை, இராமநாதபுரம் மன்னர்கள், தஞ்சை மன்னருக்கு ஆதரவாகத் தங்களது அனுமந்தக்குடி மாகாண உரிமையை விட்டுக் கொடுத்து ஒத்து போகுமாறு அறிவுறுத்தினார்.[50] ஒரு புதுமையான - ஆனால் சற்றும் எதிர்பாராத நியாயத் தீர்ப்பாகத் தோன்றியது, மறவர் சீமை மன்னர்களுக்கு. என்றாலும் மீமாம்சை போன்ற நூல்களில் கலியுகம் மதிக்கத்தக்கதாக காட்டப்பட்டுள்ள பல்வேறு வகையான நியாயங்களில் ''தைமிக்க நியாய'' வகையிலான நியாயம் இது என்பதை உணர்ந்து ஆறுதலடைந்தனர்.

என்றாலும், தங்களது தற்காப்பிற்கு உதவக் கூடிய வெளிநாட்டு சக்தி ஒன்றின் ஆதரவு இன்றியமையாதது என்ற நிலையை உணர்ந்தனர். அப்பொழுது, ஆங்கில, பிரஞ்சு நாட்டவர்களைப் போல, டச்சுக்காரர்கள் கைத்தறித் துணி, மிளகு, இலவங்கம், பாக்கு, முத்து, நெல் ஆகிய பொருள் கொள்முதல் ஏற்றுமதியில் ஈடுபட்டிருந்தனர். ஹாலந்து நாட்டவரான டச்சுக் கம்பெனியார் தமிழகம் மட்டுமல்லாமல், இலங்கை, மாலத்தீவு, போர்னியோ, ஆகிய கீழை நாடுகளிலும் வாணிபத்

48. Raja Rama Rao - Manual of Ramnad Samasthanam (1891) P: 242
49. Ibid. - P: 243
50. Military Consultations - Vol.4/24.4.1755. P: 72-74

தொடர்புகள் வைத்து இருந்தனர். கி.பி.1639 - முதல் தமிழகத்தில் நாகப்பட்டினத்தை தலைமை இடமாகக் கொண்டு இயங்கி வந்தனர். எதிர்க்கரையான இலங்கையில் மிகுந்த செல்வாக்குடன் இருந்தனர். சேது நாட்டிற்கும் டச்சுக்காரர்களுக்கும் ஏற்கனவே வணிக தொடர்புகள் இருந்ததை தளவாய் சேதுபதி ஆவணங்களில் அறிய முடிகிறது.

மதுரை திருமலை நாயக்கரது படைகள், போர்ச்சுக்கீசியரின் உதவியுடன் கி.பி. 1645-ல் இராமேசுவரம் தீவில் தளவாய் சடைக்கன் சேதுபதியினை எதிர்த்து போரிட்ட பொழுது, மறவர் சீமைப்படைகளுக்கு உதவியாக இருந்தவர்கள் இந்த டச்சுக்காரர்கள். கி.பி. 1659-ல் மே மாதத்தில் திருமலை சேதுபதிக்கு, மன்னர் முத்து சலாபத்தில் உள்ள முத்துக்குளிக்கும் உரிமையை மதித்து சேதுபதி மன்னருடன் டச்சுக்காரர்கள் உடன்படிக்கை ஒன்றை செய்ததை டச்சு ஆவணம் ஒன்று தெரிவிக்கிறது.[51]

இன்னும் மார்ட்டின் பாதிரியாரது கி.பி.1710-ம் ஆண்டுக் கடிதம் ஒன்றின் மூலம் டச்சுக்காரர் சேதுபதி மன்னரிடமிருந்து முத்து சங்கு குளிக்கும் உரிமை பெற்று இருந்தனர் என்பதை அறிய முடிகிறது.[52]

## மீண்டும் மராட்டியர்கள்

மறவர் சீமையின் வடகிழக்குப் பகுதி விரிசுழி ஆற்றின் வட கரையில் அமைந்து தஞ்சாவூர் சீமையை அடுத்த பகுதியாக விளங்கியது. கி.பி.1728-ல் பாம்பாற்றின் வட பகுதியில் உள்ள சேதுபதி சீமையை தஞ்சை மன்னருக்கு விட்டுக் கொடுக்கப்பட்ட பிறகும் தொடர்ந்து அந்த பகுதியை தங்கள் ஆட்சிப் பரப்பாகக் கொள்வதற்கு மராட்டிய மன்னர்கள் முயன்று வந்தனர். அவர்களது ஆக்கிரமிப்பு நடவடிக்கையின் பகுதியாக மன்னர் துல்ஜாஜி கி.பி.1771-ல் போர் தொடங்குவதற்கு ஒரு காரணத்தை கண்டுபிடித்தார். அவருக்கு சொந்தமான சில யானைகள், மிரண்டு ஓடி வந்து சிவகங்கை காடுகளில் புகுந்து அட்டகாசம் செய்தன. மன்னர் முத்து வடுகநாதர் ஆணையின்படி அந்த யானைகள் பிடிக்கப்பட்டு கட்டி வைக்கப்பட்டன.[53] அவைகளை விடுதலை செய்து தம்மிடம் ஒப்படைக்குமாறும், அனுமந்தக்குடிப் பகுதியை தமக்கு விட்டுக் கொடுக்குமாறும் மன்னர் துல்ஜாஜி கோரினார். அடுத்து, சேதுபதி மன்னருக்கு ஆதரவான நவாபின் படை வீரர்களைப் போல் மாறுவேடம் தரித்த தஞ்சாவூர் படைகள், இராமநாதபுரம் சீமையின் வடகிழக்குப் பகுதியில் முதுவார்நத்தம் என்ற ஊரை கைப்பற்றிக்கொண்டன. அந்த

---

51. Arunachalam - History of Pearl fishery in Tamil Nadu (1928) P: 134
52. Pieris - The Dutch power in cylon. P: 236-48
53. Military Country Correspondence Vol.19/25.3.1771/P: 109-133

மகாணம் முழுவதும் இப்பொழுது தஞ்சைப் படைகளால் சூழப்பட்டன.[54] அடுத்து, இராமநாதபுரம் கோட்டையைத் தாக்குவதற்கான ஏற்பாடுகள் நடந்தன. இராமநாதபுரம் கோட்டையை பிடிப்பதற்காக சுமார் ஒரு மாத காலம் நடைபெற்ற முற்றுகையில் தோல்வி கண்டு இராமநாதபுரம் ராணி முத்து திருவாயி நாச்சியாருடன் சமாதான ஒப்பந்தம் செய்து கொண்ட தஞ்சை மன்னர் துல்ஜாஜி சிவகங்கைச் சீமையில் புகுந்தார். அப்பொழுது முத்து வடுக நாதருக்கு ஓலை ஒன்றை அனுப்பி வைத்தார்.[55] அதில் மன்னர் கைப்பற்றியுள்ள ஆறு யானைகளை ஒப்படைப்பதுடன், செலவுத் தொகைக்காக ரூபாய் ஒரு லட்சம் கொடுக்குமாறு அந்த ஓலையில் தஞ்சை மன்னர் குறிப்பிட்டிருந்தார். ஏற்கனவே மறவர் சீமை நோக்கி தஞ்சை படைகள் செல்வதையறிந்த நவாப் முகமது அலி, தமது படைகளுடன் தஞ்சை நோக்கி வந்தார்.[56] நவாபின் படைகள் தம்மை தொடர்வதை அறிந்த தஞ்சை மன்னர் சிவகங்கைப் படையெடுப்பைக் கைவிட்டு விட்டு தஞ்சாவூர் திரும்பிவிட்டார்.[57] அத்துடன் நவாப் அவரை விடவில்லை. தஞ்சை, புதுக்கோட்டை, இராமநாதபுரம், சிவகங்கை ஆகிய நான்கு தன்னரசுகளும் தனது மேலாண்மைக்கு உட்பட்டவை; ஆதலால் தஞ்சை மன்னர் அத்து மீறி இராமநாதபுரம், சிவகங்கை மீது படையெடுத்தது தவறான போக்கு என்பதை குறிப்பிட்டிருந்தார். தஞ்சை அரசரோ மறவர் சீமையின் பகுதி தமக்கு கட்டுப்பட்டது என்று உரிமை கொண்டாடினார்.[58] தஞ்சை மீது போர் தொடுக்க ஆங்கில கிழக்கு இந்திய கம்பெனியாரை அணுகினார். கர்நாடக நவாப் கம்பெனியாருடன் கி.பி.1765-ல் செய்து கொண்ட உடன்பாட்டில் மறவர் சீமை பற்றிய குறிப்பு எதுவும் இல்லாததால் படை உதவி அளிக்க கம்பெனியார் தயங்கினர். இது பற்றி முடிவு செய்ய சென்னை கவர்னர் தனியாக ஆய்வுக் குழு ஒன்றை நியமித்தார். அந்த குழுவின் கண்டுபிடிப்பு அறிக்கை மறவர் சீமையும் புதுக்கோட்டை தொண்டைமானும் எப்பொழுதும் எந்த அரசுக்கும் முறையான கப்பம் செலுத்தவில்லை என்பது தான். மேலும் திருச்சியில் நாயக்க அரசு இருந்த பொழுதும், மறவர் சீமையும் புதுக்கோட்டையும் தன்னரசுகளாகவே இருந்தன என்று அதில் குறிப்பிடப்பட்டிருந்தது.[59] ஆனால் தஞ்சைப் படை எடுப்பினால் ஏற்படும் செலவை ஏற்றுக் கொள்வதுடன் முப்பத்து ஐந்து லட்சம் ரூபாய் அன்பளிப்பு அளிப்பதாக நவாப் சொன்னவுடன் கவர்னர் நவாப்பின் வேண்டுகோளை ஏற்று

54. Military Country Correspondence Vol.19/25.3.1771. P: 79
55. Ibid. Dt. 17.3.1771
56. Rajayyan. Dr. K. - History of Madura (1974) P: 253
57. Radhakrishna Iyer. General History of Pudukottai (1916) P: 251
58. Rajayyan. Dr. K. - History of Madura (1974) P: 253
59. Ibid. P: 254.

தஞ்சை மீது போர் தொடுக்க ஒப்புதல் அளித்தார். இவ்விதம் தஞ்சை அரசை பல வகையான சிக்கலுக்குள் சிக்க வைத்து பெரும் பணத்தை செலவழிக்குமாறு செய்த நவாப், அடுத்து மறவர் சீமையையும் கைப்பற்றுவது பற்றிச் சிந்தித்தார்.

கி.பி.1752-ல் தனது பதவி போட்டியில் சந்தா சாகிபை வென்ற பிறகு, தொடர்ந்து கடந்த இருபது ஆண்டுகளில் பாளையக்காரர்களுடனான போர்களில்

கி.பி.1757-61-ல் திருநெல்வேலி பாளையக்காரர்கள் போர்,
கி.பி.1763-1764-ல் மதுரை கான்சாகிபுவுடன் போர்,
கி.பி. 1765-ல் அரியலூர், உடையார் பாளையங்களின் மீதான போர்,
கி.பி.1764-ல் திருவாங்கூர் மீதான போர்,
கி.பி.1771-ல் தஞ்சை மீதான போர்
என்று தமது மேலாண்மையை நிலைநாட்டிய வாலாஜா முகம்மது அலி, எஞ்சியுள்ள இராமநாதபுரம், சிவகங்கை தன்னரசுகளைக் கைப்பற்றுவது என முடிவு செய்தார்.

இத்தனை ஆண்டுகளாக அவர்கள் நவாபிற்கு கப்பம் செலுத்தாமல் இருப்பது எவ்வளவு பெரிய குற்றம்! அடுத்து நவாப்பின் முன் அனுமதி இல்லாமல் டச்சுக்காரர்கள் தமது சீமையில் தொழிற் மையங்கள் தொடங்குவதற்கு சேதுபதி மன்னர் அனுமதி அளித்ததும் அதைவிட பெரிய குற்றம் அல்லவா? இன்னும் சட்டவிரோதமாக சர்க்கார் கிராமங்களை கைப்பற்றியிருப்பதாகவும் இராமநாதபுரம் மன்னர் மீதான குற்றச்சாட்டு தொடர்ந்தது. இத்தகைய காரணங்களைக் காண்பித்து மறவர் சீமையை மீட்பதற்கு நவாப் முகமது அலி ஆங்கிலேயரிடம் படையுதவி கோரினார். ஒன்பது மாதங்களுக்கு முன்னர் மறவர் சீமை தன்னரசுகளை பற்றிய தெளிவான அறிக்கையை தயாரித்த கம்பெனியார், அவர்களுக்கே உரிய சந்தர்ப்பவாதம் காரணமாக, இப்பொழுது மறவர் சீமையைக் கைப்பற்ற படை உதவி அளிக்க முன்வந்தனர். ஆம்! அவர்களுக்கு வேண்டியது அரசியல் ஆதாயம்! அடுத்தது பணம்.

மே 1772-ல் திருச்சியிலிருந்து பெரும்படை ஒன்று புறப்பட்டது. ஜோஸப் சுமித் என்ற ஆங்கில தளபதியும் நவாப்பின் மகன் உம்தத்துல் உம்ரா ஆகியோரது கூட்டுத் தலைமையில்.[60] முதலில் இராமநாதபுரம் கோட்டை இந்த படை எடுப்பிற்கு பின்பலமாகவும் பிற பாளையக்காரர்கள் உதவிகளை இராமநாதபுரம் சிவகங்கை மறவர்கள் பெறாமல் தடுக்கவும், மதுரைக் கோட்டையிலிருந்து ஆங்கிலேயரது இன்னொரு அணி தளபதி பான்ஜோர் என்பவர் தலைமையில் திருப்புவனம் வந்தது[61]

60. Vibart.Maj. - History of Madras Engineers (1881) Vol. I. P: 120-121
61. Military Consultations Vol. 52/15.6.1771. P: 442

இராமநாதபுரம் அடைந்த படைகள், ஜுன் 1, 2 ஆகிய நாட்களில் கோட்டையில் முதல் வெடிப்பை ஏற்படுத்தியது. அதன் உள்பகுதியில் நிலை கொண்டு இருந்த மூவாயிரம் வீரர்களை போரில் இழந்து சேதுபதியின் அணி தோல்வியுற்றது. கோட்டையைக் கைப்பற்றிய கூட்டுப் படையினர் இராமநாதபுரம் ராணியையும், இளவரசரையும் திருச்சிக் கோட்டையில் சிறை வைத்தனர்.[62]

அடுத்து இந்த ஆக்கிரமிப்பாளர்கள் சிவகங்கைச் சீமை நோக்கி புறப்பட்டனர். மதுரையில் இருந்து வந்த அணி திருப்புவனம் நோக்கி முன்னேறியது. தளபதி ஜோசப்சுமித் நவாப் உம்தத்துல் உம்ரா ஆகியோர் மேற்கு நோக்கி முன்னேறி வந்தனர். எங்கு பார்த்தாலும், காடு, முட்செடிகள் இவைகளை கடந்து வருபவர்களைத் தடுக்கும் வகையில் வழியெங்கும் பெரிய மரங்கள் வெட்டப்பட்டு குறுக்கே தடையாக போடப்பட்டு இருந்தன.[63]

ஆங்காங்கு பதுங்கு குழிகளும் தோண்டப்பட்டு எதிரியை மடக்குவதற்கு ஏற்பாடு செய்யப்பட்டது. என்றாலும், சிவகங்கை கோட்டைக்கு அபாயம் இருந்ததால் எதிரிகளைச் சமாளிப்பதற்கான ஏற்ற இடம் காளையார் கோவில் காடுகள்தான் என முடிவு செய்யப்பட்டு மன்னரும், மற்றவர்களும் காளையார் கோவில் கோட்டைப் பாதுகாப்பை ஆயத்தம் செய்தனர்.[64] ஜுன் 21-ம் தேதி, தளபதி பான்ஜோர் தலைமையிலான மதுரையணி, சிவகங்கையைக் கைப்பற்றி கிழக்கே முன்னேறியது.[65] தொண்டி சாலை வழியாக காளையார் கோவிலை நோக்கி வந்த ஜோசப் சுமித், மன்னர் முத்து வடுகநாதருடன் தொடர்பு கொண்டார். உயிர்ச்சேதம், பொருட் சேதத்தை தடுப்பதற்காக மன்னரும் படை எடுப்பாளருடன் பேச்சு வார்த்தைக்கு உடன்பட்டார்.[66] இந்த முயற்சி முற்றுப்பெறுவதற்குள்ளாக, முன்னேறி வந்த மதுரை தளபதி பான்ஜோர் அணி காளையார் கோவிலை நெருங்கி வந்து தாக்குதலைத் தொடுத்தது.

ஆறிலிருந்து பத்துக்கல் தொலைவில் வடக்கிலும், மேற்கிலும் பரந்துள்ள அடர்ந்த இயற்கையான காடுகள் சூழ்ந்த இந்தப் பகுதியில் அந்நியர்கள் அவ்வளவு எளிதில் புகுந்து வந்து நேரடியாகப் பொருத முடியாது என தப்புக் கணக்குப் போட்ட சிவகங்கை மறவர்களுக்கு, இந்தத் தாக்குதல் ஒரு பெரும் அதிர்ச்சியாக இருந்தது. துரோகிகளுக்கு என்றுமே துணையாக இருக்கும் தொண்டமானது ஐயாயிரம் பேர் கொண்ட காடு வெட்டிகள் அணி, நீண்ட அரிவாள்களுடன் வந்து, மரங்களை வெட்டிச்

62. Political Despatches to England Vols. 7-9. P: 80-81.
63. Rajayan Dr. K. - History of Madura (1974) P: 261.
64. Ibid - 261.
65. Ibid - 261.
66. Ibid - 261.

சாய்த்து கும்பெனிப் படைகள் விரைந்து எளிதாக முன்னேறுவதற்குப் பாதைகளைச் செம்மைப்படுத்திக் கொடுத்தது.

மேலும், அமைதிப் பேச்சிற்கு உத்திரவாதம் அளித்த தளபதி ஜோஸப் சுமித், மேற்கேயிருந்து முன்னேறி வந்த தளபதி பான்ஜோருக்கு தமது அமைதி பேச்சுப் பற்றி தெரிவிக்காததால் அவரது அந்த அறிவிப்பு தளபதி பான்ஜோருக்கு சென்று... அடையாததால், அவர் தாக்குதலை தொடுத்துவிட்டார். அவருக்கு அளிக்கப்பட்டிருந்த உத்திரவு காளையார் கோவில் கோட்டையை மேற்குப் புறமாக வந்து சூழ்ந்து கொள்ள வேண்டும் என்பது தான், தமது மேல் அதிகாரியான ஜோஸப் சுமித்தின் முன் உத்திரவைப் பெறாமலேயே காளையார் கோவில் தாக்குதலை அவர் தொடுத்தது மறவர்களிடையே பெருங்குழப்பத்தை உண்டாக்கியது.

சிவகங்கை சீமை தோன்றியபிறகு, அந்த சீமையிலே நிகழ்ந்த முதல் போர் அது. போராட்ட உணர்வும், தாய்நாட்டுப் பற்றும் மிக்க தமிழக மறவர்களை, வெள்ளையரின் வெடி மருந்து திறன் கொண்டு அதுவரை அழித்து வந்த ஆற்காட்டு நவாப், கடைசியாகச் சந்தித்த வீரமறவர் அணி அது. அதுவும் சங்ககாலச் சிறப்பு வாய்ந்த கானப்பேரில் மதுரைப் பாண்டியன் பெரு வழுதி தன்னை ஒரு சேரப் பொருதிய, வளவனையும் பொறையனையும் அழித்து புறமுதுகிட செய்த புனித பூமி. ஆதலால் அந்த மண்ணின் மாண்பையும், மரபுவழிப் பெருமையையும் நிலை நிறுத்த அங்கு மறவர் போரிட்டனர்.

''பகை எனில் கூற்றம்வரினும் தொலையான்'' என்ற புலவர் கூற்றுக்கு மாறுபடாமல், பகைவர்களைக் கூற்றுவனுக்கு இரையாகக் கொடுத்ததுடன் தங்களையும் பொன்றாத புகழுக்கு உரியவர்களாக்கி உயிர் துறந்தனர். பகைவர்கள் வெற்றி பெற்றனர். படுகொலை, பகல் கொள்ளை. மன்னர் முத்துவடுக நாதரும் படுகளத்தில் குண்டு பாய்ந்து தியாகியானார். அதுவரை ஆற்காட்டு நவாப், பாளையக்காரர், குறுநில மன்னர்கள் மீது போர் தொடுத்த போது, அவர்கள் நவாப்பிடம் சரணடைந்தனர். நெற்கட்டும்செவ்வல் பூலித்தேவர் உடையார் பாளையம் பாளையக்காரர் போன்றவர்கள் நவாப்பிடம் தோல்வியுற்றனர். ஓடி ஒளிந்தனர். எதிரியின் கைகளில் படாதவாறு ஓடி ஒளிந்து மறைந்தனர். மாவீரன் கான்சாகிபு போன்றவர்களை தோற்கடிக்கப்பட முடியாத நிலையில் துரோகிகள் மூலம் கைப்பற்றி அவர்களை தூக்கு கயிற்றில் தொங்கவிட்டனர். ஆனால் சிவகங்கைப் போர்க் களத்தில் அவர்களை நேருக்கு நேர் சந்தித்து போரிட்ட மன்னர் முத்து வடுக நாதர் வீழ்த்தப்பட்டார்.[67] இந்திய விடுதலை வரலாற்றில்

67. Military Consultations Vol. 42/ 1.7.1772. P: 442.

அந்நிய சக்திகளை - ஆக்கிரமிப்பாளர்களை - எதிர்த்துப் போரிட்டு களத்தில் மடிந்த முதலாவது மன்னர் முத்து வடுகநாதர்.

காளையார் கோவில் படுகொலை பற்றிய செய்தி லண்டனுக்குப் போய் சேர்ந்ததும் ஆங்கில - கிழக்கிந்திய கம்பெனியின் நிர்வாகிகள் தளபதி ஜோசப் சுமித்தை கொலையாளி என குற்றம் சுமத்தினர். அமைதிப் பேச்சிற்கு உடன்பட்ட பிறகு போர் தொடுத்து படுகொலை நடத்தியதற்காக அவர்மீது ராணுவ விசாரணையை நடத்தினர்.[68] கம்பெனியாரது போர் வீரர்களிடம் நிலவிய கட்டுபாடின்மை காரணமாக, அவர்களைத் தன்னால் கட்டுப்படுத்தி அந்தப் போரைத் தவிர்க்க இயலவில்லை என்று தளபதி சுமித் தமது இயலாமையை தெரிவித்தார்.[69] அவரது சமாதானம் ஏற்றுக் கொள்ளப்படாமல் பணியில் இருந்து நீக்கப்பட்டார். நீதி விசாரணையின் பொழுது, காளையார் கோவில் கோட்டைக்குள் காணப்பட்ட அத்துணை மக்களும், மன்னரது மனைவி, மகள், தவிர அனைத்து மக்களும் காரணமின்றி கொல்லப்பட்டனர் என்ற கோர்க் கொலையைப் பற்றிய அதிர்ச்சி தரும் செய்திகளைக் கேட்ட இளகிய மனம் படைத்த கம்பெனி இயக்குநர் சிலர், நீதி மன்றத்தில் இருந்து வேதனையுடன் அகன்று விட்டனர். லண்டனில் இருந்து வெளியான இரண்டு செய்தித்தாள்கள், ''தளபதி அப்ரஹாம் பான்ஜோர் காளையார் கோவில் கொலைகாரன்'' என வர்ணித்து எழுதின.[70] தனது உத்திரவுகளைப் போர் வீரர்கள் சரியாகப் புரிந்து கொள்ளாததால் ஏற்பட்ட விளைவு என்று சமாதானம் கூறி தன் மீது பழியைத் தவிர்க்க முயன்றார் அவர். இவருக்குத் தண்டனை கிடைப்பதற்கு முன்னரே இறந்துவிட்டார். இவையனைத்தும் 25.06.1772-ல் காளையார் கோவில் கோட்டையில் பரங்கிகள் நடத்திய காட்டு மிராண்டித்தனமான படுகொலையின் பரிமாணங்களை ஓரளவு நினைத்து பார்ப்பதற்கு ஏதுவாக உள்ளது.

மன்னர் முத்து வடுக நாதரது மரணம், சிவகங்கைச் சீமை மக்களுக்கு பெரும் அதிர்ச்சியை ஏற்படுத்தியது. இந்த அதிர்ச்சியில் அவதியுற்று மக்கள் மீட்சி பெறுவதற்குள் அந்நியரது ஆக்கிரமிப்பு படை தனது கைவரிசையைக் காண்பிக்கத் தொடங்கியது. காளையார் கோவில் கோட்டைக்குள் இருந்த அனைத்து மக்களையும் பரங்கியர் படுகொலை செய்த இரத்த வெறியுடன் சிவகங்கை சென்றனர். அங்கு அனைத்து வீடுகளையும் கொள்ளையிட்டனர். அவர்கள் கொள்ளை கொண்ட அணிமணிகளின் மதிப்பு அன்றைய நிலையில் ரூபாய் ஒன்றரை லட்சம் என அவர்களது ஆவணம் ஒன்றில் குறிப்பிடப்பட்டு இருக்கிறது.[71]

68. Love H.D. - Vestiges of Old Madras Vol. (III) P.71
69. The London Packet Dt. 2.3.1774.
70. The British Chronicle Dt. 3.5.1774.
71. Military Consultations Vol.42 / July 1772. P: 607.

மக்களை பீதியும் கவலையும் பற்றி அலைத்தது. முற்றிலும் எதிர்பாராத இந்தச் சூழ்நிலை, மறைந்த மன்னர் முத்துவடுகநாதரது அமைதியும் மனநிறைவும் தந்த இருபத்து இரண்டு வருட (கி.பி.1750-72) ஆட்சியை நினைத்து நினைத்து வருந்தும் நிலையை ஏற்படுத்தியது. ஆண்டிலும், அனுபவத்திலும் இளையவரானாலும் ஆட்சி முறையில் தமது தந்தையின் அடிச்சுவட்டினைப் பின்பற்றியவராக நடந்து வந்தவர் அல்லவா அவர்!

மதுரை மீனாட்சி சுந்தரேசுவரரிடமும், காளையார் கோவில் காளைநாதரிடமும் மிகுந்த ஈடுபாடு கொண்டவராக விளங்கினார். தேவாரப் பதிகம் பெற்றதும், பாண்டியரது திருப்பணியுமான காளையார் கோவிலின் நுழைவு வாயிலில் மிகப் பிரம்மாண்டமான கோபுரம் அமைக்க ஏற்பாடு செய்தார். இந்த மன்னரது இதயத்தின் அடித்தளத்தில், திருமடங்களுக்கு கூடுதலான இடம் அளித்து இருந்தார். காரணம் அன்றைய நிலையில் மக்களது சமுதாய வாழ்க்கை செம்மை பெற மடாதிபதிகளின் தொண்டு மிகவும் தேவை என்பதை உணர்ந்து இருந்தார். இதனால் சிவகங்கை பண்டார மடம், காளையார் கோவில் மிளகாய்த் தம்புரான் மடம், ஊத்துமலை மடம், திருவாவடுதுறை பண்டார மடம், தருமபுரம் மடம், திருப்பனந்தாள் மடம், சிருங்கேரி மடம், சதுரகிரி குளந்தை பண்டார மடம் ஆகிய அமைப்புகளின் பீடாதிபதிகள் இந்த மன்னரிடமிருந்து பல அறக்கொடைகள் பெற்று இருந்ததை கீழ்க்கண்ட பட்டியலில் காணமுடிகிறது.

ஏறத்தாழ இருநூற்று ஐம்பது ஆண்டுகளுக்கு முன்னரே, எந்த சமஸ்தானாதிபதியும் செய்யாத சாதனையாக, கன்னட தேசத்தில் உள்ள சிருங்கேரி சாரதா பீடாதிபதிக்கு இந்த மன்னர் திருப்புவனம் வட்டத்தில் கருங்காலகுடி, தவத்தார் ஏந்தல் என்ற இரு ஊர்களை சர்வமான்யமாக வழங்கி இருப்பது குறிப்பிடத்தக்கது. மற்றும் இந்துக்களால் இந்த நாட்டின் மிகச் சிறந்த புண்யத்தலமாக கருதப்பட்டு வரும் காசியின் கங்கைக் கரையில் தமது பாட்டனார் நாலுகோட்டை பெரிய உடையாத் தேவரது நினைவாக ஒரு மடம் ஒன்று அமையவும் அதில் முறையாக மகேசுவர பூஜை நடைபெறவும் வல்லக்குளம் என்ற கிராமத்தை அந்த தர்மத்திற்கு ஈடாக தருமபுரம் ஆதினகர்த்தருக்கு வழங்கி இருப்பதும் குறிப்பிடத்தக்கதாகும்.[72] காரணம், அன்றைய கால கட்டத்தில் முடிமன்னரும் முத்தமிழ் வள்ளல்களும் அருகி இருந்த அவல நிலையில், கோடை கால குளிர் நிழலாகத் தமிழையும் சமயத்தையும் வளர்த்தவர்கள் இந்த மடாதிபதிகள். சுவாமி காரிய துரந்தரன் என விருது பெற்ற சேதுபதிகளின் வழியினரான இந்த மன்னர்கள், இவர்களை பொன்னும் பொருளும் ஊரும் பேரும் வழங்கி நாளும் புரந்ததில் வியப்பில்லைதான்.

---

72. சிவகங்கை தேவஸ்தான பதிவேடுகள்.

## மன்னர் முத்து வடுக நாத தேவரது அறக்கொடைகள்[73]

| | | |
|---|---|---|
| கி.பி. 1750 | பாணன்வயல், வாதன்வயல் | திருவாரூர் தியாகேசர் ஆலயம், அன்னதான கட்டளை மதுரை மீனாட்சி சுந்தரேஸ்வர் ஆலயம். |
| 1751 | இடையன்குளம் | மதுரை மீனாட்சி சுந்தரேஸ்வர் ஆலயம். |
| | காத்தாடி ஏந்தல் மானகுடி, முடிக்கரை | சிவகங்கை சசிவர்ணர் ஆலயம் |
| | அச்சங்குளம் (மாற நாடு) | ஊழிய மான்யம் |
| | புதூர் (எமனேஸ்வரம்) | சத்திர ஊழியமான்யம் |
| 1752 | நிரஞ்சான் ஊத்திக்குளம் | இருளப்ப செட்டி, தர்மாசனம் |
| | பக்கத்தான்குடி | நாகபூஸண ஐயர், இனாம் சீனிவாச தாத்தாசாரியார் தர்மாசனம் |
| | அமரன்வயல் | சேசகிரி ஐயங்கார், தர்மாசனம். |
| | உரகூர் | வியசை ராவல், தர்மாசனம் |
| 1753 | மேலப்பிடாரிசேரி (எமனேஸ்வரம் வட்டம்) | ஊழியமானியம் |
| 1755 | ஏமம் (மங்கலம் வட்டம்) | ஊழியமானியம் |
| | செம்மான் ஏந்தல் (எமனேஸ்வரம் வட்டம்) | இராம சாஸ்திரி, தர்மாசனம் |
| | பெரியகையன் | சேச ஐயங்கார், தர்மாசனம் |
| | சன்னாசி (மங்கலம் வட்டம்) | அழகிரி ஐயங்கார், தர்மாசனம் |
| 1755 | புதுக்குடி பழுத்தான் குளம் (மங்கலம் வட்டம்) | வாசுதேவ ஐயங்கார், தர்மாசனம் |
| 1757 | சிராம்புளி (மங்கலம் வட்டம்) | நாராயண வாத்தியார், தர்மாசனம் |
| | காளத்திஏந்தல் | திருவாவடுதுறை பண்டாரமடம் |
| | அரசப்பிள்ளைதாங்கி | அழகிய சுந்தர குருக்கள் |
| 1758 | கமுதக்குடி | ராமலிங்க சாமியார், தர்மாசனம் |
| | வெட்டியான் வயல், கட்டி வயல் | காளையார் கோவில் மடம், தண்ணீர் பந்தல், அன்னதானம் |
| | பள்ளியார் ஏந்தல் | சிவகங்கை பண்டாரம் மடம் |
| 1759 | மேலச்சொரிக்குளம் | அன்னதானக் கட்டளை, ஊத்துமலை மடம் |
| | கிழத்துசிவனேந்தல் (சாக்கை வட்டம்) | நரசு ஐயர் |

---

73. சிவகங்கை சமஸ்தான பதிவேடுகள்.

| | | |
|---|---|---|
| *1760* | கொடிமங்கலம் (மங்கலம் வட்டம்) | திருவாவடுதுறை மடம் |
| *1761* | கருங்காலக்குடி தவத்தார் ஏந்தல் | சிருங்கேரி சாரதா தேவி மடம் |
| | அயினி செட்டி ஏந்தல் (திருவாடனை வட்டம்) | பெரிய தம்பி, ஜீவிதம் |
| | கொல்லன்வயல் (அமராவதி வட்டம்) | தர்மாசனம் |
| | மேலக்நெட்டுர் சிறுதேட்டு | சதுரகிரி குளந்தை ஆனந்த பண்டார மடம் |
| *1763* | வல்லக்குளம் (எமனேஸ்வரம் வட்டம்) | காசியில் பெரிய உடையாத் தேவர் மடம் கட்டி, மகேசுவர பூஜை, அன்னதானம் நடத்த திருபனந்தாள் மடம் |
| | பிராமணக்குறிச்சி, சாத்தனேந்தல் (எமனேஸ்வரம் வட்டம்) | திருவாடுதுறை மடம் |
| *1764* | கொச்சக்குடி (அமராவதி வட்டம்) | வைத்தியநாத சாஸ்திரி, ஊழியமானியம் |
| | வெள்ளிப்பட்டி | மன்னார்குடி பரசுராம ஐயர், தர்மாசனம் |
| | அம்பலத்தாடி (திருப்புவனம் வட்டம்) | சர்வோத்தம் ஐயர், வெங்கட கிருஷ்ண அவதானி, தர்மாசனம் |
| | அரியாளி (எமனேஸ்வரம் வட்டம்) | மடப்புரம் கோயில் |
| *1769* | கொடிமங்கலம் நாகமுகுந்தன் குடி | திருவாவடுதுறை பண்டார சன்னதி மடம், மகேசுவர பூஜைக்கு |
| *1771* | அழகர்குடி (திருப்புத்தூர் வட்டம்) | அக்கிரஹார தர்மம் |
| | குருசேத்திர ஏந்தல் (திருப்புத்தூர் வட்டம்) | ராஜகோபால ஐயங்கார், தர்மாசனம் |

பள்ளிவாசல்

| | | |
|---|---|---|
| *1770* | குழியூர் (சாக்கை வட்டம்) | முகைதீன் ஆண்டவர் பள்ளி வாசல் |

அண்மையில் கண்டுபிடிக்கப்பட்டுள்ள சில செப்பேடுகளின் உண்மைநகல்கள் இங்கு கொடுக்கப்பட்டுள்ளன.

## 1. குறிச்சி செப்பேடு

*சிவகங்கைச் சீமையை கி.பி.1750 - 1772 வரை ஆட்சி செய்த முத்து வடுகனாத பெரிய உடையாத் தேவர் வழங்கியுள்ள அறக்கொடைகளுக்கான செப்பேடுகளில், நமக்குக் கிடைத்துள்ள முதலாவது செப்பேடு. திருவாவடுதுறை மடத்தில் மகேசுர பூஜை நடப்பிப்பதற்காக இந்த மன்னர் 10.6.1740-ல் வைகையாற்றுக்கு வடக்கே உள்ள குறிச்சி கிராமத்தை தான சாதனமாக வழங்கியதற்கான ஆவணம் இது. இந்த மன்னர் கி.பி.1750-ல் தான் ஆட்சிக்கு வந்ததாலும் இந்தப் பட்டயம் கி.பி.1740-ல் வழங்கப்பட்டு இருப்பதாலும் இதனை முத்து வடுகநாதத் தேவர் பெயரில், அவரது தந்தையார் அரசுநிலையிட்ட சசிவர்ணத்தேவர் வழங்கி இருத்தல் வேண்டும். இந்தப் பட்டயத்தில் கி.பி.1742ல் திருவாவடுதுறை மடத்திற்கு தானமளிக்கப்பட்ட சுந்தனேந்தல் பற்றிய செய்தியும் தொடர்ந்து பொறிக்கப்பட்டுள்ளது.*

*சிவகங்கைச் சீமையின் சமுதாய அமைப்பில் இருந்த மக்கட் பிரிவினர், மக்களிடமிருந்து பெறப்பட்ட அரசு இறைகள், சுங்கம் ஆகிய வருவாய் இனங்கள், மற்றும் நிலப்பிரிவுகள், ஆகியவைகளைத் தெரிவிக்கும் அரிய ஆவணமாகவும் இந்த தானசாதனம் அமைந்துள்ளது குறிப்பிடத்தக்கது.*

*(இந்தச் செப்பேடு திருவாவடுதுறை மடத்தில் உள்ளது.)*

1. சுவத்திஸ்ரீமன் மகாமண்டலேசுரன் அரிய ராயிர தள விபாடன் பாசைக்குத் தப்பு வரா
2. யிர கண்டன் மூவாயிர கண்டன் கண்டநாடு கொண்டு கொண்டநாடு கொடாதான் பாண்டி ம
3. ண்டலத் தாபனாசாரியன் சோள மண்டலப் பிறதிட்டாபனா சாரியன் தொண்ட மண்டல சண்டப்பி
4. றசண்டன் ஈளமுங் கொங்கும் யாள்ப்பாண பட்டணமும் யெம்மண்டலமுமளித்துக் கெசவே
5. ட்டை கொண்டருளிய ராசாதி ராசன் ராச பரமேசுரன் ராச மார்த்தாண்டன் இராசகுல திலகன்
6. ராய ராகுத்த மிண்டன் மன்னரில் மன்னன் மருவலர்கேசரி துட்டரில் துட்டன் துட்ட நெட்டூ.
7. ரன் சிட்டர் பரிபாலனன் ஒட்டியர் மோகந்தவிள்த்தான் துலுக்கர் தள விபாடன் வ
8. லியச் சருவி வழியில் கால்நீட்டி தாலிக்கு வேலி இளஞ்சிங்கம் தளஞ்சிங்கம் வைகை வ
9. ளநாடன் ஆற்றுப் பாச்சி கடலிற் பாச்சி சேது நகர் காவலன் சேது மூலா துரந்தரன் இராமனாதசு
10. வாமி காரியதுரந்தரன் சிவபூசா துரந்தரன் பரராசசிங்கம் பரராசகேசரி பட்ட மானங் கா

11. த்தான் பரதேசி காவலன் சொரிமுத்து வன்னியன் கோடி சூரியப்பிரகாசன் தொண்டியந்து
12. றை காவலன் இந்துகுல சற்பகெருடன் இவுளி பாவடி மிதித்தேறுவார் கண்டன் நவகோடி நாராய
13. ணன் பஞ்சவர்ணன் பாவாடையுடையோன் துட்டநிற்கிறக சிட்டர் பரிபாலன் அட்டலட்சி
14. மி வாசன் நித்திய கலியாணன் மனுகுல வங்கிசன் சாமித்துரோகியன் மிண்டன் கட்டாரி சாளு
15. வன் அடைக்கலங் காத்தான் தாலிக்கு வேலி ரணகேசரி ரண கிரிடி சங்கீத சாயுச்சிய வித்தியா விநோத
16. ன் செங்காவிக் குடையோன் சேமத்தலை விருது விளங்கும்மிரு தாளினான் நரலோகர் கண்டன் பொ
17. றுமைக்குத் தன்மர் வில்லுக்கு விசையன் மல்லுக்கு வீமன் பரிக்கு நகுலன் சாத்திரத்துக்குச
18. காதேவன் கொடைக்குக் கன்னன் அறிவுக்குக்க கத்தியன் தனத்துக்குக் குபேரன் அனுமக்கொடி
19. கெருடக் கொடி புலிக்கொடி யாளிக்கொடி சிங்கக்கொடி மகரக் கொடி மதப்புலி காரிய
20. ங் காத்தான் திருச்சிங்காதனத்தில் திருமகள் பதம் போற்றி ராச்சிய பரிபாலனம் பண்ணி
21. யருளாநின்ற சாலிய வாகன சகாத்தம் 1662க்கு மேல் சொல்லாநின்ற ரவுத்திரி
22. ஸ்ரீ ஆனி மீ 12 உ ஸ்ரீமது அரசு நிலையிட்ட விசைய ரெகுனாதச் சசிவர்ணப் பெரிய உடையாத்
23. தேவரவர்கள் புத்திரன் முத்து வடுகனாதப் பெரிய உடையாத் தேவரவர்கள் குருவாரமும் சதுத்தெ
24. சியு அம்மவாசியும் மிறுக சீரிஷ நட்செத்திரமும் பெற்ற சுபதினத்தில் திருவாடுதுறைப் பண்டார
25. ச்சன்னதியில் அம்பலவாணசுவாமி பூசைக்கும் மகேசுவரபூசைக்கும் தன்மசாதன தாம்புரப்
26. ட்டையங் கொடுத்தபடி பட்டையமாவது கிறாமம் குறிச்சி வைகையாற்றுக்கு வடக்கு நெட்டு.
27. ர் குறிச்சிக்குத் தெற்கு புதுக்கோட்டைக்கு கிளக்கு முனை வண்டி மேலைப் பிடாரி சேரிக்கு மேற்கு இந்தபெ
28. ரு னான்கு எல்லைக்கு உள்பட்ட நிலத்திற் பாதியும் பேட்டைத் தலங்களுக்கும் வழிச் சாரிக்கும் பொதி ஒ
29. ன்றுக்கு மாகாணியும் தலைசுமைக்கு அரை மாகாணியும் மற்றச் சில்லறைக் கடையளுக்கும்
30. பேட்டைத் தலத்துக் கடையளுக்கும் மாதம் ஒன்றுக்கு அரைக்கால் பணமும் கடல்துறையி
31. ல் நெல் கண்டி ஒன்றுக்கு மூன்று மாகாணியும் சீமை ஒன்றுக்கு அரை

மாகாணியும் மாறுபடகு
32. க்கு தோணி சுரிப்பு யேற்றுமதி இறக்குமதியில் பத்துப் பணம் தீருவை பட்டால் மகமை அரை
33. ப்பணமும் உம்பளத்தில் பத்துப் பணத்துக்கு அரைக்கால்பணமும் சீமையொன்று அ
34. ரை மாகாணியும் கம்பட்டத்தில் னூறு பொன்னுக்கு அரைப்பணமும் பண்ணைக் கிராமம் சிறுதேட்
35. டுக் கிராமம் வரிசைக் கிராமம் தேவதாயம் பிறமதாயம் மானிபம் மடப்புறம் தேவமார் பாளையகாரர்
36. ராசாக்கள் ராவுத்தமார் பிள்ளைமார் மல்லக செட்டியள் நாயக்கமார் அய்யமார் ஒண்டடி காற
37. ர் ஊளியக்காறர் இந்தவகைக் கிறாமங்களுக்கும் மாத்தால் ராமலிங்கப்படி
38. குறுணியும் புஞ்சை நவதானியத்துக்கு கட்டுக்கு முன்னாழியும் இந்தப்படிக்கு அம்பலவாணசுவாமி பூசைக்
39. குக் கொடுத்தபடியினாலே இதுவே தாம்பிற சாதனமாக சந்திராதித்தருள்ளவரைக்கு
40. ம் பாரம்பரையாத் தன்ம பரிபாலனம் பண்ணிக் கொண்டிருப்பாராகவும் கிராமத்தில்
41. பளவரிப் பலவரி கருப்புக்கட்டிவரி வேண்டுகோள் வரி வெள்ளைக்குடைரி கொடிக்கால்வரி
42. கத்திப்பெட்டிவரி மற்றச் சில்லறைப் பலவரிகளும் உள்ளி பாளையமும் இந்தக் கிறாமப் பெரு
43. நான்கெல்லைக்குள்பட்ட நஞ்சை புஞ்சை மாவடை மரவடை நிதி நிட்சேபம் உள்படச் சறுவ மானிய
44. மாக ஆண்டு கொள்வாராகவும் இந்தத் தன்மத்தை யாதாமொருவர் பரிபாலனம் பண்
45. ணின பேர்க் காசிலேயும் சேதுவிலேயும் ஆயிரஞ் சிவலிங்கப் பிரதிட்டையும் ஆயிர
46. ம் பிரம்மபிறதிட்டையும் ஆயிரம் கன்னிகாதானம் கோதான புண்ணியமும் பெறுவராகவும் இ
47. ந்த தர்மத்துக்கு அகிதம் பண்ணின பேர் காசிலேயுஞ் சேதுவிலேயும் ஆயிரங்
48. காராம்பசு மாதாகுரு இவர்களை வதை பண்ணின தோசத்திலே போவாராகவும் துந்து
49. பி ஸ்ரீ புரட்டாசி மாதம் 15 பட்டயம் கொடுத்தபடி பட்டையமாவது கிராமம் சுந்தனேந்தல் வை
50. கையாத்துக்கு தெற்கு தெளிச்சாத்தனூர் எல்லை புளியமரத்துக்கு மேற்கு பொதுவக் குடிக் காட்டுக்கு வட
51. டக்கு மேலேந்தலுக்கு கிளக்கு இந்தப் பெருநாங்கு எல்லைக்கு உள்பட்ட நிலமும் நஞ்சை

52. புஞ்சை மாவடை மரவடை திட்டு திடல் நிதி நிட்சேபம் உள்பட கிராமத்தில் பளவ
53. ரிப் பலவரி வேண்டுகோல்வரி வெள்ளைக்குடை வரி கொடிக்கால் வரி கத்திப்பெ
54. ட்டிவரி மத்த சில்லறைப் பலவரியகளும் உள்ளிய பாளையம் சறுவ மானியமாக சந்திராதி
55. த்தர் வரைக்கும் ஆண்டு கொள்ளுவாராகவும்.

## 2. அம்பலத்தாடி செப்பேடு

மன்னர் முத்து வடுகனாத பெரிய உடையாத்தேவர் கி.பி. 1742-ல் திருப்பூவணம் வெங்கடேசுவர அவதானியாருக்கு, திருப்புவனத்தையடுத்துள்ள அம்பலத்தாடி என்ற ஊரினை பூதானமாக வழங்கியதை இந்தப் பட்டயம் தெரிவிக்கின்றது. இந்தப் பட்டயம் வழங்கப்பட்ட காலத்தைக் கொண்டு இந்தப் பட்டயமும் அரசு நிலையிட்ட சசிவர்ணப் பெரிய உடையாத் தேவரவர்களால், தமது மைந்தன் முத்து வடுகனாத பெரிய உடையாத் தேவரது பெயரால் வழங்கப்பட்டிருக்க வேண்டும் எனக் கருதப்படுகிறது.

1. சுவஸ்திஸ்ரீ மன்மகாமண்டலேசுபறன் அரியராய தளவிபாடன் பாசைக்குத்தப்புவரா கண்
2. டன் கண்ட னாடு கொண்ட கொண்ட னாடு குடாதான் பாண்டிய மண்டலத் தாபனாசாரியன் சோ
3. ளமண்டலப் பிறதிஷ்ட்டாபனாசாரியன் தொண்டமண்டல சண்டப் பிரசண்டன் ஈளமும்
4. கொங்கும் யால்ப்பாண ராயன் பட்டணமும் கண்டு கெசவேட்டை கொண்டருளிய ராசா
5. திராசன் ராசபரமேசுபரன் ராசமார்த்தாண்டன் ராசகுலதிலகன் அரசுராவணராம
6. ன் அந்தப்பிரகண்டன் தாலிக்கிவேலி தளஞ்சிங்கம் இளஞ்சிங்கம் வடகரைப்புலி
7. சேதுகாவலன் சேது மூலாரெச்சாதுரந்தன் ராமனாதசுவாமி காரியதுரன்தர
8. ன் தேவநகராதிபன் தனுக்கோடிகாவலன் தொண்டியந்துறைக் காவலன் ஆத்து
9. ப்பாச்சி கடலில் பாச்சி கரந்தையதிபன் பொதிகமாமலையான் வைகையா
10. ருடையான் முல்லைமாளிகையான் இரவிகுலசேகரன் செங்காவிக் குடையன் செ
11. ங்காவிச் சிவிகையான் அனுமக்கொடி கருடக்கொடி புலிக்கொடி சிங்கக்கொ

12. டி உடையான் பட்டமானங்காத்தான் பரதேசிகாவலன் செம்பி வளனாடன் பஞ்சகெதி
13. இவுளியான் பனுக்குவார்கண்டன் மும்முடியரசன் யரனமும் முரசதிர முத்திலான சேம
14. த்தலை விளங்கும் இருதாளினான் அசுபதி நரபதி செபதி இரணியகெற்பயாசி
15. ரெகுநாத சேதுபதியவர்கள் பிற்திவிராச்சிய பரிபாலனம் பண்ணி அருளாநின்ற சாலி
16. யவாகன சகாதத்து 1664 இதின் மேல்ச் செல்லாநின்ற துந்துபி வருஷம் காற்த்தி
17. கை மீ 12 சோமவாரமும் காற்த்திகை நச்செத்திரமும் பவுறணமியும் சுபயோக சுபகற
18. ணமும் பெற்ற சோமபராக புண்ணிய காலத்தில் பாண்டியதேசத்தில் பொதியமா
19. மலையான் வைகையாருடையான் புனப்பறளையனாடன் கறந்த நகறாதிபன் முல்லை மா
20. லிகையான் பஞ்சகெதி இவுளியான் மும்முதயானையான் அனுமக் கொடி கருடக்கொடி
21. புலிக்கொடி கட்டியபுறவ லமும் முரசதிர முத்திலானதி யெங்கும் ஆணை செலுத்திய
22. சிங்கன் மேனாட்டுப் புலி தாலிக்கிவேலி தளஞ்சிங்க இளஞ்சிங்கம் ஆத்துப்பாச்சி
23. கடலில்பாச்சி தொண்டியன் துறைக்காவலன் இரவிகுலசேகரன் வாசுபேயாகன்
24. அரசுநிலையிட்ட சுவர்ணப் பெரிய உடையாத்தேவரவர்கள்ஸ்ரீ புத்திரன் அரசு நிலையி
25. ட்ட முத்துவடுகனாதப் பெரிய உடையாத் தேவரவர்கள் வச்சகோத்திரத்தில் அ
26. வித்தம்பசூவித்திரத்தில் யெசுச்சகாத்தியாபகரான திருப்பூவனத்திலிருக்கும் ஸ்ரீ வித்யா
27. பதி வெங்குடகிரி சிறுகொண்டல் திருமலை அவதானியார் குமாரன் வெங்குடேசு
28. ற அவதானியாருக்கு பூதானப்பட்டயம் பண்ணிக்குடத்தபடி பூதானபட்டயமாவது பாண்டி
29. யதேசத்தில் கிறுதமலா னதி தீரத்தில் திருபூவன
30. ச்சீர் மையில் அம்பலத்தாடி கிராமத்துக்கு யெல்கையாவது கூட்டக் க
32. ல்லூரணி கீள்கரைக்கும் மளகங்கால் பெரிய உடைப்புக்கும் மேற்கு தென்பா
33. ங்கெல்கை ராங்கியன் காலுக்கும் வடக்கு மேல்பாங்கெல்கை முத்தாங்குளம்.
34. கானத்துக்கு கிளக்கு வடபாங்கெல்கை மாங்குடி காலுக்கும்

மண்டிக்கண்மாய் கரை
35. க்கும் தெற்கு இப்படி இசைந்த பெருனாங் கெல்லைக்கு உள்ளிட்ட நஞ்சை புஞ்சை
36. மாவடை மறவடைத் திட்டுதிடல் கீள் நோக்கியகிணர் மேல் நோக்கிய பலன் அரு
37. குதாளி ஆவாரை கொளுஞ்சி முதல் மீன்படுபள்ளம் தேன்படு பொதும்பு சிலதரு
38. பாசாணநிதி நிச்சேபமென்று சொல்லப்பட்ட அஷ்ட்டபோக தேசச்வாமியங்க
39. ளும் தானாதி வினிமயவியக்கிறையங்களுக்கும் யோக்கியமாக சகரண்ணிய
40. யோதகர தாராபூறுவமாகப் பட்டயமும் குடுத்து அம்பலத்தாடி கிறாமம் பூதானம் பண்
41. ணிக் குடுத்தபடியினாலே ஆச்சந்திர ஆற்க்கம் புத்திர பவுத்திர பாறம்பரியாயி
42. ஆண்டுகொண்டு சுகமே இருக்கவும் இந்தபடிக்கி இந்த பூதான சாதனம் மெளுதினே
43. ன் கறுப்பனாசாரி கையெழுத்து உ

## 3. திருவாரூர் செப்பேடு

மன்னர் முத்து வடுகனாத தேவரவர்கள் திருவாரூர் தியாகராஜ சுவாமிகள் திருக்கோயிலில் அன்னதானம் கட்டளைக்காக சிவகங்கைச் சீமையில் உள்ள நாதன் வயல், பாணன் வயல் என்ற இரு கிராமங்களை கி.பி.1750-ல் சர்வமானியமாக வழங்கியதை இந்தச் செப்பேடு தெரிவிக்கின்றது. இந்த தான சாசனத்தைப் பெற்றுக் கொண்டவர். அந்த திருக்கோயிலின் ஆதின கர்த்தர் அருணாசலத் தம்பிரான் என்பதும் இந்தச் செப்பேட்டில் இருந்து தெரிய வருகிறது.

1. ஸ்ரீராமஜெயம் ஸ்வஸ்திஸ்ரீமன் மகாமண்டலேசுவரன் அரியராய
2. தளவிபாடன் பாசைக்கு தப்புவராய கண்டன் கண்டநாடு கொண்டு கொண்
3. டநாடு கொடாதான் பாண்டிமண்டல ஸ்தாபனாசாரியன் சோள மண்ட
4. லப் பிறதிட்டானாசாரியன் தொண்டமண்டல சண்டபிறசண்டன் ஈழ
5. முங் கொங்கு யாழ்ப்பாணமும் கண்டு கெசவேட்டை கொண்டருளிய ராசாதிராச
6. ன் ராசபரமேசுரன் ராசமாத்தாண்டன் ராசகுலதிலகன் தாலிக்கு வேலி தளசிங்கஞ் இள
7. சிங்கம் ஆத்தில்பாச்சி கடலில் பாச்சி மதிரைமண் கொண்ட சேமத்தலை விளங்குமி
8. ரு தாளினான் வடகரைப்புலி சேதுகாவலன் தனுக்கோடி காவலன் சேது

9. மூலா துரந்தரன் ராமசாமி காரியா துரந்தரன் தொண்டித்துறை காவலன்
10. செம்பிய நாடன் தேவை நகராதிபன் இரண்ய கெர்ப்பயாசி அசுபதி
11. கெசபதி நரபதி ரெகுனாத சேதுபதி பிறிதிராச்சியம் பரிபாலனம் பண்
12. ணியருளாநின்ற கலியுக சகாத்தம் ஸ்ரீ 4851 சாலிவாகன சகாத்தம்
13. 1672 இதன்மேல்ச் செல்லாநின்ற பிறமோதுத ஸ்ரீ சித்திரை மாதம்
14. 1 உ சுக்கிரவாரம் சதுத்தெசி தினம் ரோகிணி சௌபாக்கிய மாதிரையும்
15. கூடின சுபதினத்தில் பாண்டி தேசத்தில் பொதியமா மலையான் வய்கைஆத்துடை
16. யான் பாண்டி வளநாட்டில் திருக்கானப்பேர்க் கூத்தத்துப் புனல்ப
17. ரளை நாட்டில் குளந்தை நகராதிபதி முல்லையந் தாரன் பஞ்சகெதி
18. புரவியான் மும்மத யானையான் அன்னக்கொடி கெருடக்கொடி அனுமக்கொடி
19. சிங்கக்கொடி புலிக்கொடி விருதுடையான் மும்முரசு அதிரும்
20. மூன்றிலான் திக்குவேலி ஆணை செலுத்திய சிங்கம் மேனாட்டு
21. ப்புலி தாலிக்குவேலி தளசிங்கம் இளசிங்கம் இரவிகுல
22. சேகரன் பஞ்சகால பயங்கரன் அரச நிலையிட்ட விசைய ரெகு
23. னாத சசிவர்ணப் பெரிய உடையா தேவரவர்கள் புத்திரன் அரசு
24. நிலையிட்ட முத்து வடுகனாதப் பெரிய உடையாத் தேவரவர்கள்
25. சோளதேசத்தில் செல்வத் திருவாரூரில் தியாகராஜ சாமியாருக்கு அ
26. ன்னதானக் கட்டளைக்கு கற்தறான அருணாசலத் தம்பிரான் அவர்கள்
27. பாரிசமாக நம்முட அறக்கட்டளைக்கு குடுத்த கிராமம் பாண்டி தேசத்தி
28. ல் தேர்போகி னாட்டில் னாதன்வயல் பாணவயல் ரெண்டும் எல்கை
29. பாணவயல் திருப்பனங்குடி கம்மாய்க்கு திப்பன் ஏந்தலுக்கு கிழக்கு தா
30. னிக் கம்மாய்க்கு வடக்கு கடப்பங்கு தெக்கு ஏந்தலு தெக்கு னாதன்
31. வயலுக்கு இச்சியடி ஊறணிக்கு தெக்கு ஊத்தன் புஞ்சைக்கு வட
32. டக்கு புங்கானி காட்டுக்கு மேற்க்கு புதுப்பட்டி தாண்டவன் செ
33. ட்டி கொல்லைக்கு கிளக்கு இசைந்த பெருநாங்கெல்லைக் குள்ளிட்ட நஞ்
34. சை புஞ்சை மாவடை மரவடை திட்டு திடல் புத்து புனல் அறுகு தா
35. னி ஆவரை கொளிஞ்சி அட்டபோக சுவாமியங்களும் சறு
36. வமானியமாக தானபூறுவமாகக் கொடுத்தபடியனாலே தியாகராச சாமிக்கு
37. அபிசேக நிவேதனம் அபிவிருத்தியாக நடப்பிச்சு வருவார்க்கு
38. இந்த தற்மசாதன கிராம ரெண்டுக்கும் யாதாமொருவன் பரிபா
39. லனம் பண்ணினவர்கள் காசியிலும் ராமேசுவரத்திலும் அனேகம் பிறம்
40. பிறதிட்டை கோடி கன்னிகாதானம் கோடி கோதானம்
41. பண்ணின பலன் அடைவார்கள் இந்த தர்மத்துக்கு யாதாமொருவன்
42. அகிதம் பண்ணினவன் காசியிலும் ராமேசுவரத்திலும் புண்ணிய மட

43. ங்களிலும் அனேகம் கோகத்தி ஸ்ரீஅத்தி பிரமஅத்தி பஞ்சமகாபாதக
44. ம் பண்ணின தோஷத்தில் போகக் கடவராகவும் இந்தப்படிக்கு
45. இந்த தர்ம சாஸனப் பட்டையம் எழுதினேன் ராயசம் சங்கர ந
46. ராயணன் எழுத்து உ

## 4. சசிவர்ணேசுவரர் ஆலயச் செப்பேடு

மன்னர் முத்துவடுகநாத பெரியஉடையாத் தேவர் அவர்களால் கி.பி.1751-ல் வழங்கப்பட்ட இந்தச் செப்பேடு சிவகங்கை பற்றிய இரண்டு சிறப்பான செய்திகளைத் தெரிவிக்கிறது. சிவகங்கை தன்னரசின் முதலவது மன்னரும் முத்து வடுகநாதரது தந்தையுமான அரசு நிலையிட்ட சசிவர்ண பெரிய உடையாத் தேவர் கி.பி.1750ல் இறந்தார். இவரது நினைவாகப் பள்ளிப்படைக் கோயில் ஒன்றை சிவகங்கை அரண்மனைக்கு வடகிழக்கே கி.பி.1751ல் இந்தக் கோயிலினை சிற்பமுறைப்படி சமைத்து சிவலிங்க பிரதிஷ்டை செய்ததையும் அதனைத் தமது பெற்றோர்களான சசிவர்ணத் தேவர், அகிலாண்ட ஈசுவரி (பெரியநாயகி) பெயரால் வழங்கப்பட்டிருப்பது.

அடுத்து இந்த திருக்கோயிலுக்கு திருவிடையாட்டக் காணியாக காத்தாடியேந்தல் வாணியங்குடி, மானங்குடி, முடிக்கரை ஆகிய நான்கு ஊர்களையும் இறையிலியாக வழங்கி இருப்பதுமாகும். இந்தச் செப்பேடு மன்னர் முத்து வடுகநாதர் தமது பெற்றோர்பால் கொண்டிருந்த பாசத்தினைப் பறைசாற்றும் சிறப்பான ஆவணமாக அமைந்துள்ளது.

1. உ சிவமயம்
2. ஸ்ரீமன் மகாமண்டலேசுவரன் அரியரான தளவிபாடன் பாசை
3. க்கி தப்புவார் கண்டன் கண்ட நாடு கொண்டு கொண்ட நாடு கொடாதன்
4. பாண்டிமண்டலத் தாபனாசாரியன் சோளமண்டலப் பிறதிட்ட
5. னாபசாரியான் தொண்டமண்டல சண்டப்பிறசண்டன் ஈள
6. மு கொங்கும் யாள்ப்பான தேசமும் கண்டு கெசவேட்டை கொண்ட
7. ருளிய ராசாதிராசன் ராசபரமேசுவரன் ராசமாத்தாண்டன் ராச
8. கெம்பீரன் ராசகுலதிலகன் இவுளி பாவடி மிதிக் தேறுவார் கண்டன்,
9. மன்னரில் மன்ன மன்னர்சிரோமணி துட்டரில் துட்டன் சிட்டபரி
10. பாலகன் சேமத்தலை விருதுடையான் செங்காவி கொ
11. டையான் செம்பி வளநாடன் மதுரை வளிகண்டான் பட்
12. டமானங் காத்தான் தாலிக்கு வேலி தொண்டித்துறை காவ
13. லன் சேதுமூலா துரந்தரன் இராமனாத சுவாமி காரியா து
14. ரந்தரன் அசுபதி கெசபதி நரபதி தனபதி விசைய ரெகுனா
15. தச் சேதுபதி காத்த தேவரவர்கள் பிறிதிவி ராச்சிய பரிபா
16. லனம் பண்ணியருளா நின்ற சாலியவாகன சகாத்தம் 1673க்கு மே
17. ல் செல்லாநின்ற பிறசோற்பதி நாம ஸம்வத்ஸரத்து உத்தராயண

18. த்து சசீரிதுவில் மாக மாசத்து கிருஷ்ணபக்ஷத்து திரயோதெசியும் ஸ்ரா
19. வன நட்செத்திரமும் சுபயோக சுபகரணமும் கூடின சிவராத்தி
20. ரி சுபதினத்தில் புனப்பிரளய நாட்டில் குளந்தை நகராதிப
21. தி மதப்புலி கெப்புலி ராசபுலி மேனாட்டுப்புலி தளசி
22. ங்கம் தாலிக்கி வேலி இரவிகுல சேகரன் முல்லயந்தா
23. ரன் மும்முரசதிர முளங்குமணி வாசலான் அனுமக்செ
24. காடி கெருடகொடி நாபி விருதுடைய விருதுமண்டலீ
25. கர் கண்டன் சிவகாரி
26. யா துரந்தரன் அட்டலெ
27. ட்சுமி வாசன் அரசராவண ராமன் கோப்பிறாமண ரெ
28. ட்சகன் வசந்த தியாக பரிபாலன் வாசுபேயி யா கிறு
29. துக்கியானம் சங்கீத தியாப பிறசங்க வசந்த தியாக ப
30. பரி பாலனன் காமனி கந்தப்பன் சகல கலியான குணகாம்பீ
31. ர சமர கோலாகல விருது மன்னர் சிகாமணி ராசஸ்ரீ அரசு நிலையி
32. ட்ட விசைய ரெகுநாத சசிவற்ணத் தேவரவர்கள் புத்திரன் மு
33. த்து வடுகனாத பெரிய உடையாத் தேவரவர்கள் சதுர்வேதமங்க
34. லமான சிவகெங்கை திருக்குளத் தென்கரை கீள்திசை சிவபிற
35. திஷ்டைக்கி சிற்ப்பமுரையே திருக்கோவிலும் சமைத்து சிவ
36. லிங்க பிறதிஷ்டையும் பண்ணி சசிவற்ண ஈசுபர சுவாமி
37. பெரிய நாயகி அம்மன்நெண்டு நவகற்பம் தறித்து சுத்துமே
38. காவில் பரிவார தேவதையளும் உண்டு பண்ணி அஷ்டம
39. ந்திரமு கும்பாஅபிசேகமும் பண்ணிவிச்சு இந்த நயினா
40. ருக்கு விட்டுக்குடுத்த திருவிளையாட்ட கிறாமமாவ
41. து காத்தடியேந்தலுக்கு புரதிநாமமான முத்து வடுகனாத
42. சமுத்திரத்துக்கு புரவாவது முடிக்கண்ட கண்மாய் நீர்பிடிக்கி மேற்கு
43. அரமனை வாசலுக்கு கிளக்கு வீரப்பன் சேருவைகாறன் யேந்த
44. ல் நீர்பிடிக்கி தெற்க்கு கீள்பாத்தி கண்மாய் நீர்பிடிக்கி வடக்கு இ
45. ன்னான்கெல்கைக்கி உள்பட்ட நஞ்சை விரையடி 30 கலமும் வாணிய
46. ங்குடி பிரவாவது ஈளுவ ஊறணி வடகரைக் குத்துக்கல்லு
47. க்கு கிளக்கு சிவகெங்கை தென்பாதைக்கி கடம்பகுளத்து
48. குளக்கால் குத்துகல்லுக்கு மேற்கு தோப்பு ஊறணி நீர்பிடி
49. குத்துக் கல்லுக்கு வடக்கு கோட்டைகுடி வாலி நீர்பிடி குத்துக்
50. கல்லுக்கு தெற்க்கு இன்னாங் கெல்கைக்கி உள்பட்ட நஞ்சை
51. விரையடி 143 கலம் 4 மரக்கால் 1 மா மானங்குடிக்கி யெல்கை மானமாவது சக்க
52. ந்தி வயலுக்கு தெற்கு பனையூர் கண்மாய் நீர்பிடிக்கி வ
53. டக்கு கால்மேக்கி வயலுக்கு உவர் பொட்டலுக்கும்
54. கிளக்கு பில்லத்தி வயலுக்கு மேற்கு இன்னான் கெல்கைக்கி உள்
55. பட்ட நஞ்சை விரையடி 133 கலம் 4 மரக்கால் 1 மா முடிக்கரைக்கி யெல்கை
56. மானமாவது மங்கலுசாற்றவெட்டி பாதைக்கி கிறாமத்து குளக்காலு

57. க்கு மேற்கு புலவன்வயலுக்கு வடக்கு ............குளத்துக்கு
58. கிளக்கு நவ்வதாவுக்கு தெற்கு இன்னாங்கெல்கைக்குட்பட்டதே
59. வதாயம் விற்மதாயம் நீங்கலாக நஞ்சை விரையடி 222 கலம் 1 மா இந்த னா
60. லுக்கும் புரவில் உள்ள புஞ்சையும் இந்த நயினார் திருவிளையாட்
61. டு கிராமம் னாலு கிராமத்தில் நஞ்சை பலன் புஞ்சை பலன் கூரைவரி பாசிவரி
62. சேத்துவரி வெட்டுகொல்லி சேஷவகை சொற்னாதாயம் யெப்பற்
63. பட்ட ஆதாயமும் செலது பாசாண நிதி நிட்சேப அட்டபோக தே
64. சொ சுவாமியங்களுக்கும் தானாதி வினி விக்கிறயங்களு
65. க்கும் யோக்கியமாக இந்த நயினார் திருவிளையாட்ட கிறாமத்து
66. க்கு அரமனை தற்மாசன பலவரி சறுவமானிபமாக கட்டளையி
67. யிட்டு நயினார் சன்னதியில் தானபூறுவமாக சிவன்ராத்திரி பு
68. ண்ணியகாலத்தில் தாராதத்த பண்ணிக்கொடுத்தோம் யிந்த
69. தற்மத்தை யாதாமொருத்தர் பரிபாலன பண்ணின பேர் காசியி
70. லே சேதுவிலே ஆயிரலிங்க பிறதிஷ்ட்டை விற்ம பிறதிஷ்ட்டை
71. புண்ணியத்தை யடையக் கடவாறாகவும் இந்த தற்ம்மத்துக்கு அகி
72. தம் பண்ணினபேர் காசியிலே கெங்கை கரையிலே மாதா
73. வையும் பிதாவையும் குருவையும் காராம்பசுவையும் கொன்ற தோ
74. சத்திலே போக கடவாராகவும் இந்தப்படிக்கி இந்த தற்ம்ம
75. சாதனம் எளுதினேன் அரமனை ராயசம் சொக்கு கைஎளுத்து.

## 5. சிவகங்கை குடும்பர்கள் செப்பேடு

சிவகங்கை நகர் சசிவர்ண ஈசுவரர் ஆலயத்தில் கூடிய தேவேந்திர குடும்பர்கள், தங்களது குலத்தினருக்கு, நாலு கோட்டைப் பாளையக்காரரது மூதாதையான மதியார் அழகத்தேவர் வழங்கிய சிறப்புக்களை நினைத்தவர்களாக அந்தக் கோயில் திருப்பணிக்கு உதவுவதற்கு கி.பி.1752-ல் ஒப்புதல் அளித்த பட்டயம். இதுவரை சிவகங்கை சீமையில் கிடைத்துள்ள செப்பேடுகளில் மிக நீண்டதாகவும் நூற்று ஐம்பத்து இரண்டு வரிகளைக் கொண்டதுமாகும் இது.

1. உ சுபஸ்ரீமன் மகா மண்டலேசுரன் அரியாயிர தளவிபாடன் பாசைக் குதப்புவராயி
2. ரகண்டன் கண்டநாடு கொண்டு கொண்டநாடு கொடாதான் பாண்டி மண்டலப்பிற
3. தி சட்டாபன சாரியன் சொளமண்(ட★)லப் பிறதி சட்டாபனாசாரியன் பூறுவபட்சி
4. ம் தெட்சண உத்தர சத்த சமுத்திராதிபதி இளமுங் கொங்கு மி யாப்பாணமும் எம்
5. மண்டலமுமளித்து கெசவேட்டை கொண்ட ருளிய ராசாதிராசன் ராச

பரமேசுரன் ராச மாற்

6. த்தாண்டன் ராச கெம்பீரன் ராசாக்கள் தம்பிரான் நடன துரங்கரேபந்தனன் நவகோடி நா
7. ராயணன் நவகண்டச் சக்கிறவற்த்தி துலுக்கர் தளவிபாடன் துலுக்கராட்டந்தவிள்த்தா
8. ன் ஒட்டியர் தளவிபாடன் ஒட்டியராட்டம் தவிள்த்தான் மலைகலங்கினாலும் மனங் கல
9. ங்காத கண்டன் மனுமுறை தவறான் மரபுகாத்த ருள்வான் வீசையலட்சுமி வாள்வீ
10. ரப்பிறதாபன் கருதலர்கள் சிங்கம் விருதரசர் மணவாளன் சமரமுகசங்கார பிறளைய காலருத்தி
11. ரன் துட்டரில்துட்டன் சிட்டர் பரிபாலனன் கட்டாரிச்சாளுவன் அசகாய சூரன் வீரவிக்கிறமா
12. தித்தன் படைகண்டு தத்தளிப்பார் முண்டன் கொடைகண்டொளித்து நிற்பார் கண்டன் நகைமு
13. க சந்திரோதயன் கோடி சூரியப் பிறகாசன் மதந்தெறுவித சுமுகர்மணி கமன்மதசொ
14. ருபன் பரிமளசுகந்தன் ப(ர)ராசர்கேசரி கந்தாபிக்ஷகன் கலியாணராமன் ஐந்தருவணை
15. பவசந்ததியாகி யஷ்ட்டலட்சுமிகரன் திக்குவிசையஞ் செலுத்திச் செக முளுதாண்டோ
16. ன் மதுரை வளி கண்டான் வைகையாறுடையான் ஆற்றுப்பாச்சி, கடலுபாச்சி தெட்சண சி
17. ங்காசனாதிபதி சேதுகாவலன் திண்புய கோலாகலன் தாலிக்குவேலி தரியலர்கள் மணவாளன் தண்டுவா
18. ர் மிண்டன் சங்கிறாமகெம்பிரன் வலியச்சருவி வளியிற் கால் நீட்டி நாடுகலக்கி நற்றமளப்
19. மற்ற சங்கன் அரிவையர்கள் மதன சொருபன் அசட்ட பொகதுரந்தரன் தேவைவருது
20. ரை ராசன் செம்பினன்னாடன் அரசராவண ராமன் அரசராட்டந் தவிள்த்தான் குப்பக்
21. குலக்காறன் குவலையங்காத் தோன் இரவி குலசெகரன் இறந்தகால மெடுத்தான் அடை
22. க்கலங்காத்தான் அடையலர் சிங்கஞ் சங்கீதவித்தி யாவினோதன் கா
23. விக்குடையான் கங்காபிஷேகன் தத்துபரியான் தங்கச்சி விகையான் சாடிக்
24. கறார் மிண்டன் சாமித்து ரோகியர் கண்டன் தேவையன் இராமநா சாமிகாரி
25. யதுரந்தரன் சற்பன்னபாரைபதி விற்ப(ன்★)ன விவேகன் தொட்டபாசந்திவிரான
26. சொரிமுத்துவன்னியன் பதிநெட்டுக் கூட்டத்து வன்னியர் கண்டன்

வன்னி
27. யராட்டந்தவிள்த்தான் வடகரைப்புலியான் மனங்கலங்காதான், துளபமாலிகை
28. யான் கெருடகேதனன் ஜுரத்திப்பிறதாபன் பட்டமானங்காத்தான் சேமத்தலைவிளங்
29. குமிருதாளினான் சொல்லுக்கரிச்சந்திரன் வில்லுக்கு விசையன் மல்லுக்குவீமன்
30. பொறுமைக்குத் தறுமர் குதிரைக்கு நகுலன் சாத்திர வேதத்துக்கு சகாதேவர் அரிவுக்
31. கர்சுனன் கல்விக்கு அகத்தியர் கொடைக்குக் கற்னன் வாள்விலக்கு பொன்வா
32. ............நலமிகுதி சாதராமன் றசனை கூர்மலை வளர் காதலிவள் ராமலிங்காசா
33. ணாம்பயும் பணிதாஷ்டடிகப்பிறபலன் துரைகள் கிரிழ துரைராசாற்றிமன்
34. தொண்டியன் துரைகாவலன் அசுபதி நரபதி கெசபதி தநபதி மகபதிக்கிணையா
35. ன் சேதுபதி பிறிதிவிராச்சிய பரிபாலநம் பண்ணியருளா நின்ற கலியுகசகா
36. த்த 4852 - சாலிய வாகன ச காற்தம் 1674 இதின்மேல்ச்
37. செல்லாநின்ற ஆங்கிரச சம்வச்சரது அறப்ப(ர)சி மீ ருஉ
38. மங்களவாரனாள் பூற்வபட்சத்து விசையதெசமியில் அவுட்ட
39. நெச்செத்திரமும் சிங்கராசியும் கூடிந சுபதிநத்தில்
40. மெநாட்டுப்புலிராச புலிவாடிப் புலிதெப்புலி தாலிக்கு வேலிதளஞ்சிங்
41. கமீளஞ்சிங்கம் முந்துவார் கண்டன் வளைந்த கோட்டை வரவாடிவிடா
42. தான் மகராசராசேந்திரன் மனுச் சக்கிறவிற்த்தி வளந்திகள் வனசம
43. வற்றடஞ் சூழுங்குளந்தை யம்பதியாந் திறு கலர்சிங்கம் ஸ்ரீமது அரசு
45. நிலையிட்ட விசையரகுநாதச் சசிவர்ண பெரிய உடையர்(த்) தேவர(ர)வரகள்
46. புத்திரன் முத்து வடுகநாதப் பெரிய உடையாத் தேவரவர்களுக்கு பராபரமா
47. கிய பரமேசுரனார் தராதலம் படைக்கத் தானினைந்தருளி நெற்றியகளல்
48. கண்ணெருற விளிக்கில(ப்) பொசதக முளக்கொல் சிகை முப்புரிநூல் அசத்த க(டை)
49. யமாடை (ஆ)பரணமும் பத்துக் கரமும் அய்ந்து முகமும் நிதியே வளுவா நீர
50. ஞ்சின வடிவாய வேதசொருப விசுவ ஃவும் வந்து மலாயன் வனசி
51. றை விடுத்து சந்திரர் சூரியர் தன்னைப் படைத்தும் அதல விதல சுதல

தராதல ம

52. காதவ பாதாள பூலோக புவலோக சிவலோக தவலோக சந்ரலோக சத்திய
53. லோக மகாலோக மென்னும் பதினாலுலோகமுஞ் சக்கிற வாளகிரியும் ஆயி
54. ரத்தெட்டுக் கொடுமுடியும் ஆயிரத்தெட்டு நுனையும் ஆயிரத்தெட்டு மா
55. ற்றுமுள்ள மகாமேருகிரி முதலாகிய அட்டகுல பறவதமும் அசட்ட கெச அ
56. ட்ட மானாகமும் அட்ட திக்குப் பாலகர் (க★) சூம்ஞ் சத்த சமுத்திரமும் முப்பத்து
57. முக்கோடி தேவர்கள் நா(ர்★) பத்தெண்ணாயிர ரிஷிகளும் அட்டவசு கின்ன
58. ரகின்னர கிம்புருஷ கெருடகாந்திரு (வ★) வாத்திய வித்தியாதரர் தும்புருனாருதாதி
59. முனீசுராளும் கொண்டதொரு புவனமாகவும் புவனமுன்னூத்திருபதெட்டு
60. க்கொண்டது ஒரு அண்டமாகவும் அண்டமாயிரத்தெட்டுக் கொண்டது
61. ஒரு அகிரண்டமாகவும் அகிரண்டமாயிரத்தெட்டுக் கொண்டது ஒரு பகிரம்டமா
62. கவும் பகிரண்டமாயிரத் தெட்டுக் கொண்டது ஒரு மகா அண்டம் மகா அண்டம் ஆயிர
63. த்தெட்டுக்கொண்டது ஒரு பிறமாண்டம் பிறமாண்டத்துக்கு மேலாமனேக பல்லா
64. யிரங்கொடி யண்டங்களுஞ் சொற்க மத்தியபாதாள மென்றும் சொல்லப்பட்ட மு
65. மண்டலமுங் கற்பித்து பிறம்மட்சத்திறிய வசிய சூத்திர நாலுவறணா சாதியு
66. ம் கற்ப்பித்து நாலுவேதமு மாறுசாத்திரமும் பதினெண் புராணமும் அறுபத்
67. துனாலுகலையக் கியாநமும்(ங்) கற்பித்து யிது முதலாகிய சகலகாரிய காரணாதி
68. களையுங் கற்பித்து இதற்கெல்லாம் ஆதாரமாகி ரட்சிக்கும் பொருட்டாக முன்பாரா
69. பரத்தின அக்கிநி நேத்ரர துற்பவித்து அகலமாகிய அதிவிசுவப்பிறம்
70. மாவிநுடைய ஈசாநம் தற்ப்புருசம் அகோரம் வ(ல★)ம்தேவம் சத்தியோ
71. சத சிவமென்று அஞ்சுமுகத்திலும் மநுமய தோசடாதிப விசுவ (சிவகெங்கை தலத்துக்கும் ஷெ சீமைக்கும் அஞ்சு சாதிக் கும் கோல அம்பலம் சுய்ய பகமாசாரி

மகன் ஆறுமுகமாசாரி தச்சு, அம்பலம் நன்
னி ஆசாரி மகன் நல்லதம்பி ஆசாரி ஷ கோ
வில் ஜ்னிகாளில் முத்துபிள்ளை மகன்
குளந்தையா பிள்ளை இந்த வரிக்கு கணக்கு

இரண்டாவது பக்கம்

72. மென்னும் ஐந்து முகம் ஐந்து கறத்தாய் திருவுருக் கொண்டு தனுக
73. ரண புவன போகாதிகளையும் யெல்லாம் தம் இறுதயத்தினாலே திறேதாயுக
74. த்திலக்கியா நத்தினாலேயும் படைத்துந் திறேதாயுக த்தில் த கட்டிப்
75. புனாலே படைத்தும் துவாபரயுகத்தில் மந்திரவித்தகினாலே ப
76. டைத்துங் கலியுகத்தில் கைய்யினாலே படைத்து மாட்சிக்கப்பட்
77. ட கருணாக்கரப்பட மன்னர்க்குச் செங்கோல் வாள்முனை கொடுத்தும் உன்
78. னியகொளுமுனையுள்வரக் கீய்ந்து கன்னியர் தமக்குக் கதிர்முனை கொடுத்து
79. மன்னிய தராசு வணிகற்கீந்து மெளுதாமரைக் கெளுத்தாணியை யீந்
80. து முளுதும் ஐமுனைய்யால் முற்றிலும் காத்தோர் கவசகுண்டலர்யா
81. ணர் தெய்வ நட்டுவராயன் அனுமக்கேதநர் மேகவாகனர் ஒங்காரசொரு
82. பிகள் சிகாயெக்ஞொபவிதர் சிறி புண்டரிகர் மாந்தை நகராதிபர் மகுடத்தியர்
83. சர்புக்க சாலையும் பளனியும் கண்டருளிய மிக்க ......
84. ஞ்சாளர் வல்லியந் ..... புல்லியமார் பா ..........
85. வன்னொர் வித்தையுங் கொடுத்துத் தியாகமுங் கொடுத்தோர் வெட'
86. ம் கொடுத்துப் பிட்சையுங் கொடுத்தோர் ஆதித்தன் றன்(னை) யச்சிநில க
87. டைந்தோர் திரை கடலடைக்கச்செ(ய★)து செய்திடுவோர் வெங்கலந் த
88. தனக்குச் சுங்கந் விளக்கத் தரணியன் றன்னைத் தலையை யறுத்துத் தர
89. ணியக் கோலால் (த்)தார்நிறுத்திடுவொர் அமரர்கள் தனையும் கசுத்தியன்
90. றனையுஞ் சம்பதமாகத்தானிறுத் தருளிப் பொதிகை மலைதனிற் பொயி
91. ரு மென்ன சதிருடன் பூமி சமதலங்காண்டோர் தாளத் திருப்பணிதான்.
92. செயச்சொனன் காளாஞ்சியேந்தத் தன் புகள்பெற னொர் கற்பந்தலிட்டுக் காராளர் தங்க
93. ள் கற்பகலாமற் காத்த கெம்பீரர் பூலோகத்திலும் புகள் விண்ணாட்டிலும் (ந்) தாலி முத்திரையால்
94. (த்)தாரமும்மைப்போர் அங்கலர் கீர்த்தியை ஆதிசேடனும் பாங்குற னாளும் பகர் கூடுமோ ஆ

95. கையினாலே ஸ்ரீ காஞ்சி காமாட்சி காளிகாதெவி கமலேசுவரி ஸ்ரீஒது பரசமயகோளரி அரு
96. ளும் பிறசாதமும் பெற்றருளிய செகத்திருவான தெய்வ கண்ணாளராகிய சிவகெங்கை அஞ்சு
97. சாதி எளுபத்திநாலு ஆவரணத்தாரும் சமய சங்கிதிகளும் எங்களுக்கு அடிமைத்திரமாகியவ
98. வரும் புத்திரர் வெள்ளாண்மை யுல் கில் வியன்(ப்)பெற விளைய வள்ளல் தெய்வெநதிரன் வ
99. ரிசையாயனுப்ப வெள்ளானை மீதில் விரைவகை முளுதுயர் தெள்ளிய புகள்சேர (சோ)
100. டிக்குடையும்(ஞ்) செகத்தில்(க்) கொணர்ந்த தேவெந்திரக் குடும்பர் சேத்துக் காலச் செ
101. ல்லரான் குடும்பர்களும் அமராபதிக்கும் அளகாபுரிக்கும் நிகராயச் சிர(ஞ்)சீவிப்பதியா
102. ன சிவகெங்கைத் திருக்குளத்தங்கரையில் சசிவற்ன யீசுரன் பெரியனாயகி சன்
103. னதியில் நிறைவுற நிறைந்து குறைவறக் கூடிக் கீள்திசை மேல்திசை வடதி
104. சை தென்திசையிலும் உள்ள உறவின்முறையாரையும் குடும்பர்களையுங் கூட்ட
105. ஞ்செயிது அளவளாவிக் கொண்டு முன் மதியாளராகத் தேவாவர்கள் நாம் அனைவோ
106. ருக்கும் வந்த காரியங்களிலெ பத்துக்காரியங்கள் சாதகப்படுத்திக் கொடுத்தும் நா
107. பத்திரெண்டு காரியத்தில் மரபு காத்துக் கொடுத்தும் புத்திர பவுத்தரி பாரம்
108. பரைக்கும் அஞ்சு சாதி எளுபத்துனாலு ஆவர்ணத்தாருக்கும் புத்திரராக நடந்து
109. கொண்டதினாலெயு முற்காலத்திலே யனுமக்கொடி விருதும் பட்டயமும் வாங்கி
110. யிருந்தது மத்தியிலெ சித்திப்பொனதினாலே அவர்கள் வங்கிசாதிபதியான ஸ்ரீ
111. மது அரசுநிலையிட்ட விசைய ரகுநாதச சசிவர்ன(ப்)பெரி யுடையாதேவரவர்க
112. ள் நாமனைவொருக்கும் இப்படிப் பூறுவத்திலெ நடந்த செய்தி யெல்லாஞ் சொல்
113. லிச் சகல வெகுமான சன்மானமுங் கட்டளையிட்டு சந்துஷ்(ட்)டி பண்ணிவிச்சு அனுமக்
114. கொடி விருதும் வாங்கியிருந்த படியினாலேயும் இப்பொது அவர்கள் செல்வக்குமா
115. ரான ஸ்ரீமது அரசு நிலையிட்ட விசையரகுநாதச் சசிவர்ண முத்து

வடுகநாதப்பெரி
116. ய உடையா தேவரவர்கள் முன்மதியாரளகத் தேவர(ர)வர் கள் நாளைச் செயிதியும்
117. பெரிய துரையவர்கள் அனுமக் கொடி விருதும் வாங்கின செய்தியுஞ் சொல்லிய
118. யபடியே யெங்கள் பெரியோர்கள் உங்களுக்கு எந்தப் பிறகாரம் என்ன என்ன மரியா
119. தி நடப்பிவிச்சு இருந்தார்களோ அந்தப் பிறகாரம் நடப்பிவிச்சுக் கொள்ளுகிறோமெ
120. ன்று சகல வெகுமான சன்மாநங்களும் கட்டளையிட்டுப் பெரிய துரையவர்கள் நா
121. ளையிலெதாநெ யனுமக்கொடி விருதுக் கொடுத்திருக்கி றியளி
122. ந்தப் பட்டயமுந் தாருங்கள் என்று கட்டளையிட்டு யிந்தப் பட்டயத்துப் பண
123. த்தைத் தற்ம காரியத்திலெ நிலவரப்படுத்தி விக்கி றொமென்று கட்டளையிட்ட தி
124. னாலெ நாங்களனைவொருங் ....... சம்மதிச்சுக் ...........
125. ட்டய மெளுதிக்கொடுக்கபட தாமிர சாசனப்பட்டயமாவது
126. ய்துவிடும் தந்து மொ........... ஆசாரியார்கள் கூடி ஒன்றுக்கு உகுடு
127. மபரகள் குடி ஒன்றுக்கு பதக்கு புள்ளிப் பள்ளுக்குடி ஒன்றுக் யக இந்தப்படிக்கு வரு
128. ஷா வருஷம் குடுக்கிறமென்று இன சம்மதியாகப் பட்டயமெளுதிக் கொடுத்தபடியி
129. னாலே எங்கள் மனுஷரைக் கொண்டு வாங்கியகிலெயறுவாகிற பணமெல்லாந்
130. துரையவர்கள் கட்டளையிட்ட பிறகாரத்துக்கு சிவகங்கைத் திருக்குளத்தங்க
131. ரையில்(க்)கீள் திசையில்ச் சிவப்பிறகிஸ்ட்டையாந ச் சீவறன் யிசுபரர் அம்மன் பெரியநா
132. யகிக்கும் கோவில் திருப்பணி வேலைக்கும் சுவாமிச் சீவறணீசுரர் பெரியநாயனாயகி
133. யம்மனுக்கும் அபிஷேக நெயிவேதினந் திருவிளக்குத் திருமாலை அறக்கட்டளை
134. த்தற பரிபாலினமாக நடக்கத்தக்கதாகச் சந்திராதித்த பிறவேச வரைக்கும் புத்திரபவுத்திரர் பாரம்பரைக்கும் சல்லும் காவெரியு...........
135. ப்பட்டய பிறகாரத்துக்குச் சீவறன் இசுவரன் கொவில் தற்மத்துக்குக் குடுத்துவரக்
136. கடவொமாகவும் யிந்தத் தற்மம் புரொவிற்தியாக யிந்தப் பட்டயப்படிக்குக் கொ
137. டுத்துவருகிறவன் அனெக கோடி சிவப்பிறதிஷ்(ட்)டை

மனெகங்கோடி தடாக
138. ப்பிறதி சட்டையு மநேகங்கொடி பிறம்மப் பிறதிசட்டையுஞ் சோடச மகாதாந
139. மும் பண்ணிணவனும் பெற்ற சுகிற (த★)த்தை அடையக்கடவாராகவும் யிந்த படிக்குக்
140. கொடாமல் யாதாயொருவன் விகாதம் பண்ணியவன் அனெகம் அகிறகாரங் கெடு
141. த்தவன் கெங்கைக் கரையிலுஞ் சேதுக்கரையிலு(ம்★) மாதாபிதாகுருகாரம் ப
142. சுவைக் கொன்ற தோஷத்திலெ போகக் கடவராகவும் யிந்தப்படிக்கு அஞ்சுசா
143. தி எளுபத்துனாலு ஆவரணத்தார் சொல்ல வரணக் காற வெனைத்தலைப் புலி பூண்டு
144. காண்டான் செருவை காரன் குமாரன் (ப்) பட்டயவரி சாதிவரி பணியமாகிய பெரிய திருமா
145. கிய முத்துக்குமாரு சேருவைக் காரன் உண்டு படுத்தி எளுதிவிச்ச பட்டயம் அரமனையார் யெ
146. ங்களுக்கு நடக்க வேண்டிய மரிய மரியாதம் யெந்தக்காரியமும் ராமநாதபுரத்தி
147. ல் அத்தகம் உங்களுக்கு மரியாதம் (ப்) பணணி விக்கு (மெ) மென்ற கட்டளையிட்டபடி
148. யிநாலெ யிந்தபட்டயம் யெளுதிக் கொடுத்தோம் அனுமக்கொடி யானிக்க மெ
149. ன்னு ஒரு சிறையும் வாங்கிச் சசிவர்ண மீசுரன் கொவிலுக்கு விட்டொம் யிந்த பட்டயமெ
150. யளுதிளான் மதுராபுரி முதலாந சேது ஆதிக்கம் முதலாக சிற்ப்பாசாரி விசை
151. யரெகுநாதக்காளி ஆசாரி குமாரன் முத்துக்காளி ஆசாரி கைய்எளுத்து.
152. காளிகாதேவி சகாயம் உ..

## 6. சதுரகிரிமடம் செப்பேடு

மன்னர் முத்து வடுகநாத பெரிய உடையாத் தேவர் அவர்களால், கி.பி.1761-ல் சதுரகிரியில் உள்ள சுவாமி குழந்தையானந்த மட தர்மமாக சிறுதேட்டு கிராமத்தை கி.பி. 1760-ல் சர்வ மானியமாக வழங்கியதற்காக ஆவணம் இந்தச் செப்பேடு. ஐம்பத்து ஏழு வரிகளைக் கொண்ட இந்தச் செப்பேட்டில் தானம் கொடுக்கப்பட்ட காணிகளுக்கு விவரமான வகையில் வரையப்பட்டிருப்பது சிறப்பான தொன்றாகும்.

1. தேவி சகாயம் சுபதேயஸ்ரீமன் மகாமண்டலேசுவரன் அரியராயர் தளவி
2. பாடன் பாசைக்கு தப்பு வராயிர கண்டன் மூவராய கண்ட கண்ட

3. நாடு கொண்ட கொண்டநாடு குடாதான் பாண்டி மண்டல பனாசா
4. ரியன் சோள மண்டல பிறதிஷ்டாபனாசாரியன் தொண்ட மண்டல சண்டப்பி
5. றசண்டன் பூறுவ தெட்சண பச்சம உத்தம க்ஷத்தரியன் ஈளமுங்
6. கொங்கும் யாள்ப்பான பட்டண எம்மண்டலமும்
7. ....யளத்து கெசவேட்டை கொண்டருளிய ராசாதி ராசன்
8. ராச பரமேசுபரன் ராசமார்த்தாண்டன் ராச கெம்பீரன் ராச குலதிலகன் ரா
9. ச நச்சேத்திர சந்திரோதையன் துட்டரில் துட்டன் துஷ்ட நெட்டுரன் சிட்
10. டர் பரிபாலன பரராசசிங்கம் பகைமன்னர் கிரீடி தாலிக்கு வேலி த
11. ள சிங்கம் இளசிங்கம் தளங்கண்டு தத்தளிப்பார் கண்டன் தரியலர்
12. கோடாரி வலியக் சருவி வளியக்கால் நீட்டி வாள்க்காரர் மு
13. ண்டன் மநுரேவளி கண்டான் வய்கை வளநாடான் உத்தர தெட்
14. சண சத்த சமுத்திராதிபன் இவுளிப் பாவடி மிதித் தேறுவார் கண்டன்
15. மலை கலங்கினும் மனங் கலங்காத கண்டன் பாஞ்சால புருஷன் பனுக்கு
16. வார் முண்டன் அளகுக் கனங்கள் அனங்கரேபந்தன் அன்ன சத்திரம்நா
17. மன் பொறுமைக்குத்தற்மர் புகளுக்குக் கற்னன் மல்லுக்கு வீடன் வி
18. ல்லுக்கு விசையன் சொல்லுக்கு யரிச்சந்திரன் பரிக்கு நகுலன் சாஸ்த்
19. திரத்துக்கு சகாதேவன் அரிவுக்கு யகத்தியர் பெயத்துக்கு ஆதி சே
20. டன் குடைக்கு குமணன் வயசுக்கு மாற்க்கண்டன் தனத்தில்
21. குபேரன் செங்காவிக் குடையான் யனும கேதனன் யாளிகே
22. தனன் கெருட கேதனன் புலிகேதனன் வடகரைப் புலி மேனாட்
23. டுப்புலி வாடிப்புலிமதப்புலி கெப்பிலி சீறும்புலி சினக்கும்
24. விருது யரசர் கெப்பிலி கொட்ட மடக்கி குறும்பர் கோடாலி
25. துரகரேபந்தன் சொரிமுத்து வன்னியன் துலுக்கர் தள வி
26. பாடன் துலுக்கர் மோகந் தவிள்த்தான் தொட்டியா தளவி
27. பாடன் தொட்டியர் மோகந் தவிள்த்தான் நாட்டுக்கு னாயகம்
28. நவகோடி நாறாயணன் பாட்டுக்கு கோடி பணம் தருங்கிறத
29. ன் சேது வளி கண்டான் சேது காவலன் செம்பி வளநாடன்
30. துரைகள் சிகாமணி ஸ்ரீராமசுவாமி காரியதுரந்தரன் குவலை
31. யங் காத்தன் குளந்தை நகராதிபன் அசுபதி கெசுபதி தனபதி ந
32. ரபதி அரசு நிலையிட்ட ஸ்ரீமரிது விசைய ரெகுனாத சசிவற்ணன்
33. பெரிய உடையாத் தேவரவர்கள் குமாரர் முத்துவடுகனாதது
34. ரையவர்கள் பாவத்துக்குப் பிறம்பும் தற்மத்துக்குள்ளு
35. மாய் யிவ்விதம் ராச்சிய பரிபாலனம் பண்ணியருளாநின்ற சா
36. லிய வாகன சகாத்தம் 1682-க்கு மேல் செல்லா நின்
37. ற வசு சித்திரை மீ 15 உ சதுரகிரி குளந்தை யானந்த
38. பண்டாரம் மடத்து தற்மத்துக்கு நில சாதனம் பண்ணிக்கு
39. டுத்தபடி நில சாதனமாவது சிறுதெட்டு கிறாமம் மேல் நெட்.
40. டூரில் பெரிய கண்மாய் நான்மடைப் புரவில் கோவானூர்

41. பத்தில் வட வயலில் வடக்கோடிய வாய்க்காலில் பெருமா வய
42. க்கல் தளைக்கும் கிளக்கு பெருமா வயக்கல் தளைக்கு கீள் இதன் கிளக்கு ஆவு
43. டைய வயக்கத் தளைக் கு கீள் அண்ணாவுடையான் செய்க்கும் கா
44. லடை வடகிளக்கு நொச்சியகுடி தளைக் கும் காவல் மா
45. ணிய வாகையடி தளைக்கும் கிளக்கு மணி தளைக் குங்
46. இதன் கிளக்கு திருவாலங்காட் வயக்கல் தளை உ உ சல் ஹௌ
47. இதன் வடமேற்கு வேலாயுதன் வயக்கல் தளை இதன்மே
48. மற்க்கு தேவன் வயக்கல் தலை க தேவன் வயக்
49. கலுக்கு வடமேற்கு சுத்தன் வயக்கல் தளையில் பாதி உ ஹ ள
50. இன்நாங் கெல்லைக்குள் பட்ட விரையடி
51. சகலமும் சறுவ மானியமாய் சாதனம் பண்ணிக்குடுத்தனாலே
52. கல்லும் காவேரியும் புல்லும் பூமியும் சந்திராதித்தருள்ளத
53. வரைக்கும் ஆண்டு யநுபவித்துக் கொள்ள கடவாராகவும்
54. படி சாதனமும் எழுதினேன் சொக்கய்யரவர்கள் கை...
55. எழுத்து யட்டவணைச் கணக்கு மேற்படி பெரிய தகப்பனார் மகன் கெ....
56. ர் சொக்கு கைய்யெழுத்து தேவி சகாயம் உ
57. குரு சுவாமி துணை உ

## 7. வள்ளைக்குளம் செப்பேடு

முன்னரே குறிப்பிட்டுள்ளபடி, மன்னர் முத்து வடுகநாத பெரிய உடையாத் தேவரது பிதிர் பக்தியினைக் குறிப்பிடும் மற்றுமோர் ஆவணம் இந்தச் செப்பேடு. கி.பி.1763-ல் இந்த மன்னர், தமது தந்தையாரது நினைவாக புனித காசி நகரில் மடம் ஒன்று அமைத்து பிராமண போசனம், மகேசுவர பூஜை முதலிய அன்னதானப் பணிகளாக வள்ளைக்குளம் என்ற கிராமத்தை தாளமாக வழங்கியதைக் குறிக்கும் ஆவணம் இந்தச் செப்பேடு.

1. ஸ்வஸ்தி ஸ்ரீ மன் மகாமண்டலேசுரன் அரியராய தள விபாடன் பாசை
2. க்குத் தப்புவார் கண்டன் கண்டநாடு கொண்டு கொண்
3. டநாடு கொடாதான் பாண்டிமண்டல ஸ்தாபனாசாரியன் சோள
4. மண்டலப் பிரதிட்டாபனாசாரியன் தொண்டமண்டல சண்டப்பிறச
5. சண்டன் ஈளமுங் கொங்கும் யாள்பாணராயன் பட்டணமு மெம்மண்டலமும்
6. கண்டு கெசவேட்டை கொண்டருளிய ராசாதிராசன் ராசபரமேசுரன்
7. ராசமார்த்தாண்டன் ராசகுல திலகன் அரசராவன ராமன் அந்தம்பர கண்
8. டன் தாலிக்கு வேலி தளஞ்சிங்கம் இளஞ்சிங்கம் சேதுகாவலன் சேது
9. மூல ரட்சா துரந்தரன் தனுக்கோடி காவலன் தொண்டியந்துறை கா
10. வலன் செம்பிவள நாடன் தேவை நகராதிபன் முல்லை மாலிகைய்

11. ன் அனுமக்கொடி கெருடக்கொடி புலிக்கொடி புலிக்கொடியுடையான் மு
12. ம்மதயானையான் செங்காவி குடை செங்காவிக் கொடி செங்காவி
13. ச் சிவிகையான் அசுவபதி கெசபதி நரபதி யிரவிய கெற்பயாசி ரெ
14. குனாதச் சேதுபதியவ
15. ர்கள் பிறிதிவீராச்சி
16. ய பரிபாலனம் ப
17. ண்ணியருளாநி
18. ன்ற கலியுக சகா
19. த்தாம் 4864
20. சாலிவாகன ச
21. காத்தம் 1685
22. இதன்மேற் செல்லா
23. நின்ற சுபானு ஸ்ரீ சித்திரை மீ 4 தீ புதவாரமும் அமாவாசியும் அசு
24. வதியும் சுபயோக சுபகரணமுங் கூடின சூரியோதபரக புண்
25. ணிய காலத்தில் பாண்டி தேசத்தில் பொதியமா மலையா
26. ன் வையை ஆறுடையான் புனப்பிரளை நாடன் குளந்தை நகரா
27. திபன் முல்லை மாளிகையான் பஞ்சகதி யிவுளியான் மும்மதயா
28. னையான் அனுமக்கொடி கெருடக்கொடி புலிக்கொடி கட்டி
29. ய புரவலன் மும்முரச திரு முன்றிலான் திக்கெங்கு மாணை
30. செலுத்திய சிங்கம் மேனாட்டுப் புலி தாலிக்கு வேலி தளஞ்சி
31. ங்கம் இளஞ்சிங்கம் இரவிகுல சேகரன் ஆற்றுப் பாச்சி கடலி
32. ற் பாச்சி தொண்டியந்துறை காவலன் வாசபேயாகன் அரசு
33. நிலையிட்ட விசைய ரெகுநாத சசிவற்னப் பெரிய உடையா

இரண்டாம் பக்கம்

34. த் தேவரவர்கள் புத்திரன் அரசு நிலையிட்ட முத்து வடுகநாதப் பெரி
35. ய உடையாத் தேவரவர்கள் தருமபுரம் குருஞான சம்பந்த தே
36. சிகர் சீஷராண காசிவாசி குமரகுருபரத் தம்பிரானவர்
37. களுக்குத் தர்ம சாசனம் தாம்பிர சாசனப் பட்டயங் கொடுத்தப்படி
38. தற்ம காசனமாவது காசியிலே பெரிய உடையாத் தேவர் மடமு
39. ங் கட்டிப் பிராமண போசன மகேசுர பூசை அன்னதா
40. னம் நடப்பிவிக்கிறதினாலே இந்தத் தற்மத்தக்கு விட்
41. டுக் கொடுத்த கிராமமாவது பாண்டி தேசத்தில் கரு
42. த்துக் கோட்டை நாட்டில் துகவூர்க் கூற்றத்து வ
43. ள்ளைக்குளம் கிறாமத்துக் கெல்லையாவது கீள்பா
44. ற்கெல்கை கருமேனியம்மன் கோவில் புஞ்சைக்கு
45. ம் அரமனைக் கரைக்கண்மா யுள்வாய்க்கு மேற்கு தெ
46. ன் பாற்கெல்லை ஒச்சந்தட்டுப் புஞ்சைக்கும் துகவூர்
47. க் குளக்காலுக்கும் வடக்கு மேற்பாற்கெல்லை குச்சனா

48. குடி எல்லைப்புரவுகும் கிளக்கு வடபாற்கெல்லை கீள்ச்சே
49. த்தூர் புஞ்சைப் புரவுக்கும் வளையா தேவர் குடியிருப்புக்
50. கும் தெற்கு இப்படி யிசைந்த பெருநான்கெல்லைக் குள்ளிட்ட நஞ்சை
51. சை புஞ்சை திட்டு திடல் நிதி நிற்சேப செலதருபாசானம் அட்சனிய ஆக
52. மியமென்று சொல்லப்பட்ட அட்டபோக தேச சுவாமியங்களும் தானாதி வில
53. மய விக்றியங்களுக்கும் யோக்கியமாக சகல சமுதாயமும் சறுவமானிய
54. மாக ஆசந்திராற்கம் சீஷ பாரம்பரைக்கும் காசி அன்னதான தற்ம
55. த்துக்கு விட்டுக் கொடுத்தப்படியினாலே ஆண்டனுபவித்துக் கொள்ளுவாரா
56. கவும் இந்த தற்மத்துக்கு இதம் பண்ணினவன் காசியிலே சிவப்பிரதிட்டை விட்
57. டுணுப் பிரதிட்டை கோடி பிரம்ம பிரதிட்டையும் பண்ணி புண்ணியத்
58. தை யடைவாராகவும் இதற்கு யாதாமொருவன் அகிதம் பண்ணினவன்
59. காசியிலேயும் ராமீசுரத்திலேயும் கோடி காராம்பசுவையும் கோடி பி
60. ராமணாளையும் கொன்ற பாவத்தை யடையவராகவும் இந்தபடிக்கு கு
61. மர குருபரத் தம்பிரானவர்களுக்கு முத்து வடுகநாதப் பெரிய உடைய
62. யாத் தேவர்கள் இந்த அன்னதானப் பட்டயம் எழுதினே மதுரையிலி
63. ருக்கும் வெள்ளாளரில் சொக்கனாத பிள்ளை குமாரன் சங்கர நாராயண
64. ன் எழுத்து இந்தப் பட்டயம் வெட்டிநேன் தையல் பாகம் உ
65. ஸ்வதத் தாத்வி குணம் புண்யம் பரதத்தாநு பாலநம் பரதத்தாப ஹறா
66. ரேண ஸ்வதத்தாம் நிஷ்பலம் பவேத் உ

## 8. கொடி மங்கலம் செப்பேடு

திருவாவடுதுறை குருமகா சன்னிதானத்திடம் மன்னர் முத்து வடுகநாதர் கொண்டிருந்த இணையற்ற குருபக்தியின் சான்றாக அமைந்துள்ள மற்றுமொரு ஆவணம் இந்தச் செப்பேடு. கி.பி.1767ல் மன்னர் முத்து வடுகநாதர், திருவாவடுதுறை பண்டார சன்னதியில் அம்பலவாண சுவாமி பூஜைக்கும் மகேசுவர பூஜைக்கும் உடலாக சிவகங்கைச் சீமையில் உள்ள நாகமுகுந்தன்குடி என்ற கிராமத்தை இறையிலியாக வழங்கியதற்கான ஆவணம் இந்தச் செப்பேடு. திருவாவடுதுறை மடத்தில் இந்தச் செப்பேடு உள்ளது.

1. சுவத்திஸ்ரீமன் மகாமண்டலேசுரன் அரியராயிர தள விபாடன் பாசைக்குத்த
2. ப்புவராயிர கண்டன் மூவாயிர கண்டன் கண்டநாடு கொண்டு

கொண்டனாடு கொடாதா

3. ன் பாண்டி மண்டலத் தாபனாசாரியன், சோளமண்டலப் பிறதிட்டாபனாசாரியன்
4. தொண்ட மண்டல சண்டப் பிறசண்டன் ஈளமுங் கொங்கும் யாள்ப்பாணமும் எம்
5. ம்மண்டலமு மளித்துக் கெசவேட்டை கொண்டருளிய ராசாதி ராசன் ராசபரமே
6. சுரன் ராச மாத்தாண்டன் ராச குல திலகன் ராய ராகுத்த மிண்டன் மன்னரில் மன்னன் ம
7. ருவலர் கேசரி துட்டரில் துட்டடுன் துட்ட நெட்டுரன் சிட்டர் பரிபாலனன் ஓட்டியர் மோகந்த
8. விள்த்தான் துலுக்கர் தள விபாடன் வலியச் சருவி வழியிற் காளீட்டி தாலிக்கு வேலி யிள
9. ஞ்சிங்கத் தளஞ்சிங்கம் வைகை வளநாடன் ஆற்றுப்பாச்சி கடலிற்பாச்சி சேதுநகர்
10. காவலன் சேதுமூல துரந்தரன் ராமனாதசுவாமி காரிய துரந்தரன் சிவபூசா துரந்தரன் பரரா
11. சசிங்கம் பரராச கேசரி பட்டமானங் காத்தான் பரதேசி காவலன் சொரிமுத்து வன்னிய
12. ன் கோடி சூரியப் பிறகாசன் தொண்டியந்துறை காவலன் இந்துகுல சற்பகெருடன் இவுளி
13. பாவடி இவுளி மிதித்தேறுவார் கண்டன் நவகோடி நாராயணன் பஞ்சவர்ணபாவாடையுடை
14. யோன் துட்டநிட்டன் சிட்டபரிபாலன் அட்ட லட்சுமிவாசன் நித்தி கலியாணன் மனுகு
15. ல வங்கிசன் சாமித்துரோகியள் மிண்டன் கட்டாரிசாளுவன் அடைக்கலங் காத்தா
16. ன் தாலிக்கு வேலி ரண கேசரி ரணகிரீடி சங்கீத சாயுச்சிய வித்தியா விநோதன்
17. செங்காவிக் குடையோன் சேமத்தலை விருது விளங்குமிரு தாளினான் நரலோகர்
18. கண்டன் பொறுமைக்கு தண்மர் வில்லுக்கு விசையன் மல்லுக்கு வீடன் பரிக்கு ந
19. குலன் சாத்திரத்துக்குச் சகாதேவன் கொடைக்குக் கன்னன் அறிவுக் ககத்தியன் தனத்துக்கு
20. க்குபேரன் அனுமக்கொடி கெருடக்கொடி புலிக்கொடி யாளிக்கொடி சிங்கக் கொடி மகரக்
21. கொடி மதப்புலி காரியங் காத்தான் திருச்சிங்காசனத்திற்றிரு மகள் பதம்போற்றி ராச்சியபரி
22. பாலனம்பண்ணியருளாநின்ற சாலிவாகன சகாத்தம் 1691க்கு மேல் செல்லானி

23. ன்ற விரோதி ஸ்ரீ அற்பசி மாதம் 25 உ ஸ்ரீமது அரசு நிலையிட்ட விசைய ரெகுநாத சசிவற்னப் பெரிய உ
24. டையாத் தேவரவர்கள் புத்திரன் முத்துவடுகனாதப் பெரிய உடையாத் தேவரவர்கள் தி
25. ருவாவடுதுறைப் பண்டாரச் சன்னிதியில் அம்பலாணசுவாமி பூசைக்கும் மகேசு
26. சர பூசைக்குந் தற்ம சாதனம் பட்டையங் கொடுத்தபடி பட்டையமாவது கிராமங் கொடி மங்
27. கலம் நாகமுகந்தன்குடிக்கு வடக்கு முடவேலிக்குந் தாய மங்கலத்துக் எல்லைக்குந்த தெற்கு வி

இரண்டாவது பக்கம்

28. ளாங்குடி எல்லைக்கு மேற்கு எம்மத்துக்கும் கிழக்கு இந்தப் பெருநாங் கெல்லைக்
29. குள்ப்பட்ட நிலம் நஞ்சை புஞ்சை மாவடை மரவடை திட்டுத்திடல் நிதி நிட்சேம் உள்படக் கிராமத்
30. தில் பளவரிப் பலவரி வேண்டுகோல்வரி வெள்ளைக்குடைவரி கொடிக்கால்வரி
31. கத்திப்பெட்டிவரி மற்றச் சில்லறைப் பலவரியளும் ஊளிய பாழியமுஞ் சறுவமானியமாக
32. ச் சந்திராதித்தருள்ளவரைக்கும் பரம்பரையாகக் கையாடிக் கொண்டு தற்மம் பரிபாலன
33. ம் பண்ணிக் கொண்டிருப்பார்களாகவும் இந்தத் தர்மத்தை யாதாமொருவர் பரிபாலனம்பண்
34. ணின பேர்கள் காசியிலேயுஞ் சேதுவிலேயும் சிவலிங்கப் பிறதிட்டையும் ஆயிரம் பிரமப்
35. பிறதிட்டையும் ஆயிரங் கன்னிகாதானம் கோதான புண்ணியமும் பெறுவாராகவும் இ
36. ந்தத் தற்மத்துக்கு அயிதம் பண்ணின பேர் இதற்கு யெதிர்மறைப் பயனையடைவாராகவும் உ
37. இதுவல்லாமலுமனேக குனூர் பாவப்பயனையுடையவராகவும்
38. உ ஆறுமுகம் சகாயம் உ ★

(★ 38-ம் வரி தெலுங்கில் எழுதப் பெற்றுள்ளது)



# 4. ஆற்காட்டு நவாப்பின் ஆட்சி

**கா**ளையார் கோவில் கோட்டைப் போரில் சின்ன மறவர் சீமையின் வீரம் விலை போகாததால் தோல்வியுற்ற மறவர்கள், வழி நடத்தக் கூடிய தலைவர் இல்லாமல் தத்தளித்தனர். தலைக்குனிவுடன் ஆக்கிரமிப்பாளரது ஆட்சிக்குக் கட்டுப்பட்டு நடப்பதை தவிர அவர்களுக்கு வேறு வழி எதுவும் தென்படவில்லை. ஆனால் அவர்களது உள்ளம் உலைக்களம் போல தன்மானத்தினால் கொதித்து குமுறிக் கொண்டிருந்தது.

சிவகங்கைக் கோட்டையின் பாதுகாப்பினை ஆற்காட்டு நவாப்பின் படைகளும் கும்பெனியாரது அணிகளும் மேற்கொண்டன. நவாப்பின் நிர்வாகம் சிவகங்கை கோட்டையில் இருந்து இயங்கத் தொடங்கியது. பேட்டைகளிலும், சுங்கச் சாவடிகளிலும் மிரட்டு மொழி பேசுகின்ற முரட்டு பட்டாணியர்கள் காவல் பணியில் ஈடுபட்டனர். இவர்கள் அனைவரும் நாள்தோறும் சிவகங்கை அரண்மனைக்கு எதிரே உள்ள பரந்த மைதானத்தில் சீருடை பூண்டு அணி வகுத்து ஆங்கிலத் தளபதிகளது உத்திரவுப்படி பயிற்சிகளை செய்து வந்ததை மக்கள் சற்று வியப்புடன் கவனித்து வரலாயினர்.

இந்த கவாத்து மைதானத்திற்கு அருகில் அரண்மனை முகப்பிற்கு அண்மையிலேயே புதிதாக அமைக்கப்பட்ட மாளிகையில் ஆற்காடு நவாப்பின் மூத்த மகன் உம்தத் உல்-உம்ரா தங்கி இருந்தார். அவர் சிவகங்கைச் சீமையில் நவாப்பின் நேர் பிரதிநிதியாக செயல்பட்டார். புதிய அரசின் நிர்வாகம் அடுத்தடுத்து பல புதிய ஆணைகளைப்

பிறப்பித்தது. சிவகங்கை என்ற பெயருக்குப் பதிலாக ஹுஸைன் நகர்[74] என்ற புதிய பெயர் அரசு ஆவணங்களில் இடம் பெற்றன. (ஏற்கனவே இராமநாதபுரத்தின் பெயரை அலி நகர் என மாற்றம் செய்து இருந்தனர் என்பது குறிப்பிடத்தக்கது.)

சென்னையில் உள்ள நவாப் வாலாஜா முகம்மது அலியுடனும் கும்பெனியாருடனும் தொடர்பு கொள்வதற்கு ஏற்றவாறு சீமை நிர்வாக கடிதப் போக்குவரத்து, அங்கு அமலில் இருந்த 'பாரசீக' மொழியில் கையாளப்பட்டது. இந்தக் கடிதங்களில் இஸ்லாமியரது 'ஹீஜிரி' ஆண்டு முறையும், சர்க்காரது வரவு செலவு கணக்கில் பசலி முறையும் புகுத்தப்பட்டன. சிவகங்கை மன்னர்கள் ஆட்சியில் குடி மக்களுக்கு வழங்கப்பட்ட நிலமான்யங்கள், தர்மாசனம், ஜீவிதஇனாம் போன்ற நிலக்கொடைகள் பறிமுதல் செய்யப்பட்டு புதிய சர்க்காரது ஆதரவாளர்களுக்கு 'கவுல்காணி' என்ற பெயரில் வழங்கப்பட்டன.[75] புழக்கத்தில் இருந்த மின்னல் பணம், சுழிப்பணம், சுழிச்சக்கரம், டச்சுக்காரர்களது போர்டோ நோவா பகோடா போன்ற நாணயங்களை மதிப்பிழக்கச் செய்து ஆற்காட்டு வெள்ளி ரூபாயை அதிகார பூர்வ நாணயமாக அறிவித்தது. பழைய நாணயங்களுக்கும் இந்த புதிய ரூபாய்க்கும் மதிப்பில், *1:3 1/2* என்ற விகித வேறுபாடு இருந்தது. ஊர்த் தகராறுகளை தீர்த்து வைப்பதற்காக பாரம்பரிய முறையில் இயங்கி வந்த ஊர்ச் சபை, நாட்டார்களது ஊர்ப்பொதுசபை ஆகியவைகளை நீக்கிவிட்டு, நவாப்பின் அலுவலர்களான அமில்தார்கள், குற்றங்களுக்கு அபராதமும் தண்டனையும் அளிக்கும் நியாயாதிபதிகளாக மாறினர். நடைமுறையில் இருந்து வந்த தலங்காவல், தேசகாவல் முறைகள் அகற்றப்பட்டு ஊர்களுக்கு புதிய காவல்காரர்கள் நியமிக்கப்பட்டனர்.

இந்த மாற்றங்கள் அனைத்தும் சிவகங்கை சீமை மக்களுக்கு அன்றாட வாழ்க்கையில் பல இடைஞ்சல்களை எதிர் நோக்க வழிவகுத்ததுடன், அவர்கள் ஒரு அன்னிய அரசுக்கு அடிமைக் குடிகளாக இருக்கிறோமே என்ற வேதனையையும் வெறுப்பையும் வளர்த்தன. இயல்பாகவே ராஜவிசுவாசமும் போர்க்குணமும் மிக்க இந்த சீமை மக்கள் நவாப்பின் அலுவலர்களுடன் ஆங்காங்கு மோதினர். நாளடைவில் இந்த கிளர்ச்சிகள் சங்கிலிப் பின்னலாக சீமையின் பல பாகங்களுக்கு பரவி கூட்டுக் கிளர்ச்சிகளாகப் பரிணமித்தன. பக்கத்து பெரிய மறவர் சீமையின் சேதுபதி மன்னரை ஆற்காட்டு நவாப்பும் கும்பெனியாரும், திருச்சிக் கோட்டையில் சிறை வைத்திருப்பதைப் பயன்படுத்திக் கொண்டு, சேதுபதி சீமையின் தெற்கு, கிழக்குப் பகுதிகளில் மாப்பிள்ளைத் தேவர் என்ற மாவீரன் தலைமையில் மக்கள் திரண்டு, நவாப்பின் நிர்வாகத்தைச் செயலிழக்கச் செய்த சாதனையை அறிந்தனர்.

---

74. Kadirvelu. Dr. S. - History of Maravas (1977). P: 164
75. Military Consultations. Vol.43. 1.7.1772. P: 1033

இதனால் எழுச்சியும் ஆர்வமும் கொண்ட மக்கள் காடுகளில் கூடினர். திண்டுக்கல் சீமையில் இருந்து ராணி வேலு நாச்சியாரும், பிரதானி தாண்டவராயப் பிள்ளையும் சிவகங்கைச் சீமைக்குத் திரும்ப இருக்கும் செய்திகளை, அது தொடர்பாக அவர்கள் குடிமக்களுக்கு அனுப்பியுள்ள ரகசிய ஓலைகளைப் படிக்கக் கேட்டு பரவசமுற்றனர். நவாப்பின் கட்டுப்பாட்டில் இருந்த கோட்டைகளையும், பேட்டைகளையும் தாக்கினர். அவர்களிடம் இருந்த வில், வேல், வாள், நாட்டுத் துப்பாக்கிகள் ஆகியவைகளை இந்த தாக்குதலுக்குப் பயன்படுத்தினர். பரவலாகத் தொடர்ந்த இந்தத் தாக்குதலினால் பாதிக்கப்பட்ட நவாப்பின் பணியாளர்கள், பத்திரமான இடங்களைத் தேடிச் சென்று தங்களது பணிகளை மேற்கொண்டனர். ஆனால் எத்தனை நாட்களுக்கு இவ்விதம் பயத்திலும் பீதியிலும் கழிக்க முடியும்? நாட்கள் நகர்ந்து கொண்டிருந்தன. சிவகங்கை சீமை மக்களது அந்நிய எதிர்ப்பு உணர்வும் அதிகரித்துக் கொண்டே வந்தது.[76]

இந்த மக்களில் சிலர் ராணியாரது நிலையை வலுப்படுத்தி நவாப்பின் ஆதிக்கத்தில் இருந்து சிவகங்கையை மீட்பதற்கு விருபாட்சிக்கு புறப்பட்டுச் சென்றனர். இவையெல்லாம், சிவகங்கைச் சீமையில் நவாப் முகம்மது அலியின் மூத்த மகனது நேரடி நிர்வாகம் என்ற தேர் வெகு விரைவில் நிலைக்கு வரவிருப்பதைத் தெளிவாக எடுத்துக் காட்டின.



76. Kadirvelu.Dr.S. - History of Maravas (1977). P: 165

# 5. விருபாட்சியில் வேலுநாச்சியார்

திண்டுக்கல் கோட்டைக்கு வடகிழக்கே பதினெட்டுக் கல் தொலைவில் அமைந்து இருக்கிறது விருபாட்சி என்ற சிற்றூர். திண்டுக்கல் சீமையின் பிரதானமான இருபது பாளையங்களில் இந்த பாளையமும் ஒன்று. பதினைந்தாம் நூற்றாண்டின் பிற்பகுதியில் விஜயநகர பேரரசர்களாக இருந்த, 'விருபாட்ச' என்ற சிறப்பு பெற்ற மன்னர்களது நினைவாக எழுந்த ஊர். விஜய நகரப் பிரதிநிதியாக மகாமண்டலேசுவரராக, திருச்சிராப்பள்ளியில் ஆட்சி செய்த மல்லிகார்ஜுனர், மதுரைப் படையெடுப்பில் அவருக்குத் துணை புரிந்த தொட்டிய நாயக்கரைப் பெருமைப்படுத்த அவரால் தோற்று விக்கப்பட்டது என்றும், இன்னொரு செய்திப்படி விசுநாத நாயக்கரால் வழங்கப்பட்டது இந்தப் பாளையம் எனவும் மதுரை கெஜட்டிரில் வரையப்பட்டுள்ளது.[77] பி.எஸ். வார்டு என்பவரது ''மதுரை திண்டுக்கல் நினைவுகள்'' என்ற நூலில் இந்தப் பாளையம் சின்னப்ப நாயக்கர் என்ற கம்பளத்தாரரால் நிறுவப்பட்டது என்றும், இவர் தமது தீரச் செயல்களால் மதுரை நாயக்க மன்னருக்கு பல போர்களில் அரிய உதவி செய்த காரணத்தினால் 'திருமலை' என்ற விருது வழங்கப்பட்டது என்றும் வரைந்துள்ளார். அத்துடன் மதுரைக் கோட்டையின் எழுபத்து இரண்டு கொத்தளங்களில் திருமஞ்சன வாசல் என்ற கொத்தளத்தின் பாதுகாப்பு பொறுப்பு இந்த பாளையக்காரரிடம் இருந்தது எனத் தெரிய வருகிறது. இந்தப் பாளையம் மைசூர் மன்னரது மேலாண்மைக்கு உட்பட்ட பிறகு, அவரது பாளையத்தின் கப்பத்தினை உயர்த்திய ஹைதர் அலியின் ஆணையை எதிர்த்து தள்ளுபடி தொகையைப் பெற்றார்.[78] அப்பொழுது

77. Francies Gazetteer of Madura (1909). P: 310
78. Ward B.S. · Memoir of Madura and Dindigal (1895) Vol. 3. P: 68

*(கி.பி.1754)* இருந்தவர் திருமலை கோதர சின்னப்ப நாயக்கர் என்ற தீரர். குடமுருட்டி ஆற்றின் கரையில் ஒரு சிறிய மண்கோட்டை; வளமான விளைநிலங்கள்; தமிழக மறவர்களைப் போல குடிப் பெருமையும் மான உணர்வும் மிக்க கம்பளத்து நாயக்கர்களான குடி மக்களையும் அவர்களது தலைவரையும் கொண்டது. இந்த சிறிய ஊரை ராணி வேலு நாச்சியாரும், அவரது குழந்தையும் பாதுகாப்பாக இருப்பதற்கு ஏற்ற பொருத்தமான ஊராக பிரதானி தாண்டவராய பிள்ளை தேர்வு செய்தார்.

காளையார் கோவில் போரைப் பற்றிக் கேள்வியுற்ற அந்த ஊர் பாளையக்காரர் மிகுந்த அனுதாபத்துடன் சிவகங்கை ராணிக்கும் பிரதானிக்கும் தக்க வசதிகளை ஏற்படுத்திக் கொடுத்ததுடன், திண்டுக்கல் கோட்டைத் தளபதியும், மைசூர் ஐதர் அலியின் மைத்துனருமான சையத் சாகிபுக்கு அவர்களை அறிமுகப்படுத்தி வைத்தார். இராமநாதபுரம், சிவகங்கை ஆகிய மறவர் சீமைகளில் இருந்து ஆற்காட்டு நவாப்பை துரத்தியடிப்பதற்கு படை உதவி கோரிய ராணியாரின் வேண்டுதலையும், சுல்தான் ஐதர் அலிக்கு பரிந்துரையுடன் அனுப்பி வைக்குமாறும் செய்தார்.

*சிவகங்கை பிரதானி தாண்டவராய பிள்ளை ராணி வேலு நாச்சியாருக்காக சுல்தான் ஐதர்அலி பகதூர் அவர்களுக்கு 08.12.1772 தேதியிட்டு அனுப்பிய கடிதம்.*[79]

"... ஆற்காட்டு நவாப், இராமநாதபுரம், சிவகங்கை ஆகிய இரு தன்னரசுகளையும் ஆக்கிரமித்து அழிவை ஏற்படுத்தி வருகிறார். அங்கிருந்து தப்பி வந்த நான் கள்ளர் தலைவர்களுடன் காடுகளில் தங்கி கிளர்ச்சியை தொடர்ந்து வருகிறேன். இந்த முயற்சியில் எனக்கு யார் உதவி செய்தாலும் இன்னும் சிறந்த சாதனைகளை இயற்றமுடியும். ஆகையால், தாங்கள் ஐயாயிரம் குதிரை வீரர்களையும், ஐயாயிரம் போர் வீரர்களையும் அனுப்பி வைத்தால் அவர்களது படிச் செலவை நான் ஏற்றுக் கொண்டு அவர்களுடன் இணைந்து இந்த இரு சமஸ்தானங்களையும் மீண்டும் கைப்பற்ற இயலும். அத்துடன் மதுரைக்கும் படைகளை அனுப்பி வைத்து அந்த சீமை முழுவதும் எதிர் நடவடிக்கைகளைத் தொடங்கி வைக்கவும் இயலும். அங்குள்ள பாளையக்காரர்களும் நமக்கு ஒத்துழைப்பு நல்குவார்கள்.

தங்களுக்கு செலுத்த வேண்டிய நஜர் பற்றி பின்னர் முடிவு எடுத்துக் கொள்ளலாம்.

— தாண்டவராயப்பிள்ளை,
சிவகங்கை சமஸ்தான பிரதானி.

79. Millitary Country Correspondence Vol. 21. P: 281-282



மன்னர் முத்து வடுகநாதர் செப்பேடு (திருவாரூர் செப்பேடு)

இந்தக் கடிதம் அனுப்பியபொழுது, பிரதானி, தொண்டமான் நாட்டில், சிவகங்கைச் சீமையை ஒட்டிய பாய்க்குடி என்ற கிராமத்தில் தென்னந்தோப்பு ஒன்றில் தங்கி இருந்தார். சிவகங்கைச் சீமை நடப்புகளை விருபாட்சியில் உள்ள ராணி வேலுநாச்சியாருக்கு தகவல் கொடுத்துக் கொண்டிருந்தார். அத்துடன் சிவகங்கைச் சீமை நாட்டார்களுக்கும் ஓலைகள் அனுப்பி வைத்து தொடர்பு கொண்டு இருந்தார். சிவகங்கையை விடுவிப்பதற்கான முயற்சிகளில் ஒத்துழைப்பையும் உதவிகளையும் திரட்டுவதில் ஈடுபட்டு இருந்தார்.

> ''... தஞ்சாவூராரும் தொண்டமானும் இணைந்து நமக்கு படையும் பொருளும் வழங்க சம்மதித்து உள்ளனர். மைசூர் மன்னர் ஐதர் அலிகானின் படையும் இங்கு வரவிருக்கின்றது. ஆதலால், உங்களால் இயன்ற அளவு போர் வீரர்களையும் படைக்கலங்களையும் சேகரித்துக் கொண்டு நம்மிடம் வாருங்கள். நாம் எல்லோரும் இணைந்து இராமநாதபுரத்தையும், சிவகங்கையையும் திரும்ப கைப்பற்றி விடலாம்...''

என்று மறவர் சீமை முழுவதையும் மீட்பதற்கு திட்டமிட்டு இருப்பதைத் தெரிவிக்கும் செய்தியைக் கொண்ட அவரது ஓலை ஒன்று நவாப்பின் பணியாளரான தொண்டி அமில்தார் கையில் சிக்கியது.

மறவர் சீமையை மீட்பதற்கு பிரதானி தாண்டவராயபிள்ளை மறைமுகமான முறையில் இயங்கி வருகிறார் என்பதை அப்பொழுதுதான் கம்பெனியார் உணர்ந்தனர். நவாப்பின் மகன் உம்தத்துல் உம்ராவுக்கு இந்த தகவல் கிடைத்தவுடன் மிகவும் எச்சரிக்கையுடன் செயல்பட்டார். இரவு பகல் என்று பாராது பிரதானியார் முயற்சியை தோல்வியுறச் செய்ய முயன்றார். தளபதி நஜீர்கான், தளபதி பௌஷேர் ஆகியோரது துணை கொண்டு கிளர்ச்சிக்காரர்களை தேடிப்பிடிப்பதிலும், கோட்டைகளை வலுப்படுத்துவதிலும் ஈடுபட்டார்.

மனித வாழ்க்கையின் இறுதிப்பகுதி இயலாத்தன்மை கொண்ட முதுமை. ஓடும் பாம்பையும், துரத்திச் சென்று நசுக்கிக் கொல்ல முயன்ற அதே கால்கள்தான் இப்பொழுது நடமாடுவதற்குக் கூட தளர்நடை போடுகிறது. மிகுதியான பிரயாசை! அனைத்தையும் உடனே செய்து முடிக்க வேண்டும் என்ற ஆசை! தாங்க முடியாத சுமை!

பிரதானி தாண்டவராயபிள்ளை உடல் நலிவுற்றது. கண்களும் இதயக் கதவுகளும் இறுக்கமாக மூடிக்கொண்டன. மண்ணின் மீதும் மன்னர் மீதும் மாறாத அன்பு கொண்டு தளராது உழைத்த தியாகி மறைந்து விட்டார்.[80]

---

80. கமால் Dr. S.M. - விடுதலைப் போரில் சேதுபதி மன்னர் (1989) P: 162

*பிரதானி தாண்டவராய பிள்ளை மன்னர் சசிவர்ண பெரியஉடையாத் தேவர் ஆட்சியின் இறுதியில் கி.பி.1747-ல் சிவகங்கைப் பிரதானியாகப் பணியேற்றார். அப்பொழுது அவர் சுமார் நாற்பது வயது உடையவராக இருந்திருக்க வேண்டும். இவரது அருங்குணங்களையும், ஆற்றலையும் தமிழ்த் தாத்தா டாக்டர் உ.வே.சாமினாதையர் அவர்கள்,*

> ''... தாண்டவராயபிள்ளை வீரமும், கணக்கில் நுட்பமும், தெளிந்த அறிவும், இன்னாரை இன்னபடி நடத்த வேண்டும் என்ற தகுதியுணர்ச்சியும் சமஸ்த்தானத்தின் வளங்களை மிக்கும் வழிகளையறிந்து முயலும் முயற்சியும் தைரியமும் உடையவர். தம்மை அடுத்தவரைப் போல் ஆதரிப்பவர். சொன்ன மொழி தவறாத வாய்மை உடையவர். துட்டரை அடக்கி அஞ்சச் செய்யும் பராக்கிரமம் பொருந்தியவர். தமிழ்ப் புலவர்களை ஆதரிக்குந் தன்மையினர்...''

*என புகழ்ந்து வரைந்துள்ளார்.*[81]

*இத்தகைய ஏற்றமிகு தமிழ்ப் பெருமகனைப் போற்றி புகழ்வது இயல்பு. ''எடுக்கும், இருநிதியும் நெல்லாயிரம் கலமுந் தந்தே, நாடு கவிதை கொண்டு புகழுற்றோன்'' என்று பாடியதுடன் அல்லாமல், இவரைப் பாட்டுடைத் தலைவனாகக் கொண்டு ''மான்விடு தூது'' என்ற சிறந்த செந்தமிழ் இலக்கியத்தையே படைத்துள்ளார் குழந்தைக் கவிராயர், மிதிலைப்பட்டி அழகிய சிற்றம்பலக் கவிராயரது பேரர். இந்த இலக்கியத்தில் இருந்து பிரதானி தாண்டவராய பிள்ளை சிவகங்கைச் சீமையில் எத்தகைய அறப்பணிகளை நிறைவேற்றி வைத்தார் என்பதையும் அறிந்து கொள்வதற்கு கவிராயரது கவிதை வரிகள் பயன்படுகின்றன.*

''கோலமிகு குன்றக்குடியிலே நீடுழி
காலமெல்லாம் நிற்கவே கற்கட்டிக் குளத்தில்
தன்னூற்றுக் காணத் தடாகப் பிரதிட்டை செய்து
செந்நூல் துறையால் சினகரமும் - பொன்னால்
படித்துறையு பூந்தருவும் மைந்தருவும் வேதம்
படித்துறையு மண்டபமும் பாங்காய் - முடித்து வைத்தே
போற்றிய வையாபுரியுயென்று பேருமிட்டு
நாற்றிசையோர் போற்றுவள்ளி நாதருக்கே - தோற்றுதினக்
கட்டளையுந்த துவாதசி க்கட்டளையுந் தைப்பூச
கட்டளையுமே நடத்துங் கங்கைகுலன் - மட்டுவிரி
சீதளியார் புத்தூர்த் திருத்தளியார் கொன்றைவன

---

*81. குழந்தைக் கவிராயர் - மான் விடு தூது (டாக்டர் உ.வே.சா. பதிப்பு) 1954. பக்: 12*

நாதனார் வயிரவநாதருக்கும் - சீதமலர்
நல்லமங்கை பாகருக்கு நம்பும் வயிரவர்க்கும்
வல்ல திருக்கோட்டி மாதவருக்கும் - கல்லியன்முன்
மண்டபம் நெய்விளக்கு மாமதிலும் வாகனமும்
தண்டலையு வில்லத் தளமலர்கள் - கொண்டதோர்
நித்திய நைமித்தியம் நேயமாய்தானடக்க
பத்தியுடனே யமைத்த பண்பினான்...''

என்று பிரதானியின் பணிகளை அடுக்கிச் சொல்கிறார் கவிராயர்.[௨]

மற்றும், பாகனேரிக்கு அடுத்து முத்து வடுகநாத சத்திரம் என்ற குடியிருப்பு, சோழபுரத்திற்கு மேற்கே திரியம்பகப் பொய்கை, பரம்பைக் குடியில் மடம், சத்திரம், கொடிகட்டி அன்னம் கொடுத்தோன் எனப் புகழ்ந்துரைத்துள்ளார்.

பிரதானி தாண்டவராயபிள்ளையின் மரணம், தமக்கும் சிவகங்கைச் சீமைக்கும் ஏற்பட்ட மிகப் பெரிய இழப்பு என்பதை ராணி வேலுநாச்சியார் உணர்ந்தார். வேதனையால் துடித்தார். கணவரது வீரமரணத்திற்கு பிறகு அவரையும் அவரது குழந்தையையும், காப்பாற்ற வேண்டும் என்ற உயர்ந்த இலக்கினை கொண்டிருந்தவர் அல்லவா அவர்? அவரை நம்பித்தானே இந்த அந்நிய மண்ணாகிய விருப்பாச்சி சீமையில் வாழ்ந்து வருவது? விருப்பாச்சி வாழ்க்கைக்கு மைசூர் மன்னரது அனுதாபமும் ஆதரவும் பின்னணியாக இருந்த போதிலும், விரைவில் தாயகம் திரும்பி விடலாம் என்ற வலுவான நம்பிக்கையை வளர்த்து ஊக்குவித்து வந்ததும் இந்த பிரதானி தானே? ஆற்காட்டு நவாப்புக்கு எதிராக சிவகங்கை மக்களைத் திரட்டும் கடுமையான முயற்சியில் காலமெல்லாம் ஈடுபட்டு இருந்தபோதும், வாரம் தவறாமல் விருப்பாட்சிக்கு வந்து, சிவகங்கைச் சீமையின் நடப்புகளை ராணியாருக்கு தெரிவிப்பதை அவர் வழக்கமாக கொண்டிருந்தார். அவர் விட்டு சென்ற முயற்சிகளை, அவர் வரைந்துள்ள திட்டத்தை எவ்விதம் நிறைவு பெறச் செய்வது, எத்தகைய வழி முறைகளைக் கையாளுவது?

இரவு பகலும் இதே சிந்தனையில் ராணிவேலு நாச்சியார் லயித்து இருந்தார். மிகுந்த உள்ளத்துணிவுடன் உணர்வு பூர்வமாக மறவர் சீமையின் மண்ணுக்கும் மரபுக்கும் உகந்த வகையில் ஒரு முடிவினைக் காண முயன்று வந்தார். வீரத்தின் பரிசாக உருவான சிவகங்கைச் சீமையை, மீண்டும் சுதந்திர நாடாக மாற்றாவிட்டால் அங்குள்ள மக்களின் எதிர்காலம் என்னவாகும்? இதற்கு விடை அரசியலில் ராணியார் நேரடியாக ஈடுபடுவதுதான்? ஆம். அப்படித்தான், ராணிவேலு

௨. குழந்தைக் கவிராயர் - மான் விடு தூது (டாக்டர் உ.வே.சா. பதிப்பு)

நாச்சியாரும் முடிவு செய்தார். பிரதானி தாண்டவராய பிள்ளை விட்டுச் சென்ற பணிகளை, குறிப்பாக சிவகங்கை சீமையின் நாட்டார்கள், சேர்வைக்காரர்களுடன் ஓலைத் தொடர்புகளைத் தொடர்ந்து வந்தார். தமது கணவருக்கு விசுவாசத்துடன் பணிகள் ஆற்றி வந்த அந்தரங்கப் பணியாளர்களான மருது சேர்வைக்காரர்களையும் ராணியார் தமது புதிய அரசியல் பணியில் ஈடுபடுத்தினார்.

விருபாட்சியிலிருந்து சிவகங்கைச் சீமை நாட்டுத் தலைவர்களுக்கு அனுப்பிய ஓலைகளுக்கு தக்க பலன் கிடைத்தது. பிறந்த பொன்னாட்டின் விடுதலைக்கு தங்களை ஆகுதியாக வழங்க வேண்டும் என்ற வேட்கையில் சிவகங்கைச் சீமை குடிமக்கள் பலர், சிறுசிறு குழுக்களாகத் தங்களது ஆயுதங்களுடன் விருபாட்சி போய்ச் சேர்ந்தனர். ராணியாரைச் சந்தித்து தங்களது விசுவாசத்தை தெரிவித்ததுடன், அங்கேயே தங்கத் தொடங்கினர். தியாகி முத்து வடுக நாதர் சிந்திய இரத்தத்திற்குப் பழி வாங்க வேண்டும், காளையார் கோவில் போர்க்களத்தில் பெற்ற களங்கத்தை அழித்து புதிய வரலாறு படைக்க வேண்டும் என்பதே அவர்களது வேட்கையாக இருந்தது. விருபாட்சி பாளையத்தில் சிவகங்கை மறவர்களது நடமாட்டம் அதிகரித்தது. ராணி வேலு நாச்சியாரது நம்பிக்கையும் வலுத்தது. சிவகங்கைச் சீமையை மீட்டி விடலாம் என்ற உறுதி அவரது மனதில் நிலைத்தது.

கலித்தொகையும் புறப்பாட்டும் நினைவூட்டும் காட்சியாக ராணி நாச்சியார் காணப்பட்டார். நாள்தோறும் காலை நேரத்தில் வீர மங்கை வேலு நாச்சியார் சீருடை அணிந்து, போர்ப்படை தாங்கி விருபாட்சி கிராம மந்தைவெளியில், சிவகங்கை மறவர்கள் பொருதும் வீர விளையாட்டுக்களை பார்வையிட்டார். தமது இளமைப் பருவத்தில், சக்கந்தியிலும், அரண்மனை சிறுவயலிலும் தமது பாட்டானர்களிடம் பெற்ற போர்ப் பயிற்சி, களஅணி வகுப்பு, பொருதும் பொழுது கையாளும் போர் உத்திகள் - ஆகியவைகளை, அவர்களுடன் பகிர்ந்து கொள்ளும் வழக்கத்தை முறையாக மேற்கொண்டிருந்தார். சிவகங்கைச் சீமையில் இருந்து வந்த மறவர்களுக்கு ராணியாரது ஊக்கமும் உணர்வும் நாட்டுப்பற்றையும் ராஜவிசுவாசத்தையும் தூண்டும் அகல் விளக்காக அமைந்தது.

நாட்கள், மாதங்கள் வருடங்கள் என ஏழு ஆண்டுகள் முடிந்துவிட்டன. ராணி வேலுநாச்சியாரது முயற்சிகள் முழுமை பெறுவதற்கான வாய்ப்பும் நெருங்கி வந்து கொண்டிருந்தது. ஆங்கிலப் பரங்கிகளையும், ஆர்காட்டு நவாப்பையும், ஒரே நேரத்தில் அழித்து ஒழிக்கும் திட்டம் ஒன்றினை மேல் நடத்துவதற்கு மைசூர் மன்னர் ஹைதர் அலி ஆயத்தமானார். அப்பொழுது சிவகங்கை சீமையை, ஆற்காட்டு நவாப்பின் ஆக்கிரமிப்பில் இருந்து மீட்டுவதற்கு உதவும் படைகளையும் திண்டுக்கல் கோட்டையில் இருந்து, பெற்றுக் கொள்ளுமாறு மைசூர் மன்னர்,

சிவகங்கை ராணிக்கு தெரிவித்தார்.[83] இந்த இனிப்பான செய்தியை பெறுவதற்குத் தானே இத்தனை காலமும் காத்திருந்தது!

விருப்பாட்சியில் இருந்து சிவகங்கை புறப்படுவதை திண்டுக்கல் கோட்டை கிலேதார் சையது சாகிபுக்கு ராணியார் தகவல் கொடுத்தார். குறிப்பிட்ட தேதியன்று குதிரைப்படை அணிகளை ஆயத்தம் செய்து வைக்குமாறு கேட்டுக் கொண்டார். சிவகங்கை மறவர் அணிகள் திரண்டு புறப்பட்டன. ராணி வேலுநாச்சியாரது மெய்க்காப்பாளரான மருது சேர்வைக்காரர் தலைமையில்,

"எழுந்தது சேனை, சுழலும்
திரிந்தது பாரின் முதுகு
விழுந்தன கானும் மலையும்
வெறுந்தரை ஆன நதிகள்"

ஆம்! அந்தப் படையின் சுமை பொறுக்க முடியாமல் நிலத்தின் முதுகு முறிந்தது. படைகளின் வேகத்தில் காடுகளும் மலைகளும் நிலை குலைந்தன என்று பரணி[84] பாடுவது போல இந்த விடுதலைப் படை இரை வேட்ட பெரும் புலி போல சின்ன மறவர் சீமை நோக்கி நடை போட்டது.

வேதனையும் சோதனையும் நிறைந்த எட்டு ஆண்டு வாழ்க்கை ஓடான விருபாட்சி, தம்மை மன்னர் மனைவி என்ற நிலையிலிருந்து மக்கள் தலைவியாக்கிய மகோன்னத தலம், வீடணனனுக்கு அடைக்கலம் அளித்த இராமேசுவரம் போன்ற அந்த விருபாட்சியை நீர் தளும்பிய கண்களுடன் சில நொடிகள் நோக்கினார் ராணி வேலு நாச்சியார், குதிரை மேலிருந்தவாறு!

அடுத்து பஞ்ச கல்யாணி போன்ற அந்தக் குதிரை தெற்கே, திண்டுக்கல் நோக்கி பறந்தது.



83. Correspondance on Permanent Settlement - 1799 to 1803. P: 33.
84. கலிங்கத்துப் பரணி பாடல். எண் 359.

# 6. மீண்டும் தன்னரசு நிலை

ராணி வேலு நாச்சியார் தமது படைகளுடன் மைசூர் மன்னரது உதவிப் படைகளுடனும் சிவகங்கை வருகின்ற செய்தியைக் கேட்ட மக்களது உள்ளங்களில் ஆர்வம் நிறைந்தது. ஆவேசம் மிகுந்தது. சிவகங்கை நகரின் மேற்கே மேலூர் சாலையில் அவர்கள் திரளாகக் கூடத் தொடங்கினர். சிவகெங்கை அரண்மனையிலும் பேட்டையிலும் பணியில் இருந்த நவாப்பின் சேவகர்களுக்கு இந்த செய்தி கிடைத்ததும் என்ன செய்வது என்று தெரியாமல் திகைத்தனர். ஒருவாறு தங்களை ஆயத்தம் செய்து கொண்டு ராணியாரது படைகளை எதிர்பார்த்து கோட்டை வாசலில் குழுமி இருந்தனர். திரளான மக்கள் கூட்டத்தை கலைந்து செல்லுமாறு உத்திரவு இட்டனர். ஆனால் மக்கள் அவர்களது ஆணைக்குச் செவி சாய்க்காமல், மேற்கே காணப்படும் சிறிய புழுதிக் கூட்டம் பெரிதாகி வருவதையே ஆவலுடன் நோக்கிக் கொண்டு இருந்தனர்.

இரண்டு நாழிகை நேரத்தில் பெரும் ஆரவாரத்துடன் ராணி வேலுநாச்சியார், குதிரை அணிகள் புடை சூழ சிவகெங்கை நகர் எல்லையை அடைந்தார். கட்டுக்கடங்காமல் பாய்ந்துவரும் காட்டாறு போல மக்களது மகிழ்ச்சி உச்ச நிலையை அடைந்தது. நவாப்பின் சிப்பாய்கள் மீது ராணியாரது அணிகள் பாய்ந்தன. ராணியாரது குதிரைப்படையும் அவர்களைத் தாக்க முனைந்தது. சிப்பாய்கள் அங்கும் மிங்கும் மிரண்டு ஓடினர். அரசியாரும், இளவரசியாரும் மக்களது வாழ்த் தொலிகளுக்கிடையில் சிவகெங்கை கோட்டைக்கு வந்துசேர்ந்தனர். ஏழு ஆண்டுகளுக்கு பிறகு அரண்மனைக்குள் நுழைந்த ராணி வேலுநாச்சியார் உணர்ச்சிவசப்பட்டு ஒருசில நொடிகள் அப்படியே நின்றார். தமது அன்புக்கணவருடன் ஆண்டு பலவற்றைக் கழித்த இடமல்லவா அது!

இந்த அழுத்தமான நினைவுத் திரட்டுகளினால் தானோ என்னவோ ராணி வேலுநாச்சியார், சிவகங்கை அரண்மனையில் தொடர்ந்து வாழாமல், அரண்மனை சிறுவயலில் உள்ள தமது மூதாதையரது மாளிகையில் பெரும்பாலும் வாழ்ந்து வந்தார் எனத் தெரிய வருகிறது.

ஆயுத பலத்தின் மூலம் மக்களை அடக்கி ஆளமுடியும் என்ற நவாப்பினது அரசியல் கொள்கைக்கு கிடைத்த மரண அடி இது. சிவகங்கைச் சீமையை ராணி வேலுநாச்சியார் மீட்டிய பொழுது மைசூர் மன்னர் ஹைதர் அலி, நவாப்பையும் பரங்கியரையும் அழித்து ஒழிக்கும் திட்டத்தை அமல்படுத்தும் நிலையில் இருந்ததால் சிவகங்கை அரசை வேறு வழியில்லாமல் அங்கீகாரம் செய்தார். வீரத்தியாகி முத்துவடுகநாதர் நினைவுகள் அவரது நெஞ்சத்தை அழுத்தின. என்றாலும் மக்களது ஆரவாரம் சிவகெங்கை சீமைக்கு ஆற்ற வேண்டிய கடமைகளை அவருக்கு நினைவூட்டியது. மிகவும் எளிமையான விழாவில் தனது மகள் இளவரசி வெள்ளைச்சியை சிவகங்கை அரசின் அரியணையில் அமரச் செய்து, முடிசூட்டியதுடன் பிரதானி தாண்டவராய பிள்ளையின் மறைவுக்கு பின்னர் அரசியாரையும், இளவரசியையும் அக்கரையுடன் காத்து உதவி வந்த பணியாளர்களான மருது சகோதரர்களை சீமையின் பிரதானிகளாக நியமனம் செய்து அறிவிப்பு செய்தார்.[85] ஸ்ரீரங்க பட்டினத்திற்கும், திண்டுக்கல்லுக்கும் ஓலைகள் அனுப்பி வைத்தார். காலத்தால் செய்த நன்றிக்கு காலமெல்லாம் சிவகங்கைச் சீமை மக்களும் மைசூர் ஐதர் அலிக்கு நன்றிக்கடப்பாடு உடையவராக இருப்பர் என்பதை அதில் தெரிவித்து இருந்தார். பக்கத்து நாட்டு தொண்டமான் பகைமையுடன் நடந்து கொள்ளும் பொழுது, பல நூறு மைல் தொலைவில் உள்ள கன்னட நாட்டு மன்னர் ஐதர் அலி எவ்வளவு பெரிய உதவியை செய்துள்ளார்! எண்ணிப் பார்க்கவே அவரால் இயலவில்லை!

நாட்கள் மெதுவாக நழுவிக் கொண்டிருந்தன. சிவகங்கை சீமையில் மீண்டும் இயல்பு வாழ்க்கை ஏற்பட்டது. மக்கள் அச்சமும் தயக்கமும் இன்றி தங்களது தொழில்களைத் தொடர்ந்தனர். திருநெல்வேலிச் சீமையில் இருந்து துணிமணிகளும் மதுரையில் இருந்து தட்டு முட்டு சாமான்களும், தஞ்சையில் இருந்து நெல் முதலான தானியங்களும் கொண்டு வரப்பட்டு சிவகங்கை பேட்டையில் நிறைந்து இருந்தன. காளைநாதர் கோயிலிலும், திருக்கோலக்குடியிலும் நிகழ்ந்த வசந்த விழாக்களில் மக்கள் பெரும் திரளாக கூடினர். சிராவயலிலும், அரளிப் பாறையிலும் மஞ்சு விரட்டு விழாக்களில் காளைகளை அடக்க இளைஞர்கள் கூட்டம் முனைப்புடன் முன் வந்தனர். சீதளியிலும் சேவல் பட்டியிலும் நடைபெற்ற பூச்சொரிதல் விழாக்களில் பூவையர் பூத்தட்டுகளை தாங்கி பொலிவுடன் சென்றனர்.

---

85. Correspondence on the permanent settlement of Southern pottams and Ramnad and Sivagangai Zamindaris. P: 28

இளவரசி வெள்ளைச்சியின் பிரதிநிதியாக ராணி வேலுநாச்சியார் ஆட்சியாளராக அமைந்து இருந்த பொழுதிலும், சீமையின் நிர்வாக இயக்கத்திற்கு பிரதானிகள் உதவி வந்தனர். இளவரசி வெள்ளைச்சி திருமணம் ஆகாத கன்னிகையாகவும், ராணி வேலு நாச்சியார் கணவரை இழந்த கைம்பெண்ணாகவும் இருந்த காரணத்தினால் அவர்கள் இருவரும் அரசியல் நடவடிக்கைகள் தொடர்பான அனைத்துப் பணிகளிலும் நேரடியாக ஈடுபட இயலாத நிலை. அத்துடன் அன்றைய சமுதாய அமைப்பில், இத்தகைய உயர்குலப் பெண்கள், தங்களது தனிமை நிலையைத் தவிர்த்து பொது வாழ்க்கையில் முழுமையாக ஈடுபடுவது விரும்பத் தகாததாகவும் இருந்தது. பெண் உரிமை என்ற விழிப்புணர்வுடன் பாரம்பரியமாக வந்த மரபுகள் மீறுவதையும் ஏற்று சகித்துக் கொள்ளாத சமூக நிலை. இத்தகைய இறுக்கமான அகச்சூழலில் அரசியலை பிரதானிகள் மூலமாக அரசியார் சிறப்பாக நடத்தி வந்து இருப்பது அருமையிலும் அருமை.

இயல்பான சிந்தனைகளுக்கு எதிரான புரட்சிகரமான செயல்பாடுகளையும் போக்கினையும் சின்னமருது சேர்வைக்காரர் கொண்டிருந்தார். மக்களது பாராட்டுதலுக்கு உரிய செயல்பாடுகள் அனைத்தையுமே, ராணி வேலுநாச்சியார் ஒப்புதல் வழங்க வேண்டுமென அவர் எதிர்பார்த்தார். குறிப்பாக பக்கத்து நாடுகளான புதுக்கோட்டை தொண்டமான், இராமநாதபுரம் சேதுபதி மன்னர் ஆகியோரது அரசியல் தொடர்பை பாதிக்கும் எல்லை தகராறுகளை ராணியார் விரும்பவில்லை. சின்ன மருது சேர்வைக்காரரோ அவைகளை மானப் பிரச்சனையாக மனதில் கொண்டு, நான்கு வகையான உபாயங்களில் இறுதியான தண்டத்தை பயன்படுத்த முயன்றார். இந்த கொள்கை வேறுபாடுகளினால் நிர்வாக இயக்கத்தில் ராணியாருக்கும் பிரதானிக்கும் கருத்து வேறுபாடுகள் எழுந்தன.

விரைவில் அது வளர்ந்து ஒன்றுபட்டு பரம்பரை ராஜ விசுவாசம், பகட்டான செயல் திறன் இவைகளை பற்றி நிற்கும் மக்கள் அனைவருக்கும், ராணியாரது விசுவாசமும், பிரதானிகள் சேவையும் வேண்டும்! ஆனால் மக்களது மன நிலை மாற்றம் பெறாமல் இருந்தால் தானே! நாளடைவில் அவர்கள் இரு பகுதிகளாகப் பிரிந்து, ஒரு பிரிவினர் ராணியாரையும் இன்னொரு பிரிவினர் பிரதானியாரையும் சார்ந்து இருந்தனர். இத்தகைய நிலையில் தான், மருது சகோதரர்களை மட்டும் குறுகிய வட்டத்தில் நின்று போற்றுகின்ற பிரிவினர், கற்பனைச் சரடு ஒன்றினைத் திரித்து உலாவ விட்டனர். விதவை ராணி வேலு நாச்சியாரும், பிரதானி பெரிய மருதுவும் திருமணம் செய்து கொண்டனர் என்பது. ராணி வேலு நாச்சியாரின் திருமணம் மூலம் சிவகங்கை சீமை மருது சேர்வைக்காரர்களது சொந்த சொத்தாகி விட்டது என்பதுபோல, தெரிவித்துக்கொள்ள இந்த கற்பனை புனையப்பட்டது. அத்துடன்

ராணியாரது ஒப்புதல் இல்லாமல் பிரதானிகள் செய்தவை அனைத்தையும் நியாயப்படுத்த வேண்டும் என்ற நோக்கமும் அந்தக் கட்டுக்கதையில் ஒட்டி இருந்தது. நாட்டுத் தலைவர்கள் நல்ல காரியங்களைச் செய்தார்கள் என்று கூறுவது, அந்தத் தலைவர்களுக்கு பெருமையும், புகழையும் சேர்ப்பது ஆகும். இழிந்த செயல்களை இயற்றினார்கள் என்றால் பழியும் பாதகமும்தான் அவர்களுக்கு ஏற்படும். இந்த உண்மைகளை உணராமல் இந்தக் கற்பனைத் திருமணம் எத்தகைய இழிவானது என்பதை சரித்திர புரட்டர்கள் சிந்திக்கவே இல்லை.

அன்று மட்டுமல்ல. இன்றும் ஒரு நூலாசிரியர், நூலாசிரியர்களுக்கு உள்ள பொறுப்புக்களையெல்லாம் புறக்கணித்துவிட்டு, தமது அழுகிய கற்பனையில் கண்ட கனவுக் காட்சியாக, மொட்டைத் தலையுடன் முழங்காலை முடிச்சிடும் பணியைச் செய்துள்ளார். கைம்மை நிலையில் அந்தபுரத்திற்குள் இருந்த கற்புக்கரசி வேலு நாச்சியாருக்கும், ஐந்து மனைவிகளும் எட்டுக் குழந்தைகளும் கொண்ட குடும்பத் தலைவரும், அரிய ராஜ விசுவாசம் கொண்டவருமான பெரிய மருது சேர்வைக்காரருக்கும், புதுமையான திருமணம் ஒன்றைச் செய்து வைத்து அல்ல - எழுதிப் பார்த்து மகிழ்ச்சியுற்று இருக்கிறார், எவ்வித ஆதாரமும் இன்றி.[86]

இந்த திருமணம் உடல் இன்பத்துக்கான திருமணம் அல்லவென்றும் அற்புத ராஜதந்திரத்துடன் கூடிய அரசியல் திருமணம் என்றும் அவர் குறிப்பிட்டு இருப்பது நகைப்புக்குரியது. இந்தப் பெரும் பழியை நேரடியாகச் சுமத்துவதற்குப் பயந்து அந்த ஆசிரியர் மதுரைச் சீமை வரலாற்று ஆசிரியரது ''பூடகமான'' ஆங்கிலச் சொல்லையும், அந்தச் சொல்லுக்கு, அவருடைய கற்பனைக்கு ஏற்ற பொருள் விரித்து ஆங்கில அகராதிகளையும் துணைக்கு கொண்டிருப்பது பரிதாபத்துக்குரியதாக உள்ளது.

## ராணி வேலுநாச்சியாரது கவலை

காளையார் கோவில் போரின் முடிவில் தந்தையை இழந்து தாயார் வேலு நாச்சியாருடன் விருபாட்சி கோட்டைக்குச் சிறுமியாகச் சென்ற வெள்ளச்சி அழகும் பருவமும் ஒருங்கே திரண்ட இளவரசியாக சிவகங்கை வந்தாள். தியாகியான மன்னர் முத்து வடுகநாதத் தேவரது சிவகங்கை சீமை அரியணையில் அமர்த்தப்பட்டு அவளுக்கு முடிசூட்டு விழா நடைபெற்றது அல்லவா? இந்த அரிய காட்சியைக் கண்டுகளித்த அவளது தாயார் ராணி வேலுநாச்சியாரது இதயம் மகிழ்ச்சியால் பூரித்தது.

---

86. மருது பாண்டிய மன்னர்கள் (1994) பக்; 124-125

அதே நேரத்தில் தனது பெண்ணுக்கு ஏற்ற கணவனைத் தேடிப்பிடித்து திருமணம் செய்து வைக்க வேண்டும் என்ற கவலையும் அவரைப் பற்றிக் கொண்டது.

நாட்கள் நழுவிச் சென்றன. இளவரசியின் பிரதிநிதியாக சீமை நிர்வாகத்தை ராணி வேலு நாச்சியார் கவனித்து வந்தார். இந்த அரசியல் பாரத்தைவிட அவருக்கு தனது பெண்ணின் திருமணம் பற்றிய கவலையே மிகுதியான அழுத்தத்தை ஏற்படுத்தி வந்தது. பெண்ணைப் பெற்ற எல்லா தாய்மார்களுக்கும் ஏற்படும் இயல்பான கவலைதான். ஆனால் ராணிநாச்சியாருக்கு தனது மகளின் திருமணத்தை தாயும் தந்தையுமாகவல்லவா இருந்து நடத்த வேண்டிய பொறுப்பு இருக்கிறது.

எங்கே மாப்பிள்ளை தேடுவது? பக்கத்தில் உள்ள மாப்பிள்ளை படைமாத்தூர் கௌரிவல்லபர். பையன் நல்ல மாதிரி. ஆனால் படைமாத்தூரில் அவருக்கு சொத்துக்கள் குறைவு. உறவினர்களில் விசேஷமான பெரியவர்களும் இல்லை. மன்னர் முத்து வடுகநாதர் கூட ஒருமுறை - காளையார் கோவில் போருக்கு முன்னர் படை மாத்தூரில் சம்மந்தம் ஏற்படுத்திக் கொள்ளலாம் என கருத்து தெரிவித்தார். அதுமுதல் சிறுவனாக இருந்த கௌரி வல்லபன், சிவகங்கை அரண்மனைக்கு அழைத்து வரப்பட்டு, பராமரிக்கப்பட்டு வந்தான். காரணம் பாட்டனார் நாலு கோட்டை பெரிய உடையாத் தேவர் கிளையில் சரியான பையன்கள் வேறு யாரும் இல்லை. அதே போல் அவரது சிறிய தாயார் உடைகுளம் பூதக்காள் கிளையிலும் சம்பந்தத்திற்கு தகுதியானவர்கள் இல்லை. தாயார் இராமநாதபுரம் அகிலாண்ட ஈசுவரி வழியில் இராமநாதபுரம் மன்னர் முத்துராமலிங்க சேதுபதிதான் உள்ளார். ஏற்கனவே விட்டுப்போன பெரிய மறவர் மூலம் உறவுகளைப் புதுப்பித்துக் கொள்ளலாம் தான்! ஆனால் அவருக்கு அண்மையில் திருமணமாகிவிட்டது. நமது செம்பி நாட்டுக் கிளை மறவர்கள் பலதாரமணம் செய்து கொள்வதில் சமூகத்தடைகள் இல்லைதான். சிவகங்கை - இராமநாதபுரம் இரு அரசுகளின் சம்பந்தமும் பொருத்தமாக இருக்கும். என்றாலும்... தமக்கு இருப்பது கருவேப்பிலைக் கன்று போல ஒரே பெண் பிள்ளை. அவளை எப்படி இரண்டாம் தாரமாக இராமநாதபுரம் மன்னருக்கு திருமணம் செய்து வைப்பது? அது சரியாக இருக்குமா? தனது மகள் மன்னரது மனைவி - மகாராணி - ஆனால்...?

இப்படி குழப்பமான சிந்தனைகளில் வேலுநாச்சியாரது பொழுது கழிந்து கொண்டிருந்தது. இறுதியாக ராணியார் மூன்று ஆண்டுகளுக்குப் பின்னர் ஒரு முடிவிற்கு வந்தார். இளவரசி வெள்ளச்சியை படைமாத்தூர் கௌரிவல்லபத் தேவருக்கு திருமணம் செய்து கொடுப்பது. அதற்கு முன்னால் சிவகங்கை மக்களும் அரண்மனை உறவினர்களும் சிவகங்கை மன்னரது வாரிசு கௌரிவல்லபத் தேவர் என்பதை உணர்ந்து கொள்ளும் வகையில் அவரை அரசு விழா ஒன்றில் அறிமுகப்படுத்தி வைப்பது

என்பது ராணியார் முடிவு. அதனையொட்டி காளையார் கோவிலில் படைமாத்தூர் கௌரிவல்லப ஒய்யாத் தேவருக்கு இளவரசு பட்டம் சூட்டப்பட்டது. அனேகமாக நாட்டுத் தலைவர்கள் அனைவரும் அங்கு வந்து சேர்ந்தனர். சிறப்பான வழிபாடுகள் முடிந்தவுடன் கோயில் மண்டபத்தில் இடப்பட்டிருந்த இருக்கையில் இளவரசர் கௌரி வல்லபரை இருக்கச் செய்து பிரதானிகளும் நாட்டுத் தலைவர்களும் மரியாதை செலுத்தி இளவரசரை வணங்கினர்.[87]

சில மாதங்கள் சென்றன. சிவகங்கைப் பிரதானிகளுக்கு இளவரசர் கௌரி வல்லபரை பிடிக்கவில்லை. இதற்கான காரணங்களைத் தெரிவிக்கும் ஆதாரம் எதுவும் கிடைக்கவில்லை. கள ஆய்வின் பொழுது கிடைத்த ஒரே செய்தி, பிரதானி மருது சேர்வைக்காரர்களது மக்கள் படைமாத்தூர் கௌரி வல்லபத் தேவரது அனுமதி இல்லாமலும், அவரை அழைத்துச் செல்லாமலும் படைமாத்தூர் காட்டில் அவர்கள் வேட்டையாடியதையொட்டி எழுந்த விரோத மனப்பான்மையே அவர்களது விரோதப் போக்கிற்குக் காரணம் எனத் தெரிய வருகிறது. பிந்தைய நிகழ்வுகளுக்கு இதுவே சரியான காரணமாக அமைதல் வேண்டும்.

ஆனால், செல்வ ரகுநாதன் கோட்டை ஆவணங்கள் வேறு விதமான செய்திகளைச் சொல்லுகின்றன.[88] நாலுகோட்டை பெரிய உடையாத் தேவரது மூன்றாவது மனைவி கோவானூர் நாச்சியார் மூலம் பிறந்த பூவுலகுத் தேவர் அரண்மனை யானை ஒன்றின் மீது அமர்ந்து சிவகங்கையில் இருந்து நாலு கோட்டைக்குத் திரும்பிக் கொண்டு இருந்தார். ஏற்கனவே பூவுலகுத் தேவர் மீது பொறாமையும் குரோதமும் கொண்டிருந்த சிவகங்கை அரண்மனைப் பணியாளர் அடைப்பம் வெள்ளைக்காலுடையார், இந்தக் காட்சியைக் காணச் சகிக்காதவராக ஆத்திரமடைந்து, நாட்டுத் துப்பாக்கியால் குறிபார்த்து பூவுலகுத் தேவரைச் சுட்டுக் கொன்று விட்டார். அப்பொழுது சிவகங்கை மன்னரும் பூவுலகுத் தேவரது ஒன்றுவிட்ட தமையனாருமான சசிவர்ணப் பெரிய உடையாத் தேவர், உடல் நலிவுற்று இருந்தார். தம்பி பூவுலகுத் தேவரின் படுகொலை பற்றி உரிய நடவடிக்கை எடுப்பதில் தாமதமாகி விட்டது.

நாலுகோட்டைப் பாளையக்காரரது பங்காளியும், படைமாத்தூர் பாளையக்காரருமான ஒய்யத் தேவர், நாலுகோட்டைப் பாளையத்தின் முதல் பாளையக்காரர் பெரிய உடையாத்தேவரது சகோதரர் மதியார் அழகத் தேவர். படை மாத்தூர் பாளையத்தின் தலைவர். இவரது மகன் ஒய்யாத் தேவர் பூவுலகுத் தேவரது படுகொலையைச் சகித்துக் கொள்ள

87. Military Consultations - Vol. 285/28.6.1801. P: 38-39
88. செல்வரகுநாதன் கோட்டை ஆவணங்கள், சென்னை.

இயலாதவராக, நாலுகோட்டை பாளையக்காரர் குடும்பத்துக்கு ஏற்பட்ட பெருத்த அவமானமாகக் கருதி, துடிதுடித்தார். உடனடியாகத் தமது ஏவலர்களை அனுப்பி அடைப்பம் வெள்ளைக்காலுடையாரைப் பிடித்து வருமாறு செய்தார். அவரைக் கொடுமைப்படுத்திக் கொன்றார். பெரும்பாலும் இந்த நிகழ்வுகள் சசிவர்ணத் தேவரது ஆட்சிக் காலத்தின் இறுதியில் நிகழ்ந்து இருக்க வேண்டும். வெள்ளைக்காலுடையாரது மக்கள்தான் மருது சகோதரர்கள் என்பதை,

''அடப்ப பிடி வெள்ளைக்காலுடையா ரீன்ற
அண்ணன் தம்பி யிருமருதும்...''

என்ற ''சிவகங்கைச் சீமை கும்மி'' தொடர்கள் (பக்கம் 10) உறுதி செய்கின்றன. படைமாத்தூர் ஒய்யத் தேவரது இரண்டாவது மகன் கௌரி வல்லபத் தேவரின் பிரதானி மருது சேர்வைக்காரர்களுக்கும் கௌரி வல்லபத் தேவருக்கும் இடையில் பகைமை நிலவியதற்கு இந்தப் பாரம்பரிய பழிவாங்கும் பகைமை உணர்வு ஒன்றே போதுமான காரணம் தான்.

நாளடைவில் ராணி வேலுநாச்சியார் தமது மகளை படைமாத்தூர் கௌரி வல்லபருக்கு திருமணம் செய்து கொடுப்பது பற்றி பிரதானிகளுடன் ஆலோசனை கலந்த பொழுது, பிரதானிகள் இருவரும் இந்த சம்பந்தத்தை ஆட்சேபித்தனர். சிவகங்கைச் சீமை மன்னரது மருமகனாவதற்கு முற்றிலும் தகுதி இல்லாதவர். முரட்டுத் தனமும், அரச குடும்பத்திற்குரிய மனோபாவமும் அற்றவர் கௌரி வல்லபர் என்பது பிரதானிகளது முடிவு. மறுப்பு. தமது மகளது திருமணத்திற்கு இப்படியொரு ஆட்சேபணை வரக்கூடும் என்பதை ராணி வேலுநாச்சியார் சிறிதும் எதிர்பார்க்கவில்லை... பிரதானிகளது ஒத்துழைப்பு இல்லாமல் இந்த திருமணத்தை எப்படி முடிப்பது...? மிகுந்த மன வேதனையால் ராணி தத்தளித்தார்.

சில மாதங்கள் சென்றன. ஒரு நாள் கௌரி வல்லப தேவர் பிரதானிகளால் காளையார் கோவிலில் சிறை வைக்கப்பட்டுள்ளார் என்ற செய்தி ராணியாருக்கு கிடைத்தது. இது பற்றி பிரதானிகளிடம் கேட்டபொழுது, கௌரி வல்லபர் சிறையில் வைக்கப்படவில்லை என்றும், சிவகங்கைச் சீமையைக் கைப்பற்றி மீண்டும் சிவகங்கை இராமநாதபுரம் கொண்ட - ஒருமுகப்படுத்தப்பட்ட, சேது நாட்டை அமைக்க முயலும் இராமநாதபுரம் முத்துராமலிங்க சேதுபதி மன்னருடன் கௌரி வல்லபர் ஓலைத் தொடர்பு கொண்டு இருப்பதாகவும், இது சம்பந்தமான விசாரணைக்காக அவரை காளையார் கோவிலில் தனிமைப்படுத்தி வைத்து இருப்பதாக தெரிவித்து ராணியாரது குற்றச்சாட்டை மழுப்பி விட்டனர். கௌரி வல்லபர் பிரதானிகளுக்கிடையில் ஏற்பட்ட இந்தப் பகைமைக்குரிய காரணம் என்ன என்பது அறியத் தக்கதான ஆவணம்

எதுவும் கிடைக்கவில்லை.

வெள்ளச்சி நாச்சியாரது திருமணம் பற்றி மீண்டும் ராணியார் பிரதானிகளிடம் குறிப்பிட்ட பொழுது, தக்க மாப்பிள்ளை ஒருவரை அவர்கள் தேடி வருவதாகவும் விரைவில் ராணியாருக்கு முடிவான தகவல் அளிப்பதாகவும் தெரிவித்தனர். ராணியார் மேலும் கவலைப்பட்டார். ஆனால், அவரால் பிரதானிகளை மீறி எதுவும் செய்ய முடியவில்லை.

சில நாட்களுக்குப் பிறகு, சிவகங்கைச் சீமையின் நிலக்கிழார்களில் ஒருவரான சக்கந்தி தேவரது மகன் வேங்கன் பெரிய உடையாத் தேவர், இளவரசிக்கு ஏற்ற மாப்பிள்ளையென்றும், படை மாத்தூர் போன்று நாலு கோட்டைக் குடும்பத்துடன் நெருங்கிய உறவு கொண்டவர் இல்லையென்றாலும், செம்பிநாட்டுக் கிளையைச் சேர்ந்த மறவர் என்பதையும் தெரிவித்தனர். மேலும் தாமதப்படுத்துவதினால் எந்த மாற்றமும் ஏற்படும் சூழ்நிலை இல்லை என்பதை அரசியார் உணர்ந்தார். சக்கந்தி சம்பந்தத்திற்கு ஒப்புதல் அளித்தார். அவருக்கு மிகப் பெரிய கவலையளித்து வந்த இளவரசியார் திருமணம் சக்கந்தி வேங்கன் பெரிய உடையாத் தேவருடன் நிகழ்த்தப்பட்டது.[69]

திருமணம் என்று குறிப்பிட்டாலே இரு தரப்பில் யாராவது ஒரு தரப்பினருக்கு உள்ளக் குமுறல்கள் இருப்பது இயல்பு. இந்தத் திருமணம் ராணி வேலு நாச்சியாரது மனக் கவலையின் ஒரு பகுதிக்கு தீர்வாக அமைந்தாலும், அவர் விரும்பியபடி படை மாத்தூராருடன் சம்பந்தம் வைத்துக்கொள்ள இயலவில்லை! இது போல இன்னும் அவரது எண்ணங்களுக்கு எதிராக என்னவெல்லாம் நடக்குமோ என்பது ராணியாருக்கு ஏற்பட்ட கவலை. அடுத்தடுத்து நடந்த நிகழ்வுகள் அதனை உறுதிப்படுத்தின.



---

69. கமால் Dr. S.M. - மாவீரன் மருதுபாண்டியர் (1989) பக்: 12

# 7. மருது சேர்வைக்காரர்கள்

முக்குலத்தோரின் ஒரு பிரிவினர் அகம்படியர் எனப்படுபவர்கள். தமிழகத்தின் தென் மாவட்டங்களிலும் சோழநாடு, கொங்கு நாடு ஆகிய பகுதிகளிலும் இந்த மக்கள் தொகுதியினர் வாழ்ந்து வந்தனர். ஆனால், இவர்கள் மிகுதியாக இராமநாதபுரம், சிவகங்கைச் சீமை மன்னர்களது பணியில் இருந்து வந்துள்ளனர். ஆதலால் இவர்கள் தங்களை செம்பிநாட்டு மறவர்கள் என்று சொல்லிக் கொண்டனர் என ஆசிரியர் தர்ஸ்டன் குறிப்பிட்டுள்ளார். மேலும், இறந்து போன மன்னரது சடலத்தை தீர்த்தம் கொண்டு குளிப்பாட்டுதலும், இறந்தவரின் வாரிசு போல இடுகாட்டிற்கு தீச்சட்டி எடுத்துச் செல்லும் உரிமையும் உடையவர்களாகவும் இவர்கள் இருந்தனர். [90] குற்றேவல் முதல் படைக்கலம் தாங்குதல் வரையிலான பல அலுவல்களை, பணிகளை, சேவைகளைச் செய்து வந்த காரணத்தினால் இந்த மக்களது பெயரில் ''சேர்வை'' என்று சிறப்பு விகுதியும் சேர்ந்து கொண்டது. இந்த மக்களில் பொருளாதார நிலையில் உயர்ந்தவர்கள் ''பிள்ளை''ப் பட்டமும் பெற்று இருந்தனர். இதற்கு எடுத்துக் காட்டாக புதுச்சேரி துபாஷும் வள்ளலுமான ஆனந்த ரங்க பிள்ளையையும், சிவகங்கைப் பிரதானி தாண்டவராய பிள்ளையையும் பாதிரியார் பெளச்சி வரைந்துள்ளார்.[91] கள்ளர், மறவர், அகம்படியர், மெல்ல மெல்ல வெள்ளாளர் ஆயினர் என்ற ஆன்றோர் வழக்கும் அதை உறுதி செய்கிறது. ஆனால், பதினொன்று, பன்னிரண்டாம் நூற்றாண்டுக் கல்வெட்டுக்களில் இவர்கள் ''அகம்படி முதலி'' என்றே குறிப்பிடப்பட்டுள்ளனர்.[92]

---

90. Edgar Thurston - Castes and Tribes of South India (1909) Vol. V
91. Unpublished Manuscripts of Fr. Bouchi of Madurai - Ramnad Diocese.
92. Rangacharya.K. - Topographical Inscriptions in Madras presidency (1919) vol. III P:1743



மருதுபாண்டிய சகோதரர்கள் ராணி வேலு நாச்சியாருடன் அமைந்த சிற்பம்

இராமநாதபுரம் சீமை முக்குளத்தில் பழனியப்ப சேர்வை என்பவருக்கு பிறந்த வெள்ளை மருது, கறுத்த மருது என்று ஆண் மக்கள், பின்னர் பெரிய மருது, சின்ன மருது, என்ற பெயர்களில் சிவகங்கை மன்னர் முத்து வடுகநாதரது அந்தரங்கப் பணியாளர்களாகப் பணியாற்றினர். சிவகங்கை சரித்திரக் கும்மியும், அம்மானையும் இந்த சகோதரர்களின் தந்தையை அடப்பம் வெள்ளைக்காலுடையார் என்று குறிப்பிட்டுள்ளன. செல்வ ரகுநாதன்கோட்டை ஆவணங்களிலும், வெள்ளையக்காலுடையார், சசிவர்ணத் தேவரது அடைப்ப பணியில் இருந்ததைத் தெரிவிக்கிறது. இந்த உடன் பிறப்புகளின் பாட்டியும் மன்னர் சசிவர்ணத் தேவரது அரண்மனையில் பணியாற்றியதாக பௌச்சி பாதிரியாரது ஆய்வுரையில் காணப்படுகிறது. கி.பி.1781-ம் ஆண்டைச் சேர்ந்த சேதுபதி மன்னரது அனுமந்தக்குடி ஓலைச்சாசனம் ஒன்றில் சாட்சிக் கையொப்பமிட்டுள்ளவர் ''வணங்காமுடி பளநியப்பன் சேர்வை'' என்பவர்.[93]

மருது சேர்வைக்காரர்களது தந்தை மொக்கைப் பழனியப்ப சேர்வைக்காரர் சேதுபதி மன்னரிடம் தளபதியாக இருந்து இருக்க வேண்டும் என பொருத்தமற்ற ஊகத்தைப் பற்றிக்கொண்டு மருது சேர்வைக்காரர்களது பாரம்பரியப் பெருமையை நிலைநாட்ட நூலாசிரியர் ஒருவர் முயன்று இருப்பது வியப்பாக உள்ளது. வரலாற்றுப் புகழ் பெற்ற இந்த சகோதரர்கள், தொடக்கத்தில் முத்து வடுகநாதரது அரண்மனைப் பணியாளர்களாக, வேட்டைக்குச் செல்லும்பொழுது, வேட்டை நாய் பிடித்துச் செல்பவர்களாகவும் அடைப்பக்காரர்களாகவும் இருந்தனர் என பல நூலாசிரியர்களால் குறிப்பிடப்பட்டுள்ள இந்த உண்மையை மறைப்பதற்கு, மன்னர் முத்துவடுக நாதர் ஆட்சிக்காலத்தில் இந்த மருது சகோதரர்கள் அரண்மனை சிறுவயல், உறுதிக்கோட்டை என்ற சிற்றூர்களின் ஜமீன்தார்களாக ஆக்கப்பட்டவர் என்றும், கி.பி.1780-ல் ஆற்காட்டு நவாப் ஆட்சியில் இருந்து மீட்கப்பட்ட சில நாட்களிலேயே சிவகங்கைச் சீமையை அவர்கள் ஆளும்படி ராணி வேலு நாச்சியார் விட்டுக் கொடுத்து விட்டார் என்றும் அவர் வரைந்துள்ளார்.[94] இந்த மாபெரும் சரித்திரப் புரட்டினை எழுதுவதற்கு அந்த ஆசிரியருக்கு ஆதாரமாக இருந்த வரலாற்றுச் சான்று எது என்பது தெரியவில்லை. எவ்வித ஆதாரமும் இல்லாமல் அவர் வரைந்துள்ள எத்தனையோ செய்திகளில் இதுவும் ஒன்று எனக் கொள்ள வேண்டியதாக உள்ளது. இதுவரை யாரும் சொல்லாத செய்திகளைச் சொல்லி ''சிறப்பு'' பெற வேண்டும் என்ற ஆசை போலும்.

---

93. வேதாச்சலம்.வெ - *கல்வெட்டு (தொல்பொருள் ஆய்வுத்துறை இதழ் 18)*
94. *மருதுபாண்டிய மன்னர்கள் (1994) பக்: 293*

தமிழகத்தில் மூவேந்தரும், பின்னர் பல்லவரும், மறைந்த பின்னர், குறுநில மன்னர்களாகவும், சிற்றரசர்களாகவும் வேளிர்களாகவும் வாழ்ந்த நிலக்கிழார்களை கிபி. 1378 - முதல் கி.பி.1736 வரை பாளையக்காரர்களாகவும், அவர்களது கைப்பற்றில் இருந்த சொந்த நிலப்பரப்பை பாளையங்களாகவும், விஜயநகர பிரதிநிதிகளும், மதுரை நாயக்க மன்னர்களும் அறிவித்து இருந்தனர். ஆற்காட்டு நவாப்புகளின் ஆட்சியிலும், அதே பாளையங்கள் அல்லது பாளையப்பட்டு முறைதான், கி.பி.1801 வரை தொடர்ந்தது. பதினெட்டாம் நூற்றாண்டில் சேதுபதி நாட்டிலும், சிவகங்கைச் சீமையிலும் பாதுகாப்பு நிலையில் ''பாளையங்கள்''தான் இருந்தன. ''ஜமீன்களும்'' ''ஜமீன்தாரி முறையும்'' அப்பொழுது இல்லை. இந்த வடமாநில அமைப்பு முறையை தமிழகத்தில் ஆங்கிலக் கிழக்கிந்திய கம்பெனியார் தான் பத்தொன்பதாவது நூற்றாண்டின் தொடக்கத்தில் புகுத்தினர். வரலாற்று நிலை இப்படி இருக்க, மன்னர் முத்து வடுகநாதர் அரண்மனை சிறுவயல், உறுதிக்கோட்டை ஜமீன்களை ஏற்படுத்தி அவைகளுக்கு மருது சகோதரர்களை ஜமீன்தாரர்களாக நியமனம் செய்தார் என்று உண்மைக்கு மாற்றமாக எழுதி இருப்பதை எப்படி நம்புவது?

இதனைப் போன்றே ராணிவேலுநாச்சியார் கி.பி.1780-இல் சிவகங்கைச் சீமையை மீட்ட சிலநாட்களில், பிரதானிகளான மருது சகோதரர்களிடம், சீமையை அளித்துவிட்டார் என்பதும், இதே சிவகங்கை நூலாசிரியரது சரடுகள் ஆகும். இந்த புரட்டுக்கள் எந்த அளவிற்கு உண்மைக்கு புறம்பானது என்பதை சிவகங்கை அரசியல் நிகழ்வுகள் தெளிவாக அறிவுறுத்துகின்றன. சிவகங்கைச் சீமையிலிருந்து பேஷ்குஷ் தொகை (ஆண்டுத் தொகை) ஆற்காட்டு நவாப்பிற்குச் செலுத்தப்படாத காரணத்தினால், தளபதி புல்லர்ட்டன் தலைமையில் கி.பி.1783-ல் கும்பெனியாரது படைப்பிரிவு ஒன்று சிவகங்கைக்கு அனுப்பப்பட்டது.[95] இந்தப் படை எடுப்பை முறியடிக்க பிரதானிகள், முதலில் திட்டமிட்டு காளையார் கோயில் பகுதியில் பத்தாயிரம் மறவர்களை திரட்டிய பொழுதும், பின்னர் தங்களது திட்டத்தை மாற்றிக்கொண்டு, தங்களது எஜமானிக்காக, பிரதானிகளே தளபதி புல்லர்ட்டனிடம் நாற்பதினாயிரம் ரூபாய் செலுத்தினர் என்பதை தமிழ்நாடு அரசு ஆவணக்காப்பக ஆவணங்கள் மட்டுமல்லாமல் அலெக்ஸாண்டர் நெல்சன், பேராசிரியர் ராஜையன் ஆகிய நூலாசிரியர்கள் தங்களது நூல்களில் குறிப்பிட்டுள்ளனர். கி.பி.1789-ல் கும்பெனித் தளபதி ஸ்டுவர்ட், ராணி வேலுநாச்சியாருக்கு எதிரான பிரதானிகளது கலகத்தையடக்கியதும்,[96] கி.பி. 1789 நவம்பரில் ஆற்காட்டு நவாப்பும், கும்பெனியாரது சென்னை கவர்னரும் மருது சகோதரர்களை சிவகங்கை சீமைப் பிரதானிகளாக

95. Williams Fullarton's report military Sundries. Vol. 66 (1784)
96. Military Consultations Vol. 130/16.6.1789. P: 1683

அங்கீகரித்ததும்[97] ராணி வேலு நாச்சியாரை பதவி விலகுமாறு செய்து சக்கந்தி வேங்கன் பெரிய உடையாத் தேவரை சிவகங்கை மன்னராக அங்கீகரித்ததும்[98] கி.பி. 1802 பிப்ரவரியில் அவர் நாடு கடத்தப்படும் வரை, வேங்கன் பெரிய உடையாத் தேவரே சிவகங்கை மன்னராக இருந்தார்.[99] என்பதும் வரலாற்று உண்மை.

இந்நிலையில், சிவகங்கை மாமன்னராக மருது சகோதரர்கள் கி.பி.1780 முதல் கி.பி. 1801 வரை தொடர்ந்து இருபத்து ஒரு வருடம் இருந்து வந்தனர் என்று வரைந்து இருப்பது எவ்வளவு பொருத்தமானது என்பது சிந்திக்கத்தக்கது. இந்தப் பெரிய பொய்யான சரித்திரப் புரட்டுக்களைப் புறக்கணித்துவிட்டு மீண்டும் சிவகங்கைச் சீமை வரலாற்றைத் தொடர்வோம்.

புதிய அரசு ஏற்பட்டு மூன்று ஆண்டுகள் நிறைவு பெறும் நிலை. நவாப்பிற்கு சிவகங்கை சீமையில் இருந்து அவரது மேலாண்மையை மதிக்கும் வகையில் செலுத்தப்பட வேண்டிய ''பேஷ்குஷ்'' தொகையில் ஒரு பணம் கூட சென்னைக்குச் செல்லவில்லை. நவாப் ஆலோசனை செய்தார். வழக்கம்போல் கும்பெனியாரிடம் படை உதவியை நாடினார். ஆனால் சிவகங்கை சீமைக்கு செல்லும் வழியில் உள்ள தஞ்சாவூர் சீமை முழுவதும் மைசூர் மன்னர் ஹைதர் அலியின் ஆக்கிரமிப்பில் அல்லவா உள்ளது? கும்பெனியார் நவாப்பிற்கு உதவ முடியாது காலங்கடத்தி வந்தனர். ஆனால் கி.பி. 1783-ல் திப்பு சுல்தானுடன் பரங்கியர் உடன்பாடு கண்டதால் மைசூர் படைகள் சோழநாட்டில் இருந்து திரும்பப்பெற்றன. இப்பொழுது கும்பெனியார் தளபதி புல்லர்டன் தலைமையில் சில படைப்பிரிவுகளை சிவகங்கைக்கு மேலூர் வழியாக அனுப்பி வைத்தனர்.

அந்தப் படையணிகள் 4.8.1783-ஆம் தேதியன்று சிவகங்கையை அடைந்தன. மேலூரில் இருந்து சிவகங்கைச் சீமை செல்ல வேண்டிய வழி விவரங்களை தஞ்சையில் இருந்த சுல்லிவனிடமிருந்து பெற்று வந்த தளபதி புல்லர்டன், தமது படைகளில் பெரும் பகுதியை மேலூரில் தங்கி இருக்குமாறு செய்துவிட்டு, அங்கிருந்து கிழக்கே இருபது கல் தொலைவில் உள்ள சிவகங்கைக்கு ஒரு சிறு அணியுடன் புறப்பட்டுச் சென்றார். இப்பொழுது அந்த தளபதியின் அறிக்கையைப் பார்ப்போம்.

> ''... தகவல் தெரிந்ததும், இரு மருதுகளும், இளைய ராஜாவை அழைத்துக் கொண்டு காளையார் கோவில் காட்டிற்குள் சென்று விட்டனர். அங்கு பதினாயிரம் பேர்களைத் திரட்டினர். எனது சொல்லை மதித்து ஊருக்கு திரும்பி வருமாறு தெரிவித்தேன்.

---

97. Rajayyan. Dr. K. - History of Madura (1974) P: 308
98. Military Consultations Vol. 155 / 24.1.1792. P: 474
99. Military Consultations 288 (A) 11.2.1802 / P: 887-888.

அத்துடன் பாக்கித் தொகையுடன் பக்கத்தில் உள்ள சர்க்கார் கிராமங்களைத் தாக்கி அழிமானம் செய்ததற்காக ரூ. 90,000/- உடனடியாகச் செலுத்த வேண்டும் எனக் கோரினேன். தவறினாலோ, இதனை நிறைவேற்றாவிட்டாலோ அவர்களது காட்டையும், கோட்டையையும் தாக்கி சீமையில் இருந்து அவர்களைத் துரத்துவேன் என்று தெளிவுபடுத்தினேன். இந்துக்களுக்கு உரிய உணர்வுடன் அவர்கள் நாற்பதாயிரம் ரூபாயை மட்டும் செலுத்தியதுடன் பாக்கி தொகைக்கு தக்க பொறுப்பு கொடுத்தனர்.''[100]

*இவ்விதம் தனக்கு ஏற்படவிருந்த ஒரு பயங்கரமான அழிமானத்தில் இருந்து சிவகங்கையின் புதிய அரசு தன்னை அப்பொழுது தற்காத்துக் கொண்டது.*

*ஆற்காட்டு நவாப்புடன் 2.12.1781 கும்பெனியார் செய்து கொண்ட உடன்பாட்டின் படி நவாப் செலுத்த வேண்டிய கடன் பாக்கிக்காக நவாப்பிற்கு வர வேண்டிய வருமானங்களை வசூலிக்கவும், அவற்றில் ஆறில் ஒரு பங்கை நவாப்பின் உபயோகத்திற்கு கொடுத்து விட்டு பாக்கித் தொகையை கடன் பாக்கியில் வரவு வைத்துக்கொள்ளக் கூடிய உரிமையை, கும்பெனியார் பெற்று இருந்தனர்.[101] இந்த பணிக்கென நியமனம் செய்யப்பட்டிருந்த கும்பெனியாரது குழுமம் குறுநில மன்னர்களிடமும் பாளையக்காரர்களிடமும் வசூல் பணியைத் தொடர்ந்தது. இந்தக் குழுமம் நவாப் பொறுப்பில் இருந்த திருப்புவனம் பகுதியை சிவகங்கைக்கு திருப்பிக் கொடுத்ததுடன், நவாப்பிற்கு செலுத்த வேண்டிய பேஷ்குஷ் தொகையின் அளவிலும் மாற்றம் செய்தது. இவைகளுக்கு பிறகும் சிவகங்கை சீமையில் இருந்து பேஷ்குஷ் தொகை ஏதும் வரவில்லை என்பதை அறிந்த நவாப் ஆத்திரம் அடைந்தார். சிவகங்கையை அடக்கி தொகையை பெறுவதற்கு கி.பி. 1786-இல் கும்பெனியாரது உதவியை நாடினார். ஆண்டுத் தொகையை வசூலிப்பதற்கு ஒவ்வொரு முறையும் ஆயுதப் படையை அனுப்புவது என்பது அபாயகரமானது என கும்பெனியார் நவாப்பிற்கு அறிவுறுத்தினர்.[101]*

*வேறு வழியில்லாமல் பொறுமையுடன் இருந்த நவாப்பிற்கு நல்லதொரு வாய்ப்புக் கிட்டியது. கி.பி. 1788-ல் ராணி வேலுநாச்சியாருக்கும் மருது சேர்வைக்காரர்களுக்கும் இடையில் பிணக்கு உச்ச நிலையை எட்டியது. சிவகங்கைக் குடிகள் ராணி வேலு நாச்சியாரது விசுவாசிகளாக ஒரு*

---

100. Report of General Fullarton Military Sundries. Vol.65 & 66. P: 48-49
101. Collection of Treaties. Vol.5. P: 181 (Tamilnadu Archives)
102. Military Country Correspondence. Vol. 35. P: 209-210

பிரிவினரும், பிரதானி சின்னமருது சேர்வைக்காரருக்கு விசுவாசிகளாக மற்றொரு பிரிவுமாக பிளவுபட்டு நின்று அப்பொழுதைக்கப்பொழுது கைகலப்பில் ஈடுபட்டு வந்தனர். இந்த பிணக்கு பெரிதாவதற்கு அடிப்படை காரணமாக இருந்தது சிவகங்கைப் பிரதானி சின்ன மருது சேர்வைக்காரர் ராணியின் அனுமதி இல்லாமல், ஒரு சிறு எல்லைத் தகராறில் சிவகங்கை படையணிகளை தொண்டமான் சீமைக்குள் அனுப்பி வைத்தது.[103] தொண்டமான் சீமையின் பெரும்பாலான மக்கள் கள்ளர் இனத்தவராக இருப்பதாலும், அவர்களுடன் பல வித தொடர்புகளை வைத்துள்ள சிவகங்கை சீமையின் கணிசமான எண்ணிக்கையிலான கள்ளர் இன மக்களது குரோதத்தை வளர்க்கும் செயலாக ராணியார் இதனைக் கருதினார்.

நாளுக்குநாள் இந்த கருத்து வேற்றுமை அரசியல் நலன்களுக்கு அப்பாற்பட்டதாக, தனிப்பட்ட செல்வாக்கினைக் கோடிட்டுக் காட்டும் ஊமைப் போராக உருவெடுத்தது. இதனை அறிந்து ஆற்காட்டு நவாப் ராணி வேலு நாச்சியாரை தொடர்பு கொண்டு உரிய தகவல்களைப் பெற்றார்.

நவாப் முகம்மது அலியின் கணிப்பில், சிவகங்கைப் பிரதானி சின்ன மருது சேர்வைக்காரர், சிவகங்கை அரசின் தலைமை, பெண்ணாக இருப்பதால், தமது அதிகார வரம்பை மீறிய முறையில் நடந்துள்ளார் என்பது. இந்தக் கருத்தினைப் பின்னர் கடித மூலமும் கும்பெனித் தலைமைக்கு தெரிவித்தார். என்றாலும் சிவகங்கைச் சீமையில் பெற வேண்டிய பேஷ்குஷ் தொகையினை உரிய தவணையில் பெறுவதற்கு என்ன செய்யலாம் என்பதையும் தீவிரமாகச் சிந்தித்து வந்தார்.

உடனே தனது பிரதிநிதி ஒருவரை ஆற்காடு நவாப் சிவகங்கைக்கு அனுப்பி ராணி வேலு நாச்சியாரது பாதுகாப்பை பலப்படுத்தவும் அவரது நிர்வாகத்திற்கு உதவுவதற்கு உரிய ஏற்பாடுகளை செய்யவும் ராணியாருடன் ஒரு உடன்பாடு கொண்டார்.[104] இதனை அறிந்த பிரதானிகள் ராணியாரது பரிவாரங்களுடன் மோதினர். முடிவு ராணியார் வேறு வழியின்றி கோட்டை வாசலை மூடிவிட்டு கோட்டைக்குள் பாதுகாப்பாக இருந்தார். இந்த தகவல் கிடைத்தவுடன் நவாப் கும்பெனி கவர்னரைத் தொடர்பு கொண்டார்.

*இதோ 10.2.1789-ல் நவாப் முகம்மது அலி சென்னைக் கோட்டையில் உள்ள கவர்னருக்கு அனுப்பிய கடிதம்:*[105]

---

103. Radhakrishnan Iyer - General History of Pudukottai State (1931) P: 281
104. Military Consultations. Vol. 129/26.5.1789. P: 1489
105. Military Consultations Vol. 128/10.3.1789/P.783-786

''அன்புள்ள நண்பரே!

சிவகங்கைச் சீமையில் வசூல் பணியில் ஈடுபட்டுள்ள மீர்குத்புதீன்கான் மற்றும் இதர ஊழியர்களிடமிருந்து எனக்கு தகவல் வந்துள்ளது. சின்ன மருது சுமார் பத்து முதல் பன்னீராயிரம் பேர்களுடன் சிவகங்கைக் கோட்டையைச் சூழ்ந்து இருக்கிறான். அங்கு பொறுப்பில் உள்ள குத்புதீன்கானைக் கொன்று கோட்டையைக் கைப்பற்ற வேண்டும் என்ற முயற்சியில் இந்தத் தகவல் வெளியில் செல்லாமல் தடுப்பதற்கு, சிவகங்கையில் இருந்து செல்லும் வழிகள் அனைத்தையும் மூடியுள்ளான். இந்த வழிகளில் செல்லும் சர்க்காரது அஞ்சல் சேவகர்களைக் கூட காயப்படுத்தி கொன்று போடும் நிலையில் இருக்கிறான்.

''மதுரை, இராமநாதபுரம், தொண்டமான் சீமைகளில் சில கிராமங்களைச் சூறையாடி, அங்கெல்லாம் அமைதியையும் இயல்பான வாழ்க்கையையும் சீரழித்துள்ளனர். கிளர்ச்சிகளைச் செய்து வருகின்றனர். இவரும், இவரது தமையன் பெரிய மருதுவும் முந்தைய சிவகங்கை மன்னரிடம் எடுபிடியாக, மன்னர் வேட்டைக்குச் செல்லும்பொழுது வேட்டை நாய்பிடித்துச் செல்பவர்களாக இருந்தவர்கள். பிறகு தனது எஜமானது சொத்துக்களைக் கொள்ளையிட்டதுடன், அந்தச் சீமையை நாம் கைப்பற்றிய பொழுது வத்தலக்குண்டுவிற்கு ஓட்டம் பிடித்தனர். நடந்து முடிந்த போரின் பொழுது மைசூரின் சுல்தான் ஹைதர் அலியுடன் திரும்பி வந்து, இராமநாதபுரம், மதுரை, நெல்லை, சிவகங்கைச் சீமைகளைக் கொள்ளையிடுவதற்காக அவர்கள் நியமிக்கப்பட்டார்கள்.

மதுரைக் கோட்டையைத் தாக்கி ஜமேதார்கள் முத்துராவையும் புஜங்கராவையும் கொன்றதுடன் இராமநாதபுரம் கோட்டையையும் தாக்கினர். கவர்னர் மக்கார்டினி நிர்வாகத்தின் பொழுது மிகவும் இழிவான முறையில் சிவகங்கைச் சீமை பேஷ்குஷ் தொகையினைத் தங்களது சொந்த காரியங்களுக்குப் பயன்படுத்தினர்... அடிக்கடி இந்த பாக்கித் தொகையைச் செலுத்தும்படி கேட்டும் அதனை செலுத்த மறுத்து வந்ததுடன் அந்த தொகையினைக் கொண்டு தங்களது நிலையினை உயர்த்திக் கொண்டு எனது கட்டளைகளையும் புறக்கணித்துவிட்டனர்.

இப்பொழுது, இராமநாதபுரம் சீமையில் பல ஊர்களைக் கொள்ளையிட்டுள்ளனர். குடிமக்களில் ஒருவரைக் கொன்று பலரைக் காயப்படுத்தி இருக்கின்றனர். இந்த அதீதமான கொடுமையினால் அந்தச் சீமை முழுவதும் கிளர்ச்சி' பரவியுள்ளது. தடுக்க இயலாத இந்த கொடுமைகளை சகித்துக் கொள்ள இயலாத நிலையில் மக்கள்

உள்ளனர். பெரிய உடையாத் தேவரையும் விசைய ரெகுநாத தேவரது மனைவியையும், மிகவும் கொடூரமான முறையில் சிறை வைத்து இருப்பதுடன் அவர்களுக்கு தேவையானவற்றைக் கூட கொடுக்காததால் அவர்கள் ஓடிவந்து சிவகங்கை கோட்டைக்குள் பாதுகாப்பிற்காக புகுந்து கொண்டுள்ளனர். அவர்களைத் தங்களிடம் ஒப்படைக்கும்படியும் தவறினால், அவர்களை வன்முறையில் விடுவித்துச் செல்வதாக பயமுறுத்தி இருக்கின்றனர்.

''இதனைப் போன்றே, முன்னர் ஒருமுறை மன்னரது உறவினர் ஒருவர், சின்ன மருதுவின் அடாவடிக்கு அஞ்சி மதுரைச் சீமைக்கு ஓடினார். ஆனால் சின்ன மருது அவரைப் பிடித்து வருமாறு செய்து அவரைக் கொன்று போட்டார். இப்பொழுது அதே சூழ்ச்சியை, அந்தப் பாளையக்காரர் மற்றும் அந்தப் பெண்மணி மீதும் கையாண்டுள்ளார். சின்ன மருதுவின் இந்த முரட்டுச் செயல்கள் சர்க்காரது தெற்கு மாவட்டங்களில் மிகுந்த குழப்பத்தையும், இடைஞ்சலையும், வரி வசூலில் எனக்கு இழப்பையும் ஏற்படுத்தி உள்ளது. இதனால் கும்பெனியாருக்குச் செலுத்தவேண்டிய தவணைத் தொகைக்கு நான் இரவும் பகலும் மிகவும் சிரமப்படுகிறேன்.

''ஆதலால், இரண்டு மூன்று படை அணிகளை அனுப்பி கட்டுக்கடங்காத அந்த மனிதனைத் தண்டித்து சிவகங்கைச் சீமை, அதன் முந்தைய இயல்பு நிலைக்கு கொண்டுவந்து சாந்தியையும் சமாதானத்தையும் ஏற்படுத்துமாறு கேட்டுக் கொள்கிறேன்.''

நவாப்பின் கடிதத்தில் கண்டுள்ள புகார்களைப் போன்று இராமநாதபுரம் சேதுபதி மன்னருடைய கடிதம் ஒன்றிலும் கும்பெனி கவர்னருக்கு தெரிவிக்கப்பட்டு இருந்தது. இராமநாதபுரம் சீமைப் பகுதிகளை சிவகங்கைப் பிரதானி தாக்கி இருப்பது, சேதுபதி மன்னரது உறவினர்களான சிவகங்கை மன்னரையும், ராணியாரையும் சிறையில் வைத்து இம்சிப்பது என்பவைகளைப் பிராதானமாக குறிப்பிட்டு, இத்தகைய கொடுமைகளைக் களைவதற்கு இராமநாதபுரம் மறப்படைகள், கும்பெனியாருக்கு உதவக் காத்து இருப்பதாகவும் சேதுபதி மன்னர் குறிப்பிட்டு இருந்தார்.[106] இந்தக் கடிதங்கள் தொடர்பாக, கும்பெனியாரும் நவாப் முகம்மது அலியும் தங்கள் படைகளைச் சிவகங்கைக்கு அனுப்ப ஆயத்தம் செய்தனர். நவாப்பின் பிரதிநிதிகளான மீர்முத்தபர்கான், ஹுசைன்கான் மற்றும் கர்னல் மார்டின், புதுக்கோட்டைத் தொண்டமான், இராமநாதபுரம் மறவர்கள் ஆகியோரது

106. Military Consultations Vol. 128/15.2.1789. P: 785-786

உதவிகளைப் பயன்படுத்திக் கொள்ளவும் முடிவு செய்யப்பட்டது.

கும்பெனித் தளபதி ஸ்டூவர்ட்டின் தலைமையில் படை அணிகள் 29.4.1789 தேதி திருப்பத்தூர் கோட்டையை அடைந்தன. புதுக்கோட்டையில் இருந்து வந்த தொண்டமானது மூவாயிரம் வீரர்களும் இந்த அணிகளுடன் இணைந்து கொண்டனர். 8.5.1789 தேதி சிவகங்கை வந்து சேர்ந்தது.[107] பின்னர் இராமநாதபுரத்தில் இருந்து தளபதி மார்டின் தலைமையில் உள்ள அணியும் இவர்களுடன் சிவகங்கையில் சேர்ந்து கொண்டது. ராணியைச் சந்தித்துப் பேசிய தளபதி ஸ்டூவர்ட், தமது அணிகளுடன் அங்கிருந்து முன்னேறியது. 13.5.1789-ம் தேதி கொல்லங் குடியைத் தாக்கியது. மிக நெருக்கமான காட்டு அரணையும் மண்சுவர்களையும் கொண்ட சிறிய ஊர் அது. அங்கு திரண்டு இருந்த மருது சேர்வைக்காரர்களது ஆதரவாளர்கள் துப்பாக்கிகளைப் பயன்படுத்திச் சண்டை இட்டனர். பயிற்சியும் மிகுந்த போர் அனுபவமும் மிக்க கும்பெனிப் படைகளின் தாக்குதலைச் சமாளிக்க இயலாமல் மருது சேர்வைக்காரர்கள் கிழக்கே மூன்று கல் தொலைவில் உள்ள ராம மண்டலம் காட்டுப் பகுதிக்குப் பின் வாங்கினர். நவாப்பின் அணியைச் சேர்ந்த தளபதி முத்தபர்கான் 14.5.1789-ல் நடைபெற்ற போரில் எதிரியின் குண்டுகளால் காயமுற்றார். பன்னிரண்டு பேர் உயிர் துறந்தனர். கொல்லங்குடி கோட்டை இப்பொழுது தளபதி ஸ்டூவர்ட்டின் கைவசம் வந்துவிட்டது.

கொல்லங்குடி கோட்டை பிடிப்பை ராணி வேலுநாச்சியாரது வெற்றியாகக் கருதிய இருபது நாட்டுத் தலைவர்கள் பிரதானிகளது அணியில் இருந்து விலகி ராணியிடம் சென்று வாழ்த்து தெரிவித்தனர். என்றாலும் இந்த நடவடிக்கைகள் ராணி வேலுநாச்சியாருக்கு முழுமையான ஆறுதலை அளிக்கவில்லையென்பதை அவர் 19.5.1789 தேதியன்று தளபதி ஸ்டூவர்டிற்கு வரைந்த மடல் தெரிவிக்கின்றது.[108] இதோ அந்த மடலின் மொழியாக்கம்:

''மன்னர் பெரிய உடையாத்தேவரது குடும்பத்தினர் தங்களது வணக்கத்தை தெரிவித்துக் கொள்கின்றனர்.

''தாங்களும் நவாப் முத்தபர்கானும் எம்மை சிவகங்கையில் சந்தித்தபொழுது, நீங்கள் இருவரும் எனது எதிரியை அடக்கி, எனது சீமையில் இருந்து துரத்தியடிக்கப் போவதாகத் தெரிவித்தீர்கள். இரண்டாவது நாள் இங்கிருந்து சென்று கொல்லங்குடியைக் கைப்பற்றியவுடன் இருபது கிராமங்களைச் சேர்ந்த நாட்டுத்

107. Military Consultations Vol. 129/7.6.1789. P: 1552-56
108. Military Consultations. vol. 129. P: 146-162 (Dated 19.5.1789)

தலைவர்கள், மருதுவின் அணியில் இருந்து விலகி என்னிடம் வந்தார்கள். அவர்களைச் சின்னையாவின் (வேங்கன் பெரிய உடையாத்தேவர்) முகாமிற்குச் செல்லுமாறும், சீமையில் குழப்பத்தை விளைவித்துக் கொண்டிருக்கும் மருதுவின் ஆட்களைத் தண்டிப்பதற்கு அவர்களைப் பிடித்துக் கொடுக்குமாறும் அவர்களுக்கு ஆணையிட்டேன். ஆனால், மீர்குத்புதீன்கான், அவர்களுக்கோ அவர்களைப் போன்று எதிரியின் முகாமில் இருந்து திரும்பி வருபவர்களுக்கோ, நாம் சேர்த்து கொள்வது பற்றி சரியான அறிவுரை வழங்கவில்லை. அதனால், அவர்கள் இந்தச் சீமையை நவாப் எடுத்துக் கொண்டு எங்களது குடும்பத்தின் பரம்பரை உரிமைகளைப் புறக்கணிக்கிறார் என்று அவர்கள் நினைக்கின்றனர். மீண்டும் அவர்கள் மருது அணிக்குச் சென்றுவிட விரும்புகின்றனர்.

''சிறிது காலத்திற்கு முன்னர், சர்க்காரிடத்தும் (ஆற்காட்டு நவாப்பிடத்தும்) என்னிடத்தும் முரண்பாடாக நடந்து கொண்டனர். இதனை நவாப்பிடம் தெரிவித்து இருந்தேன். இதன் காரணமாக, என்னைக் குத்புதீன் கானின் பொறுப்பில் இருத்தி வைத்து அவர் மூலம் சீமையின் முழு நிருவாகத்தையும் என்னிடம் ஒப்படைக்க ஆற்காட்டு நவாப் விரும்பினார். இதன் தொடர்பாக, நான் சிவகங்கைக்கு வந்து தங்கினேன். இது சம்பந்தமாக, நவாப் வழங்கியுள்ள பர்வானா (அரசு கட்டளை)யை ஆஜர்படுத்த சித்தமாக இருக்கிறேன்.

''தற்சமயம், இந்தச் சீமையின் ஒரு பகுதி மட்டும் சர்க்காரது நிர்வாகத்தில் இருந்து வருவது எனக்கு வருத்தத்தை அளிக்கிறது. சீமையில் கள்ளர்களது தொந்தரவு மிகுந்து விட்டது. நவாப்பும் கும்பெனியாரும், எனக்கு உதவியாக இருந்தனர். எனக்கு மரியாதை அளித்து நேர்மையுடன் நடந்து கொள்ளுமாறு மருது சேர்வைக்காரர்களை உறுதியுடன் அறிவுறுத்தினர். ஆனால் அவர்கள் எனக்கு ஏமாற்றத்தைத்தான் அளித்தனர். இப்பொழுது நான் நவாப்பின் கவுலை ஏற்று இருக்கிறேன். நீங்களும் நவாப்பும் சீமையைப் பொறுப்பேற்றுக் கொள்ள எனக்கு உதவ வேண்டும். குத்புதீன்கான் மூலமாக அவருக்கு மடல் அனுப்பி உள்ளேன். பேஷ்குஷ் தொகையையும் காணிக்கையையும் செலுத்துவதற்கும் அதற்கான பொறுப்பும் கொடுப்பதற்கு.

''இதனையே நீங்கள் நவாப் முத்தபர்கானிடம் பரிந்துரைத்து, சீமையின் நிர்வாகத்தை ஏற்றுக் கொள்ள சம்மதிக்கும்படி சொல்ல வேண்டியது. நான் நவாப்பின் கவுல் உத்திரவை ஏற்று இங்கு வந்துள்ளேன். அவர் நிர்வாகத்தை ஏற்றுள்ளார். அதனால் ஏற்படக்கூடிய புகழும் பழியும் அவரைச் சார்ந்தது. நான் நவாப்பின் குழந்தை. தங்களது முகாமில் உள்ள சின்னையா தேவையான விவரங்களைத் தங்களிடம் தெரிவிப்பார்.''

ராணி வேலுநாச்சியாரது கோரிக்கை பொது நிர்வாகம் சம்பந்தப்பட்டதாக இருப்பதால், இதில் தலையிட விரும்பவில்லை என்ற கருத்துரையுடன் இந்தக் கடிதத்தை 21.5.1789ல் சென்னை கவர்னருக்கு தளபதி 'ஸ்டூவர்ட் அனுப்பி வைத்தார்.[109] தொடர்ந்து போர்ப்பணியில் ஈடுபட்டார். அவரது இலக்கு மருது சேர்வைக்காரர்களை அடக்கி ஒடுக்குவது மட்டும்தானே!

தொடர்ந்து, மதுரை, திருச்சி, தஞ்சை ஆகிய கோட்டைகளில் இருந்து படையணிகள் தளபதி ஸ்டூவர்ட்டின் உதவிக்கு வந்து சேர்ந்தன. ஆதலால் கும்பெனி படைகள் இன்னும் கிழக்கே முன்னேறி காளையார் கோவில் பகுதியிலிருந்தும் மருது சேர்வைக்காரர்களது படைகளைத் துரத்தி அடித்தனர்.[110] அவர்கள் வடக்கே பிரான்மலையை நோக்கி ஓடிய பின்னர், அங்கிருந்து திண்டுக்கல் சீமைக்குள் சென்றுவிட்டனர்.[111] சிவகங்கைச் சீமை வரலாற்றில் பன்னிரண்டு ஆண்டுகளுக்குப் பின்னர் நடக்கவிருக்கும் அரசியல் மாற்றத்தை முன்கூட்டி எச்சரிக்கை செய்யும் அடையாள நிகழ்வாக - உற்பாதமாக தளபதி ஸ்டூவர்ட்டின் கொல்லங்குடி, காளையார் கோவில் படையெடுப்பும் மருது சகோதரர்களது தோல்வியும் அமைந்துவிட்டது. அடுத்த ஐந்து மாதங்கள் சிவகங்கைச் சீமையில் அமைதி நிலவியது.

சிவகங்கைச் சீமைப் பாதுகாப்பிற்கு ஆங்கிலப் படையணிகள் சிவகங்கை கோட்டையிலும் வடக்கு எல்லைகளிலும் நிலைத்து நின்றன. சீமையில் இயல்பு நிலை நிலவியதால், அவைகள் படிப்படியாக திருச்சிக் கோட்டைக்குத் திரும்பப் பெற்றன. வழக்கம் போல் சிவகங்கை, திருப்பத்தூர் கோட்டைகளில் மட்டும் நவாப்பின் படையணி நிலை கொண்டிருந்தது.

## மீண்டும் மருதுவின் குழப்பம்

ஐந்து மாதங்களுக்குப் பின்னர், திண்டுக்கல் சீமையில் திரட்டிய பெரும்படையுடன் திரும்பி வந்த மருது சேர்வைக்காரர்கள் திருப்புத்தூர் கோட்டையைக் கைப்பற்றினர்.[112] ராணி வேலுநாச்சியாரோ அல்லது ஆற்காட்டு நவாப்பின் அலுவலர்களோ சிறிதும் எதிர்பாராத நிகழ்ச்சி. சிவகங்கைக் கோட்டைப் பாதுகாப்பில் முனைந்து நின்றனர். சென்னைக்கும் தகவல் சென்றது. நவாப் கும்பெனித் தலைமையைத் தொடர்பு கொண்டார். மருது சகோதரர்களை அழிப்பதற்கு மற்றுமொரு படையெடுப்பினைக் கோரினார்.

---

109. Military Consultations. Vol.129. P: 1459.
110. Military Consultations Vol. 130/16.6.1789. P: 1683.
111. Military Consultations Vol.130/10.11.1789. P: 1792.
112. Rajayyan. Dr. K. - History of Madurai (1794) P: 308

இந்தமுறை கும்பெனியார் மிகவும் தயங்கினர். இப்பொழுது மருது சேர்வைக்காரர்கள் மைசூர் மன்னர் திப்புவின் உதவியையல்லவா பெற்று வந்துள்ளனர். கி.பி.1783-ல் திப்புவுடன் செய்து கொண்டுள்ள உடன்பாட்டை மீறுவதற்குரிய நிகழ்ச்சியாகி விடும் என்பது அவர்கள் கருத்து. மருது சேர்வைக்காரர்களுடன் போரைத் தொடங்கினால், அவர்களுக்கு மைசூர் மன்னரது உதவியும் தொடரும் அல்லவா! இந்த எதிர்மறையான சிந்தனையினால் நவாப் அதிர்ச்சியுற்றார். சிவகங்கைச் சீமை அரசியல் என்ன ஆவது? ஏற்கனவே பாக்கி பட்டுப்போன பேஷ்குஷ் தொகை வசூல்? ஒன்றுமே புரியாமல் வாலாஜா முகம்மது அலி, மருது சகோதரர்களுடன் சமரசம் செய்து கொள்வது என்ற கும்பெனித் தலைமையின் ஆலோசனையை ஏற்றார்.[113]

நவாப்பின் அலுவலர்களும் கும்பெனித் தளபதிகளும் திருப்புத்தூருக்கும் சிவகங்கைக்கும் சென்றனர். போர் நிறுத்தத்தை அடுத்து சிவகங்கைச் சீமையில் இயல்பு வாழ்க்கையை ஏற்படுத்தி அரசு இயந்திரத்தை எவ்விதம் தொடங்குவது? இதற்கான எத்தனையோ முன் மொழிவுகள், இரு தரப்பினரும் தங்களது நிலையில் இருந்து சிறிதும் விட்டுக் கொடுக்காமல் பேசினர். இருவரது பதவிகளுக்கும் எந்த விதத்திலும் பாதிப்பு கூடாது...

மூன்றாவது தரப்பினராக நவாப்பும் கும்பெனியாரும் அவர்களது ஆலோசனையைச் சொன்னார்கள். மருது சேர்வைக்காரர்கள் தொடர்ந்து பிரதானியாக இருந்து வருவது. அவர்களது நடவடிக்கைகளில் வெறுப்புற்ற ராணி வேலுநாச்சியார் சுமுகமான நிர்வாகத்திற்கு உதவும் வகையில் பதவி விலகிக் கொள்ள வேண்டியது. ராணி வேலு நாச்சியாருக்குப் பதிலாக சிவகங்கைச் சீமை அரசராக அவரது மகள் வெள்ளச்சியின் கணவர் சசிவர்ண வேங்கன் பெரிய உடையாத் தேவர் சிவகங்கைச் சீமை மன்னராகப் பதவி ஏற்பது.[114]

இந்தக் கூட்டு யோசனை, ராணி வேலு நாச்சியாருக்கு உகந்ததாக இல்லை. தனது பதவியைப் பறிப்பதற்குப் போட்ட திட்டம் என அவர் எண்ணினார் என்றாலும், தனது மருமகன் தனக்குப் பதிலாக சீமையின் அதிபதி ஆகிறார் என்ற ஆறுதல். வேறுவழியில்லாமல், ராணி வேலுநாச்சியார் இந்த ஆலோசனைகளை ஏற்றார். எதிர்தரப்பும் ஏற்றுக்கொண்டது. நவாப் முகம்மது அலி புதிய சிவகங்கை அரசை அங்கீகரித்தார். ராணி வேலு நாச்சியாரது பத்தாண்டு ஆட்சி கி.பி.1789-ல் டிசம்பரில் முடிவிற்கு வந்தது.

---

113. Rajayyan. Dr. K. - History of Madura (1974) P: 308.
114. Military Consultations Vol. 155/24.1.1792. P.474.

தமிழக அரசியலில் அதுவரை, மூன்று பெண்மணிகள்தான் ஆட்சியாளராக இருந்து வந்துள்ளதை வரலாற்றில் காணமுடிகிறது. மதுரை நாயக்க மன்னர் முத்துக் கிருஷ்ணப்ப நாயக்கர் இறந்த பொழுது அவரது ஒரே மகனுக்கு வயது மூன்று மாதங்கள். ஆதலால் பாலகனது பாட்டியான ராணி மங்கம்மாள் மதுரைப் பேரரசின் ராணியாக கி.பி.1689 முதல் கி.பி.1706 வரை ஆட்சிப் பொறுப்பை ஏற்று இருந்தார்.[115] அடுத்து, கி.பி.1732-ல் மதுரை மன்னர் விஜயரங்க சொக்கநாத நாயக்கர் வாரிசு இல்லாமல் இறந்ததால் அவரது மனைவி ராணி மீனாட்சி அரசியாக கி.பி.1736 வரை ஆட்சி செய்தார்.[116] மறவர் சீமையின் மன்னர் செல்லமுத்து விஜயரகுநாத சேதுபதி கி.பி.1762-ல் வாரிசு இல்லாமல் இறந்த பொழுது அவரது தங்கை மகன் பதினோரு மாதங்கள் நிரம்பாத முத்துராமலிங்கம், சேதுபதியாக பிரகடனப்படுத்தப்பட்டு அவரது தாயார் முத்து திருவாயி நாச்சியார் கும்பெனியாரால் கி.பி.1772-ல் சிறைபிடிக்கப்படும் வரை சேதுபதி ராணியாக பதவியிலிருந்தார்.[117]

இந்த மூன்று பெண்மணிகளும் அரசுப் பணியில் இருந்த பொழுது அவர்கள் வெளிப்பகையை சமாளித்து வெற்றி காண்பதில் மட்டும் ஈடுபட்டு இருந்தனர். அப்பொழுது அவர்கள் பதவியில் இருந்ததால், அவர்களுக்கு அரசு அதிகாரம் செல்வாக்கு கை கொடுத்தன. ஆனால் ராணி வேலு நாச்சியாரது நிலை வித்தியாசமானது. ஏழு ஆண்டுகள் அந்நியச் சீமையான விருபாட்சியில் தன்னந்தனியாக இருந்து கொண்டு சிவகங்கைச் சீமையை மீட்பதற்கான அனைத்து முயற்சிகளையும் மேற்கொண்டார். கி.பி.1780-ல் உதவிப்படைக்கு தலைமை தாங்கி சிவகங்கையை மீட்டதுடன் சிவகங்கையின் ராணியாக ஆட்சி செய்த பொழுதும் அவர் பல பிரச்சனைகளைச் சந்திக்க வேண்டியதாயிற்று. இவைகளுக்கு எல்லாம் மேலாக அவரது சாதனை, அவரை வீழ்த்துவதற்கு முயன்ற வெளிப்பகை, உட்பகையை எதிர்த்து மோதியது. உள்ளத்துணிவையும் உயர்ந்த மறப் பண்பையும் உலகறியச் செய்த இந்த வீராங்கனையும் அவரது மகளும் முந்தைய சிவகங்கை மன்னர்களது வழியில், ஆன்மிகத்திலும் மிகவும் அக்கரை கொண்டிருந்ததை, அவர்கள் வழங்கியுள்ள சில அறக்கொடைகள் தெரிவிக்கின்றன.[118] அவைகளின் பட்டியல் பின் வருமாறு.

---

115. Sathiyanatha Iyer. History of Madurai Nayaks (1928) P: 205-222
116. Ibid - P: 232-233
117. Military Despatches of England Vol: 7-4/20.6.1772. P: 80-81
118. சிவகங்கை சமஸ்தான பதிவேடுகள்

ராணி வேலு நாச்சியாரின் அறக்கொடைகள்[119]

| | | |
|---|---|---|
| கி.பி. | | |
| 1780 | குளமங்கலம் | மாலையீட்டுமடம், காளையார் கோவில் குரு பூஜைக்கு, இராமலிங்க பண்டாராம். |
| 1782 | எஸ்.வரிச்சூர் | பாபுராவ் - தர்மாசனம் |
| | பிறவி ஏந்தல் | அண்ணாமலை ஐயர், தர்மாசனம். |

(ராணி வெள்ளச்சி நாச்சியார் என்ற குழந்தை நாச்சியார் பெயரில்)

| | | |
|---|---|---|
| 1781 | குளக்கடை (மங்கலம் வட்டம்) | ஊழியமானியம். |
| 1782 | காக்குளம். | மடப்புரம், ஊழியமானியம் |
| | கல்லூரணி | ராஜேந்திர சோளீஸ்வரர் ஆலயம், இளையான்குடி. |
| | மடப்புரம் | ஊழியமான்யம். |
| 1782 | இடையன் சருகனி | வேதாந்தம் ஐயங்கார், வரத ஐயங்கார். |
| | பைக்குடிப்பட்டி | ஊழியமான்யம். |
| | பனைக்குளம் | தண்ணீர்ப் பந்தல் தர்மாசனம். |
| | முள்ளிக்குடி | சூடியூர் சத்திரம். |
| | எட்டிக்குடி | தர்மாசனம். |
| | நாவற்கினியானியான் (ஏந்தல்) | பெத்த பெருமாள் பண்டார மடம். |
| | பிச்சைவயல், குடிகாத்தவயல் | மார்க்கண்டேசுவரர் கோயில், கீழப்பூங்குடி. |
| | நம்பி ஏந்தல் | ஊழியமான்யம். |
| | நெடுங்குளம் (பார்த்திபனூர் வட்டம்) | தர்மாசனம். |

சமுதாய மேம்பாடு, விழிப்புணர்வு பற்றிய சிந்தனைகள் உறுதி பெறாத பதினெட்டாம் நூற்றாண்டுத் தமிழகத்தில், அரச குலத்தில் பிறந்த இந்த மறப்பெண், மிகுந்த துணிச்சலுடன் இதிகாச புராண கால பெண்மணிகளுக்கு இணையாக மன உறுதியுடன் பதினெட்டு ஆண்டுகள், அரசியலைத் திறம்பட நடத்தி எதிர்கால பெண்ணினத்திற்கு பெருமைதரும் முன்னோடியாக விளங்கியுள்ளார். ஆதலால் ராணி வேலு நாச்சியார் தமிழக வரலாற்றில் தனித்த சிறப்பினைப் பெற்றுள்ளார் என்பதில் ஐயமில்லை.

இந்திய விடுதலை இயக்கத்தின் விடிவெள்ளியாக விளங்கும் இந்த வீர மங்கை பற்றிய விரிவான ஆய்வுகள் வரலாற்றிற்கு மிகவும் இன்றியமையாதனவாக உள்ளன.

---

119. சிவகங்கை சமஸ்தானம் பதிவேடுகள்.

# 8. இன்னலில் மறைந்த இறுதி மன்னர்

ராணி வேலு நாச்சியாருக்குப் பதிலாக, கி.பி.1790-ல் சக்கந்தி வேங்கன் பெரிய உடையாத் தேவர், சிவகங்கை மன்னரானார். ஓராண்டிற்கு முன்னர், ராணி வேலுநாச்சியாரையும் அவரையும் கைது செய்து சிறையிட முயன்ற அதே பிரதானிகள் இப்பொழுது அதே மன்னரை மதித்து, அவரது கட்டளைகளை பெறும் அவரது பிரதானிகளாகப் பணியாற்றினர். சீமை நிர்வாகம் சிறப்பாக இயக்கம் பெற்றது.

மக்களிடமிருந்து வசூலிக்கப் பெறும் வரிவகையறாக்களில் மன்னர் கவனம் செலுத்தினார். வானத்தை நம்பி வாழும் குடிகள் செலுத்தும் நிலத்தீர்வையும், வெளிச் சீமைகளில் இருந்து சிவகங்கைச் சீமைக்கு வந்து பண்டங்களை விற்றுச் செல்லும் வணிகர்கள் தங்களது பொருட்களுக்கு சுங்கச் சாவடிகளிலும் பேட்டைகளிலும் செலுத்தும் சுங்கமும் மகமையும்தான் அன்றைய சிவகங்கை அரசின் பிரதான வருவாய்களாக அமைந்து இருந்தன. அப்பொழுது பட்டநல்லூர், சிவகங்கை, திருப்புவனம், இவை தவிர சிங்கம்புணரி ஆகிய ஊர்களில் சுங்கச் சாவடிகளும், சிவகங்கை, மானவீரமதுரை, திருப்புத்தூர், தேவகோட்டை, கல்லல், இளையாங்குடி ஆகிய ஊர்களில் பேட்டைகளும் அமைந்து இருந்தன.

காடுகள் மற்றும் பொது இடங்களான மந்தை, மேய்ச்சல் தரைகளில் உள்ள மரங்களில் இருந்து கிடைக்கும் மாவிடை, மரவிடை, பாட்டம் ஆகிய வருமானங்களும், திருப்புத்தூர், சுண்ணாம்பு இருப்பு, பிரமனூர் போன்ற பெருங்கண்மாய்களில் இருந்து கிடைக்கும் மீன் பாசி வரவுகளும் சில முக்கியமான வரவினங்களாக அமைந்து இருந்தன. இளையான்குடி எமனேஸ்வரம் ஆகிய ஊர்களில் இருந்த இருநூறு தறிகளில் இருந்து



வேங்கன் பெரிய உடையாத் தேவர்

தறிக்கடமையும் வசூலிக்கப் பெற்றன.[120]

இத்தகைய நிலையில் ஆற்காட்டு நவாப்பிற்கு ஆண்டு காணிக்கையாக (பேஷ்குஷ்) ரூபாய் மூன்று லட்சம் செலுத்த வேண்டியதாக இருந்தது.[121] நவாப்பின் மேலாண்மையை மதித்து நேசக் கரம் நீட்டியதற்கு வழங்கப்பட்ட கொடுமையான தண்டனை இது என்பதை மன்னர் உணர்ந்தார். அன்று தென்னகத்தில் நிலைத்து இருந்த பாரம்பரிய அரசுகளான திருவாங்கூர், இராமநாதபுரம், சிவகங்கை, தஞ்சாவூர் ஆகிய அரசுகள் அனைத்தும் இந்திய அளவில்உள்ள முகலாயப் பேரரசரின் மேலாண்மையை ஏற்று அவரது தென்னாட்டுப் பிரதிநிதி என்ற முறையில், ஆற்காட்டு நவாப்பை மதித்து, இந்த அரசுகள் வழங்கும் கண்ணியமான அன்பளிப்புத் தொகையே, ஆண்டு பேஷ்குஷ் தொகை என்பதாகும். அந்தந்த அரசுகளின் வருவாய்களின் பேரில் செலுத்தப்படும் கட்டாயத் தீர்வை அல்ல அது. ஆதலால் ஆண்டு காணிக்கை தொகை பற்றி மன்னர் வேங்கண் பெரிய உடையாத் தேவர் கும்பெனித் தலைமையுடன் தொடர்பு கொண்டார். அந்த தொகையினைச் செலுத்துவதில் உள்ள சிரமத்தை தெரிவித்தார். தொகையின் அளவை குறைத்து நிர்ணயம் செய்யுமாறு கேட்டுக் கொண்டார்.[122]

கி.பி.1785-லும், 1787-லும் நவாப்பும் கும்பெனியாரும் செய்து கொண்ட உடன்பாடுகளின்படி நவாப்பிற்கு சேரவேண்டிய குறுநில மன்னர்களது இந்தக் காணிக்கையை வசூலிக்கும் உரிமையையும் அதனை வசூல் செய்வதற்கு தக்க நடவடிக்கைகளை மேற்கொள்ளவும் கும்பெனியார் நவாப்பிடமிருந்து உரிமை பெற்று இருந்தனர்.[123] அதற்காகவே கும்பெனியார் கலெக்டர்களையும் வசூல்தார்களையும் நியமித்து இருந்தனர், கும்பெனித் தலைமை சிவகங்கை மன்னரது கோரிக்கையை அனுதாபத்துடன் பரிசீலித்தனர். இதற்கு மிக முக்கியமான இன்னொரு காரணமும் இருந்தது. அன்றைய அரசியல் சூழ்நிலையில் கும்பெனித் தலைமை பாளையக்காரர்களை அடக்கி உதவுவதற்காக படையணிகளை ஈடுபடுத்திய செலவு என்ற இனத்தில் பெருந்தொகையைக் கோரி ஆற்காட்டு நவாப்பை மிகப் பெரிய கடனாளியாக மாற்றியிருந்தனர். கோட்டைகள் பாதுகாப்பு, பராமரிப்பு, அமைதி காத்தல் என்ற வகையிலும் செலுத்த வேண்டிய பணம் என நவாப்பின் முதுகெலும்பை ஒடித்து ஆண்டுதோறும் பழைய பாக்கிகளுக்கான ரூபாய் பன்னிரண்டு லட்சம் பகோடா பணம் (சுமார் நாற்பத்து ஏழு லட்சம் ரூபாய்) நடப்பு கணக்கிற்காக ஒன்பது லட்சம் பகோடா பணம் (சுமார் முப்பது லட்சம்

120. Pulick Consultations. Vol.182 (A) 1793
121. Rajayyan. Dr. K. - History of Madura (1974) P: 308
122. Rajayyan. Dr. K. - History of Madura (1974) P: 308
123. Carnatic Treaty 1787 AD.

ரூபாய்) நவாப்பிடமிருந்து வசூல் செய்தனர். இத்தகைய மீளாக்கடன் வலையில் சிக்குண்ட நவாப்பின் மீட்சிக்கு வழி இல்லையென்பதைத் தெளிவாக கும்பெனியார் உணர்ந்து இருந்தனர். ஆதலால் கர்நாடக ஆட்சித் தலைமையை வெகு விரைவில் கைப்பற்ற இருப்பதை எதிர்பார்த்து நவாப்பிற்கு கட்டுப்பட்ட தலைவர்கள், மன்னர்கள் ஆகிய இந்த மண்ணின் அதிபதிகளை இப்பொழுது இருந்தே இணக்கமாக வைத்துக் கொள்ள விரும்பியதே அந்த சிறப்பான காரணமாகும்.

ஆதலால் சிவகங்கை மன்னர் செலுத்த வேண்டிய ஆண்டுக் காணிக்கைத் தொகை ரூபாய் மூன்று லட்சத்திலிருந்து ரூபாய் ஒன்றே முக்கால்லட்சம் என குறைத்து உத்திரவிட்டது.[124] அவர்களுக்கு நவாப் செலுத்த வேண்டிய பாக்கியை இந்த தொகை நிர்ணயம் எந்த வகையிலும் பாதிப்பது இல்லையல்லவா? புதிய ஆட்சியாளர்களாக மாறப்போகும் அவர்கள் நவாப்பை விட ''மிகவும் நல்லவர்கள்'' என்பதை காட்டிக் கொள்ளவும் இந்த நடவடிக்கை அவர்களுக்கு அவசியமானதாக இருந்தது. இவ்விதம் முனைப்புடன் சீமை நிர்வாகத்தில் ஈடுபட்டிருந்த மன்னர் வேங்கன் பெரிய உடையாத் தேவரது ஆர்வத்தை திசை திருப்பும் வழியில் மிகப் பெரிய சோதனை அவருக்கு காத்து இருந்தது. அண்மையில் பெண் குழந்தை ஒன்றைப் பிரசவித்த அவரது மனைவி ராணி வெள்ளச்சி நாச்சியார் தனது குழந்தையுடன் திடீரென மரணமுற்றார்.[125] இது ஒரு அரசியல் படுகொலை என மக்களால் கருதப்பட்டது. ராணி வெள்ளச்சி விஷமிட்டுக் கொல்லப்பட்டு விட்டதாக அரண்மனையில் பேச்சு எழுந்தது. என்றாலும் சோகத்தினால் துடித்த மன்னர், ராணியின் மரணம் எப்படி ஏற்பட்டது என்ற விவரங்களைப் பெறும் விசாரணையில் ஈடுபடாமல், இந்த நிகழ்ச்சியின் பின் விளைவுகளைத் தவிர்ப்பதில் ஈடுபட்டார். ''பொற்றாலியோடு எவையும் போம்'' என்ற ஆன்றோர் வாக்கிற்கு இணங்க எழுந்த சோகச் சூழ்நிலை மன்னரது இயல்பான நடவடிக்கை அனைத்திலும் நிழலாடியது.

## மறுமணம்

மன்னர் வேங்கன் பெரிய உடையாத் தேவரது சொந்த நலன்களை கவனிக்கவும், அவரது சோகத்தை ஓரளவு போக்கி நிர்வாகப் பணியில் மன்னரை ஈடுபடுத்த, என்ன செய்யலாம் என பிரதானிகள் ஆலோசித்தனர். மன்னரது மறுமணம் ஒன்றைத் தவிர வேறு வழியில்லை! மன்னருக்கு மறுமணம் செய்து வைக்கும் பொறுப்பை ஏற்றுக் கொண்டு மன்னரது ஒப்புதல் பெற்ற, பெரிய மருது சேர்வைக்காரர், சில நாட்களில்

---

124. Military Consultations Vol.154/16.11.1791. P:5812.
125. Governor Proclamation dt. 6.7.1801 (Secret Sundries Vol.26)

தமது பெண்மக்களில் ஒருவரை மன்னருக்கு மணம் செய்து வைத்தார்.[126] செம்பி நாட்டு மறவர்கள், அவர்கள் சார்ந்துள்ள முக்குலத்தின் இன்னொரு பிரிவினரான அகமுடையாருடன் மணவினைகள் கொள்வது அன்றைய நிலையில் ஒரு அசாதாரண நிகழ்ச்சி அல்ல. ஆனால் சிவகங்கை அரசியலில் மன்னரது இந்த மறுமணம் மிகப்பெரிய தாக்கத்தை ஏற்படுத்தியது என்பது தான் சிவகங்கைச் சீமை வரலாற்றில் பிந்தைய பகுதி சுட்டிக் காட்டும் பேருண்மையாகும்.

மன்னருக்கு இந்தத் திருமணம் ஓரளவு மன ஆறுதலை அளித்தாலும், நாளடைவில் பெரும் சோதனையின் தொடக்கமாக மாறிவிட்டது. மன்னரது புதிய மாமனாரும் பிரதானியுமான பெரிய மருது சேர்வைக்காரரால் எந்த பிரச்னையும் இல்லையென்றாலும், சின்னப் பிரதானியும், சின்ன மாமனாருமான சின்ன மருது சேர்வைக்காரரின் நடவடிக்கைகளினால் மன்னருக்கு பல இடைஞ்சல்கள் ஏற்படும் சூழ்நிலை உருவானது. கி.பி.1790-ல் கும்பெனியாரும் ஆற்காட்டு நவாப்பும் ராணி வேலு நாச்சியாருடன் சமரசம் செய்து வைத்த பொழுது அளித்த அறிவுரைகளை, அவர் பற்றி நிற்கவில்லை. அரசுரிமைக்கு முன்னர் அருகதையான குடும்ப உறவுகள் பலனற்று விடும்(Kingship knows no kinship) என்பது ஆங்கிலப் பழமொழி. ஆனால் சிவகங்கை அரசியலைப் பொறுத்தவரையில் குடும்ப உறவுகள் ஆட்சியுரிமையை விட அதிகமாக அதிகாரம் மிக்கதாக இருந்தது. இரு பிரதானிகளது மக்களும், ஆட்சியுரிமை அதிகாரங்களைப் பகிர்ந்து கொள்ளும் வகையில் இயங்கத் தொடங்கினர். தந்தையரைப் பின்பற்றுவது தனயர்களின் கடமைதானே!

சிவகங்கை மன்னரது நிலை இருதலைக் கொள்ளி போல இருந்தது. ஒருபுறம் ஆட்சிப் பொறுப்பு, மறுபுறம் முறித்துக் கொள்ள முடியாத சொந்தம். இந்த சூழ்நிலையில், அன்றாட அரசியல் பிரச்னைகளுக்கு எவ்விதம் தீர்வு காண்பது? கி.பி.1792 பிப்ரவரியில், சின்னமருது சேர்வைக்காரரது உத்திரவின் பேரில் சிவகங்கை படைகள் வடக்கே தொண்டமான் சீமைக்குள் புகுந்து கொள்ளையும் கொலையும் நடத்தியது.[127] புதுக்கோட்டை மானுவல் ஆசிரியர் மட்டுமல்லாமல் மதுரைச் சீமை வரலாறு எழுதியுள்ள நூலாசிரியரும் இந்தச் செய்தியை உறுதிப்படுத்தி உள்ளார்.[128] நல்ல வேளையாக கலெக்டரது தலையீட்டினால் இந்த நிகழ்ச்சி புதுக்கோட்டைப் படை எடுப்பாக அல்லாமல் எல்லைத் தகராறாக முடிவு பெற்றது.

மன்னரைக் கலந்தாலோசிக்காமல் மேற்கொள்ளும் மருது சேர்வைக்காரரது தன்னிச்சையான முடிவுகள் மன்னருக்குத் தலைவலி

---

126. Military Consultations. Vol. 154. dt. 16.11.1791. P: 5812
127. Radhakrishna Iyer - General History of Pudukottai State (1931). P: 191
128. Nelson.J.H. - Manual of Madura Country (1868) Part IV. P: 113

தருவதாக இருந்தன. ராணி வேலு நாச்சியாரது ஆட்சியின் பொழுது எழுந்த அதே குழப்பமான சூழ்நிலை! இறுக்கமான உறவு. அரசியலுக்குப் புதியவரான மன்னர் வேங்கன் பெரிய உடையாத் தேவரால் அவரைச் சமாளிப்பது என்பது இலகுவான செயல் அல்லவே!

பக்கத்து நாடுகளான பெரிய மறவர் சீமை, தொண்டமான் சீமை சம்பந்தப்பட்ட விவகாரங்களுக்குத் தீர்வு காண்பதில் பிரதானி சின்னமருது சேர்வைக்காரரது செயல்பாடுகளில் நளினமும், மென்மையும் காணப்படவில்லை. மாறாக, உணர்ச்சிகளால் உந்தப்பட்டு, உண்மைகளை மறந்த நிலையில், சிறிய பிரச்சனைகளைக்கூட பெரும் பிரச்சனைகளாகக் கருதி முடிவு செய்யப்பட்டன. மேலும், சிவகங்கைச் சீமை, இராமநாதபுரம் சீமையில் இருந்து உருவானது என்பதும் அந்தச் சீமையின் மன்னர், சிவகங்கை மன்னரது இரத்த பந்தத்தில் இணைந்த உறவினர் என்பதும் நினைவில் கொள்ளப்படவில்லை. கடந்த நாற்பது ஆண்டு கால அரசியலில், தாம் பிரதானியாக இருந்த வரை, சிவகங்கைப் பிரதானி தாண்டவராயபிள்ளை முக்கியமான அனைத்து பிரச்சனைகளிலும், இராமநாதபுரம் பிரதானிகளான வெள்ளையன் சேர்வை, தாமோதரம்பிள்ளை, பிச்சை பிள்ளை ஆகியோர்களுடன் கலந்து யோசிக்காமல் முடிவு செய்தது இல்லை. இத்தகைய முந்தைய கால கட்ட முறைகள் புறக்கணிக்கப்பட்டதால் இந்த இருநாடுகளது அரசியலில் உருவான சூடும், வெறுப்பும் தணியவில்லை. குறிப்பாக,

*(1)* சிவகங்கைச் சீமைத் துறைமுகமான தொண்டிச் துறைமுகத்தில் ஏற்றுமதி, இறக்குமதி செய்யப்படும் பொருள்கள் அனைத்தும் சேதுபதி மன்னரது சீமையைச் சேர்ந்த திருவாடனையில் உள்ள சுங்கச் சாவடியினைக் கடந்தே செல்ல வேண்டும். அவர்கள் விதிக்கும் சுங்கத் தீர்வையைச் செலுத்த வேண்டும். ஆனால் சிவகங்கை பிரதானிகள் அந்த தீர்வையைச் செலுத்த மறுத்தனர்.[129]

2. இதனால் சினமடைந்த சேதுபதி மன்னர், சிவகங்கைச் சீமையில் பட்ட நல்லூர்பேட்டை வழியாகச் செல்லும் திருநெல்வேலி — சோழ சீமை வணிகர் பெருவழியை முடக்கி, வணிகர்கள் சேதுபதி சீமை மூலமாக சோழ சீமைக்கு செல்லுமாறு செய்து சிவகங்கை அரசுக்கு வருமான இழப்புகளை ஏற்படச் செய்தார்.[130]

3. இதற்கு பதிலடியாக சிவகங்கை பிரதானிகள் சேதுபதி சீமைக்குள் சிவகங்கைச் சீமையை கடந்து செல்லும் ஆற்றுக் கால்களை அடைத்து சேதுபதி சீமைக்கு நீர் வரத்து பெறமுடியாமல் செய்தனர்.[131]

---

129. Military Country Correspondence - Vol.45 (1794) P: 101-104
130. கமால் Dr. S.M. - விடுதலைப் போரில் சேதுபதி மன்னர் *(1987)* பக்:
131. Political Despatches of England Vol. III (1794) P: 316-18

4. இதனால் இது தொடர்பாக இருநாட்டு எல்லைகளில் சிறுசிறு மோதல்கள் ஏற்பட்டன.[132]

5. இதனைப் போன்றே தொண்டமான் சீமையில் பிரான்மலையை ஒட்டிய பொது மேய்ச்சல் தரை, காடு பற்றிய எல்லைத் தகராறுகள்.

6. எமனேஸ்வரத்தில் நடந்த மோதலில், இராமநாதபுரம் படைகளால் கொல்லப்பட்ட பெரிய மருது சேர்வைக்காரரது மகனது மரணத்திற்கு பழிவாங்கும் வகையில், பெரியமருது சேர்வைக்காரரும், அவர்தம் படைகளும் பரமக்குடி மக்களில் எழுநூறுக்கும் மிகுதியானவர்களைக் கொன்று குவித்தது.[133]

7. இதனைத் தொடர்ந்து சேதுபதி மன்னரது படைகள் சிவகங்கைச் சீமைப்பகுதியான ஆனந்தூர் - விசவனூர் மீது பெருந்தாக்குதல் நடத்தியது.[134]

இத்தகைய உணர்ச்சி வசப்பட்ட நிகழ்வுகளால் சாதாரண மக்களது உயிர்களும், சொத்துக்களும் மிகவும் சேதமுற்று வந்தன. பிரதானி சின்ன மருது சேர்வைக்காரரது செயல்பாடுகளைத் தடுத்து நிறுத்த இயலாத நிலையில், மன்னர் வேங்கன் பெரிய உடையாத் தேவர், கண்களை மூடிக்கொண்டு, காதுகளைப் பொத்திக் கொண்டு ஊமை போல அந்தப்புரத்தில் ஒதுங்கி இருந்தார். மன்னரது இந்த மௌனத்தினால் அந்தப் பிரதானி சிவகங்கை மன்னரை விட அதிகமான செல்வாக்குடையவராக இருப்பது போன்ற மாயத் தோற்றம் எங்கும் படிந்து இருந்தது. சிவகங்கை சீமை வரலாற்றின் இறுக்கமான இந்தச் சூழ்நிலையைப் பகுத்துணர முடியாத இன்றைய நூலாசிரியர் ஒருவர்கூட, சாதிய உணர்வின் ஒன்றுதலினால் வரலாற்றைச் சீரழிக்க முயன்று புதிய ''வரலாறு'' படைத்துள்ளார். இந்தப் புதிய ''சிவகங்கை மன்னர் வரலாற்றிற்கு'' ஆதாரமோ சான்றுகளோ தேவை இல்லை என்பது அவரது கருத்து போலும். அந்தச் 'சரித்திர புருஷர்' மிகச் துணிச்சலாக யாரும் தெரிவிக்காத, தெரிவிக்க இயலாத 'உண்மைகள்' பொருந்தியது அவரது நூல்! அந்தப் பேருண்மைகளில் ஒன்றுதான் கி.பி.1780 முதல் 1801 வரை சிவகங்கை சீமையை தொடர்ந்து ஆண்ட பேரரசர்கள் மருது சேர்வைக்காரர்கள் என்பது. அதாவது அவர்கள் பிரதானிகளாகப் பணியேற்று இறுதியில் கும்பெனியாரால் தூக்கிலேற்றப்பட்ட காலம் வரை.

இராமநாதபுரம் சேதுபதி மன்னருக்கும் அகம்படியர் சாதியினைச் சேர்ந்த

---

132. Military Consultations Vol.185(B) / 29.8.1794. P: 4060
133. Ford. St. George Diary Consultations. 21.6.1794. P: 2757
134. Military Country Correspondence Vol. 45/1794. P: 177-178

மாவீரர்கள் மதிமந்திரிகளாக, தளகர்த்தர்களாக, பிரதானிகளாகப் பணியாற்றியுள்ளனர் என்பது வரலாறு.[135] அவர்களில் சிறப்பாக விளங்கியவர்கள் வயிரவன் சேர்வைக்காரரும், அவரையடுத்து தளகர்த்தர் பணியேற்ற அவரது மருமகன் வெள்ளையன் சேர்வைக்காரருமாவர். (கி.பி.1735-1760) இவர்களில் வெள்ளையன் சேர்வைக்காரர் மிகப்பெரிய வீரர். வல்லவர் மட்டுமல்லாமல் பேராண்மை நிறைந்தவர். மதுரைப் போர்க்களத்தில் மைசூர் படைத் தளபதி கோப்பை நேருக்கு நேர் பொருதி அழித்தவர். மதுரைக் கோட்டையை ஆக்கிரமித்து இருந்த பட்டாணியர்களை வென்று மதுரை நாயக்க அரசின் கடைசி வழியினரான விஜய குமார பங்காரு திருமலை நாயக்கரை மதுரை அரசராக முடிசூட்டியவர்.[136] கோழைத்தனம் காரணமாக பங்காரு திருமலை நாயக்கர் மதுரை அரசை கைவிட்டு ஓடிவந்தபிறகு மீண்டும், மதுரையைக் கைப்பற்றி சேதுபதி மன்னர் பொறுப்பில் வைத்து இருந்தவர். திருநெல்வேலிப் பாளையக்காரர்களை கடுமையாக அடக்கியவர். சேது நாட்டின் மீது படை எடுத்து வந்த தஞ்சைப் படைகளைத் துவம்சம் செய்தவர். ஆற்காட்டு நவாப்பின் பயமுறுத்தலுக்கு அஞ்சாத சிங்கம். மிகுந்த துணிச்சலுடன் சேதுபதி மன்னரையே நீக்கி விட்டு புதியவர் ஒருவரை சேதுபதியாக நியமனம் செய்து அறிவித்தவர். அந்த அளவிற்கு சேதுபதி சீமை மக்களது ஆதரவையும் செல்வாக்கையும் பெற்று இருந்தவர்.

அவரது சாதனைகளில் மறவர் சீமை மண்ணுக்குரிய ராஜவிசுவாசமும், கடமை உணர்வும் பரிமளித்ததைத்தான் சேதுபதிகளது வரலாற்று ஆசிரியர்களும் சேதுபதி சீமை மக்களும் போற்றிப் புகழ்ந்துள்ளனர். அந்த வீரப் பிரதானியை, சேதுநாட்டு அரசராகவோ, சேதுபதி மன்னர்களுக்கும் மேற்பட்ட மாமன்னராகவோ சித்தரித்து எழுதவில்லை என்பதை இங்கு நினைவு கூறுதல் பொருத்தமானது. மல்லிகை என்றாலே மனத்தைக் கொள்ளைக் கொள்ளும் அதன் மணம் நமது நினைவில் வரும்தானே. 'மலர்களின் பேரரசி' என்றால்தான் மல்லிகையின் மணத்தைப் புரிந்து கொள்ள முடியுமா? மல்லிகை மலர்களின் பேரரசியும் அல்லவே! உறவினர்களையும் உற்ற நண்பர்களையும் வானளாவ உயர்த்திப் பேசுவது, எழுதுவது வேறு. நாட்டின் வரலாற்று நாயகர்களை சொந்தக் கற்பனை கொண்டு உட்படுத்தி உயர்த்தி வரைவது வேறு. குறிப்பாக, இரு நூற்றாண்டுகளுக்கு முன்னிருந்த அரசியல் தலைவர்களை பல்வேறு வரலாற்றுச் சான்றுகளுடன் அவர்களது ஓவியத்தைச் சித்தரித்தால்தான் - அந்த தலைவர்களது அழகிய ஓவியம் உயர்வானதாகவும், மக்களது

---

135. Raja Ram Rao.T. - Manual of Ramnad Samasthanam (1891)
136. Ibid.

பார்வையையும் வரலாற்று ஆய்வாளர்களின் புகழ்ச்சியையும் பற்றி பிடித்தவாறு காலங்கடந்து நிற்கும். இதற்கு மாறாக, சுய நலம், சாதி அபிமானம் ஆகிய குறுகிய அளவுகோலைக் கொண்டு அளவீடு செய்வது நம்மைநாமே ஏமாற்றிக் கொள்வதுடன் மற்றவர்களையும் ஏமாற்ற முயல்வதைத் தவிர வேறு அல்ல.

இங்கே சிவகங்கை பிரதானிகளான மருது சேர்வைக்காரர்கள் பற்றிய சில விவரங்களைத் தெரிந்து கொள்வது. இந்த வரலாற்றைத் தொடர்ந்து படிப்பதற்குத் துணையாக அமையும்.

## பரங்கியரது பாசம்!

நெல்லைச் சீமை பாளையக்காரர்கள், அரியலூர், உடையார் பாளையம், பாளையக்காரர்கள், தஞ்சாவூர், இராமநாதபுரம், சிவகங்கை மன்னர்களிடமிருந்து கப்பத் தொகையைப் பெறுவதற்கும், கம்மந்தான் கான் சாகிபுடன் புரட்சியை முடிப்பதற்கும், மேற்கொண்ட ராணுவ நடவடிக்கைகளுக்கு சென்னையில் இருந்த ஆங்கில கிழக்கிந்தியக் கம்பெனியாரது பாதுகாப்பு அணிகளை, கூலிப்படைகளாக, ஆற்காட்டு நவாப் முகம்மது அலி பயன்படுத்தினார். மற்றும் மைசூர் மன்னர் ஹைதர் அலியுடனான போர், பிரஞ்சுக்காரர்களுடனான மோதல் ஆகியவைகளுக்கும் ஆற்காட்டு நவாப், கும்பெனியாரது கூலிப்படைகளையே நம்பியிருக்க வேண்டிய பரிதாபநிலை. அதுவரை கர்நாடகப்பகுதியில் தங்களது வணிக நலன்களை விரிவு செய்து கொள்வதற்கு ஆற்காட்டு நவாப்பின் அதிகார வரம்பிற்குட்பட்ட சலுகைகளை, எதிர்பார்த்து இருந்த கும்பெனியார்களது துப்பாக்கிக் கரங்களை எதிர்பார்க்க வேண்டிய இழிநிலை. இதன் காரணமாக, ராணுவச் செலவுகளுக்காக கும்பெனியாருக்கு நவாப் கொடுக்க வேண்டிய லக்ஷக்கணக்கான பகோடா பணம் பாக்கியாக இருந்தது. இதனை வசூலிக்கும் முயற்சியில் கும்பெனியார் நவாப்புடன் இரு உடன்படிக்கைகளை கி.பி.1787-லும் 1792-லும் செய்து கொண்டனர்.[137]

இவைகளின்படி நவாப், கும்பெனியாருக்கு ஆண்டுதோறும் பத்து லட்சம் பக்கோடா பணத்திற்குக் கூடுதலான தொகையை தவணை நாளுக்கு முன்னதாகச் செலுத்த வேண்டும் என்ற நிபந்தனையுடன் தென்மாவட்ட பாளையக்காரர்கள் நவாப்பிற்கு ஆண்டுதோறும் செலுத்த வேண்டிய பேஷ்குஷ் தொகையான 2,64,704 ஸ்டார் பகோடா பணத்தையும், பாளையக்காரர்களிடமிருந்து நேரடியாக வசூலித்துக் கொள்ளும் அதிகாரத்தையும் பெற்றனர்.[138]

---

137. Rajayyan. Dr. K. - History of Madura (1974). P: 318.
138. Ibid - P: 325

இதனால் திருச்சிக்கோட்டையைப் போல மதுரைக் கோட்டையிலும் ஆங்கிலேயர்களின் நடமாட்டம் மிகுந்தது. கோட்டையின் பெரிய அலுவலர்களும், தளபதிகளும் ஓய்வு நேரத்தையும், நாட்களையும் வேட்டையில் கழிப்பதற்கு, மதுரையை அடுத்துள்ள சிவகங்கைச் சீமைக் காடுகளை சிறந்த இடமாகக் கருதினர். வடக்கே தொண்டைமான் சீமையிலிருந்து தெற்கே மானாமதுரை வரையான சிவகங்கைச் சீமையின் அடர்த்தியான காடுகளில் அப்பொழுது வேங்கை, சிறுத்தை போன்ற கொடிய விலங்குகள் நிறைந்து இருந்தன. ஆதலால், வெல்ஷ், சுல்லிவன் போன்ற ஆங்கிலப் பிரமுகர்கள் சிவகங்கைச் சீமைக்காடுகளுக்கு செல்லக் கூடிய வாய்ப்பு ஏற்பட்டது. அப்பொழுது எல்லாம் சிவகங்கை மன்னர் பிரதானிகளது வரவேற்பும், விருந்தோம்பலும் அவர்களுக்கு காத்து இருந்தன. நாளடைவில், இவை நல்ல நேயத்திற்கு ஆதாரமாக அமைந்தது. தளபதி வெல்ஷ் பதிவு செய்துள்ள குறிப்புகள்[139] இதனை பிரதிபலிக்கின்றன.

> ''... அந்தச் சீமைக்குச் சென்று இருந்த பொழுது அவர் (சிவகங்கைபிரதானி) எனக்கு நண்பரானார். நான் மதுரைப் பணியில் நீடித்த பொழுது, அவர் எனக்கு உயர்ந்தரக அரிசியையும், பழங்களையும், குறிப்பாக தடித்த தோளுடைய இனிப்பான ஆரஞ்சுப் பழங்களையும் அனுப்பி வைக்கத் தவறுவதில்லை. இத்தகைய பழத்தை இந்தியாவில் வேறு எங்கும் நான் கண்டதில்லை. அவர்தான் எனக்கு ஈட்டி எறிந்து, வாள்வீசி தாக்குவதைக் கற்றுக் கொடுத்தவர். வேறு எங்கும் அறியப்படாத வளரியைத் திறமையுடன் கையாண்டால் நிச்சயமாக நூறு கெஜ தூரத்து இலக்கை நொறுக்க முடியும்.''

இவ்விதம் சிவகங்கைப் பிரதானியைப் பற்றி பரங்கியர் உயர்வாக மதிப்பீடு செய்து இருப்பது அவர்களது அன்பான விருந்தோம்பலில் திக்குமுக்காடி அவர்களது வீரவிளையாட்டுக்களில் மனதை பறிகொடுத்ததுதான் காரணமாகும். ஆனால் அதே நேரத்தில், சிவகங்கைப் பிரதானி, பரங்கியர் மீது உண்மையான உயர்வான நேயம் கொண்டு இருந்தாரா...? உறுதிபடக்கூற இயலாதநிலை! காரணம் ஒருவர் மற்றொருவர் மீது நட்பு பாராட்டுவது என்பது ஒருவர், மற்றொருவரது அழகு, அறிவு, ஆற்றல், அருங்குணங்கள் ஆகியவைகளின் அடிப்படையில்தான் அமைய முடியும். பரங்கிகளிடம், நம்மவரிடமில்லாத, மறைந்து இருந்து பாயும் புலியின் ராஜதந்திரம் இருந்தது. ஆனால் நமது போர் மறவர்களுக்குள்ள பேராண்மையும் போராற்றலும் அவர்களுக்கு கிடையாது. துப்பாக்கி, வெடிமருந்து துணை

---

139. James Welsh - Military Reminiscenes (1868) Vol. I. P: 129-30.

இல்லாமல் எதிரிகளைப் பொருதி வெல்லும் திறமும் அவர்களுக்கு கிடையாது. ஆதலால், சிவகங்கைப் பிரதானிக்கும் பரங்கியருக்கும் ஏற்பட்ட நட்பு, குணமும், குடிமையும் குன்றா குற்றமும் ஆய்ந்து அறிந்து பாராட்டிய நட்பு அல்ல. அரசியல் சார்புடைய நட்பு.

அன்றைய அரசியல் சதுரங்கத்தில், கர்நாடக அரசியலில் மேலாண்மை படைத்திருந்த ஆற்காட்டு நவாப், இயக்கமற்ற பதுமை போல இருந்தார். தென்னகத்தின் மிகச் சிறந்த சுதந்திர வீரரும் மைசூர் மன்னருமான திப்பு சுல்தான் மூன்றாவது மைசூர் போரில், துரோகத்திற்கு இலக்காகி, தனது நாட்டின் பெரும்பகுதியை பரங்கியருக்குத் தத்தம் செய்துவிட்டு பரிதவித்தநிலை. தெற்கே கி.பி. 1792 மே மாத இறுதியில், கும்பெனியின் மீது வெறுப்புற்ற சிவகிரி பாளையக்காரரான சின்னத்தம்பி வரகுண வன்னியன் பக்கத்து பாளையமான சேத்தூர் பாளையத்தை ஆக்கிரமித்ததற்காக கும்பெனியரால் கைது செய்து காவலில் வைக்கப்பட்டு பாளையக்காரர் உரிமை பறிபோன நிலை. ஏன்? அண்டையில் உள்ள பெரிய மறவர் சீமையையே எடுத்துக் கொள்வோம். தமது நாட்டில், பரங்கியர் வெவ்வேறு சமயங்களில் வெவ்வேறு காரணங்களைக் காட்டி, வலுவாக காலூன்ற முயன்ற பொழுது எல்லாம், அவர்களது மனக்கோட்டைகளை மன்னர் முத்துராமலிங்க சேதுபதி, மண்கோட்டைகளாக்கி தவிடு பொடியாகும்படி செய்தார். மறவர் சீமையின் கைத்தறி நெசவுத் துணி வணிகத்தில் ஏக போக உரிமையை நிலைநாட்ட முன்வந்த பொழுதும், தானியங்களை, இறக்குமதி செய்வதில் சுங்கவிலக்கு சலுகை கோரிய பொழுதும், சேதுநாட்டின் பாம்பன் துறையில் அவர்களது கப்பல்களுக்கு முன்னுரிமையும், சுங்கச் சலுகையும் கோரிய பொழுதும், பரங்கியரது கோரிக்கைகளுக்கு சேதுபதி மன்னர் செவி சாய்க்க பகிரங்கமாக மறுத்துவிட்டார்.[140] இதனால் ஆத்திரமுற்ற கும்பெனித் தலைமை, கயத்தாறிலிருந்த தமது படைகளை இரவோடு இரவாக இராமநாதபுரம் கோட்டைக்கு விரைந்து கொண்டு சென்று 7.2.1795-ம் தேதி பொழுது புலருவதற்கு முன்னர் இராமநாதபுரம் கோட்டையையும், அரண்மனையையும் தாக்கி மன்னரை வஞ்சகமாகக் கைது செய்து திருச்சிக் கோட்டையில் அடைத்தது.[141]

இவைபோன்ற இக்கட்டான சூழ்நிலையில், பாசமும், நேசமும் பாராட்டும் கும்பெனியாரது உறவை முறித்துக் கொள்வது அறிவுடைமையாகாது என எண்ணினர், சிவகங்கை பிரதானிகள். அதனால், உறுமீன் வரவு பார்த்து பொறுமையுடன் இருக்கும் கொக்கு போல அவர்கள் காத்து இருந்தனர். சேதுபதிக்கும், சிவகங்கைக்கும் உள்ள

---

140. Military Country Correspondence Vol.45/25.10.1794. P: 357-86
141. கமால். Dr. S.M. - விடுதலைப் போரில் சேதுபதி மன்னர் (1987) பக்: 82

பிரச்னைகளைப் பற்றி கலந்து பேசுவதற்காக கலெக்டர் பவுனி விடுத்த சம்மனை ஏற்று மதித்து சிவகங்கைப் பிரதானி சேதுநாட்டு முத்துராமலிங்க பட்டின சத்திரம் சென்று கும்பெனிக் கலெக்டர் பவுனியை சந்தித்தார்.[142] மறவர் சீமை முழுவதும் கி.பி.1794-ல் வறட்சி மிகுந்த பொழுது, வணிகர்களான பரங்கியர் தங்களது தானியங்களை சிவகங்கைச் சீமையில் விற்பனை செய்து இலாபம் ஈட்டுவதற்கு சுங்கத் தீர்வையிலிருந்து விலக்கு அளித்து உதவினர்.[143]

மேலும், பரங்கியரின் சிறைக்காவலில் உள்ள சேதுபதி மன்னரை விடுதலை செய்யும் இலக்காக சேதுநாட்டின் தென்பகுதியில் கி.பி.1799 - ஏப்ரல் - மே திங்களில் வெடித்த மக்களின் ஆயுதப் புரட்சியை அடக்க முடியாமல் தவித்த கும்பெனியாரது உதவிக் கோரிக்கைக்கு இணங்கி, சிவகங்கை மறவர்களை கமுதிக்கு அனுப்பி வைத்தனர். இவ்விதம் அகத்தில் கொந்தளித்த உணர்வுகளை அடக்கிக் கொண்டு ஆங்கிலேயருக்கு உதவி செய்தும் என்ன பயன்? தன்னலம் ஒன்றையே தாரக மந்திரமாகக் கொண்டு தழைத்து ஏகாதிபத்திய விசுவரூபம் எடுத்து இருந்த கும்பெனியார், சின்ன மருது சேர்வைக்காரரது நடவடிக்கைகளையே சந்தேகப்படத் தொடங்கினர். அதில் முதலாவது துபாஷ் ரங்கப் பிள்ளை விவகாரம்.

இராமநாதபுரம் சீமை பேஷ்குஷ் கலெக்டராகப் பணியேற்ற காலின்ஸ் ஜாக்ஸன், சென்னைக் கோட்டையில் இருந்து இராமநாதபுரம் வரும்பொழுதே, துபாஷ் ரங்கப் பிள்ளை என்பவரைக் கையோடு அழைத்து வந்தார். கலெக்டரது அலுவலகப் பணியில் மட்டுமல்லாமல், தனிப்பட்ட முறையில் கலெக்டரது ''வசதிகளை'' நிறைவு செய்வதற்காக. எங்கு பார்த்தாலும் கையூட்டு, இருவருக்கும் பை நிறைந்தது. வடக்கே கும்பெனியாரது கவர்னர் ஜெனரல் ஆன வாரன்ஹேஸ்டிங்க்ஸ் சில ஆண்டுகளுக்கு முன்னால் இந்திய மக்களை எவ்விதம் சுரண்டுவது என்ற ஊழல் உத்தியை உலகறியச் சொல்லிக் கொடுத்து இருந்தார் அல்லவா? அரசுத் தீர்வையாக வசூலிக்கப்பட்ட நெல்லின் மதிப்பை குறைவாக மதிப்பீடு செய்து அதனை வாங்கிக் கொண்ட வியாபாரிகளிடமிருந்து கமிஷன் பெற்றார்.

இத்தகைய ஊழல்கள் பெருமளவில் நடந்து இருப்பதை, டச்சு வியாபாரி மெய்ஜி என்பவர் கும்பெனித் தலைமைக்குப் புகார் செய்த பின்னரே சென்னைக்கு தெரிய வந்தது. கீழக்கரை பெரும் வணிகர் அப்துல்காதர் மரைக்காயர், சென்னை வணிகர் ஷமால்ஜி, எட்டையாபுரம் பாளையக்காரர், சிவகங்கைப் பிரதானி ஆகியோர்களும் துபாஷ் ரங்க

---

142. Military Consultations Vol. 189(A)/26.9.1794. P.3910
143. Military Consultations Vol. 183. P.96-1004.

பிள்ளையின் திருவிளையாடலில் சிக்கியவர்கள் என்பதும் தெரிய வந்தது. பேஷ்குஷ் இனத்தில், பிரதானி சின்ன மருது சேர்வைக்காரர் செலுத்திய 18,500 பக்கோடா பணத்தையும் துபாஷ் ரங்கபிள்ளை ஏப்பமிட்டு இருந்தார்.[144] கும்பெனியாருக்குச் சேரவேண்டிய 22,285 பக்கோடா பணத்தை அவர் கையாடல் செய்திருப்பதை மட்டும் வசூலிக்க கும்பெனித் தலைமை முனைந்தது.[145] ஊழல் வேந்தன் காலின்ஸ் ஜாக்ஸனுக்குப் பதிலியாக கலெக்டர் பணியேற்ற ரம்போலா லூஷிங்டனுக்கு பிரதானி சின்ன மருது சேர்வைக்காரர் மீதான சந்தேகம் வலுத்தது. கலெக்டர் ஜாக்சனிடம் சலுகைகள் பெறுவதற்கு பிரதானி இந்த பணத்தை கொடுத்து இருப்பாரோ என்பது லூஷிங்டனது ஐயம். அடுத்து, இராமநாதபுரம் இராமலிங்க விலாசம் அரண்மனையில் விசாரணையில் இருந்து தப்பிச் சென்ற பாஞ்சலங்குறிச்சி பாளையக்காரர் வீரபாண்டிய கட்டபொம்ம நாயக்கர் 5.6.1799 தேதி அன்று சிவகங்கைச் சீமை பழமானேரியில் சின்ன மருது சேர்வைக்காரரைச் சந்தித்துப் பேசியது கலெக்டரது சந்தேகத்தை மிகுதிப்படுத்தியது.[146] தாம் பதவி ஏற்று நான்கு மாதங்களாகியும் பாளையக்காரர் என்ற முறையில் தம்மை மரியாதை நிமித்தமாகக் கூட சந்திக்காத பாஞ்சாலங்குறிச்சி பாளையக்காரர் முந்தைய கலெக்டர் மீது கொண்டிருந்த அதே குரோத மனப்பான்மையுடன் இருப்பவர், சிவகங்கை சீமை பழமானேரி சென்று சிவகங்கைப் பிரதானியைச் சந்தித்தார் என்றால், அதில் ஏதோ முக்கியத்துவம் இருக்க வேண்டும் என்பது கலெக்டர் லூஷிங்டனது ஊகம். அந்த ஊகம் சரியானது என்பதை பிந்தைய வரலாற்று நிகழ்வுகள் புலப்படுத்தின.

கி.பி.1799 ஆம் ஆண்டின் தமிழகத்து அரசியல் வரைபடத்தை ஒருமுறை உற்றுப் பார்த்தால் தமிழக அரசியல் நிலையை அறிவதற்கு உதவுவதாக இருக்கும். வடக்கே செங்கல்பட்டு, நெல்லூர், ஜில்லாக்களை கி.பி.1781-ல் நவாப்பிடமிருந்து கும்பெனியர் பெற்று இருந்தனர். வடமேற்கே, சேலம், கோவை ஜில்லாக்களும், ஆற்காடு, திண்டுக்கல் சீமையையும், கி.பி.1792-ல் திப்புசுல்தானிடமிருந்து மூன்றாவது மைசூர் போரின் முடிவில் பறிக்கப்பட்டது. திருச்சி, மதுரை, திருநெல்வேலி ஜில்லாக்கள். கி.பி.1792-ம் ஆண்டு உடன்படிக்கைப்படி பரங்கியரது வரிவசூலுக்கு கட்டுப்பட்டு இருந்தது. கி.பி.1795-ல் சேதுபதி மன்னரை சிறையில் தள்ளிவிட்டு மறவர் சீமை (இராமநாதபுரம் ஜில்லா) நிர்வாகம் மேற்கொள்ளப்பட்டது - தஞ்சாவூர் மன்னருக்கும் கும்பெனியாருக்குமாக அர்த்த நாரீசுவர நிலையில் தஞ்சாவூர் சீமை இருந்து வந்தது.

---

144. Military Consultations Vol.105(A) P.2513-14
145. Military Consultations Vol. 95/9.7.1799. P: 1-104.
146. Board of Revenue Consultations Vol.229/10.6.1799. P.4853-91

இவ்விதம், தமிழகத்தின் அனைத்துப் பகுதியும் கும்பெனியாரது கையில். தட்டிக் கேட்பதற்கு ஆள் இல்லாத தண்டல்காரனாக கும்பெனி நிர்வாகம் செயல்பட்டது. முந்நூற்று ஐம்பது ஆண்டுகளுக்கு மேலாக விஜயநகரப் பேரரசின் மேலாண்மையின் கீழ் இந்தப் பகுதிகளில் சிற்றரசர்களாக விளங்கிய பாளையக்காரர்களை, கும்பெனியார் மிகவும் மோசமாக நடத்தினர். பொன் முட்டையிடும் வாத்துக்களாக அவர்களை நினைத்து அவர்களையும் அவர்களது குடிகளையும் கசக்கிப் பிழிந்தனர்.[147] தங்களது கஜானாக்களை நிரப்பினர். இவர்களது முகவர்களான குத்தகைதாரர்களும், கணக்கப் பிள்ளைகளும் வசூல் பணியில் செய்து வந்துள்ள திருகுதாளங்களையும் கண்டு கொள்ளவில்லை.[148] பாளையக்காரர்களது செல்வாக்கை செல்லாக்காசாக்கும் வகையில் மக்களிடம் உள்ள செல்வாக்கையும் சலுகைகளையும் நீக்க முயன்றனர். ஆண்டுக்கொரு முறை விசேஷ காலங்களில் பாளையக்காரர்களுக்கு குடிகள் அளித்து வந்த காணிக்கைகளையும் கும்பெனியாரே பெற்றுக்கொண்டனர்.[149] தவணைகளில் இத்தொகையை செலுத்தாத பாளையக்காரர்களை நீக்கி தண்டித்தனர்.[150] பாரம்பரியமாக வந்த பாளையக்காரர் பரம்பரையினருக்குப் பதிலாக அவர்களுக்கு எதிரான பாளையக்காரரது பங்காளிகளை, புதிய பாளையக்காரர்களாக நியமனம் செய்தனர். பரங்கிகளுக்கு வேண்டியது பணம்தானே!

இதே போல, குடிகளையும் கொடுமைப்படுத்தி வந்தனர். பணம் செலுத்தாத குடிகளை காவலில் அடைத்து வைத்தனர். அவர்களது ஜீவனத்திற்கு ஒருமணி கூட இல்லாமல் அவர்களது தானியங்களை பலவந்தமாக எடுத்துச் சென்றனர். ஏன் பண்ட பாத்திரங்களைக் கூட விட்டு வைக்காமல் கைப்பற்றி சென்றனர்.[151] இவைகளைக் கேட்பதற்கு எந்த நிர்வாகமும் இந்த நாட்டில் இல்லை. உயர்ந்து கொண்டே சென்ற விலைவாசிகளையும் கட்டுப்படுத்தவும் இல்லை. வெறுப்பும் வெஞ்சினமும் மக்களிடம் வளர்ந்து வந்தது.

இவ்வளவு, இக்கட்டான நிலையில் வறட்சி மிகுந்தது. கி.பி.1794-ல் ஏற்பட்டதை தொடர்ந்து கி.பி.1798-ல் தென்மாவட்டங்கள் அனைத்திலும், பஞ்சம் பரந்து, படிந்து காணப்பட்டது. பஞ்சத்தின் பயங்கரமான பார்வையில் இருந்து தப்ப, மக்கள் கூட்டம் கூட்டமாக அவர்கள் பிறந்து வளர்ந்த பூர்வீக கிராமங்களை விட்டு வெளியேறினர்.[152]

---

147. Board of Revenue Consultations Vol.2 (1.10.1799) P:2-3
148. Francis - Gazetteer of Madurai (1911) P: 186
149. Secret Sundries - Vol.21 - P: 1080-81.
150. Ibid - P: 1080-81
151. Ibid - P: 1045-48
152. Secret Sundries - Vol.21. P: 1108-1110

எஞ்சி இருந்த குடிகளும் பாளையக்காரர்களும், பரங்கியரை விரட்டி அடிக்க அதுதான் தக்க தருணமாகக் கருதினர். தமிழகத்தில் பல நூற்றாண்டுகாலமாக இருந்து வந்த பழைய சமூக அமைப்பை மன்னன் உயிர்த்தே மலர்தலை உலகம் என்பதை நிறுவுவது பற்றிச் சிந்தித்தனர். இந்த எண்ணத்தை ஊக்குவிக்கும் வகையில் கும்பெனியாரது கொடுமை மிகுந்து வளர்ந்தது.

ஏற்கனவே கிஸ்திப் பணம் கட்ட இயலாததற்காக துரத்தப்பட்ட சாப்டூர் பாளையக்காரர், கோம்பையா நாயக்கர்கள் போல இப்பொழுது கிஸ்தி கட்ட மறுத்த, பாஞ்சாலம் பாளையக்காரர் வீரபாண்டிய கட்டபொம்மன், தேவதானப்பட்டி பூஜாரி நாயக்கர் ஆகியோரையும் தூக்கில் ஏற்றினர். கட்டபொம்மனது பிரதானி சிவசுப்பிரமணிய பிள்ளையை, நாகலாபுரத்திலும், கட்ட பொம்மனது உறவினர் சௌந்தரபாண்டியனை கோபாலபுரத்திலும் சிரச்சேதம் செய்தனர். கட்டபொம்மனது குடும்பத்தினரை பாளையங்கோட்டையிலும், பூந்தமல்லியிலும் சிறைவைத்தனர்.[153] கட்டபொம்மனது ஆதரவாளர்களான காடல்குடி, குளத்தூர், கோல்வார்பட்டி, ஏழாயிரம் பண்ணை, நாகலாபுரம், பாளையக்காரர்களது பாளையங்களை பறிமுதல் செய்தனர்.[154] அவர்களது கோட்டைகளை இடித்துவிட்டு அவர்களுக்கு பக்கபலமாக நின்று பாடுபட்ட எட்டையாபுரம், மயில்மாந்தை, மணியாச்சி, பாளையகாரர்களுக்கு அவர்களது பாளையங்களைப் பகிர்ந்தளித்தனர்.[155] இத்தகைய நிகழ்வுகள் மீண்டும் நிகழ்ந்து விடக்கூடாது என்பதற்காக கும்பெனியார் கொடூரமான முறையில் இந்த நடவடிக்கைகளை மேற்கொண்டனர். என்றாலும், இன்னும் மோசமான நிகழ்வுகள் காத்து இருக்கின்றன என்பதை அவர்களால் அப்பொழுது ஊகித்துக்கொள்ள முடியவில்லை. அடுப்பில் உள்ள பானையில் கொதிக்கின்ற பால் முழுவதும் சூடேற சூடேற ஆவியாகி மறைவதில்லையே! மாறாக, கொதிக்கும் பால் பாத்திரத்தின் விளிம்பைக் கடந்து, வழிந்து அதனை சூடேற்றி கொதிக்கச் செய்த அடுப்புத் தீயில் விழுந்து அதனை அணைக்கத்தானே முயற்சி செய்கிறது!

கும்பெனியாரதும், அவர்களது குத்தகைதாரர்களாலும் அட்டுழியங்களுக்கு ஆளாகிய விவசாயி, லஞ்ச லாவண்யத்தாலும், விலைவாசி உயர்வாலும், நடை பிணமாகிவிட்ட குடிமக்கள், பாரம்பரிய உரிமைகளையும், மக்களது பேராதரவையும் இழந்து தவித்த பாளையக்காரர்கள், பெருங்குடி மக்கள், இவர்கள் அனைவரும் கொதிக்கும் பாலைப்போல ஓரணியில் கிளர்ந்து எழுந்து நிற்கத் தொடங்கினர்.

---

153. Revenue Consultations. Vol.98/9.11.1799. P: 2948-49
154. Rajayyan. Dr. K. - History of Madura (1974) P: 356.
155. Ibid - P: 356

வீரத்தின் விளை நிலம் மானத்தின் மரபு போற்றும் சின்ன மறவரது சிவகங்கைச் சீமை மக்களும் மன்னரும் எந்த அணியில்? மக்கள் அணியிலா? பரங்கியரது கைக்கூலிகள் அணியிலா?

## கும்பெனியாரை எதிர்த்து

கடந்த ஐந்து ஆண்டுகளில், கும்பெனித் தளபதிகளும் அலுவலர்களும் தம்முடன் கொண்டு இருந்த தொடர்பை சில மணித்துளிகள் நினைவு படுத்தி பார்த்தார் சிவகங்கைப் பிரதானி. அவர்கள் கொண்டு இருந்த நேயம், நகமுக நட்பு என்பதைப் பல நிகழ்ச்சிகளும் அனுபவங்களும் அறிவுறுத்தின. என்ன இருந்தாலும் அவர்கள் அந்நியர்கள்தானே என்ற ஆறுதல். இந்த மண்ணின் மாண்பை அறியாதவர்கள், இந்த மண்ணின் மைந்தர்களை மதிக்கும் மனப்பக்குவம் இல்லாதவர்கள். இதனால் தான் இந்த நாட்டின் குடிதழீஇ, கோலோச்சிய மன்னர்களையே மமதையுடன் நடத்தி வந்துள்ளனர். குறிப்பாக, பாஞ்சாலங்குறிச்சி பாளையக்காரர் கட்ட பொம்மனை அவர்கள் நடத்தியவிதம், சிவகங்கைச் சீமை காடுகளில் தஞ்சம் புகுந்தவர், தவறுதலாக தொண்டமான் சீமை எல்லைக்குள் சென்றவரைப் பிடித்து, தூக்கில் ஏற்றிய துயர சம்பவம் - சிவகங்கைப் பிரதானியின் இதயத்தைத் துளைத்து வந்தது.

இன்னும் திண்டுக்கல் சீமை, கொங்குநாடு, வயநாடு, கன்னடநாடு ஆகியவைகளில் இருந்து கிடைத்துள்ள செய்திகளும் கும்பெனியாரது கொடுமைகளுக்கு மகுடமாகவல்லவோ இருக்கின்றன![156] இனியும் கும்பெனியாருடன் நேச முறையில் நடந்து கொள்வது அவர்களது அக்கிரமங்களுக்கு உடந்தையாகிவிடும். அவர்களது அதிகாரப்பிடிப்பை எங்ஙனம் அகற்றுவது? அதற்கான வழிமுறைகள் - இவைகள் பற்றிய சிந்தனைகள் தொடர்ந்தன. இதற்கிடையே விருபாட்சி பாளையக்காரர் கோபாலநாயக்கர் தொடர்பு ஏற்பட்டது.[157] மறவர் சீமையில் கும்பெனியாருக்கு எதிராக ஆயுதப்புரட்சியை ஏற்பாடு செய்த சித்திரங்குடி மயிலப்பனது நேரடியான அறிமுகமும் சிவகங்கை பிரதானிகளுக்கு கிடைத்தது.[158] கும்பெனியாரது எதிர்ப்பு அணியின் தளமாக சிவகங்கை மாறியது. தென்னாட்டு கிளர்ச்சிக்காரர்கள் அனைவரும் திண்டுக்கல் கோட்டையில் ரகசியமாகக் கூடி கும்பெனியாருக்கு எதிரான அணியொன்றை அமைத்தனர். இந்தக் கூட்டத்தில் கலந்துகொண்டு திரும்பிய சின்ன மருது சேர்வைக்காரர் பற்றிய இரகசியத் தகவல்களும் கலெக்டர் லூஷிங்டனுக்கு

156. *கமால்.எஸ்.எம். Dr. - மாவீரர் மருதுபாண்டியர் (1989) பக்: 40-41*
157. Military Consultations - Vol.290
158. Selection from the History of Tamil Nadu (1978) P: 228

கிடைத்துவிட்டது.[159] சிவகங்கைச் சீமையும், கும்பெனியாருக்கு எதிர் அணி என முடிவு செய்து அவரது நடவடிக்கைகளை இரகசியமாக கண்காணிக்கத் தொடங்கினார்.[160]

பாளையங்கோட்டை சிறைச்சாலையில் இருந்து ஊமைத்துரையும் அவரது தோழர்களும் 2.2.1801 தப்பி வர உதவியது. மீண்டும் பாஞ்சாலங்குறிச்சியை சிறந்த ராணுவ தளமாகத் திகழ சிவகங்கைச் சீமை மறவர்களும் ஆயுதங்களும் பயன்பட்டன. 24.5.1801 நடைபெற்ற போரில் கும்பெனியாரது அசுர முயற்சிகளை தோல்வியுறச் செய்தன. பின்னர் 10.6.1801 தேதி அரண்மனை சிறுவயலில் ஊமைத்துரை சிவகங்கைப் பிரதானிகளிடம் அடைக்கலம் பெற்றது. சிவகங்கையில் வகுத்த திட்டப்படி தளபதி மயிலப்பன் கும்பெனியார் நிர்வாகத்தில் இருந்த மறவர் சீமையில், கிளர்ச்சிகளைத் தொடர்ந்து கும்பெனி நிர்வாகத்திற்கு பெருத்த இழப்பீடுகள் ஏற்பட்டது. இவையனைத்தும் கலெக்டர் லூஷிங்டன் திரட்டிய இரகசியச் செய்திகள்.

பாஞ்சாலங்குறிச்சிப் போரினை வெற்றிகரமாக முடித்த தளபதி அக்கினியூ, மறவர்சீமைக் கிளர்ச்சிகளை அடக்கி ஒடுக்கவும் கும்பெனித் தலைமை உத்திரவிட்டது.[161] சிவகங்கைச் சீமையின் நிலையினை நன்கு ஆராய்ந்து பெரும் போர் ஒன்றினைத் தொடர்வதற்கான திட்டத்தை புதுக்கோட்டை தொண்டமானது துணையுடன் திரட்டினான் அக்கினியூ. அத்துடன், சிவகங்கைச் சீமை மக்களை பிரதானிகள் மருது சகோதரர்களது பிடிப்பில் இருந்து நீங்குமாறு செய்ய இரண்டு உத்திகளைக் கையாண்டான்.

முதலாவது, சிவகங்கை அரச குடும்பத்திற்குச் சம்பந்தமில்லாத பிரதானிகள், மருது சேர்வைக்காரர்கள், இறந்து போன மன்னர் முத்து வடுகநாதருக்குப் பின்னர் சிவகங்கை அரசியல் தலைவியாக ஒரு பெண்மணி (அவரது மனைவி ராணி வேலுநாச்சியார்) பொறுப்பு ஏற்றுள்ளதால் அவரது பணியாளர்களான மருதுசகோதரர்கள் தங்களைப் பிரதானிகளாக அறிவித்துக்கொண்டு ராணியாரையும், சிவகங்கை மக்களையும் அடக்கி ஒடுக்கி சர்வாதிகாரம் செய்வதுடன் சிவகங்கைச் சீமையை அழிவுப் பாதையில் இட்டுச் செல்கின்றனர். சிவகங்கைச் சீமையின் பேஷ்குஷ் தொகையினை வசூலிப்பதற்கு சட்டப்படி உரிமை பெற்றுள்ள கும்பெனியாருக்கு எதிராக சிவகங்கைச் சீமை மக்கள், ஆயுதம் எடுக்கக் கூடாது என்றும், மருது சகோதரர்களை விட்டு நீங்கி சிவகங்கையின் முறையான ஜமீன்தார் விசுவாசத்துடன் நடந்துகொள்ள வேண்டும் என்ற பொது அறிவிப்பை 6.7.1801-ல் வெளியிடச் செய்தான்.[162]

---

159. Selections from the History of Tamil Nadu (1978) P: 228
160. Papers relating to polegar war (selections)
161. Ibid.
162. Military Consultations Vol.285(A) 28.9.1801. P: 5043-44

இரண்டாவதாக, மருது சகோதரர்களது சூழ்ச்சியில் இருந்து தப்பி அறந்தாங்கி காட்டில் தலைமறைவு வாழ்க்கையில் இருந்த நாலுக்கோட்டைப் பாளையத்தின் பங்காளியான படைமாத்தூர் கௌரி வல்லப ஒய்யாத் தேவரை புதுக்கோட்டைத் தொண்டமான் மூலம் தேடிப்பிடித்து அழைத்து வந்து 12.9.1801 தேதி சோழபுரத்தில் சிவகங்கை ஜமீன்தார் என முடிசூட்டினான்.[163]

இந்த நடவடிக்கைகளுக்கு உடனடியான பலன் ஏற்பட்டது. மருது சகோதரர்களை தங்களது மாபெரும் தலைவர்களாக மதித்துச் செயல்பட்ட மக்கள் கூட்டம், பிரித்தாளும் கொள்கையில் தேர்ச்சி பெற்ற கும்பெனியாரது உத்திகளில் சிக்குண்டு சோழபுரம் நோக்கி ஓடியது. கும்பெனிப் படைகளைச் சந்திப்பதற்கு காளையார்கோவில் கோட்டையிலும் பக்கத்துக் காடுகளிலும் உரிய ஏற்பாடுகளைச் செய்த சிவகங்கை பிரதானிகளுக்கு இது பெருத்த ஏமாற்றத்தை அளித்தது, என்றாலும் மனம் தளராது செப்டம்பர் 30, அக்டோபர் 1 ஆகிய நாட்களில் ஒக்கூர், சோழபுரம், அரண்மனை சிறுவயல் வழியாக காளையார் கோவில் நோக்கி வந்த கும்பெனி படைகளுடன் பிரதானிகள் மோதினர். முடிவு தோல்வி.[164]

கி.பி.1801-1802ல் சிவகங்கைச் சீமையில் நடைபெற்ற நிகழ்வுகளைப் பற்றி என்னுடைய ''மாவீரர் மருது பாண்டியர்'' என்ற நூலில் விவரமாக வரையப்பட்டுள்ளதால், அவைகளை மீண்டும் இங்கு விரிவாக எழுதப்படவில்லை.

எஞ்சியவர்களுடன் காட்டிற்குள் தப்பிய மருது சகோதரர்களை கும்பெனிப்படைகள் ஒக்கூருக்கும் சோழபுரத்திற்கும் இடைப்பட்ட காட்டில் 19.10.1801 தேதியன்று கைப்பற்றினர்.[165] 24.10.1801 தேதி காலையில் திருப்புத்தூர் கோட்டையில் தூக்கில் ஏற்றி[166] சிவகங்கைச் சீமையின் வீரவரலாற்றை முடித்தனர்.

சிவகங்கை மன்னர் வேங்கன் பெரிய உடையாத் தேவர் கும்பெனியாருக்கு எதிரான நடவடிக்கை எதிலும் நேரடியாகக் கலந்து கொள்ளவில்லையென்றாலும், பிரதானிகளது அத்துமீறல்களுக்கு உடந்தையாக இருந்தார் என்ற குற்றச்சாட்டு. குற்றவாளிகள் அல்லாமல் குற்றமற்றவர்களும் தண்டிக்கப்படுவது உண்டு. சிவகங்கை போராளிகளைப் பொறுத்த வரையில், அவர்கள்,

---

163. கமால்.எஸ்.எம். - மாவீரர் மருதுபாண்டியர் (1989) பக்; 136, 137
164. Military Consultations Vol. 288(A) 1.10.1801. P: 6864-66
165. Military Consultations Vol. 289 (21.10.1801) P: 7671-75
166. Military Consultations Vol. 289 (24.10.1801) P: 7676-78

தண்டிக்கத்தக்கவர்களா? அவர்களுக்கு தண்டனை வழங்குவதற்கு கும்பெனியாருக்கு தகுதி இருக்கிறதா? இவையெல்லாம் வேறு விஷயம். ''வல்லான் வகுத்ததே வாய்க்கால்'' என்பது போல அன்று கும்பெனி நிர்வாகம் ''சகல அதிகாரமும் சர்வ வல்லமையும்'' படைத்த வெடிமருந்து வீரனாக விளங்கியது. நேரடியாக அவர்களை எதிர்த்தவர்களை சிவகங்கைச் சீமையில் அழித்து ஒழித்த பிறகு, அவர்களது எதிர்ப்பாளர்களுக்கு உடந்தையாக ஆதரவாக இருந்தவர்கள் பட்டியல் ஒன்றை கும்பெனித் தலைமை தயாரித்தது. இதில் இராமநாதபுரம் ஜகந்நாத ஐயன் - அன்னியூர் கள்ளர் தலைவர்களான சடைமாயன், கூரிசாமித் தேவர், முள்ளூர் குமரத்தேவன், சிவகங்கை துரைச்சாமி, (சின்ன மருது சேர்வைக்காரர் மகன்) மற்றும் திருநெல்வேலிச் சீமை கிளர்ச்சிக்காரர்கள் என எழுபத்து இரண்டு பேரைக் குறித்தனர். இந்த பட்டியலின் தொடக்கமாகச் சிவகங்கை மன்னர் வேங்கன் பெரிய உடையாத் தேவர் பெயரை வரைந்துயிருந்தனர். 4.10.1801-ம் தேதி காளையார் கோவில் காடுகளில் அவரைக் கண்டு பிடித்து காவலில் வைத்து இருந்தனர்.[167]

இவர் சிவகங்கை மன்னராக கி.பி.1790-ல் பதவி ஏற்ற சில மாதங்களில், சிவகங்கைச் சீமை நிர்வாகத்தில் பிரதானி சின்னமருது சேர்வைக்காரரது சுயேச்சையான செயல்பாடுகள் மேலோங்கி இருப்பதை உணர்ந்து வேறு வழியில்லாமல் தமது கண்களை மூடிக்கொண்டு, காதுகளைப் பொத்திக்கொண்டு நிர்வாகத்தில் இருந்து ஒதுங்கி இருந்தார். இருப்பினும், மிகுந்த ஆன்மிக உணர்வுடன் திருக்கோயில்கள், திருமடங்கள், சத்திரங்கள் ஆகியவைகளைச் செம்மையாகப் பராமரிப்பதில் கண்ணும் கருத்துமாக இருந்தார். மற்றும் சமுதாயத்திற்குச் சேவை செய்யும் சான்றோர்களை ஆதரித்துப் போற்றவும் இவர் தவறவில்லை. இதற்காக இவர் பல சர்வமான்யங்களையும் தர்மாசனங்களையும் ஜீவித இனாம்களையும் வழங்கி உதவினர். கிடைத்துள்ள பதிவேடுகள், செப்பு பட்டயங்களில் உள்ள பதிவுகளின் படி அவரது அறக்கொடைகள்[168] பட்டியலிட்டுக் கீழே கொடுக்கப்பட்டுள்ளன.

---

167. Military Consultations Vol. 288 (A) (6.10.1801. P: 6886.

168. சிவகங்கை சமஸ்தானப் பதிவேடுகள்.

## விசயரகுநாத வேங்கன் பெரிய உடையாத்தேவரின் அறக்கொடைகள்

| கி.பி. | அறக்கொடை விவரம் | அறக்கொடை பெற்ற விவரம் |
|---|---|---|
| 1785 | இல்லக்கா | அழகன் குளம் சத்திரம் |
| | ஆத்திக்குளம் | நரிக்குடி சத்திரம் |
| | நல்லூர் | நரிக்குடி சத்திரம் |
| | இடக்குழி | அழகன் குளம் சத்திரம் |
| | கருமான் ஏந்தல் (மாறநாடு வட்டம்) | இராம ஐயர், ஜீவிதம் |
| | | அழகன் குளம் சத்திரம் |
| | கீழ்குடி, பொன்னி ஏந்தல் விளாங்காட்டூர் | வெங்கடாசலம் ஐயர், தர்மாசனம். |
| 1786 | சின்ன கடம்பங்குளம் | நாகலிங்கம் பிள்ளை, ஜீவிதம் |
| | வரிசை ஊர் (மாறநாடு வட்டம்) | ஊழியமான்யம். |
| | வலக்காணி | ரங்க ஐயங்கார், லட்சுமிபதி சாஸ்திரி தர்மாசனம். |
| | இலுப்பக்குளம் (மாறநாடு வட்டம்) | ஜீவிதம். |
| | நண்டுகாச்சி (பார்த்திபனூர் வட்டம்) | வெங்கட்ட ராம ஐயர், ஜீவிதம். |
| | தர்மம் (பார்த்திபனூர் வட்டம்) | தர்மாசனம். |
| | எடுத்தான் ஏந்தல் (மாறநாடு கூட்டம்) | தர்மாசனம். |
| 1787 | நாகணி | ஊழியமான்யம். |
| | தோப்புடை இடையன்குளம் (மாறநாடு வட்டம்) | சுப்பு அவதானி, தர்மாசனம். |
| | வத்தா பேட்டை (பார்த்திபனூர் வட்டம்) | ஊழியமானியம். |
| 1788 | கார்குடி | காளையார் கோவில். |
| 1789 | ஒச்சன்தட்டு பாசிப்பட்டணம், | காசியில் உள்ள சத்திரம் இனாம் |
| | காவதுகுடி மாங்குளம் (ஆருர் வட்டம்) | கலியனேரி சத்திரம், இனாம் பெருமாள் கோவில், மானாமதுரை. |

| | | |
|---|---|---|
| | நற்கணிக்கரை, அரும்பூர் | கலியநகரி சத்திரம். |
| 1790 | மேலச்செம்பொன்மாரி | திருவண்ணாமலை மடம், மருதநாயகப் பண்டாரம், குன்றக்குடி மடத்திற்கு, தர்மாசனம். |
| | ஆலங்குளம் | நரிக்குடி சத்திரம். |
| | அயினாசேரி (மங்கலம் வட்டம்) | வீரராகவ ஐயர், தர்மாசனம். |
| 1791 | அமராவதி பன்னிவயல் (அமராவதி வட்டம்) | வெங்கடாச்சாரியார், தர்மாசனம் லெட்சுமண ஐயங்கார், தர்மாசனம். |
| 1791 | சாத்தான் கோட்டை | ஹரி நாராயண பண்டிதர். |
| | முடக்கண்ணு ஏந்தல் (அமராவதி வட்டம்) | வேதாந்த ரகுநாத ஐயங்கார் தர்மாசனம். |
| 1792 | தாணாவயல் | நன்னிசேர்வை தண்ணீர்பந்தல், மடம். |
| 1793 | சமையன் ஏந்தல் | திருப்பதி ஐயங்கார். |
| | இஞ்சி வயல் (சாக்கைவட்டம்) | குருஐயன், தர்மாசனம். |
| 1794 | இடையன்குளம் (அமராவதி வட்டம்) | சேது ஐயர், தர்மாசனம். |
| 1795 | மாணிக்கன் ஏந்தல் (மாறநாடு வட்டம்) | தர்மாசனம். |
| | பொன்னி (மல்லல் வட்டம்) | வைத்தியம் நரசிம்ம ஐயர், தர்மாசனம்.. |
| | பாளையாரேந்தல் (பார்த்திபனூர் வட்டம்) | கலுங்கடி வினாயகர் கோவில், ஊழியமான்யம். |
| | ஓட்டுவயல் (மாறநாடு) | அழகர் சாமி. |
| | சுண்ணாம்பூர் (திருப்புத்தூர் வட்டம்) | மதுரை மீனாட்சி சுந்தரேசுவரர் கோயில், சர்வமான்யம். |

| | | |
|---|---|---|
| | வாகுடி (பார்த்திபனூர் வட்டம்) | திருப்பரங்குன்றம் சுப்பிரமணிய சுவாமி கோயில்.. |
| | தென்வேலி | தர்மாசனம். |
| 1796 | சித்தனேந்தல் | புல்வாய்நாயகி அம்மன் கோவில், பாகனேரி.. |
| | புதுக்குளம் | காசி விசுவநாதர் ஆலயம். |
| | அரிமண்டபம் | அனந்த கிருஷ்ண ஐயர், தர்மாசனம். |
| | சாத்தணி (எமனேஸ்வரம் வட்டம்) | சத்திரம், தர்மாசனம். |
| 1797 | சாணார் மருதங்குடி | காளீஸ்வர ஐயர், வேங்கடசாஸ்திரி. |
| | சடையனேந்தல் | திருப்பதி ஐயங்கார். |
| | சோமகிரி | அருணாசலம் செட்டியார். |
| | கல்குளம் | அனந்த நாராயண ஐயர், தர்மாசனம். |
| 1798 | கொஞ்சினி (சாக்கை வட்டம்) | ரத்தின ஐயங்கார், தர்மாசனம். |
| | காக்கை ஏந்தல் | தர்மாசனம். |
| | கடியவயல் (அமாராவதி வட்டம்) | தர்மாசனம். |
| 1799 | கடியவயல் | காடன் செட்டி சத்திரம், |
| | சேந்தன் வயல் (காளையார் கோவில் வட்டம்) | குன்னக்குடி ரெங்கசாமி ஐயங்கார் வகையறா தர்மாசனம். |
| | புளிச்சக்குளம், கானூர் | இராமசாமி ஐயர், தர்மாசனம். |
| | ஆதியேந்தல் | சுப்பிரமணிய ஐயர், தர்மாசனம். |
| 1799 | பாப்பான் ஏந்தல் (அமராவதி வட்டம்) | காடன்செட்டி சத்திரம், குன்னக்குடி. |
| | வண்ணாரவயல் | வெங்கடாசலம் ஐயர். |
| | வாணியங்குடி, மிளகனூர் | சிவ பூஜை தர்மம், தர்மாசனம். |
| | பரமக்குளம் | தண்ணீர்ப்பந்தல் தர்மம், தர்மாசனம். |
| | புளிச்சக்குளம் | இராமசாமி ஐயர், தர்மாசனம். |

1800 கூரான் ஏந்தல் பட்டம் — சுந்தரசாஸ்திரி வகையறா சுந்தரம் ஐயர், முத்து ஐயர், தர்மாசனம்.

இந்த நிலக்கொடைகள் பற்றி கிடைத்துள்ள சில செப்பேடுகளின் உண்மை நகல் இங்கு கொடுக்கப்பட்டுள்ளது.

## 1. மச்சூர் செப்பேடு

இந்தச் செப்பேடு கி.பி. 1782ல் விசைய ரகுநாத பெரிய உடையாத் தேவர் அவர்களால் திருப்பனந்தாள் பண்டார சன்னிதிகளுக்கு வழங்கப்பட்டுள்ளது. ஏற்கனவே முத்து வடுகநாதத் தேவரது ஆட்சியில், காசியில் சிவகங்கைச் சீமையின் முதல் மன்னரது புண்ணியமாக மடமும் கட்டி அன்னதானக் கட்டளையினை ஏற்படுத்தினார். அந்த தர்மம் சிறப்பாகத் தொடர்ந்து நடைபெறுவதற்கு மன்னர் ஆணையார் கோட்டை மச்சூர் ஆகிய இரண்டு ஊர்களையும் சர்வ மானியமாக வழங்கி இருப்பதை இதைச் செப்பேடு தெரிவிக்கின்றது. இந்தச் செப்பேடும் ராணி வேலுநாச்சியார் சார்பாக விசைய ரகுநாத பெரிய உடையாத் தேவர் வழங்கி இருப்பதை ஊகித்து அறிய முடிகிறது.

1. ஸ்ரீ விசுவேசுவரன்னபூரணி சகாயம்
2. ஸ்வஸ்திஸ்ரீமன் மகாமண்டலேசுவரன்
3. அரியராய தள விபாடன் பாஷைக்கு தப்பு
4. வராத கண்டன் கண்டனாடு கொண்டு கொண்டனாடு கெ
5. டாதான் பாண்டி மண்டல ஸ்தாபனாசாரியன் தொண்ட
6. மண்டல சண்டப் பிறசண்டன் ஈளமுங்கா
7. ங்கும் யாட்பாணராயன் பட்டணமுமெம்ம
8. ண்டமுங் கண்டு கெசவேட்டை கொண்டருளிய ராச
9. திராசன் ராச பரமேசுவரன் ராசமாற்த்தாண்
10. டன் ராசகுல திலகன் அரசராவணராயன்
11. அந்தம்பர கண்டன் தாலிக்கு வேலி தளஞ்சிங்கம்
12. இளஞ்சிங்கம் சேதுகா.
13. வலன் சேதுமூல ரட்சா
14. துரந்தரன் தனுக்கோ
15. டிகாவலன் தொண்
16. டியந்துறை காவல
17. ன் செம்பிவளநா
18. டன் தேவை நகராதிபன் முல்லை மாலி
19. கையான் அனுமக்கொடி கெருடக்
20. கொடி புலிக்கொடியுடையான் மும்மதயானை
21. யான் செங்காவிக்குடை செங்காவிக்கொ
22. டி செங்காவி சிவிகையான் அசுபதி கெச
23. பதி தனபதி நரபதி ரவிகுலபதி யிரணியகெற்

24. பயாசி ரெகுநாத சேதுபதியவர்கள் பிறிதிவி
25. ராச்சிய பரிபாலனம் பண்ணியருளாநின்ற
26. சாலியவாகன சகாத்தம் 1704 கலியுக
27. சாகத்தம் 4883 இதன்மேல் செ
28. ல்லாநின்ற சுபகிறது வருசம் ஆனிமாதம் 12 தேதி சுக்கிலபட்
29. சமும் ஸ்வதிவாரமும் திறையோதெசியும் அனுச நட்சத்
30. திரமும் சுபயோக சுபகரணமும் கூடின சுபதி
31. னத்தில் பாண்டி தேசத்தில் பொதியமா மலையான்
32. வைகை ஆறுடையான் அனுமக்கொடி கெருடக்கொடி புலிக்
33. கொடி கட்டிய புரவலன் மும்முரச திருமுன்றிலான் திக்கெ
34. ட்டும் ஆணை செலுத்திய சிங்கம் இரவிகுல சேகரன் ஆற்று
35. பாச்சி கடலில் பாச்சி தொண்டியந்துறை காவலன் வாசு
36. பேயான் அரசு நிலையிட்ட விசைய ரெகுனாதப் பெரியுடை
37. யாத் தேவரவர்கள் தருமபுரம் முத்துக் குமாரசுவாமி தே
38. சிகர் சீஷரான காசிவாசிக்குமரகுருபரத் தம்பிரானவ
39. ர்களுக்கு தற்ம சாதனம் தாம்பிர சாதன பட்டையங்
40. கொடுத்தப்படி தற்மம் சாதனமாவது காசியிலே கெங்கா தீத்
41. திலே பெரிய உடையாத்தேவரவர்கள் தற்மம் பிராமண
42. போசன மாஹேசுவரபூசை அன்னதானம் நடப்பிவைக்
43. குறதுனாலே இந்த தற்ம்மத்துக்கு விட்டுக் கொடுத்த கிறாம
44. மாறவது பாண்டிதேசத்தில் கீள்மங்கல நாட்டில் திருக்கானை
45. ப்பேர் கூற்றத்தில் ஆனையார்கோட்டை கிறாமத்துக்கு பெருனான்
46. கெல்கையெல்கையாவது கீழ்பாற்க்கெல்லை யெலிக்கொளத்துக்கு
47. மேற்க்கு தென்பாற்க்கெல்கை இராசக்கினிமிண்டான் கோட்டைக் க
48. ண்மாய்க்கும் கோட்டைக்காட்டு யெல்கைக்கும் வடக்கு மேல்பாற்க்கெ
49. ல்கை நேமத்து யெல்கைக்கும் விறுத வயலுக்கும் கிழக்கு வடபாற்
50. க் கெல்கை ராதாநல்லூர் முடுக்கினாங் கோட்டை தூக்கினங்க
51. ரைக்கு தெக்கு இந்த பெருநான்கெல்கைக்கு உள்பட்ட ஏந்தல் புர
52. வடை நஞ்சை புஞ்சை திட்டு திடலும் இதுவும் ஒரூர் வட்டகையில்
53. மச்சூர் கிறாமத்துக்கு பெருநான்கெல்கை கீழ்பாற்கெல்கை
54. பிலாத்துக்கு மேற்க்கு தென்பாற்கெல்கை விறுசுழி ஆற்றுவட
55. கரைக்கு வடக்கு மேல்பாற்க்கெல்கை விரித்தம் வயலுக்கு கி
56. ழக்கு வடபாற்க்கெல்கை வட்டாணம் வேம்ப கண்மாய்தென்
57. ங்கரை சேதுபாதைக்கு தெற்கு இந்த பெருனாங்கெல்கை
58. க்குள்பட்ட யேந்தல் புரவடை நஞ்சை புஞ்சை திட்டு திடலும்
59. சேத்து யிந்த இரண்டு கிறாமத்து நத்தம் திருவிருப்பு மேல்னோ
60. க்கிய மரம் கீழ்நோக்கிய கிணறு நிதிநிட்சேப செலதரு பாஷா
61. ணம் அட்சினிய ஆகாயமியமென்று சொல்லப்பட்ட அஷ்ட்ட பே
62. கதச சுவாமியங்களும் தானாதி வினிய விக்கிறையங்களுக்கு
63. ம் யோகக்கியமாக சகல சமுதாயமும் சொர்னதாயம் குடிவார

64. க்காணிக்கை நிலவுரிமைக் கிராமகரைமணியம்பள் வரிவெள்ளைக்கு
65. டைவரி சுங்கத்தில் சேந்த ஆயக்கட்டுக்கும் வரிகாதவரியெப்
66. பேர்பட்ட பலவரியும் சறுவமானியமாக ஆசந்திராற் மாற்
67. கமாக நம்முட புத்திரபவுத்திரம் பாரம்பரியமாகவும்
68. தங்கள் சிஷ பாரம்பரியமாகவும் காசியில் விசுவேசுவரசுவா
69. மி விசாலாட்சியம்மன் அபிஷேக நைவேதனம் கெங்கா தீரத்தி
70. ல் அன்னதான தர்மத்துக்கும் இந்த இரண்டு கிறாமமும் காரா
71. தான பூறுவமாக தாம்பிர ஸாதன பட்டையம் எழுதிக்கொ
72. டுத்தபடியினாலே ஆண்டனுபவித்து கொள்ளுவாராகவும்
73. யித் தற்ம்மத்துக்கு யிதம் பண்ணினவர்கள் காசியிலே கோடி
74. சிவ பிரதிஷ்ட்டை கோடி விஷ்ணு பிறதிஷ்ட்டையும் புண்ணிய
75. த்தையுடையவராகவும் பியதற்க்கு யாதாமொருவன் அகித
76. ம் பண்ணினவன் காசியிலேயும் ராமீசுபரத்திலேயும் கோ
77. டி காரம்பசுவை கோடி பிராமனாளையும் கொன்றபா
78. வத்தையடைவாராகவும் யிந்தபடிக்கு குமரகுருபரத்தம்பி
79. ரானவர்களுக்கு விசைய ரெகுனாத பெரிய உடையாத் வே
80. ரவர்கள் யிந்தப்படி தற்ம சாதனைப்பட்டையம் எழுதிக்கெ
81. டுத்தோம் ராயசம் சொக்கப்பிள்ளை குமாரன் தற்மராயபிள்ளை
82. கை எழுத்துப்படிக்கு யிந்த தாம்பிர சாதனம் எழுதினேன்
83. சிவகங்கையிலிருக்கும் தையல்பாகம் ஆசாரி குமா
84. ரன் ஆறுமுகம் வைத்தாத்வி குணம் புண்யம் பரத
85. த்தாறு பாலனம் பரதத்தாப ஹாரேன ஸ்வத
86. த்தம் நிஷ்பலம் பலேது வெவத்தாம் பரதத்தாம்
87. வாயோ ஹரேத் வசுந்தராம் ஷஷ்டி வர்ஷ
88. சகஸ்ராணி விஷ்ட்டாயாம் ஜாயதே கிரி
89. மி ஏதஸ்மிந் ரக்ஷிதே ஐந்தௌ யத்ர க
90. ஸ்யாம் வயதத்தம் த்ரைலோக்ய ரட்சணா
91. த் புண்யம் யத்ஸ்யாதகஸ்யாந் நசம்
92. சய, சிவசகாயம். உ

## 2. திருப்பனந்தாள் செப்பேடு

இந்தச் செப்பேடும் திருப்பனந்தாள் பண்டார சன்னிதிகளிடம் கி.பி.1782 ஓச்சம்தட்டு ஆணையர் கோட்டை ஆகிய ஊர்களை தானம் வழங்கியதைக் குறிப்பிடுகிறது. காசி மடத்து அன்னதானம் கட்டளையை திறம்பட நடத்துவதற்கு. வழங்கி இருப்பவர் விசைய ரகுநாதப் பெரிய உடையாத் தேவர் அவர்கள். ராணி வேலு நாச்சியாரது மருகர்.

1. ஸ்ரீகாசி விசுவேசுவர
2. ன்னபூரணி ஸகாயம்
3. ஸ்வஸ்திஸ்ரீமன் மகாமண்டலேசுவரன் அரி

4. யராய தளவிபாடன் பாஷைக்கு தப்புவராய க
5. ண்டன் கண்டனாடு கொண்டு கொண்டனாடு கொ
6. டாதான் பாண்டிமண்டல ஸ்தாபனாசாரியன்
7. சோளமண்டல பிறதிட்டாபனாசாரியன் தொண்
8. டமண்டல சண்டபிறசண்டன் ஈளமுங் கொங்
9. கும் யாட்பாணராயன் பட்டணமு மெம்மண்டலமுங்
10. கண்டு கெசவேட்டை கொண்டருளிய ராசாதிரா
11. சன் ராசபரமேசுபரன் ராசமாற்த்தாண்டன் ராச
12. குல திலகன் அரசராவண ராமன் அந்தம்பரற் கண்டன் தா
13. லிக்கு வேலி தளஞ்சிங்கம் இளஞ்சிங்கம் சேதுகாவல
14. ன் சேது மூல ரட்சா துரந்தரன் தனுக்கோடி காவல
15. ன் தொண்டியந்துறை காவலன் செம்பி வளநாடன் தே
16. வை நகராதிபன் முல்லை மாலிகையான் அனுமக் கொலி
17. டி கெருடக் கொடி புலிக்
18. கொடி யுடையான் மும்
19. மத யானையான் செங்
20. காவிக் குடை செங்கா
21. விக்கொடி செங்காவி
22. சிவிகையான் அசுபதி கெ
23. சபதி கணபதி நரபதி ரவி
24. பதி குலபதி யிரணிய கெற்ப
25. யாசி ரெகுநாத சேதுபதியவர்கள் பிறிதிவிராச்சிய பரி
26. பாலனம் பண்ணியருளாநின்ற கலியுக சகாத்தம் 4
27. 833 சாலியவாகன சகாத்தம் 1704 இத
28. ன்மேல் செல்லாநின்ற சுபகிறது ஸ்ரீஆனி 3 12
29. சுக்கில பட்சமும் ஸ்திர வாரமும் திறையோதெசியுமு
30. அனுஷ நட்சத்திரமும் சுபயோக சுபகரணமுங் கூடி
31. ன சுபதினத்தில் பாண்டி தேசத்தில் பொதியமா
32. மலையான் வைய்கையாறுடையான் புனப்பிரளைய னா
33. டன் குளந்தை நகராதிபன் முல்லை மாலிகையான்
34. பஞ்சகதி யிவுளியான் மும்மத யானையான் அனுமக்
35. கொடி கருடக்கொடி புலிக்கொடி கட்டிய பு
36. ரவலன் மும்முரசதிரு முன்றிலான் திக்கெங்கும் ஆ
37. ணை செலுத்திய சிங்கம் மேனாட்டுப் புலி தாலிக்குவே
38. லி தளஞ்சிங்கம் இளஞ்சிங்கம் இரவிகுல சேகரன்
39. ஆற்றுப்பாச்சி கடலில்பாச்சி தொண்டியந்துறை கா
40. வலன் வாசுபேயாகன் அரசு நிலையிட்ட விசைய ரெ
41. குனாதப் பெரியுடையாத் தேவரவர்களுக்கு திருப்பன
42. ந்தாள் குமரகுருசுவாமி தேசிகர் சீஷரான காசிவாசி
43. க்கு குமரகுருபரத் தம்பிரானவர்களுக்கு தற்ம சாத
44. னம் தாம்பிர சாதன பட்டையங் கொடுத்தபடி தற்

45. மம் சாதனமாவது காசியிலே கெங்கா தீர்த்தத்தில் பெரி
46. ரிய உடையாத் தேவரவர்கள் தற்மம் விசுவனாத சுவா
47. மி விசாலாட்சி அம்மன் அபிஷேக நெய்வேதனத்
48. துக்கும் பிராமண போசன மகேசுவர பூசை அன்
49. னதானம் நடப்பிவைக்குநதற்கு கிராமம் பாண்டி தே
50. சத்தில் திருக்கானப்பேர்க் கூத்தத்தில் கீள்மங்
51. கல நாட்டில் ஆணையாகோட்டையும் துகவூ
52. ர் கூத்தத்தில் கருத்துக்கோட்டை னாட்டில் துக
53. வூர் மாகாணத்தில் ஒச்சமதட்டும் யிந்த ரெண்டு கி
54. றாமுந்த தானபூறுவமாய் கொடுத்ததினாலே
55. ஆனையாகோட்டைகி பெருநான் கெல்லையாவது கீ
56. ள்பாற்கெல்கை எலிக்குளத்துக்கு மேற்கு தென்பாற்
57. கெல்லை ராசிக்கினிமிண்டான் கோட்டை கண்மாய்
58. க்கும் கோட்டைக்காடு யெல்கைக்கும் வடக்கு மேற்
59. பாற்கெல்லை நேமத்து எல்லைக்கும் விறுத வயலுக்
60. க்கும் கிளக்கு வடபாற்கெல்கை ராதா நல்லூர் முடுக்கினாங்
61. கோட்டை துக்கினாங் கரைக்கு தெற்கு இந்த பெருநாள்
62. கெல்லைக் குள்ளான யேந்தல் புரவடை நஞ்சை புஞ்
63. சை மாவடை மரவடைத் திட்டுத் திடலும் இதுவும் ஒச்
64. சந்தட்டுக்கு பெருநாள் கெல்லைகயாவது கீள்பா
65. ற்கெல்லை துகவூர்க் கண்மாய்க்கு மேற்கு தென்பாற்கெ
66. ல்கைக்கு பெருமாளேந்தல் தோக்கநேந்தல்
67. எல்லைக்கு கிளக்கு வடபாற்கெல்கை வள்ளக்
68. குளம் அரமணைக்கரை எல்கைக்கு தெற்கு இந்தபெ
69. ருநாங் கெல்லைக்குள்ளான யேந்தல் பிற
70. வடை நஞ்சை புஞ்சை திட்டுந்த திடலும் சேர்
71. த்து இரண்டு கிறாமமும் நத்தம் திருவிருப்பு மேல்
72. நோக்கிய மரம் கீள்நோக்கிய கிணறு பாசி படுகை
73. நிதிநிட்சேப கெல தரு பாஷாணம் அட்சினிய
74. ஆகாமியமென்று சொல்லப்பட்ட அஷ்ட்ட போ
75. காதி சுவாமியங்களும் தானாதி வினிய விக்கிறை
76. யங்களுக்கும் யோக்கியமாகச் சகல சமுதாயமும்
77. சொற்னாதாயம் குடிவாரக் காணிக்கை நிலவரி கி
78. றாமவரி கரைமணியம் பள்வரி வெள்ளைக்குடை வரி
79. சுங்கத்தில் சேந்த ஆயக்கட்டு குடிவரி சாதிவரி யெப்பே
80. ர்பட்ட பலவரியும் சறுவமானியமாக ஆசந்திராற்
81. கமாக நம்முட புத்திர பவுத்திர பாரம்பரியமாகவும் த
82. ங்கள் சிஷ பாரம்பரியமாகவும் காசியில் விசுவநா
83. த சுவாமி விசாலாட்சியம்மன் அபிஷேக நைவேதன
84. ம் கெங்கா தீரத்தில் அன்னதான தற்மத்துக்கும் இந்
85. த யிரன்கு கிறாமமும் தாராதெத்த பூறுவமாக தாம்பிர

86. ஸாதன பட்டையம் எழுதி கொடுத்தபடிஇநாலே ஆண்
87. டனுபவித்து கொள்ளுவாராகவும் யிந்த தற்மத்துக்
88. குவுயிதம் பண்ணிவர்கள் காசியிலே கோடி சிவ
89. ப் பிரதிஷ்டை கோடி பிறம்ம பிரதிஷ்ட்டையும் ப
90. ண்ணின பலனைப் பெறுவாராகவும் யிந்த தன்மத்துக்
91. கு அகிதம் பண்ணினவர்கள் காசியிலேயும் ரா
92. மீசுபரத்திலேயும் கோடி காராம்பசுவையும் கோ
93. டி பிராமாணாளையும் கொன்ற பாவத்தையடைவா
94. ராகவும் இந்தபடிக்கு குமரகுருபரத் தம்பிரானவர்களு
95. க்கு விசைய ரெகுநாதப் பெரிய உடையாத் தேவரவர்க
96. ள் தற்ம சாதன் பட்டையம் எழுதிக் கொடுத்தோம்.
97. ராயசம் சொக்கப் பிள்ளை குமரான் தற்மராய பிள்ளை லிகி
98. தப்படிக்கி யிந்த தாம்பிர சாதனம் எழுதினேன் சிவகங்கை
99. யிலிருக்கும் தையல்பாகம் ஆசாரி குமாரன் ஆறுமுகம் உ ஸ்வ
100. தத்தாத்ளி குணம் புண்யம் பரதத்தானு பாலநம் பரத
101. த்தாப ஹரேன ஸ்வத்தம் நிஷ்பலம் பலேது
102. ஸ்வத்தம் பரதத்தாம் வாயோகரேத் வ
103. சுந்தராம் சஷ்டி வர்ஷ ஷைஹ்ஹஸ்ராணி
104. விஷ்டாயாம் ஜயாயதே க்ருமி ஏதஸ்மி க்ஷதை
105. ஜமை ரெயும் சுகாஸிலாம் ப்ரயுக்தை த்ரைலோ
106. கரட்சணகாத் புண்
107. ம்யத் ஸ்யாத் தஸ்யாந்த
108. சம்சயஹ சிவ
109. சகாயம் உ.

## 3. காளையார் கோவில் மாலையீட்டுச் செப்பேடு

காளையார் கோவில் கோட்டைப் போரில் 25.6.1772 தியாகியான மன்னர் முத்துவடுகநாதப் பெரிய உடையாத் தேவர் அவர்களது அடக்கவிடமான மாலையீட்டு மடத்தைப் பராமரிப்பதற்காக கி.பி.1780-ல் விசைய ரகுநாதப் பெரிய உடையாத் தேவர் அவர்கள் உருவாட்டி வட்டகையில் உள்ள குளமங்கலம் என்ற ஊரினை தானமாக வழங்கியுள்ளார். கி.பி.1790-ல் தான் விசைய ரகுநாதப் பெரிய உடையாத் தேவர் சிவகங்கைத் தன்னரசின் நான்காவது மன்னரானார். இவர் மறைந்த முத்து வடுகநாதரது ஒரே மகளான வெள்ளச்சி நாச்சியாரை மணந்தவர். கி.பி.1780-ல் ராணி வேலுநாச்சியார் சிவகங்கைச் சீமையை மீட்டவுடன் தமது கணவரது பூதஉடலைத் தாங்கிய புனித இடத்தைப் போற்றும் முகமாக இந்த தானத்தை தமது மருகர் மூலம் ஏற்படுத்தியுள்ளார் என ஊகித்து அறிய முடிகிறது.

இந்தச் செப்பேடு, காளையார் கோயில் மாலையீட்டு மடத்தைப் பராமரித்து வரும் அறங்காவலரிடம் இருக்கிறது.

கணபதியே நம கருவே நம சரகபதியே நம

1. உ ஸ்ரீராமசெயம் ஸ்வஸ்திஸ்ரீமன் மகாமண்டலேசுவ
2. ரன் அரிய ராயர தள விபாடன் பாஷைக்குத் தப்புவரா
3. த கண்டன் கண்டுனாடு கொண்டு கொண்டனாடு
4. கொடாதான் பாண்டிமண்டல ஸ்தாபனசாரியன்
5. சோளமண்டலப் பிறதிட்டாபனாசாரியன் யீளமு
6. ங் கொங்கும் யாட்பாரணராயன் கெசவட்டை கொ
7. ண்டருளிய ராசாதிராசன் ராசபரமேசுபரன் ராசமா
8. த்தாண்டன் ராசகெம்பீரன் ராசமனோகரன் ராசகு
9. ல திலகன் அகண்ட லெட்சுமிதரன் அனும கேதன
10. ன் யாளி கேதனன் பீலி கேதனன் செங்காவிக் குடை
11. டயான் வில்லுக்கு விசையன் சொல்லுக் கரிச்சந்தி
12. ரன் பரிக்கு நகுலன் பொறுமைக்கு தன்மர் போரூக்
13. கு வீமன் குடைக்கு கற்னன் கரிக்கு தெய்வேந்திரன் ரா
14. மனாத சுவாமி காரிய துரந்தரன் தொண்டியந் து
15. துரை காவலன் சேது காவலன் சேது மூலா ர
16. ட்சா துரந்தரன் பரதேசி பயங்கரன் வைகை வள
17. நாடன் சேது வளநாடன் அசுபதி கெசபதி நரபதி
18. யிரணிய கெற்ப சுதாகரன் ஸ்ரீமது விசைய ரெகுனா
19. த சேதுபதி காத்த தேவரவர்கள் பிறதிவிராச்சிய ப
20. ரிபாலனம் பண்ணியருளாநின்ற பாண்டி தேசத்தில்
21. பொதியமா மலையான் வைகையா றுடையான் கு
22. ளந்தை நகராபதிபன் முல்லைத் தாருடையான் மும்
23. மத யானையான் திக்கெங்கும் ஆணை செலுத்தும் சி
24. ங்கம் யிரவிகுல சேகரன் தாலிக்கு வேலி தளஞ்
25. சிங்கம் யிளஞ்சிங்கம் வைகையா றுடையான்
26. தொண்டியந் துறை காவலன் அனுமக்கொடி
27. கெருடக்கொடி யாளிக்கொடி சிங்கக் கொடி
28. புலிக்கொடி யுடையான் சாமித்துரோகி வெ
29. ண்டயம் சேமத்தலை விளங்குமிரு தாளினான் பட்ட
30. மானங் காத்தான் பரதேசி காவலன் ருத்துராட்ச மா
31. லிகாபரணன் ஆத்துப்பாச்சி கடலில் பாச்சி அ
32. ரசு நிலையிட்ட விசைய ரெகுநாத பெரிய உடையா
33. த் தேவரவர்கள் பிறிதிவி ராச்சிய பரிபாலனத்
34. தில் சாலியவாகன சகாற்த்தம் 1701-க்கு மேல்
35. செல்லாநின்ற சாறுவாரி ஸ்ரீ தைய் மீ 10 உ
36. சுக்குறவார தினமும் அனுஷ நட்செத்திரமும்
37. தெசமியும் கூடின சுபயோக சுபதினத்
38. தில்

39. காளையார் கோயிலில் ராச விசைய ரெகுநாத
40. சசிவற்ன முத்து வடுகனாதப் பெறிய உடையா
41. த் தேவரவர்கள் மாலையீடு மடத்துக்கு நி
42. த்திய கட்டளை பூசைக்கு தாம்பிற சாதனபட்ன
43. டயம் குடுத்தோம் பட்டையமாவது உருவா
44. ட்டி வட்டகையிலே மேலை உச்சாணிக்கு தெற்
45. க்கு பொட்டக் கோட்டைக்கு மேற்கு ஒருமேனியேந்
46. தலுக்கு வடக்கு கீள்ப்புல்லாத்தனூர்க்கு கிளக்கு இன்
47. னான்கெல்லைக் குள்பட்ட குளமங்கல முழுது
48. ம் நஞ்சை புஞ்சை திட்டுத் திடல் கீள்நோக்கிய கிண
49. றும் மோனோக்கிய மரமும் வேம்பங் கோட்டை
50. யில் பதிங்கல விறையடியும் யிந்தக் கிறாமம் வ
51. ரியிறை சகலமும் சறுவமானியமாகவும் சீமை
52. யில் குடி ஒன்றுக்கு நாலு மாகாணி பிடித்த முத்
53. திரைப் படியால் ஒருபடி நெல்லும் வாங்கிக் கொ
54. ண்டு சிவந்திப் பண்டாரம் குமாரன் அண்ணா
55. மலைப் பண்டாரமும் ராமலிங்கப் பண்டாரமும் உள்
56. ளிட்டான் மாலையீடு மடமும் பூசித்துக் கொண்டு
57. நிதி நிட்சய தரு பாசானாட்சின்னியங்களும் ச
58. கலமும் ஆச்சந்திராற்க ஸ்தாயியாக கல்லு
59. ங் காவேரி புல்லும் பூமியும் புத்திறா புத்திர
60. வரைக்கும் ஆண்டனுபவிச்சுக் கொள்ள
61. க் கடவாராகவும் இந்தத் தன்மம் பரிபாலன
62. ம் பண்ணினவற்க்கு காசியில் கெங்கா ஸ்நா
63. னமான பலனும் சிவபிரதிட்டை விஷ்ணு பி
64. ரதிட்டை பண்ணின பலத்தை அடைந்து மாற்தா
65. ண்டன் ஆயுசு பெற்றுயிருக்கக் கடவாராகவும் ஆறா
66. மொருத்தற் இத்தற்மம் அகிதம் பண்ணினபேற் கா
67. சி ராமேசுபரத்தில் காராம் பசுவைக் கொன்ற
68. பாவத்தில் போவாராகவும் இந்த தற்ம சாதனம்
69. ம் யெளுதினேன் ராயசம் சொக்குப்பிள்ளை குமார
70. வீரன் பத்தர் குமாரன் சங்கர நாறாயண பத்
71. தன் சவுமிய நாறாயண வாள்மேல் நடந்தவள் ச
73. காயம் உ காளை நாயகர் துணை சொற்
74. னவல்லி அம்பாள் சகாயம் உ

## 4. சூடியூர் செப்பேடு

சூடியூர் சத்திரத்திற்கு சர்வ மானியமாக வழங்கிய 5 கிராமங்களுக்கான செப்பேடு இது. இதனை கி.பி.1794-ல் மன்னர் முத்து விஜய ரகுநாத பெரிய உடையாத் தேவர் வழங்கியுள்ளார்.

*1. ஸ்வஸ்திஸ்ரீ மன்மகாமண்டல லேசுவரன் அரிய ராயவி பாடன் பா*
*2. சைக்குத் தப்புவராயர் கண்டன் கண்ட நாடு கொண்டு கொண்ட நாடு*
*3. கொடாதான் பாண்டிய மண்டல ஸ்தாபநாச்சாரியன் சோளமண்டல பிறதிஷ்*
*4. ட்டாபனாசாரியன் தொண்டமண்டல சண்டப் பிரசண்டன் ஈளமுங் கொங்*
*5. கும் யாள்பானமும் எம்மண்டலமும் கெசவேட்டை கொண்டருளிய ரா*
*6. சாதிராசன் ராசபரபரமேசுபரன் ராசமாற்த்தாண்டன் ராசகுல திலகன்சத்திய*
*7. அரிசந்திரன் குடைக்கு கற்னன் பொருமைக்கு தற்மபுத்திரன் அறிவுக்கு ஆதிசே*
*8. ஷன் தமிளுக்கு அகஸ்தியர் ஆக்கினைக்கு அக்கிறீபன் சந்திரவங்கிஷ சூரிய வங்கி ஷப்பி*
*9. றதாபன் அசுபதி நரபதி கெசபதி தளபதி நரசிங்கராயர் ஆனைக் கொந்தி வேங்கிடபதி*
*10. ராயர் மல்லிகாசுனராயர் விருபாட்சிராயர் அச்சுதராயர் விட்டலராயர் பி*
*11. றசனராயர் வீரவன்ராயர் பூறுவ தெட்சிண ராமறாயர் கிருஷ்ணராயர் கொட்டி*
*12. யம் நாகமனாயகர் விசுவனாயக்கர் சின்ன வீரப்பனாயக்கர் முத்து வீரப்பனா*
*13. யக்கர் திருமலைனாயக்கர் சொக்கனாதனாயக்கர் முத்து விசைய ரெங்ககிருஷ்ணப்பனா*
*14. யக்கர் விசைய ரெங்க சொக்கனாதனாயக்கர் முசல்லி மான்களில் அசரது நவா*
*15. பு சாயபு அன்வர்தீகான் பக்தர் அசரது நவாபு மாபொசுகான் அவரது நவாபும்*
*16. முதலிகான் சாயபு அவர்கள் சேது வாதீனத்தில் குழந்தை நகராதிபன் காளைனாய*
*17. கர் காரியர் துரந்தரன் புலைப் பிறளய நாடன் தொண்டியந்துறை காவலன் சிறிதுற*
*18. கம் வனதுறகம் செலதுறக்கம் உடையான் சிவகெங்...*
*19. கை ராச்சிய பரிபாலகரன் காசிகோத்திரத்தில் ஸ்ரீ*
*20. மது அரசு நிலையிட்ட விசைய ரெகுனாதப் பெரிய உடையத் தேவரர்கள் பிறதிவிராச்சி*

21. ய பரிபாலனம் பண்ணி அருளாநின்ற சாலிவாகன சாகத்தம் 1716 கலிய
22. த்தம் 4895 இதன் மேல் செல்லாநின்ற ஆனந்தனாம சம்வச்சரத்தில் உத்தராய
23. னத்தில் சோபகிறிதுவில் மீனமீஉசுஉ கிருஷ்ணபச்சத்தில் தெசமியும் சோமவாரமும் உத்திராட
24. நட்சத்திரமும் பரிநாம யோகமும் பத்திரவாகரணமும் இப்படிக்கொத்த சுபயோக சுபதினத்தில்
25. ல் சேது மார்க்கத்தில் பிறதானி மருது சேர்வைக்கார் சூடியூர் சத்திரம் அன்னதான தற்மத்துக்கு
26. ஆபஸ்தம்ப சூத்திரத்தில் கவுண்டினிய கோத்திரத்தில் அசுகாத்தியங்காரன வேங்குடேசுர
27. வதானியன் குமாரன் வேங்கிடசுப்பாவதானியாருக்கு பூமித சாசனம் பண்ணிக்குடுத்த
28. கிறாமமாவது பாண்டிய தேசத்தில் தோவூர் கூத்தத்தில் மேலை மங்கல நாட்டில செய்யாளூரு
29. ம்மேலை பிடாவூர் மளவனேந்தலும் புத்தூர் தட்டில்புனல்ப்பிறளய நாட்டில் முள்ளக்குடி பாலே
30. ந்தலும் இந்த அஞ்சு சிறாமத்துக்கும் பரிணான் கெல்கை கண்டபடி செய்யாளூருக்கு பரினான்
31. கெல்லையாவது கீள்பாற்றிக் கெல்கை கம்மாகல்லுக்கும் வெள்ளையக்கோன் பேயாட்டுக்
32. க்கு மேற்கு தென்பாற்கெல்கை மாசான புஞ்சைக்கும் பிடாவூர் மணபுஞ்சைக் கல்லுக்கும் வட
33. க்கு மேற்கு தென்பாற் கெல்கை படையன் குளத்துக்கும் புதுகுளத்.... எல்கை கல்லுக்கும் பறை
34. யன் பேயாட்டுக்கும் சின்ன உடைப்பான் கரைக்கும் கண்ணப்பள்ளத்துப் புஞ்சைக்கும்
35. கிளக்கு வடபாற் கெல்கை வலையன் கண்மாய் புறக்கரைக்கு தெற்கு மேலை பிடாவூரு
36. க்கு மறவனேந்தலுக்கும் பரிநான் கெல்கையாவது கீள்பாற் கெல்கை பிடாவூர் வீரமகாளி
37. அம்மன் கோயிலுக்கும் புளிங்குளத்து எல்லைக்கும் இடையன் தாவுக்கு புல்லத்தி கண்
38. மாய் முடுக்கு கரைக்கும் மேற்கு தெற்பாற் கெல்கை வீரப்பனாயக்கன் கண்மாய் புறக்கரையில்.
39. கடைப்புளி எல்கை கல்லுக்கும் கல்லிச்சேரிக் கண்மாய் மேலக்கால் புற எல்கை.
40. க்கல்லுக்கும் வடக்கு மேல்பாற் கெல்கை மணல்புஞ்சைக்கும் வலையன் கண்மாய் புறக்க
41. ரைக் எல்லைக் கல்லுக்கும் கிளக்கு வடபாற்கெல்கை அத்தியபடி ஊறணிக்கும் கொத்தாம் பெட்டி

42. ல் ஊறணிக்கும் மறத்தளி எல்கைக்கும் தெற்கு முள்ளிக் குடிக்குப் ப
43. ரினான் கெல்கையாவது கீள்பாற்கெல்கை புத்தூர் தனி இலுப்பைக்கும் மேற்கு தென் பாற்கெல்
44. கை பிடாரிசேரி ஆண்டியப் பிள்ளை ஊறணி வடகரையுள்பட வடக்கு மேல் பாற்கெல்கை
45. பாலேந்தல் சக்கிலியன் புளிக்கும் ஷை புஞ்சைக்கும் கிளக்கு வடபாற் கெல்கை வேளா
46. னேரி சுக்கிரன்பந்தி ஊறணிக்கும் கள்ளுப்பட்டி புஞ்சைக்கும் தெற்கு பாலேந்தல் பரினான்
47. கெல்கை கண்டபடி பரினான் கெல்கையானது கீள்பாற் கெல்கை முள்ளிக்குடி எல்லைக்கும்
49. பாதைக்கும் வடக்கு மேல்பாற் கெல்கை கரிசலூறணிக்கும் முடுவுக்குப் புஞ்சைக்கு வல்
50. லங்குடி எல்கைக்கும் கிளக்கு வடபாற்கெல்கை முள்ளிக்குடி காலுக்கும் பிறண்டை...
51. ஆலங்குளம் எல்லைக்கும் தெற்கு இந்த அஞ்சு கிராமத்து பரினான் கெல்லையுள் உள்ளபுர
52. வுக்கு உள்பட ஏந்தல் புறவடை நஞ்சை புஞ்சை திட்டுதிடல் குட்டம் குளி நத்தம் செய்த
53. தலைப் பாசி படுகை மாவடை மரவடை மேல் நோக்கிய மரங்கள் நோக்கிய கிணறு ஆத்துக்காலு
54. த்துக்கால் நிதி நிடசேப செலதரு பாஷன ஆட்சி ஆகாய சித்த பாத்திய மென்றுசொ
55. ல்லப்பட்ட அஷ்ட்ட போக தேசுவாமிய ங்களும் தானாதி வினிமய விக்கிறையங்களுக்குயோ
56. க்கிய மாகவும் சில்வரி பெருவரி ஏதோ... வரியும் சறுவ மானியமாக தானம் பண்ணிக்கு.
57. டுத்து பிறதானி மருது சேர்வைக்காரர் தற்மாசனத்தில் கிறையத்துக்கு வாங்கு(ன) சத்திரம் அன்ன.
58. தானத்து தானம் பண்ணிக்குடத்த சிறாமங்களில் குடியூரில் சத்திரப்பங்கு விரையடி
59. 75 இம்மனேந்தல் மறவனேந்தல் விட யருள்யும் விரையபடி 90 மானிய
60. மாகவும் மற்ற கிராமங்களுக்கு அரை வரியாகவும் கருப்புக் கட்டி தேராம பாதுகாவல் கரை
61. மீ யும் வெள்ளைக்குடை பட்டயவரி அங்க சுங்க மற்றும் சில்வரி பெருவரி ஏதோ வரியும் சத்திர
62. த்துக்கு சறுவமானியமாக தானம் பண்ணி குடுத்ததினாலே ஆசந்திராற் சஸ்தாயியாக சந்தி
63. ராத்திய சந்திரப் பிறவேசம் வரைக்கும் புத்திர பவுத்திர பாரம்பரையாக சத்திரம் அன்ன தானமும்

64. நடப்பிச்சுக்கொண்டு சந்திராவுத்தமாக ஆண்ட(னு) பவித்துக் கொள்வதாகவும் இந்தத் தற்மதனை
65. த யாதா மொருவர் பரிபாலனு பண்ணின பேர் காசியிலே தனுக்கோடியிலே கோடிசிவப்பி
66. றதிட்டையும் கோடி பிறம பிறதிட்டையும் கோடி விஷ்ணு பிறதிட்டையும் பண்ணின பலத்
67. தைப் பெற்று இகத்திலே ஆயுராறோக்கியமும் புத்திரமித்திரர்கள் கிறா(யா)தியங்களுடனே தேவேந்திரபே
68. பாகமும் வா(பர)த்திலே வைகுண்ட பதவியும் அடையும் அடைந்திருப்பாறாகவும் இந்த தர்ம
69. த்தை யாதா மொருத்தர் அகிதம் பண்ண நினைத்த பேர் காசியிலே தனுக்கோடியிலே ஸ்ரீ
70. கத்தி கோகத்தி பிறமகத்தி பண்ணின தோஷத்தை அடைந்து இகத்திலே மகத்தான துன்ப
71. த்தை அனுபவித்து ஆத்தியத்திலோ சுவரவாதி நரகத்துக்கு ஏதுவாய் போவாறாகவும்
72. .....
73. இந்த தற்மசாதன பட்டையம் எழுதினேன் ராயசம் தற்மராய
74. குமரன் சொக்கு கைஎளுத்து.

## 5. மாங்குடி செப்பேடு

இந்த செப்பேட்டை வழங்கியவர் மன்னர் விசைய ரகுநாத பெரிய உடையத் தேவர் ஆவார். இதனை கி.பி.1796-ல் தருமபுரம் ஆதினம் சிவஞான தேசிகரது சீடரான காசிவாசி சடையப்ப தம்பிரான் அவர்களுக்கு வழங்கப்பட்டுள்ளது. காசியில் ஏற்கனவே மன்னர் முத்துவடுக நாத பெரிய உடையாத் தேவரால் நிறுவப்பட்டுள்ள மடத்தில் அன்னதானம், அபிஷேகம் மற்றும் விசுவநாத சுவாமி விசாலாட்சி அம்மன் பூஜை, நெய்வேதனம் ஆகியவற்றிற்காக துகவூர் பகுதியில் உள்ள புதுக்குளத்தையும், திருப்புத்தூர் வட்டத்தில் உள்ள மாங்குடி ஆகிய இரண்டு ஊர்களை தானமாக வழங்கப்பட்டதற்கான ஆவணம் இது.

1. ஸ்வஸ்தி ஸ்ரீமன் மஹாமண்டலேசுபரன் அரியராய தழவி
2. பாடன் பாசைக்குத் தப்புவார் கண்டன் கண்டநாடு கொண்டு
3. கொண்ட நாடு கொடாதான் பாண்டிய மண்டல ஸ்தாபனாச்சாரி
4. யன் சோழ மண்டல பிரதிஷ்ட்டாபனாசாரியன் தொண்ட
5. மண்டல சண்ட பிரசண்டன் யீளமுங் கொங்கும் யாள்ப்பா
6. ராயன் எம்மண்டலமுங் கொண்டு கெஜவேட்டை கொண்டருளிய
7. ராசாதி ராசன் ராசபரமேசுவரன் ராச மார்த்தாண்டன் ராசகு
8. லதிலகன் ராச கம்பரன் ராச கண்டரன் ராசாக்களி தம்பிரசா
9. ன் அரசராவணராமன் அந்தம் பிரகண்டன் ரத்தின கிரீடாதிபதி
10. ரத்தின சிங்காசனாதிபதி சூரிய குல துங்கன் சந்திரகுல திலகன்

11. கிளைவாளவந்தான் கிருஷ்ணாவதாரன் குளந்தை நகராதிபன்
12. முல்லை மாலிகையான் விபூதி ருத்திராட்ச மாலிகைபா பரணன்
13. வீரவெண்பா மாளிகையான் சிவபூஜைக்கு குருபூஜை மறவாத வங்கி
14. ஷாதிபன் காளைநாயகர் காரிய துரந்தரன் வேதாந்த வேதியன்
15. வேதியர்காவலன் பரதநாடக விற்பன்னன் செவு
16. ரிவிலாசன் பொதியா மாமலையான் வைகாறுடையான் புனல்
17. பிரனைதாடன் பாண்டி வளநாடன் தொண்டியன் துறைகாவலன்
18. துஷ்டரில் துஷ்டன் துஷ்ட நிட்டுரன் துஷ்ட நிக்கிர கபனிஸ்டா பாலனன் ப
19. ட்ட மானங்காத்தான் பரதேசி காவலன் பஞ்சகதி இவுளியான்
20. பஞ்ச வன்ன பாவாடையான் மும்முத யானையான் மும்முரசதிரு மு
21. ன்றிலான் திக்கெங்கும் யானை செலுத்திய கெஜ சிங்கம் மேனாட்
22. முப்புலி மலைகலங்கினும் மனங்கலங்காதான் தாலிக்கி வேலி தன்
23. டுவார் முடன் தளஞ்சிங்கம் இளஞ்சிங்கம் பகைமன்னர் சிங்கத்து
24. ராசன் அஷ்டதிக்கு மனோபயங்கரன் யிரவி குலசேகரன்
25. யிவுளி பாவடி மிதித்தேறுவார் கண்டன் தொட்டவராயன் வலியச்
26. சருவி வழியில் கால்நீட்டி வீரதண்டை
27. சேமத்தலை விளகுமிருதாளினான புவநேத வீரன் வன்னி
28. யராட்டம் தவிழ்த்தான் ஒட்டியர் தளவிபாடணன் பஞ்சவர்ண
29. பரிராவுத்தன் கொட்ட மடக்கிய சமர கோலாகலன் சற்குண சு
30. பாஷிதன் சாடிக்காரர் கண்டன் சாமித் துரோகியன் மிண்டன்
31. படைக்கு கலங்காதான் ஏழை பங்காளன் எதிரிட்ட மருவலர்கள்
32. சிரமுரள வெட்டி நிலையிட்ட தீரன் பரராஜசேகரன் பர
33. கேசரி பாதளவிபாடன் அடியார் வேலைக்காரன் உபைய
34. காமரன் கலியுக ராமன் கன்னா கர்ணவுதாரன் கொற்றவர் திருமு
35. ராசாதிராசன் மறுவன்னியர் கெர்பம் விளங்கிய ராசன்
36. மறவன்னியர் வந்து வணங்கியபாதன் மறுமன்னியர் கேசரி ம
37. றுமன்னியர்ருசபுலி பொருமன்னர் அஞ்சிப் புகலிடம் தேட திரு
38. மலைக்காட்டிச்செயவேலெடுத்தோன் கெடி மன்னியர்காலாந்தகள் சி
39. ரிதுற்க மலைதுற்க செலதுற்க முடையான் ஆற்றில் பாச்சி
40. கடலில் பாச்சிய மதப்புலி பல மொளிவொப்பா பாச்சி பாசு பதம் சி
41. யா செகமெலாம் புகள செங்கோல் நடத்துவோன் செங்காவி
42. க்குடை செங்காவிக் கொடி செங்காவிச் சிவிகையான் அனு
43. க்கேதனன் கெருடகேதனன் வியாக்கிரம கேதனன் ஸ்ரீ மஹா கே
44. தனன் பூலோக தெய்வேந்திரன் சத்திய அரிச்சந்திரன்
45. ....... விளங்கிய தீரன் கொடைக்கு கர்ண் பொறுமைக்கு தருமபு
46. த்திரன் வில்லுக்கு விசையன் பரிக்கு நகுலன் சாஸ்திரத்துக்கு
47. சகாதேவன் தமிழுக்கு அகத்தியன் ஆக்கினைக்கு சுக்கிரீவன் அழகுக்கு
48. வாலசீவகன் திலதநுதல் மடமாதர் மடலெதும் தி
49. ருப்புயச்சிங்கன் வீரலெட்சுமி விசைய லெட்சுமி சவுபாக்கிய லட்சுமி

50. தனலட்சுமி சவுமிய லட்சுமி காருண்ணிய லட்சுமி சவுரிய லட்சுமி
51. கீர்த்திலட்சுமி அஷ்டலட்சுமி பொருந்திய வீராதி வரன் வீ
52. ரகெம்பீரன் வீசைய மார்த்தாண்டன் சூராதி சூரன் சூரளி சூரன் துரைகள்
53. மணிசேது அரசு நிலையிட்டோன் சிவகங்கை ராஜ்ய ப
54. ரிபாலன் சோம வாசுபேயயாகிய காசிப கோத்திரத்தில் ஸே
55. துக்கு அரசுநிலையிட்ட விசைய ரகுநாத பெரிய உடையாத் தேவரர்
56. கள் பூதான சாசனம் பண்ணிக் கொடுத்தபடி கலியுக சகாப்த
57. ம் 4867 சாலிய வாகன சகாப்தம் 1718 யிதன் மேல்
58. செல்லாநின்று நள நாம சம்வஸ்த்திரத்தில் உத்திரா வியணத்தில்
59. சுபவேளையில் புஷ்யமாசம் 3தீ குருவாரமும் சதுர்தசி
60. யும் புனர்பூச நட்சத்திரமும் சசிரநாம யோகமும் வணிக லக்
61. கிணமும் கூடிய சுபதினத்தில் சறுவ மானியமாக பூதான சாச
62. னம் பண்ணிக் கொடுத்த பூதான சாசன மாவது ஆனயிந்ததர்
63. மம் காசியில் கெங்கை தீர்த்தத்தில் விசுவநாத சுவாமி விசாலாட்சி
64. அம்மன் அபிஷேக நெய்வேத்தியத்துக்கும் சத்திரம் அன்னதான
65. தருமத்துக்கு தருமபுரம் சிவஞான சிதம்பர தேசிகர் சீஷரான கா
66. சிவாசி சடையப்ப தம்பிரான் அவர்கள் பாரிசமாக தாம்பிர சா
67. சனம் செய்து கொடுத்த கிராமமாவது பாண்டி தேசத்தி
68. ல் துகவூர் கூத்தத்தில் கருத்துக் கோட்டை நாட்டில் துகவூர்
69. மாகாணத்தில் புதுக்குளத்துக்கு பெருநான் கெல்கை கண்ட
70. படி கீழ்பார்கெல்கை துகவூர் கண்மாய் உள்வாயிற்க்கு மேற்கு
71. தென் பார்கெல்கை வடக்கு கீரனூர் எல்கைக்கும் சாலைக்கு
72. ம் மாங்குளக் காலுக்கும் வடக்கு மேல்பார்கெல்கை பெருமா
73. ளேந்தல் எல்கைக்கு கிழக்கு வடபார் கெல்கை ஓச்சந்
74. தட்டு எல்கைக்கு தெற்கு இன்னங்கெல்கைக்குள் பட்ட பு
75. துக்குளம் கிராமம் கேரள சிங்கம் வளநாட்டில் திருப்பத்
76. தூர் தாலுகாவில் கிராமம் மாங்குடிக்கு பெருநான்கெல்
77. கை கண்டபடி கீழ்பார்கெல்கை கானாயூர் புரவுக்கும் தி
78. ருவிடையாபட்டி புரவுக்கு மேற்கு தென்பார்கெல்கை நா
79. ட்டார் மங்களம் புரவுக்கும் கோட்டையிருப்பு புரவுக்கும்
80. வடக்கு மேல்பார்க்கெல்கை மணக்குடி புரவுக்கு கிழக்கு வட
81. பார்க்கெல்கை காரையூர் புரவுக்கு தெற்கு இந்நாள்கெல்கை
82. க்குள் பட்ட மாங்குடி கிராமம் இந்த ரெண்டு கிராமம் பெருநா
83. ங்கெல்கைக்குட்பட்ட கம்மாய் ஏந்தல்கள் நஞ்சை
84. புஞ்சை திட்டு திடல் குடவ்டம் குளி நத்தம் திருவிருப்பு பாசிபடு
85. கை மேல்நோக்கிய மரம் கீழ்நோக்கிய கிணறு பலவரி
86. குடிவார காணிக்கை வெள்ளக்கொடை வரி கீதாரவ
87. ரி கரைமணியம் மற்ற யாதொருவஸ்து நிதி நிச்சேப ஜலதரு
88. பாஷாண சித்த சாத்திய மென்று சொல்லச்
89. செய்த அஷ்டபோக தேச்சுவாமியங்களும் சர்வமானி

90. படாக தானபூர்வமாக தாம்பிரசாதன பட்டையம் கட்டளை
91. யிட்டோம் ஆச்சந்திரார்க் ஸ்தாயி ஆக சந்திராதித்த சந்
92. திர சந்ததி பிரவேசம் உள்ளவரைக்கும் எங்கள் புத்தி
93. ர பவுத்திர பாரம்பரையாகவும் தங்கள் சிஷ்யாள்ப
94. ரம்பரையாக ஆண்டனுபவித்துக் கொண்டு தர்ம பரிபாலண
95. ம் பண்ணிக்கொண்டு வருவார்களாகவும் இந்த தர்மத்தை யாத
96. மொருதர் பரிபாலனம் பண்ணின பேர்கள் காசியிலேயு
97. ம் கங்கைக் கரையிலும் ராமேசுவரத்தில் தனுக்கோடியிலும்
98. லும் கோடி சிவலிங்க பிரதிஷ்டையும் கோடி விரும
99. ப் பிரதிஷ்டையும் விஷ்ணுப்பிரதிஷ்டையும் கோதானம்
100. பூதானம் கன்னியாதானமும் பண்ணின பலனை பெருவாராக
101. வும் இந்த தர்மத்தை யாதாமொருதர் அகிதம் பண்ணினபே
102. ர்கள் காசிராமேஸ்சுபர தனுக்கோடி கெங்கை கரையிலும்
103. கோடி விரும சத்திய மாதா பிதாவையும் அநேகங்கயோ
104. டி காரம் பசுவையும் கொன்ற தோஷங்களில் போக கட
105. வாராகவும்
109. இந்த சாசனம் எழுதினேன் ராயசம்கு
110. மாரப்பபிள்ளை குமாரன் சொக்கு சுவஸ்தி எழுதினேன்
111. சிவகெங்கையில் இருக்கும் தையல் பாகம் ஆசாரி குமாரன்
112. ஆறுமுகம் கையெழுத்து

## 6. ஆண்டான் கோயில் செப்பேடு

சோழ நாட்டில் உள்ள ஆண்டான் கோயிலுக்கு சிவகங்கைச் சீமை முத்துநாட்டு மீனாபூர் என்ற ஊரினை தானமாக வழங்கியதற்கான செப்பேடு. இதனை கி.பி.1799 விஜய ரகுநாத பெரிய உடையாத் தேவர் வழங்கியுள்ளார்.

1. ஸ்வஸ்தி ஸ்ரீ மன்மகாமண்டலேசுனர் அரியராய தேளவிபாடன் பாசைக்கு தப்
2. புவராயர் கண்டன் மூவராயர் கண்டன் கண்ட நாடு கொண்டு கொண்ட
3. நாடு கொடாதான் பாண்டி மண்டல ஸ்தரபனாசாரியன் சோழமண்டல
4. ப்பிறதிஷ்டாபனாசாரியன் தொண்டமண்டலச் சண்டப்பிறசண்ட னீளமுங் கொ
5. ங்கும் யாட்பாணராயன் பட்டணமு மெம்ம மண்டலமுங் கண்டு கெஜவேட்டை
6. கொண்டருளிய ராஜாதிராசன் ராசபரமேசுரன் ராசமார்த்தாண்டன் ராஜகுல
7. திலகன் ராசகெம்பரன் ராஜகண்டீரவன் ராசாக்கள் தம்பிரான் அரசுரா
8. வணராமன் அந்தப் பிறகண்டன் ரற்றின கிரீடாதிபதி ரற்றின சிங்காசனா
9. திபதி சூரியகுல துங்கன் சந்திரகுலதிலகன் கிஷ்ணாவதாரன் கிளைவாள

10. வந்தோன் குழந்தை நகராதிபன் முல்லைமா லிகையான் சிவபூசை குருபூசை
11. மறவாத வங்கி ஷாதிபன் காளை நாயகர் காரிய துரந்திரன் வேதாந்த வேதிய
12. ன் வேதியர் காவலன் பரத நாடக விற்பன்ன .....சங்கீத
13. வித்யாவினோதன் கலை தெரியும் விற்பன்னன் கெவுளி விலாசன் பொதியமா
14. மலையான் வய்கையாறுடையான் புனல் பரளைய நாடன் பாண்டி வளநாடன்
15. தொண்டி(த்து)யந் துறைகாவலன் துஷ்டரில் துஷ்டன் துஷ்டநிக்கிரகன் சிஷ்ட
16. ர்பரிபாலனன் பட்டமானங்காத்தான் பரதேசி காவலன் பஞ்ச கெதியிவுளிராய
17. ன் பஞ்சவற்னன்ப் பாவாடையான் மும்மதயானையான் மும்முரச திருமுன்றிலா
18. ன் திக்கெங்கு மாணை செலுத்திய கெஜசிங்கம் மேனாட்டுப்புலி மலைகல
19. ங்கினும் மனங்கலங்காதான் தாலிக்கிவேலி தண்டுவார் முண்டன் தளசி
20. ங்க மிளஞ்சிங்கம் பகைமன்னற் சிங்கத்துரை ராசன் அஷ்டதிக்கு வி
21. சையன் யிரவிகுலசேகரன் யிவுளிபாவடி மிதித்தேருவாற் கண்டன் கொட்ட
22. வாற்ந்தவ (ஞ்)சாதான் வலியச் சருவி வழியில்கால் நீட்டி வீரதண்டை சே
23. மத்தலை விளங்குந் தாளினான் புவனே கவீரன் வன்னியராட்டந்
24. தவிழ்த்தான் ஒட்டியற்தளவிபாடன் பஞ்ச வற்ன்ன பரி ராவுத்தர் கொ
25. ட்டமடக்கி சமரகோலாகலன் சற்குண சுபாஷிதன் சாடிக்காறர்கண்டன்
26. சாமித்துரோகியர் மிண்டன் அடைக்க லங்காத்தான் யெழைபங்காழன் எதிரி
27. மருவலர்கள் சிரம் வெட்டி நிலையிட்ட தீரன் பரராஜசேகரன் பரராஜ கேஸரி
28. பரதளவிபாடன் அடியாற் வேளைக்காறன் உபயசாமர உல்லாசன் நளினக்காற
29. ன் கொட்டமடக்கிய வய்யாளி நாராயணன் கலியுகராமன் கற்றாவுதாரன் கெ
30. த்தவர்திருமுனிக்கி சிகராசன் மறுமன்னி
31. யகப்பம் விளங்கிய ராசன் மறுமன்னியர்
32. வந்துவணங்கியபாதன் மன்னியர்கேசரி மறுமன்னியர் கெப்புலி பொருமன்னரஞ்
33. சிப் புகலிடந்தெடித் திருமலை காட்டில்செவ் வேலெடுத்தோன்

கெடிமன்னர்கா

34. லாந்தகன் கிரிதுற்கமவ(னி)துற்கம்ஜல துற்கமுடையான் ஆற்றில் பாச்சி கடலில்
35. ப்பாச்சிய மதப்புலி பழமொழி தவ(றா)ப்பாகபத மகிமையாய் ஜெகமெல்லாம் புக
36. ழ்ச்செங்கொல் நடத்துவோன் செங்காவிக்குடை செங்காவிக்கொடி செங்கா
37. விச்சிவிகையான் அனுமகேதனன் கெருட கேதனன் ஸிம்ஹகேதனன் மீனகே
38. தனன் குக்குட கேதனன் பூலோக தெவேந்திரன் சத்திய அரிச்சந்திரன் அன்னக்கொ
39. டிவிளங்கிய தீரன் கொடைக்குக் கற்னன் பொறுமைக்குத் தற்மபுத்திரன் மல்
40. லுக்கு வீமசேனன் வில்லுக்கு விசையன் பரிக்கு நகுலன் சாத்திரத்துக்கு சகா
41. தேவன் தமிழுக்(கு)கத்தியன் ஆக்கிணைக்குச் சுக்கிறீபன் அழகுக்கு வாலசீவ
42. ன் திலதனுதல் மடமார் மயலுற்று மடலெழுதும் திருப்புயசுமுகன் வீரலெ
43. ட்சுமி விசையலெட்சுமி சவுபாக்கிய லெட்சுமி அஷ்டலக்ஷிமி பொருந்திய
44. வீராதிவீரன் வீரகெம்பீரன் விசைய மாத்தாண்டன் சூரநிற்சூரன் துரை
45. கள் சிகாமணி சேதுவுக்கரசு நிலை(யி) ட்டோன் சிவகெங்கை ராஜ பரிபாலகரா
46. ன அசுபதி கெஜபதி தனபதி நரபதி ரவிகுலபதி அன்னதான சோமவாசலுக
47. யாகிய காசிப கொத்திரத்தில் ஸ்ரீமீது அரசு நிலையிட்ட முத்து விசையரெகு
48. நாதப் பெரிய உடையாத் தேவரவர்கள் பூதான சாஸனம் பண்ணிக் கொடுத்த
49. படி சாலியவாகன சகாத்த 1711 கலியுகாதி 4000 யிதின் மேல்
50. ச்செல்லா நின்ற சவுமிய நாமலம் வற்றத்தில் உத்தராயணத்தில்
51. ருதுவில் பங்கூனி (மீஉ) யரு தீபூறுவ பட்சத்து நவமி நாழிகை 7க்கு மேல்
52. தசமியும் குருவாரமும் புனர்பூசம் யக(னாழி) மேல்ப் பூச நட்செத்திரமும் சுகற்ம நாம
53. யொகமும் கவுலவாகரணமும் யிப்படி கொற்ற சுபயொக சுபதினத்தில் பூதான
54. சாஸநம் பண்ணிக் கொடுத்தது பூதான சாஸநமாவது சொழதேசத்தில் கடு
55. வாய்க்கரைத் தென்புத்தூருக்குப் பிறிதிநாம மாகிய

ஆண்டாங்கோவில்

56. செம்பிநாதசுவாமி சிவசேகரியம்மனுக்குச் சிறுவயலிலிருக்கும் சிவகோத்தி
57. ரத்தில் சுடலைமுத்தாபிள்ளை மகன் அட்டவணை மாயாண்டியாபிள்ளை கட்டளை!
58. காலசந்திப் பூசைக்குச் சறுவமானிபமாகப் பூதான சாஸநம் பண்ணிக்கொடுத்த
59. க்ஷேத்திரமாவது பாண்டி தெச(த்★)தில்ச் சிவகெங்கைச் சீமைச் சாக்கைத் தாலூ
60. கா முத்துனாட்டு மாகாணத்தில் மீனாப்பூருக்கு பெருனான் கெல்கை கண்டபடி
61. எல்கையாவது கீழ்பாற்கெல்லையாவது சடையாமங்கலங் கணவாயுள் த்
62. தரவில் நிற்குங் கடப்பமரங்களுக்குங் கட்டைப்புளிக்கு மெற்குத் தென்பா
63. ற்கெல்கையாவது மெற்படி கணவாய்த் தென்கடைக் கொம்புக்குளக்காலு
64. க்கு வடக்கு மெல்பாற்கெல்லையாவது குணக்கரைச்சி கூறணியாக்கி மூலை
65. க்கும் வா(கா)ன் செய்க் கீழ்வரப்புக்குங் கிழக்கு வடபாற்க் கெல்லையாவது
66. மீனாப்பூர் திடல் பிள்ளையார் கோவிலுக்கும் மெல்ப்படியூரும் பளச்செய்
67. வடவரப்புளுந் தெற்கு இன்னான் கெல்கைக்குட் பட்ட மீனாப்பூர் ஊரது புர
68. வுக்குள்ள நஞ்சை புஞ்சை திட்டுத்திடல் குட்டங்குழி நத்தஞ் செய்த்தலை.
69. மாவடை மரவடை மேனொக்கிய மரங் கீள்னோக்கி யகிணறு பாசி படுகையா
70. ற்றுக்கால் நூற்றுக்கால் நீதிநிட்செப செலதரு பாஷாணா க்ஷிணகா(ஜி) சி
71. த்தசாத்திய மென்று சொல்லச் செய்த அஷ்ட்ட பொகதே சுவாமிய
72. ங்களும் ..........விக்கிறயங்களுக்குக்கும் யொ...மாகச் சறுவ
73. மானிபமாய் ஷாநராவநம் பண்ணிக் கொடுத்து மாயாண்டியாபிள்ளை
74. யத் தானே கிறாமங் காடு கொண்டு பாளாயிருக்குறதைச் சுதை பண்ணி
75. வைய்த்து கொவிலுக்குத் தன் கட்டளைகால சந்திப் பூசையுந் திருப்பணியும்
76. நடப்பிவிச்சுக்கொண்டு கிறாமத்து விசாரணையுங் கட்டளைவிசாரணையும் பாரம்
77. பரையாகத் தானே விசாரித்துக் கொண்டு கிறாமவிசாரணை கடளைவிசாரணை

78. க்குக் கிறாமத்து மேல்வார ஊதியத்தில் நித்தியமொரு பணமுங் கிறாமத்து ந
79. ஞ்சை புஞ்சை நிலமெல்லாம் பண்ணை பாதி குடிபாதியாகப் பிறித்து பாதிநில
80. த்தில் தன் ஏர் வைத்து விவசாயஞ் செய்து அதில் வருகுற குடிவாரம்
81. கட்டளையாக வெடுத்து கொண்டு ஆசந்தராற்க ஸாயியாகச் சந்திரம
82. தித்தி சந்திரப் பிறவெசமுள்ளவரைக்குங் கல்லுங் வெரியும் புல்லும் பூமி
83. யும் உள்ளவரைகும் புத்திரபவுத்திரபாரம் பாரெயாகக் கொவில் கட்டளை
84. ப்பூச நெய்வதனமுந் திருப்பணியு நடப்பிவிச்சுக் கொள
85. க்கட்டளையிட்டொ மிந்தத் தன்மத்தை யாதொருமொருதர் பரிபாலனம் பண்
86. ண்ணினபேறகள் காசியிலெயும் கெங்கைக் கரையிலெயும் இராமீசுரந்த
87. னுக்கொடிக் கரையிலெயூங் கொடி சிவலிங்கப் பிரதிட்டையும் கொடி
88. டி பிறமப்பிறதிட்டையுங் கோடி கோதான பூதானம் பண்ணின பல
89. னையு மடைவராகவூ யிந்தத் தன்மத்துக்கு யாதாமொரு (த★)தர் அகிதம்ப
90. ண்ணினபேர்கள் காசியிலேயும் கெங்கை கரையிலேயூ ராமெ.
91. சுரந் தனுக்கொடியருலயுங் கோடி பிரமத்தியும் மாதாபிதாவை
92. யுங் கொடி காராம்பசுவையுங் கொன்ற தொஷங்கிளிற் பொவா
93. ராகவூ ............................
94. ...................................
95. யிருக்கு மன்னப்பத்தற் மகன் வீரப்பபத்தன் சுக லிகிதம் (11★)

## 7. வேட்டைக்காரன்பட்டி செப்பேடு

இந்தச் செப்பேட்டினை வழங்கியவர் சிவகங்கைச் சீமையின் இறுதி மன்னரான முத்து விசைய ரெகுநாத பெரிய உடையாத் தேவர் அவர்கள். 24.1.1800 தேதியன்று வழங்கியது ஆகும். சிவகங்கைச் சீமையின் கிழக்கு கடற்கரையையொட்டி வடக்கு தெற்காக அமைந்துள்ள சேது மார்க்கத்தில் வேட்டைக்காரன் பட்டியில் அமைந்துள்ள சின்னணமட தர்மத்திற்காக அமராவதி மாகாணத்தில் உள்ள தாணாவயல் என்ற ஊரினைச் சர்வமான்யமாக வழங்கியதைக் குறிக்கும் ஆவணம் இது.

1. ஸ்வஸ்திஸ்ரீமன் மஹாமண்டலேசுபரன் அரியராயர் தளவிபாடன்
2. பாசைக்கி தப்புவராயர் கண்டன் கண்ட னாடு கொ
3. ண்டு கொணடனாடு கொடாதான் பாண்டிமண்டல பிரபனாசாரி
4. யன் சோளமண்டல பிரதிஷ்டாபனாசாரியன் தொண்டமண்ட
5. ல சண்டப்பிறசண்டன் ஈளமும் கொங்கும் யாப்பிணராயன்
6. பட்டணமும் யெம்மண்டலமுங் கண்டு கெச வேட்டை கொண்ட

7. ருளிய ராசாதிராசன் ராசபரமேசுவரன் ராசமாத்தாண்டன் ராகுசகு
8. லதிலகன் ராசகெம்பீரன் ராசகண்டீரவன் ராசாக்கள் தம்பிரான் அரச
9. ராவணராமன் அந்தம்பிறகண்டன் ரற்றின் கிரீடாதிபதி ரற்றின சி
10. ங்காசனாதிபதி சூரியகுல துங்கன் சந்திரகுல திலகன் சிஷ்ட்டனா
11. வதாரன் புலிவாளவந்தோன்க் குளந்தை நகராதிபன் முல்லை மாவி
12. கையான் விபூதி ருத்திராச மாவிகையாபரணன் வீராவண்பாமாலைய
13. ன் சிவபூசை குருபூசை மறுவாதங்கிஷாரதியன் காளை நாயகர் கா
14. ரிய துரந்தரன் சேந்த வேதியன் வேதியர் காவலன் பரதநாடக விற்
15. ப்பன்னன் சங்கீத சாகித்திய வித்தியாவினோதன் கலைதெரியும் விற்ப்ப
16. னன் காமிநிகந்தர்ப்பன் கெவுளிவிலாசன் பொதியமாமலையான்
17. வய்கையாறுடையான் புறைபிரளயநாடன் பாண்டியவளநாடன்
18. தொண்டியந்துறை காவலன் துஷ்ட்டரில் துஷ்டன் துஷ்ட்ட நெட்டுர
19. ர் கண்டன் சிஷ்ட்ட பரிபாலன் பட்டமானங் காத்தான் பரதேசி காவலன் பஞ்ச
20. கதியிவுளியான் பஞ்சவற்ண பாவாடையான் மும்மத யானையா
21. ன் மும்முரசதிரு முன்றிலான் திக்கெங்கும் யானை செலுத்திய தேவ
22. ன் மேனாட்டுப்புலி மலைகலங்கினும் மனங்கலங்காதான் தாலிக்குவேலி
23. தண்டுவார் முண்டன் தளஞ்சிங்க மிளஞ்சிங்கம் பகைமன்னர் வண
24. ங்கு துரைராசன் அட்டபதிக்கும் விசையன் ரவிகுலசேகரன் யி
25. வுளி பாவடி மிதித்தேறுவார் கண்டன் தொட்டவாரந்தவறாதான் வலியச்ச
26. ருவி வளியில்க் கால்நீட்டி வீரதண்டை சேமத்தலை விளங்குமி
27. பரதன விபான் பஞ்சவர்ணம் பரிராவுத்தர் கொட்டமடங்கிய சம
28. பரதன விபாடன் பஞ்சவர்ணம் பரிராவுத்தர் கொட்டமடக்கிய சம
29. ர கோலாகலன் சற்குண பாஷகன்ச் சாடிக்காரர் கண்டன் சாமத்து
30. ராசியன் மிண்டன் துரகரேவந்தன் அடைக்கலங்
31. காத்தான் ஏளைவர(ன்) தாளினான் எதிரிட்ட மருவயர்கள் சிரமுடிகள்
32. வெட்டி நிலையிட்டதீரன் பரராஜசேகரன் பரராஜ கேசரி பரதளவி
33. பாடன் அடியார்வேளைக்காரன் உபையசாமர உல்லாசன் நளின
34. க்காறன் கொட்டமடக்கி வையாளி நாராயணன் கலியுகாரமன் கர்
35. னாவுதாரன் கதிசெரிப் பூதவிஞொற்கருவனா எருமாத்தின
36. குடன் அணிந்தோன் கொற்றவன் திரமுனிக்கி (கிக) ராசராசன் மறு
37. மன்னியர் கற்பம் விளங்கியராசன் மறுமன்னியர் வந்து வணங்
38. கியபாதன் மன்னியர்கேசரி மன்னியர் மதப்புலி பொருமன்னரஞ்சிப் பு
39. களிடந்தேடித் திருமலை காட்டில் செவ்வேலெடுத்தோன் கெடிமன்ன
40. ர்க் காலாந்தகன் கிரிதுற்க்கும் வனது ற்க்கும் செலதுற்க்கமுடையான் ஆற்றிற்
41. ப்பாச்சி கடலில் பாச்சிய மதப்புலி பகைமாளி தவாப்ப...

42. மயாய் செகாமல்லாம் புகளச் செங்கோல் நடத்துவோன் செங்காவி
43. க்குடை செங்காவிக்கொடி செங்காவிச் சிலிகையான் அனுமகேதனன்
44. கெருட கேதனன் வியாக்சிரமகேதனன் விற்கேதனன் மீன்கேதனன்
45. குக்குடகேதவன் நிமிலிகேதனன் பூலோகதேவேந்திரன் சக்தி அ
46. ரிச்சந்திரன் அன்னக்கொடி விளங்கிய தீரன் குடைக்கு கர்னன் பொறு
47. மைக்கு தர்மபுத்திரன் மல்லுக்கு வீமசேனன் வில்லுக்கு விசையன்
48. பரிக்கு நகுலன் சாஷ்த்திரத்துக்குச் சகாதேவன் தமிளுக்கு அகஷ்த்தியன் ஆக்
49. கிணைக்கு சுக்கிரீவன் அளகுக்கு வாலசீவகன் திலகநுதல் மடமாதர் ம
50. டாலளுதும் திருப்புயசுமுகன் வீரலெட்சுமி விசையலெட்சுமி
51. சவுபாக்கியலெட்சுமி தான்யலெட்சுமி சௌமியாலட்சுமி காருண்ய
52. லெட்சுமி கீர்த்திபலெட்சுமி அஷ்ட்டலெட்சுமி பொருந்திய
53. வீரன் வீரகெம்பீரன் விசயமார்த்தாண்டன் சூறனிச சூறன் துணை
54. ரகன் சிகாமணி சேதுக்கு அரசு நிலையிட்டோன் சிவகெங்கை ஐ
55. ய பரிபாலகரான அசுபதி கெஷபதி தனபதி நரபதி ரவிகுலபதி அன்ன
55. தானகோம வாசுபேயராகிய காசிப் கோத்திரத்தில் ஸ்ரீமது அரசு
56. தானகோம வாசுபேயராகிய காசிப் கோத்திரத்தில் ஸ்ரீமது அரசு
57. நிலையிட்ட விசைய ரெகுனாத பெரிய உடையாத் தேவரவர்கள் பூமி
58. தான சாசனம் பண்ணிக்கொடுத்தபடி சாலியவாகன சகாத்தம்

இரண்டாம் பக்கம்

59. 1721 கலியுகம் 4900 யிதின்மேல் செல்லாநின்ற மங்கள
60. நாம சம்வத்சரத்தில் உத்திராயணத்தில் ஹேமந்தரிதுவில் ௳
61. 14நீ சுக்கிரவாரமும் சதுர்த்தெசியும் உத்திராட நச்செத்திரமும பரிநா
62. ம யோகமும் சகுனிவாகரணமும் யிப்படி கூடிய சுபதினத்தில் பூதா
63. ன சாதனம் பண்ணிக்கொடுத்தபடி பூதான சாதனமாவது சேது மாற்க்
64. கத்தில் வேட்டக்காரன்பட்டியில் சின்னன மடமும் அக்கிராமு
65. ம் கட்டி திடாகம் பிறதிஷ்ட்டையும் செய்து தண்ணீர்ப்பந்தல் நந்தவ
66. ரனமும் வைய்த்திருக்கிறதுக்கும் சாதனம் செய்து கொடுத்த கிறாமமாவ
67. து பாண்டி தேசத்தில் கேரளசிங்க வளநாட்டுப் பாச்சலில் தேனா
68. த்துப் போக்கில் அமராபதி மாகாணத்தில் புதுவூர் உள்க்கடையில்தாணா
69. வயலுக்கு பெருநாங்கெல்கை கன்றபடி யெல்கையாவது கிள்பாற்கி
70. கல்கை செட்டி கன்மாய்க்கு மேற்கு தென்பாற்க்கெல்கை கலிப்பு
71. லி எல்லைக்கு வடக்கு மேல்பாற்க்கெல்கை புதுவூர் அடையவள
72. ஞசான் காலுக்கும் கங்கா பொய்கைக்கும் கிளக்கு வடபாற்க்கெல்கை உய்ய
73. கொன்டான் வயலுக்கும் தெற்க்கு இன்னாங்கெல்கைக்குள்ப்பட்ட தா
74. ணாவயல் நஞ்சை பிஞ்சை திட்டு திடல் குட்டங்குள நத்தர்

செய்த்தலை மாவ
75. டை மரவடை மேல்நோக்கிய மரம் கீள்நோக்கிய கிணறு பாசிபடுகை
76. ஆற்றுக்கால் ஊத்துக்கால் நிதி நிசேஷது ஜெயதரு பாஷனகூ
77. ணியாகாம்ய சித்த சாத்தியமென்று சொல்லச் செய்த அஷ்ட்ட போக
78. தேஜ சுவாமி
79. யங்களிம் ம
80. டம் தண்ணீ
81. ர் பந்தல் நந்தவனம் பணிவிடைளுக்கு கிறாமம் ஆக தானா சா
82. சனம் பண்ணிக் கொடுத்ததுனாலே ஆச்சந்திராற்கத் தாயி ஆக சந்திர
83. ரதித்தவரை சந்திராதித் தம் பிரவேசமுள்ளவரைக்கும் புத்திராபவுத்
84. திர பாரம்பரையாக ஆச்சந்திரார்க்கமாக ஆண்டனுபவித்துக் கொள்
85. வாராகவும் யிந்த தற்மத்தை யாராமொருத்தர் பரிபாலனம் பண்ணின பே
86. ற்க்கு காசிலேயும் கெங்கைக் கரையிலேயும் ராமேசுபரந்தனுக்
87. காடியிலேயும் கோடி சிவலிங்கப் பிறதிஷ்ட்டையும் கோடி வி
88. றும்மப் பிரதிஷ்ட்டையும் கோடி விஷட்டுணு பிரதிஷ்டையும் கே
89. ரடி கோதானமும் பூதானம் கன்னிகா தானமும் பண்ணின பல
90. னையடைவாராகவும் யிந்த தற்மத்துக்கு யாதாமொருத்தர் அகிதம்
91. பண்ணின பேர்கள் காசியிலேயும் ராமேசுபரந்தனுக்கோ
92. டியிலேயும் கெங்கைக் கரையிலேயும் கோடி விறுமகத்தியு
93. ம் மாதா பிதாவையும் அனேகங்கோடி காறாம் பசுவை
94. யும் கொன்ற தோஷங்களிப் போகக் கடவராகவும் உ

## 8. காளத்தி ஏந்தல் செப்பேடு

மன்னர் முத்துவடுகநாத பெரிய உடையாத் தேவர் அவர்கள் கி.பி.1767-ல் திருவாவடுதுறை பண்டார சன்னதியில் அம்பலவாண சுவாமி பூஜைக்கும் மகேஸ்வர பூஜைக்குமாக சிவகெங்கைச் சீமையில் உள்ள காளத்தி ஏந்தல் என்ற ஊரினை சர்வமான்யமாக வழங்கியதை குறிப்பிடுவது இந்த செப்பேடு)

1. சுவத்தி ஸ்ரீமன் மகாமண்டலேசுபரன் அரியராயிர தள
2. விபாடன் பாசைக்குத் தப்புவராயிர கண்டன் மூவராயி
3. ர கண்டன் கண்டநாடு கொண்டு கொண்டநாடு கொ
4. டாதான் பாண்டிய மண்டல தாபனாசாரியன் சோளமண்
5. டல பிரதிட்ட பானாசாரியன் தொண்ட மண்டல சண்டப்பி
6. ரசண்டன் ஈளமும் கொங்கும் யாள்ப்பானமும் எம்மண்டலமு
7. மழித்துக் கெசவேட்டை கொண்டருளிய ராசாதி ராசன்
8. ராச பரமேசுரன் ராசமார்த்தாண்டன் ராசகுல திலகன் ராய
9. ராகுத்த மிண்டன் மன்னரில் மன்னன் மருவலர் கேசரி
10. துட்டரில் துட்டன் துட்டநிட்டுரன் சிட்ட பரிபாலனன்
11. ஒட்டியர் மோகந்தவிழ்த்தான் துலுக்கர் தள

12. டனன் வலியச் சருவி வலியக் கால் நீட்டி தாலிக்கு
13. வேலி இளஞ்சிங்கம் தளஞ்சிங்கம் வைகை வளநாடன் ஆ
14. ற்றுப் பாய்ச்சி கடலிற்பாய்ச்சி சேதுநகர் காவலன் சேதுமூ
15. லதுரந்தரன் இராமநாதசுவாமி காரிய துரந்தரன் சிவ
16. பூசா துரந்தரன் பரராசசிங்கம் பரராச கேசரி பட்டமா
17. னங்காத்தான் பரதேசிகாவலன் சொரிமுத்து வன்னிய
18. ன் கோடி சூரியப் பிரகாசனி தொண்டியந்துறைக் காவல
19. ன் இந்துகுல சர்ப்பகெருடன் இவளி பாவடி மிதித்தேறு
20. வார்கண்டன் நவகோடி நாராயணன் பஞ்சவர்ண
21. ப்பாவாடையுடையோன் துட்ட நிக்கிரக சிட்ட பரிபா
22. லனன் அஷ்டலெட்சுமி வாகன நித்திய கலியாணம் ம
23. னுகுல வங்கிசன் சாமித் துரோகியின் மிண்டன் கட்டா
24. ரி சாளுவன் அடைக்கலங்காத்தான் தாலிக்கு வேலி ரண
25. கேசரி ரணகிரீடி சங்கீத சாயுச்சிய வித்யா விநோதன்
26. செங்காலிக்குடையான் சேமத்தலை விருது விளங்
27. கு மிருதாளினான் நரலோக கண்டன் பொறுமைக்குத்த
28. ன்மர் வில்லுக்கு விசையன் மல்லுக்கு வீமன்
29. பரிக்கு நகுலன் சாத்திரத்துக்கு சகாதேவன்
30. கொடைக்கு கர்ணன் அறிவுக்கு அகத்தியன்
31. தனத்துக்கு குபேரன் அனுமக்கொடி கெருடக் கொ
32. டி புலிக்கொடி யாளிக்கொடி சிங்கக் கொடி மகரக் கொடி
33. மதப்புலி காரியங்காத்தான் திருச்சிங்கா சனத்திலே
34. திருமகள் தலைபோற்றி ராச்சிய பரிபாலனம் பண்ணி
35. அருளா நின்ற சாலிவாகன சகாத்தம் 1689க்கு இதன்
36. மேல் செல்லாநின்ற சருவத்தி ஞு வைகாசி ஶ்ரீ
37. 16 தீ சுக்குறவாரமும் சதுர் தசியும் அனுஷநட்செத்திரமு
38. சித்துக்கலதானமும் பெற்ற சுபதினத்தில் ஶ்ரீமது அரசுநி
39. லையிட்ட விசைய ரகுநாத சசிவர்ண பெரிய உடையாத்
40. தேவரவர்கள் புத்திரன் முத்து வடுகநாதபெரியஉ
41. டையாத் தேவரவர்கள், திருவாடுதுறை பண்டாரச்
42. சன்னதியில் அம்பலவாணசுவாமி பூசைக்கும் மகே
43. சுர பூசைக்கும் தருமசாதனப் பட்டயமும் குடுத்தபடி
44. பட்டயமாவது கிராமம் காளத்தியேந்தல் துவாபத்திக்
45. கு வடக்கு ஆலன்வயல் ஆய்குளத்து எல்கைக்கும்
46. தெற்கு ஆலன்வயல் நெடுங்கரைக்கு மேற்கு வண்
47. வடவாசிக்கும் கிளக்கு யிந்தப் பெருநாங்குயெல்கைக்கு
48. உள்பட்ட நிலம் நஞ்சை புஞ்சை மாவடை மரவடை
49. திட்டு திடல் நிதி நிச்சேபம் உள்ளிட்ட கிராமத்தில் வரி
50. யிறை உள்ளிட்ட பாளியமும் சறுவமானியமாக ச
51. ந்திராத்தித்த உள்ளவரைக்கும் பரம்பரையாகக்
52. கொண்டு தருமபரிபாலனம் பண்ணிக்கொண்டி

53. கொண்டு அரண்மனைக்குக் கட்டுக்குத்தகையாக ரூ 1க்கு கலிப்பணம் 50
54. பொறுப்பு பணம் கொடுத்து சறுவமானியமாகக் கையாடிக்
55. கொண்டு தரும பரிபாலனம் பண்ணிக் கொண்டி
56. ருப்பார்களாகவும் யிந்த தருமத்தை யாதாமொருவன்
57. வர் பரிபாலனம் பண்ணின பேர்காசியிலேயும்
58. சேதுவிலேயும் ஆயிரம் சிவலிங்கப் பிரதிட்டை
59. யும் ஆயிரம் பிரம்ம பிரதிட்டையும் ஆயிரம் கன்னிகா தா
60. னம் கோதான புண்ணியமு பெறுவார்களாக
61. வும் யிந்த தருமத்துக்கு அயிதம் பண்ணின பேர்
62. காசியிலேயும் சேதுவிலேயும் ஆயிரம் காரான் பசு
63. மாதா குருயிவர்களை வதை பண்ணின தோசத்தி
64. லே போவாங்களாகவும்.

## 9. ஆச்சாங்குடி செப்பேடு

கி.பி.1742ல் மன்னர் முத்து வடுகநாதப் பெரிய உடையாத் தேவரவர்கள் பெயரால் பொறிக்கப்பட்டுள்ள இந்தப் பட்டயமும் அரசுநிலையிட்ட சசிவர்ணப் பெரிய உடையாத் தேவர் அவர்களால் வழங்கப்பட்டு இருத்தல் வேண்டும். ஏனெனில் சிவகங்கைச் சீமை தன்னரசின் முதல் மன்னரான இவர் கி.பி.1728 முதல் கி.பி.1749 வரை அரசு கட்டிலில் அமர்ந்து ஆட்சி செய்துள்ளார்.

இந்தப் பட்டயம், இராமேசுவரம் திருக்கோயில் இராமநாத சுவாமிக்கு நித்ய பூஜை செய்யும் பணியில் இருந்த பிரபாகர குருக்கள் என்பவருக்கு சிவகங்கைச் சீமையில் உள்ள ஆச்சாங்குடி என்ற கிராமத்தை தானசாசனம் பண்ணிக் கொடுத்ததாக தெரிவிக்கும் ஆவணம் இது.

1. உ ஸ்ரீமூன் மகா மண்டலேசுரன் அரியிர தள விபாட
2. ன் பாஷைக்குத் தப்புவராயிர கண்டன் கண்டனாடு கொண்டு கொ
3. ண்டனாடு கொடாதான் பாண்டி மண்டலத் தாபனாசாரியன் சோ
4. ழ மண்டலப் பிறத்திட்டனாசாரியன் தொண்ட மண்டலச்ச
5. ண்டப் பிறசண்டன் பூறுவ தெக்ஷண பச்சிம உத்திர சமுத்தி
6. ர ஈளமுங் கொங்கும் யாள்ப்பாணம் எம்மண்டலமு
7. மளித்துக் கெசவேட்டை கொண்டருளிய ராசாதிராச க்ஷ
8. ன் இராசபரமேசுரன் இராசமாத்தாண்டன் இராசகெம்
9. பீரனான சொரிமுத்து வன்னியன் வன்னியராட்டந் தவந்தா
10. ன் பஞ்ச வற்னன் ராவுத்தர் கண்டன் விருது அந்தம்பிற கண்ட
11. ன் சாடிக்காறர் கண்டன் சாமித்துரோகியன் மிண்டன் துரகரே
12. வந்தன் துங்க ராவுத்தன் தேவை நகராதிபன் சேது மூலார
13. ட்சா துரந்தரன் இராமனாத சுவாமி காரிய துரந்தரன் சிவபூ
14. சை குருபூசை மறவாத வங்கி மேற்படி நராதிபதி அடைக்கலங் காத்த

15. வன் விரையாத கண்டனில் விளங்கிய தீரன் எதிரிட்ட மரு
16. வலர்கள் சிரமுருள வெட்டி நிலையிட்ட தீரன் செங்காவி குடையா
17. ன் பரராசகேசரி இரவி குல சேகரன் புவநேக வீரன் அரச ராவண ரா
18. மன் அடியார் வேளைக்காறன் பரதள விபாடன் உரிகோல் சுரதா
19. ணன் கொட்டமடக்கி வய்யாளினாநாயணன் வீர வெண்பாமா
20. லை உபைய சரமாலை உல்லாச நளினக்காறன் இளஞ்சிங்கம் தள
21. ஞ்சிங்கம் மதுரைராயன் துரைகள் சிகாமணி ஆத்துபாச்சி கட
22. லில்ப் பாச்சி மதப்புலி சினப்புலி தாலிக்குவேலி செம்பி வ
23. ள நாடன் கெங்கையதிபன் தொண்டியந் துறை காவலன்
24. அனுமகேதநன் கருட கேதனன் வியக்கிற கேதனன் சிங்க கே
25. தனன் மீனகேதனன் காவாகேதனன் நெமிலி கேதன கருட
26. கேதனன் சத்திய அரிச்சந்திரன் சேமத்தலை விளங்குமிகு தாளினா
27. ன் அன்னகொடி விளங்கிய தீரன் செய்யதுங்க ராயர் விருபா
28. ட்சிராயர் கிஷ்டிணராயர் வங்கிசாதிபனான பிறதிவிராச்
29. சியம் பண்ணிச் செல்லா நின்ற சாலிவாகன சகாத்தம் 1616
30. 13 உ இதன் மேலது மேதி ஸ்ரீ காற்த்திகை மீ 27 உ சுக்குறவார
31. மும் அம்மாவாசையும் சேட்டா நட்செத்திரமும் சூரிய கிரண புண்
32. ணிய காலத்தில் சுபயோக சுபகரணங்களும் பெற்ற சுபதின
33. த்தில் குலோத்துங்க சோழப் புனப்பிரளைய நாட்டிலிருக்கும்செ
34. சயதுங்க வங்சாதிபனான குளந்தை நகராதிபதியான வடகரைப் புலி
35. அரசு நிலையிட்ட விசைய ரெகுனாத சசிவர்ண பெரி உடையாத் தேவ
36. ரவர்கள் புத்திரன் அரசு நிலையிட்ட முத்து வடுகன்ாத சசிவற்ண பெரி உ
37. டையாத் தேவரவர்கள் ராமீசுரம் ராமனாதசுவாமி பூசை
38. பண்ணுகிற பிரவாகர குருக்களுக்குத் தாறாபூறுவமாகக் குடுத்த ஆ
39. ச்சாங்குடி இந்த யேந்தலுக்கு பெருனாங்கெல்லை கூறுவ
40. து கீள்பாற் கெல்லை மறுச்சுகூட்டி கண்மாய்க் கரைக்கு மேற்கு
41. தென்பாற் கெல்லை வளந்தமுடையார் தற்மத்துக்கு வடக்கு மே
42. ல் பாற்கெல்லை சரவணப் பொய்கைக்கு கிளக்கு வடபாற்
43. கெல்லை மாலாண்டான் கண்மாய்க் கரைக்கு தெற்கு இன்
44. னான்கெல்கைக்கு உள்பட்ட நஞ்சை புஞ்சை மாவடை மர
45. வடை திட்டு திடல் சகலமும் சறுவ மானியமாக தானாதி
46. பூறுவமாகக் கட்டளையிட்டோம் இந்தப்படிக்கு சந்திராதித்தியவரை
47. சந்திரப் பிரவேசம் உள்ளமட்டும் ஆண்டனுபவித்துக் கொள்
48. வராகவும் இந்த தற்மத்தை பரிபாலனம் பண்ணின பேர்கள் காசி
49. யிலேயும் சேதுவிலேயும் கோடி சிவலிங்கப் பிறதிட்டையும்
50. கோடி பிறம்மப் பிறதிட்டையும் பண்ணின பயத்தை அடைவரா
51. கவும் இந்த தர்மத்துக்கு துரோகம் பண்ணின பேர்கள் காசியி
52. லேயும் சேதுவிலேயும் கோடி பிறுமகத்தி கோடி கோக
53. த்தியும் பண்ணின தோசத்திலே போவராகவும்.

*இந்த அறக்கொடைகளை ஒருமுறை முழுமையாகப் படித்து முடித்த பிறகு, இந்த அறக்கொடைகளை வழங்கிய சிறந்த பண்பாளரான பரோபகாரியை, மன்னரை கும்பெனியார் நாடு கடத்தி தண்டனை அளித்துள்ளதை அறியும் பொழுது நெஞ்சத்தில் வேதனைதான் விஞ்சுகிறது.*

*ஆனால், கும்பெனியாரது கணிப்பு ''வேங்கன் பெரிய உடையாத் தேவர் பெரியமருது சேர்வைகாரரது மகளை மறுமணம் செய்து கொண்டதன் மூலம் பெருமை மிகுந்த நாலுகோட்டை குடும்பத்திற்கும் சமய நீதிகளுக்கும் இழிவினை ஏற்படுத்தி தமது நலன்களை பிரதானி மருது சேர்வைக்காரர்களது சுயநலங்களுடன் இணைத்துக் கொண்டவர்'' என்பதாகும். நாடு கடத்தல் தண்டனை பெற்று எழுபத்து இரண்டு பேரும் தூத்துக்குடி துறைமுகத்திற்கு பாதுகாப்புடன் கொண்டு செல்லப்பட்டனர்.*

*இவர்களது பயணம் பற்றி வேறொரு நூலில்[169] இடம் பெற்றுள்ள பகுதி அதன் பொருத்தம் கருதி கீழே கொடுக்கப்பட்டுள்ளது.*

> ''பெற்ற நாட்டையும் பெண்டு பிள்ளைகளையும், பேணி வளர்த்த பெற்றோருடன், சுற்றத்தையும், பிரிந்த அவர்களின் கண்ணீர்க் கதையின் சிறுபகுதி அரசு ஆவணங்களில் இடம் பெற்றுள்ளன. அன்றைய நிலையில் தூத்துக்குடிக்கும் மலேசியா நாட்டிற்கும் இடைப்பட்ட வங்கக் கடலைக் கடப்பதற்கு ஆறுவார காலம் கப்பல் பயணம் செய்ய வேண்டியதிருந்தது. ஆதலால் இந்த எழுபத்து இரண்டு கைதிகள், இருபது பாதுகாப்பு வீரர்கள், மற்றும் கப்பல் பணியாளர் ஆகியோருக்குத் தேவையான குடிநீர், உணவுப் பொருட்கள் ஆகியன கொண்டு சேர்க்கப்பட்டன. பின்னர் அந்த எழுபத்து இரண்டு வீரர்களையும் இருவர் இருவராக இணைத்து கைவிலங்குகள் பூட்டி கப்பலுக்குள் அழைத்துச் செல்லப்பட்டனர். 11.2.1801-ம் தேதியன்று கப்பல் தூத்துக்குடி துறைமுகத்தில் இருந்து பயணம் தொடங்கியது.
>
> ''உண்ணும் பொழுது மட்டும் இவர்களது கைவிலங்குகள் தளர்த்தப்பட்டன. மற்ற நேரம் முழுவதும் அந்த கைவிலங்குகள் அவர்களுக்கு மிகப்பெரும் இடர்பாடாக இருந்தன. கரை காணாத கடலுக்கு ஊடே பயணம் செய்யும்பொழுது கூட அவர்கள் தப்பித்து தாயகம் திரும்பிவிடக் கூடும் என்ற பயம். பயணம் தொடர்ந்தது. கண்ணுக்கு எட்டிய தூரம் வரை ஆழமான கடல். அவர்களது கவலைகள் போல பரந்த வானம் முழுவதும் கவிழ்ந்துள்ள மேகத்தின் பயமுறுத்தல். பேரலைகளது ஆவேசம். கப்பலின்

---

*169. கமால் Dr. S.M. - மாவீரர் மருதுபாண்டியர் (1989) பக்: 180-181*

பாய்களை அலைக்கழிக்கும் காற்றின் சீற்றம். கப்பலைச் சுக்கு நூறாக சிதறடிக்க முற்படுவது போன்ற பெருமழை. பகல் இரவு வந்து போயிற்று. பயணம் தொடர்ந்தது.

''வழக்கமாக எடுத்துச் செல்லப்பட்ட அரிசி, குடிநீர் அனைத்தும் காலியாகி விட்டன. பசி, தாகம், பயணக் களைப்பு, பயணிகள் புழுப் போல் துடித்தனர். என்று முடியும் இந்தப் பயணம்'' என்று முடியும் இந்த இன்னலின் தொடர்ச்சி. பயணிகளில் மூவர் கப்பல் தளத்தில் சுருண்டு விழுந்து மடிந்தனர். அந்தக் கப்பல் பயணத்தைவிட அவர்களது சாவு கொடுமையாக இருந்தது...''

*எண்பது நாட்களுக்குப் பிறகு அவர்களது கப்பல் 26.4.1802 பினாங்கு தீவை அடைந்தது.*[170]

*மரண தண்டனையை விடப் பன்மடங்கு கொடுமையான தண்டனை இது. வாழ்நாளெல்லாம் தன்னந்தனியாக வாழ்வது. வாழ்ந்த நாட்களை எண்ணி நைந்து நலிந்து வருந்துவது! இந்தக் கொடுமைக்கு ஈடாக வேறு கொடுமை எதுவும் உலகில் இருக்கவே முடியாது! வேறு வழியில்லாமல் வேங்கன் பெரிய உடையாத் தேவரும் அவருடன் பயணத்தில் எஞ்சிய அறுபத்து எட்டு விடுதலை வீரர்களும் 1.5.1802 அந்த தீவிலே கால் எடுத்து வைத்தனர்.*[171] *பசுமையும் வளமையும் நிறைந்த அந்த தீவிலே கவலையும் வேதனையும் கலந்த இதயத்துடன் தமிழக வீரர்கள் நடமாடி வந்தனர். அவர்களது சஞ்சலம் கலந்த பெருமூச்சு வீசிய காற்றிலே கலந்து விரைந்தது.*

''நாட்டை நினைப்பாரோ - எந்த
நாளினிப் போயதைக் காண்ப தென்றே
வீட்டை நினைப்பாரோ - அவர்
விம்மி விம்மி விம்மியழுங்குரல்...
கேட்டிருப்பாய் காற்றே...''

*என்று பின்னர் மகாகவி பாரதி பாடியது போன்று, இதயத்தில் நிறைந்த வேதனை, சஞ்சலம், நாட்டைப் பற்றி, வீட்டைப் பற்றிய கவலைகளினால் பீறிட்டுப் பெருக்கோடிய இரத்தக் கண்ணீரில் காட்சியளித்த சுதந்திர மனிதராக, சோகமே வடிவாக அங்கு நடமாடிய நாலரை மாதங்கள் சசிவர்ணப் பெரிய உடையாத் தேவரது வீர சாகசத்தின் விளைவாக உருவாகிய சிவகங்கைத் தன்னரசின் கடைசி மன்னர், சக்கந்தி முத்து விசய ரகுநாத வேங்கன் பெரிய உடையாத் தேவர் 19.9.1802-ம் தேதியன்று அங்கே காலமானார்.*

---

170. Military Consultations Vol. 304/4.11.1802/P: 7869-70
171. Military Consultations Vol. 304/4.11.1802/P: 7869-70

இந்த மன்னரது இறப்பை விட இன்னும் கொடுமையானது அவரது குடும்பத்தினர் — மனைவிகளும், குழந்தைகளும், பணியாட்களுமாக ஐம்பது பேர் வறுமையிலேயே வாடி வதங்கியது. அவரது மனைவி ரெங்காத்தாள் என்பவர் கும்பெனி கலெக்டருக்கு கொடுத்த மனு ஒன்றில்,[172]

> ''... மருதப்ப சேர்வைக்காரர் சீமை நிர்வாகத்தை நடத்தியபொழுது எங்களது கணவர் பெயரளவில் தான் மன்னராக இருந்தார். மருது சேர்வைக்காரரது அடாவடித்தனம் காரணமாக அவரைத் தண்டித்ததுடன், தவறான தகவலினால், எங்களது கணவரை பென்கோலனுக்கு தளபதி அக்னியூ அனுப்பிவிட்டார். அவர்கள் அங்கிருக்கும்பொழுது, அவர்களுக்கு வழங்கப்பட்ட படித்தொகையில் இருந்து ஒரு பகுதியை அனுப்பி வைத்தார். சக்கந்தி ஜமீன்தாரான எங்கள் கணவரது சகோதரர் மகனும் எங்களுக்கு சிறிது காலம் வரை தான்ய தவசங்களும் கிடைக்குமாறு செய்தார்.
>
> ''துரைச்சாமியும், சடைமாயனும் தண்டனையிலிருந்து நாடு திரும்பியவுடன், அவர்களுக்கு அலவன்ஸ் கொடுக்கப்பட்டு வருகிறது. ஆனால் எங்களுக்கு வழங்கப்படவில்லை. மனவருத்தம் காரணமாக, இறந்துபோன எங்களது கணவருக்குச் செய்ய வேண்டிய கருமங்களை, சிவகங்கை ஜமீன்தார் செய்யவில்லை. அவைகளைச் செய்வதற்கான வசதியும் எங்களிடம் இல்லை.
>
> ''சக்கந்தி ஜமீன்தார் எங்களுக்கு உதவுவதை நிறுத்தி விட்டார். எங்களது பராமரிப்பிற்கு அலவன்ஸ் கொடுத்து உதவுமாறு கேட்டுக் கொள்கிறோம். அல்லது நெருப்பில் பாய்ந்து எங்களது கஷ்ட ஜீவியத்தை முடித்துக்கொள்ள அனுமதிக்குமாறு தெரிவித்துக் கொள்கிறோம்.''

இந்த வேண்டுகோளில் நாள் குறிப்பிடவில்லை. ஆதலின் எப்பொழுது இந்த மனு கலெக்டரிடம் கொடுக்கப்பட்டது என்பதை தெரிந்து கொள்ள இயலவில்லை. திக்கற்றவர்களுக்கு தெய்வம் நெருப்பாகவும் நீராகவும் தானே துணை செய்ய முடியும்! ஆதலால்தான் ரெங்கத்தாள் நாச்சியார் அவர்கள் கடைசியாக நெருப்பில் புகுந்து விடும் நாட்டத்தை தெரிவித்து இருக்கிறார்.

கணவனை இழந்து தீப்புகும் பெண்டிர்க்கு, தாமரைப் பொய்கையைப் போன்றது நெருப்பு என ''அரும்பு அற, இதழ் அவிழ்ந்த தாமரை, நன்

---

172. Madura District Records Vol.4681/30.1.1833. P: 32-33

இரும் பொய்கையும் தீயும் ஓரற்றே.'' (புறநானூறு பாடல் எண். 246) குறிப்பிடப்பட்டிருப்பதுபோல, நெருப்பில் பாய்ந்து விடுவதற்கு துணிந்துள்ளதை சிவகங்கை நாச்சியார், தமது கடிதத்தில் குறிப்பிட்டுள்ளார்.

இவர்களது பராமரிப்புத் தொகையாக மாதத்திற்கு எவ்வளவு தேவை என்பதற்காக சிவகங்கை தாசில்தார், அப்பொழுது தயாரித்த ஒரு பட்டியலில் இருந்து சிவகங்கை இறுதி மன்னரது குடும்பத்தினர் மற்றும் பணியாட்கள் பற்றிய விவரம் கிடைத்துள்ளது.[173]

## அரச பிராட்டிகள்

முதல் மனைவி

| | |
|---|---|
| ரெங்காத்தாள் நாச்சியார் | 45 வயது |
| இருளாயி (சுவீகார மகள்) | 15 வயது |
| லெக்ஷ்மி (சுவீகார மகள்) | 12 வயது |

இரண்டாவது மனைவி

| | |
|---|---|
| கருப்பாயி நாச்சியார் | 40 |
| உங்காத்தாள் (சுவீகார மகள்) | 18 |

மூன்றாவது மனைவி

| | |
|---|---|
| ராக்கு நாச்சியார் | 50 |
| (வேலு நாச்சியார் மகள்) | 25 |

பெண் பணியாளர் - 2
தண்ணீர் எடுப்பவர்கள் (பெண்) -2
தோட்டி - 1
ஸ்தானாதிபதி (தாங்கிபிள்ளை) - 1
வக்கீல் (முத்துசாமிப் பிள்ளை) - 1
கண்காணிப்பாளர் (அப்புராஜா) - 1
ஓவர்சீயர் (மீனாட்சி சுந்தரம்பிள்ளை) - 1
வாயில் காப்போர் - 2
சலவைத் தொழிலாளி - 1

இவர்கள் அனைவருக்கும் உடை, உணவு, ஊதியம் என்ற வகையில் மாதச் செலவாக ரூ. 220 1/4 மாதம் என கணக்கிடப்பட்டது. ஆனால் இராமநாதபுரம் கலெக்டர் ரூ.100/- அலவன்ஸ் வழங்கலாம் என பரிந்துரைத்தார்.[174] அதன் பேரில் கும்பெனித் தலைமை அப்பொழுது

---

173. Madura District Records. Vol.4681/30.1.1833. P: 32-33
174. Madura District Records Vol.8900/7.2.1833. P:47

இருந்த சிவகங்கை ஜமீன்தாரை இந்த அலவன்ஸ் தொகையை வழங்குமாறு கட்டளையிட்டது. ஆனால் இதனை ஏற்றுக்கொள்ள மறுத்த ஜமீன்தார், ஏற்கனவே மருது சேர்வைக்காரர் குடும்பத்திற்கு அலவன்ஸ் வழங்குவதைப் போல கும்பெனியாரே சிவகங்கை மன்னரது விதவைகளுக்கும் அலவன்ஸ் வழங்குதல் வேண்டும் என தெரிவித்து விட்டார்.[175] அடுத்து இத்தனை ஆண்டுகளுக்குப் பின்னர் இந்தப் பரிந்துரைக்கான காரணத்தை தெளிவாக விளக்க வேண்டும் என கலெக்டரை கும்பெனி தலைமை கோரியது.

இவ்விதம் கடிதப் போக்குவரத்து நீண்டதே தவிர நலிந்து வந்த மன்னர் குடும்பத்திற்கு எவ்வித தீர்வும் கிடைக்கவில்லை என்றே தெரிகிறது.

இதிகாசம் பெருமைமிக்க புனித இராமேஸ்வரத்தின் அதிபதிகளாக விளங்கிய சேதுபதி மன்னர் கொடி வழியில் இருந்து பிரிந்த சிவகங்கைத் தன்னரசு மன்னர் கிளை தெய்வீக, ஆன்மிக அருஞ்செயல்களுக்கு அறக்கொடைகளை வழங்கி உடலும் உயிருமாக வாழ்ந்த இந்த உத்தமர்கள், உட்பகையினாலம் வெளிப்பகையினாலும் வீழ்த்தப்பட்டு வரலாற்றில் இருந்து மறைந்ததை நினைக்கும் உள்ளங்களில் வேதனைதான் எழுகின்றது.

விரைவாகவும், சீராகவும் சுழலும் காலச் சக்கரத்தை வழிநிறுத்துவதற்கு வரலாற்றுக்கு வலிமை ஏது? மாறாக திருமடங்களிலும், திருக்கோயில்களிலும் அன்ன சத்திரங்களிலும் தொடர்ந்து வரும் அவர்களது கட்டளைகள், நிபந்தனைகள் ஆகியவைகளில் தான் மறைந்து நிற்கும் அவர்களது காலத்தால் அழிக்கவொண்ணாத சுவடுகளைப் பார்க்க முடிகிறது.



175. Welsh.J. Col. - Military Reminiscenes (1881) Vol.I P: 116, 117.

# 9. சோழபுரத்திலிருந்து

இன்றைய சிவகங்கைக்கு வடக்கே பத்து கல் தொலைவில் உள்ளது சோழபுரம். பத்தாம் நூற்றாண்டின் இறுதியில் பாண்டியரை வென்று பாண்டிய மண்டலம் முழுவதையும் தங்களது ஆளுகையின் கீழ் வைத்து இருந்த சோழ பாண்டியர், இந்த ஊரை சோழர்களது ஆதிக்கத்தையும், பதுங்கி விட்ட பாண்டியரது வீரத்தையும் நினைவூட்ட நிர்மாணித்தனர். இதே பெயரிலான ஊர்கள், கன்னியாகுமரி மாவட்டம், காமராசர் மாவட்டம், தஞ்சாவூர் மாவட்டம், செங்கல்பட்டு மாவட்டங்களிலும் அமைந்துள்ளன. பரங்கியரது பரம எதிரியாக மாறிய சிவகங்கைப் பிரதானிகளை அழிக்கும் திட்டத்தின் ஒரு பகுதியாக, சிவகங்கை அரச மரபினரான படைமாத்தூர் கௌரி வல்லப ஒய்யாத் தேவரை, அறந்தாங்கி காட்டில் தேடிப் பிடித்து அழைத்து வந்தனர். புதுக்கோட்டைத் தொண்டைமானது தொள்ளாயிரம் வீரர்கள் புடை சூழ சோழபுரத்தில் *3.9.1801*-ம் தேதியன்று அவருக்கு சிவகங்கை ஜமீன்தார் என்ற புதிய பட்டத்தைச் சூட்டினர்.[176] அப்பொழுது சிவகங்கைச் சீமை மன்னர் சக்கந்தி வேங்கண் பெரிய உடையாத் தேவர் இருந்தார். கும்பெனியாரும் அவரை கி.பி.*1790*-ல் மன்னராக அங்கீகரித்து இருந்தனர். ஆனால், அவர் மருது சேர்வைக்காரர்களது அணியில் இருந்ததால் இந்த நிகழ்ச்சியை ஏற்பாடு செய்தனர்.

நாலுகோட்டைப் பரம்பரையில் வந்த படைமாத்தூர் கௌரி வல்லபரை புறக்கணித்து விட்டு சிவகங்கையில் மருது சேர்வைக்காரர்கள், சர்வாதிகாரம் செய்கின்றனர் என்பதை வெளியுலகிற்கு தெரியப்படுத்துவதற்கும், இதன் மூலம் ராஜ விசுவாசம் மிக்க சிவகங்கைக் குடிகளை புதிய ஜமீன்தார் அணியில் இணையுமாறு செய்து

176. Welsh.J.Col. - Military Reminiscenes (1881) Vol.I. P: 116, 117



படமாத்தூர் கௌரிவல்லப மகாராஜா கோயிலில் அமைந்திருக்கும் கௌரிவல்லபரின் சிற்பம்

மருது சேர்வைக்காரரர்களது மக்கள் அணியை பலவீனப்படுத்துவதும் கும்பெனியாரது திட்டம். அவர்கள் போட்ட கணக்கு சரியானது என்பதை பிந்தைய வரலாற்று நிகழ்வுகள் - காளையார் கோவில் போரில் வெற்றி, தனிமைப்படுத்தப்பட்ட மருது சகோதரர்களை கைது செய்து தூக்கில் தொங்கவிட்டது. சிவகங்கைத் தன்னரசு மன்னர் வேங்கன் பெரிய உடையாத் தேவரை பினாங் தீவிற்கு நாடு கடத்தியது போன்றவைகள் நியாயப்படுத்தின.

இதைவிடப் பெரிய ரகசியத் திட்டம் ஒன்றையும் கும்பெனியார் வரைந்து வைத்து இருந்தனர். தமிழகத்தில் எஞ்சியிருந்த பாரம்பரிய தன்னாட்சி மன்னர்களை ஒழித்து, நாடு முழுவதும் ஆங்கிலப் பேரரசை நிறுவுவது, என்பதுதான் அந்த திட்டம்.

இராமநாதபுரம் சேதுபதி மன்னர் கொடூரமாக ஆட்சி செய்வதைத் தடுத்து நிறுத்துவதாகச் சொல்லி, சேதுபதி மன்னரை கி.பி.1795-ல் கைது செய்து, சிறையில் அடைத்தனர். சேது நாட்டில் கும்பெனி நிர்வாகத்தைப் புகுத்தினர்.[177]

மன்னரது வாரிசான அவருக்கு ஒரு மகள் (சிவகாமி நாச்சியார்) இருந்தும், மன்னரது தமக்கை மங்களேஸ்வரி நாச்சியாரை சரியான வாரிசு என பிரசித்தம் செய்தனர். அவரிடம் விரைவில் அரசை ஒப்படைத்து விடுவோம் எனப் பொய்யுரைத்து விட்டு எட்டு ஆண்டுகள் அவர்களது நேரடி ஆட்சியை அங்கு நடத்தினர். பிறகு, மறவர் சீமையின் தன்னரசு நிலையை நீக்கிவிட்டு கி.பி.1803-ல் இராமநாதபுரம் தன்னரசை ஜமீன்தாரி என அறிவித்தனர்.[178]

அப்பொழுது தஞ்சையில் இருந்த மன்னர் இரண்டாவது சரபோஜியைப் பலவந்தப்படுத்தி ஆட்சியுரிமையைப் பறித்தனர். பின்னர் அந்த மன்னர் நாட்டு நலன் கருதி, தஞ்சையை தங்களிடம் ஒப்படைத்து விட்டார் என்று புனை உரை கூறி தஞ்சை அரசைத் தங்களது உடமையாக்கினர்.[179]

அடுத்து, தமிழ் நாட்டில் எஞ்சி இருந்தது சிவகங்கை தன்னரசு ஒன்று மட்டுமே. அதுவும் தன்னரசு நிலையை இழந்து விட்டது என்பதைக் குறிப்பதுதான் சோழபுரத்தில் படைமாத்தூர் கௌரி வல்லப தேவருக்கு ஜமீன்தார் பட்டம் சூட்டியது.

கும்பெனியாரது இந்த இரகசியத் திட்டத்தை அன்று எத்தனை பேர் புரிந்து இருந்தனர்? புரிந்து இருந்தாலும், அவர்களால் என்ன செய்ய முடியும்? வெற்றிக் களிப்பில் வெறிபிடித்து ஓடிவரும் காட்டானையை பிடித்து

---

177. Raja Ram Rao.T. - Manual of Ramnad Samasthanam (1891) P: 252
178. Ibid - P: 258
179. Baliga.B.B. - Thanjavur District Hand Book. P: 82, 83



நுழைவாயிலின் முகப்பிலிருந்து கௌரி விலாச அரண்மனையின் தோற்றம்.



கௌரி விலாச அரண்மனை - மன்னர் கௌரிவல்லபத் தேவரால் கட்டப்பட்டது.

நிறுத்துவதற்கு திறமைசாலி வேண்டுமல்லவா? ஒருவருமே இல்லை! கும்பெனியாரை எதிர்த்துப் போரிட்ட மதுரை சீமை அதிபர் கம்மந்தான் கான் சாகிபை, துரோகிகள் மூலம் பிடித்து கி.பி.1764-ல் தூக்கில் ஏற்றினர். பாஞ்சாலங்குறிச்சிப் போரில் தோற்று ஓடிய கட்டபொம்மனுக்கும் அதே கதி. கி.பி. 1794-ல் கும்பெனியாருக்கு கப்பம் செலுத்த தவறிய சாப்டூர் பாளையக்காரரும் தூக்கில்தான் தொங்கினார். சேது நாட்டில், கும்பெனியாரது ஆதிக்கமும் எந்த உருவிலும் செயலிலும் காலூன்றிவிடக் கூடாது என மிகவும் எச்சரிக்கையாக இருந்து, அவர்களுக்கு மரண அடி கொடுக்க முயன்ற இராமநாதபுரம் மன்னர் முத்துராமலிங்க சேதுபதியை வஞ்சகமாக கைது செய்து வாழ்நாள் முழுவதையும் சிறையிலே கழித்து இறக்குமாறு செய்தனர்.[180] அவர்களை எதிர்த்து மக்களை திரட்டி சேதுபதி சீமையின் தென்பகுதி முழுவதிலும் நாற்பத்து ஒரு நாட்கள் நடத்திய ஆயுதக் கிளர்ச்சியையும், அசுரத்தனமாக அடக்கி ஒடுக்கப்பட்டது. அதனைத் தலைமை ஏற்று நடத்திய சிங்கன்செட்டி, மீனங்குடி கனக சபாபதித் தேவர், முத்துக்கருப்ப பிள்ளை, சித்திரங்குடி மயிலப்பன் சேர்வை ஆகியோருக்கும் மரண தண்டனை, எஞ்சிய ஆங்கில எதிர்ப்பாளர்களான ராஜசிங்க மங்கலம் குமரத் தேவர், காடல்குடி பாளையக்காரர் கீர்த்தி வீரநாயக்கர், மருது சேர்வைக்காரர்கள், அவர்களது மக்கள் அனைவருக்கும் தூக்குத் தண்டனைப் பரிசு.[181]

காலத்தின் வேக சக்கரத்தை பற்றிப் பிடித்து பின்னோக்கி செலுத்த யாரால்தான் முடியும்? அது, நமது நாட்டின் தலை விதியைச் சீரழித்து, நாட்டின் நிகழ்வுகளை பயனற்று பலவீனமடையச் செய்தது.

படைமாத்தூர் கௌரி வல்லபத் தேவர் ஜமீன்தார் ஆக்கப்பட்டாரே தவிர, அவரது முறையான நிர்வாகம் இயங்குவதற்கு காலதாமதமானது. மதுரைச் சீமையின் நிலத் தீர்வை முறையை ஆழமாக ஆராய்ந்து, நிரந்தரமான நிலவரித் திட்டம் ஒன்றை தமிழகம் எங்கும் புகுத்த கும்பெனியார் முயன்றதே இந்த தாமதத்திற்கு காரணமாகும். ஏற்கனவே கும்பெனி கவர்னர் ஜெனரல் கார்ன் வாலிஸ் வங்காளத்தின் இந்த நிலவரி முறையை கி.பி. 1793-ல் அமுல்படுத்தி இருந்தார். அதன்படி ஆண்டுதோறும், நிலவரித் தீர்வையாக சிவகங்கை ஜமீன்தார் கும்பெனியாரது குழுமத்திற்கு எவ்வளவு செலுத்த வேண்டுமென்பதை நிகுதி செய்தனர். அதற்கான ''சன்னது'' ஒன்றை கி.பி. 1803-ல் சிவகங்கை ஜமீன்தாருக்கு வழங்கினர். அன்று ஆட்சி மொழியாக இருந்த பாரசீக மொழி வழக்கில் அது ''மில்கியத் இஸ்திமிரார்'' என வழங்கப்பட்டது.

---

180. கமால். Dr. S.M. - விடுதலைப் போரில் சேதுபதி மன்னர் (1987)
181. கமால். Dr. S.M. - மாவீரர் மருதுபாண்டியர் (1989) பக்: 283, 184

தன்னரசு, சிற்றரசு என்ற பாரம்பரிய அரசு முறைகளுக்கு புறம்பானது இந்தப் புதிய நிலக்கிழார் முறை என்றாலும், கால மாற்றத்தின் காரணமாக இங்குள்ள அரச வழியினர் தங்களது சமூக அந்தஸ்தை ஒரளவு பேணிக் கொள்வதற்கு இந்த ஜமீன்தார் பதவியை விட்டாலும் வேறு வழி இல்லை என்ற நிலை. சமுதாயப் பணிகள் செய்வதற்கான வாய்ப்பும் அவருக்கு மிகவும் குறைவு. குற்றங்களுக்கு நியாயம் வழங்கும் உரிமையும் அறவே இல்லாதது. கி.பி.*1801*-ல் சோழபுரத்தில் தொடங்கிய இந்த முறை நூற்றைம்பது ஆண்டுகள் வரை நீடித்து கி.பி.*1949*-ல் சிவகங்கையில் முடிவடைந்தது.[182]

சிவகங்கை ஜமீன்தாரியின் முதலாவது ஜமீன்தார் கெளரி வல்லப உடையாத் தேவர், கி.பி.*1829* வரை பதவியில் இருந்தார். இவரது ஆட்சிக்காலம் அமைதியாகக் கழிந்தது. தங்களுடைய ஏகாதிபத்திய ஆட்சிக்கு எதிராக தமிழகத்தில் மீண்டும் மக்கள் ஆயுதம் ஏந்தி போராட முயற்சிக்கக் கூடாது என்பதற்காக போராட்ட உணர்வினை ஊக்குவிக்கும் மையங்களாக கோட்டைகள் உதவக்கூடாது என்பதற்காக மக்களிடமிருந்து ஆயுதங்களைப் பறிமுதல் செய்தனர். மன்னர்களது தற்காப்பு நிலையங்களாக பல நூற்றாண்டுகளாக விளங்கிய கோட்டைகளையும், கொத்தளங்களையும் இடிக்குமாறு உத்திரவிட்டனர்.[183] சிவகங்கைச் சீமை முழுவதும் மக்களிடத்தில் எஞ்சியுள்ள ஆயுதங்களை பறிமுதல் செய்வதற்கான பணியினை வைகுந்தம் பிள்ளை என்பவர் மேற்கொண்டார்.[184]

கீழே கண்டுள்ள ஆயுதங்கள் சிவகங்கைச் சீமை மக்களிடமிருந்து, *31.3.1802* வரை பறிமுதல் செய்யப்பட்டு, இராமநாதபுரம், மதுரை கோட்டைகளுக்கு அனுப்பப்பட்டு, அங்கு அவை அழிக்கப்பட்டன.

| | | |
|---|---|---|
| *1.* | துப்பாக்கிகள் | *2096* |
| *2.* | மருந்து நிறைத்துச் சுடும் துப்பாக்கிகள் | *1229* |
| *3.* | வேல், ஈட்டிகள் | *3640* |
| *4.* | கைத்துப்பாக்கிகள் | *42* |
| *5.* | வாள்கள் | *652* |
| *6.* | குறுவாள் | *441* |
| *7.* | ஜிங்கால் | *17* |
| *8.* | ஸ்ரோஜன் | *90* |
| *9.* | துப்பாக்கி சனியன்கள் | *91* |
| | மொத்தம் | *8,298.* |

182. Tamil Nadu Estates (Abolition and Conversion into Ryotwari Settlement Act. 1948)
183. Madura Dist. Records. Vol. 1146/1.9.1803. P:34
184. Madura Dist. Records. Vol. 1178(A)/17.5.1802. P: 354

திருபுவனம், திருப்புத்தூர், மானாமதுரை, பார்த்திபனூர், பிரான்மலை, அனுமந்தக்குடி, சூரக்குடி, காளையார்கோவில் ஆகிய ஊர்களில் அமைந்து இருந்த கோட்டைகள் இடித்து அழிக்கப்பட்டன.[185]

ஏற்கனவே குறிப்பிட்டது போல, ஜமீன்தார்கள் ஆட்சியில் தர்ம காரியங்களுக்கு முழுமையான கிராமங்களை வழங்குவதில் பல சிக்கல்கள் இருந்தன. சில சிறப்பான செயல்களுக்காக ஜமீன்தாரியில் அடங்கியுள்ள சில ஊர்களை திருக்கோயில், தனியார் ஆகியவர்களுக்கு இனாமாக வழங்குவதற்கு ஜமீன்தார் விரும்பினாலுங்கூட, அந்த ஊர்களுக்கு நிகுதி செய்யப்பட்ட தொகையை பொறுப்புத்தொகை (குயிட் ரெண்ட்)யாக கும்பெனியாருக்குச் செலுத்த வேண்டிய நிர்ப்பந்தம். ஆனால், கௌரி வல்லபரிடத்தில் மேலோங்கி நின்ற ஆன்மிகப் பிடிப்பு காரணமாக சில கிராமங்களை சர்வ மான்யமாக வழங்கி உதவியுள்ளார். அவைகளுக்கான ஆவணங்கள் கிடைக்கவில்லை. கிடைத்துள்ள சில குறிப்புகளில் இருந்து கீழ்க்கண்ட திருக்கோயில்கள், திருமடங்கள், தனியார்கள் ஆகியோர் அவரது அறக்கொடைகளைப் பெற்று இருந்ததை அறிய முடிகிறது.[186]

### 1. திருக்கோயில்கள்

| | | |
|---|---|---|
| கி.பி. 1829 | அன்னவாசல் | இராமநாதசாமி ஆலயம், இராமேஸ்வரம் |
| 1802 | மாறணி | சர்வேசுவரர் ஆலயம், சருகணி (தேவாலயம்) |
| 1816 | நசர்புளியன்குளம் | முகம்மது நபி மௌவீது விழாவிற்கு |
| 1816 | கமுதக்குடி | மீனாட்சி சுந்தரர் ஆலயம், மதுரை |
| 1828 | கீழச்சேத்தூர் | சந்திரசேகர சுவாமி கோயில். |

### 2. திருமடங்கள்

| | | |
|---|---|---|
| கி.பி. 1801 | வாவியேந்தல் | இராமசாமி பரதேசி - போதகுரு சாமிமடம் |

### 3. தனியார்கள்

| | | |
|---|---|---|
| கி.பி. 1801 | மணக்குடி | சிவராவ், தர்மாசனம் |
| | புன்னன்குடி | ஊழியமானியம் |
| | மணிமுடி ஏந்தல் | ஜீவித இனாம் |
| | கருத்தன் ஏந்தல் | திருப்பதி ஐயன், தர்மாசனம் |
| | பொட்ட வயல் | ஜீவித இனாம் |

185. Madura Dist. Records Vol. 1178 (A) 17.5.1802. P: 354
186. சிவகங்கை தேவஸ்தான பதிவேடுகள்

| | | |
|---|---|---|
| *1802* | சூரிக்கன்ஏந்தல் | வரதாச்சாரியார், தர்மாசனம் |
| *1823* | நெட்டிஏந்தல் | சங்கர அய்யன் |
| *1829* | தடங்குண்டு | சுப்புராயர் |
| | சித்தாட்டி | சுப்பிரமணியம் |
| | உமாச்சிபட்டி | ஆபத்து உத்தாரண ஐயர் |
| | பொன்னம்பட்டி, இருஞ்சிறைகருப்பாயி ஆத்தாள் | |
| | ஆண்டிச்சி ஊரணி | |
| | கட்டனூர் முதலான ஒன்பதுஊர் | மாணிக்க ஆத்தாள் |

இந்த நிலக்கொடைகள் தவிர கிடைத்துள்ள இரு செப்பேடுகளின் உண்மை நகல் இங்கு கொடுக்கப்பட்டுள்ளன.

## 1. சருகணி தேவாலயச் செப்பேடு

### (முதல் பக்கம்)

சமய நல்லிணக்கத்திற்கும் சமரச மனப்பான்மைக்கும் பெயர் பெற்ற சேதுபதிகளது வழித்தோன்றளான சிவகெங்கையின் முதலாவது ஜமீன்தார் படமாத்துர் கௌரி வல்லப உடையாத் தேவர் அவர்கள் தமது முன்னோரைப் போன்று திருமடங்களுக்கும் கோவில்களுக்கும் தனியார்களுக்கும் பல அறக்கொடைகளை வழங்கியதை வரலாற்றில் காண முடிகிறது. சாக்கை வட்டம் கோழியூரில் சிறுபான்மையினரான இஸ்லாமியர்களது தொலுகைப் பள்ளிக்கும், திருப்புவனம் வட்டம் புளியங்குளம் நபிகள் நாயகம் அவர்களது பிறந்ததின மௌலி விழா கொண்டாடுவதற்கும் நிலக்கொடைகளை ஏற்கெனவே வழங்கியுள்ளார். இப்பொழுது அவரது குடிகளில் சிறுபான்மையினரான கிருத்துவர்களுக்கு சருகணி தேவலாயத்திற்கு கி.பி.1802-ல் சருகணிமாரனேந்தல் கிராமத்தில் சர்வமாணியமாக வழங்கியதை இந்த செப்பேடு தெரிவிக்கின்றது.

1. சுபஸ்ரீ மன் மகாமண்டலீசுபரன் அரி
2. யாயிர தளவிபாடன் பாசைக்கு தப்பு வார்க்க
3. ண்டன் மூவராய கண்டன் கண்டனாடு கொண்டு
4. கொண்டனாடு குடாதான் பாண்டிமண்டல
5. தாபனசாரியான் சோளமண்டல பிரதிஷ்டபனா
6. சாரியான் தொண்டமண்டல சண்ட பிரசண்டன்
7. இளமும் கொங்கும் யாட்பாணமும் கெசவேட்டை
8. கொண்டருளிய ராசாதிராசன் ராசபரமேசுரன் ரா
9. சமார்த்தாண்டன் ராசகெம்பீரன் ராசகுலதிலகன்
10. இவுளி பாவடி மீதித் தேறுவார் கண்டன் மலை கலங்
11. கிளு மனங்கலங்காதகண்டன் அன்னதான சத்
12. திரசோமன் வடகரைப்புலி சாமித்துரோகிகள் தலைமீதி

13. த்திடும் இருதாளினான் பட்டமானங்காத்தான்
14. தேசி காவலன் தாலிக்கு வேலி தரியர்கள் சிங்
15. கம் இரவிகுல சேகரன் இளங்சிங்கம் தளசிங்
16. கம் ஒட்டியர் தளவி பாடணன் ஒட்டியர் மோகந்
17. தவிள்த்தான் குலுக்க தளலிபாடன் துலுக்கராட்டந்தவி
18. ள்த்தான் விகடதடமணிமகுட விக்கிரம பொற்கொடி
19. யை வெட்டிநிலை மீட்ட வீரசூர புசமேல் பராக்கிரம
20. வேட்டிலுந் தங்கம் வெதுப்பிலும் பச்சை னாயகமுடைய
21. அரசராவண ரமன் அந்தப்பிரகண்டன் மனு நீ
22. தி சோழன் மன்னரில் மன்னன் மன்னர்கள் தம்
23. பிரான் துஷ்டரில் துஷ்டன் துஷ்டர் நெஷ்டுரன் சிஷ்
24. டரில் சிஷ்டன் சிஷ்டர் பரிபாலன் சாமிகாரிய துர
25. ந்தரன் பொறுமைக்கு தர்மர் அறிவுக்கு அகத்தி
26. யன் சொல்லுக்கு அரிச்சந்திரன் குடைக்குக்கர்ணன்
27. பரிக்கு நகுவன் வாளுக்கு அபிமன் சாடிக்காரர்
28. மிண்டன் வலியசிசருவி வழியில்க் கால்நீட்டி இட...
29. ரா கோடாலி எதுத்தார்கள் முண்டன் சேதுகாவல
30. ன் செங்காவிக் குடையான் தொண்டியந்துறை காவல
31. ன் துரைகள் சிரோமணி அனுமக் கொடியான் அடை
32. யலர்கள் சிங்கம் மகரக்கொடியான் மயமன்னியர்
33. தம்பிரான் செயதுங்கராயர் குருமுடி ராயர் மும்முடிரா
34. யர் விருப்பாச்சிராயர் அசுபதி கெசபதி நரபதி ரெகு
35. நாதச் சேதுபதி அரசு நிலையிட்ட முத்து விசையரெ
36. குநாதக் கெவுரி வல்லப பெரிய உடையாத்தேவரவர்
37. கள் பாவத்துக்குப்பிரம்பும் புண்ணியத்துக்குள்
38. ளுமாகப் பிறீதிவி ராட்சிய பரிபாலனம் பண்ணி
39. அருளாநின்ற சாலிவாகன சகாத்த சூர எளு
40. உயங். மேல் செல்லாநின்ற துர்மதி (உறு மார்களி
41. உயங் சருகனிச் சறுவேரர் கோவிலுக்கு மாற
42. ணி முழுவதும் சறுவ மாணியமாகவும் அந்தக் கிராம
43. த்தில் பிரக்கிற சகல வரி யிறை சறுவ மாணியமாகவும்
44. தானம் பண்ணி தாம்பூர பட்டயங் குடுத்திருப்பதி

(இரண்டாவது பக்கம்)

45. னாலே மாறணி முழுதுக்கும் பரினான் கெல்கைய
46. வது போருடைப்புக்கு தெக்கு பெரு நெல்லூ
47. க் கோட்டை ஆத்துக்கு கிளக்கு செட்டியேந்தலு
48. வடக்கு னாமத்திக்கி மேற்கு இன்னான் கெல்
49. லைக்கு உள்பட்ட மாரணியில் நீதி நிட்சேபம் தரு
50. ஆபர்ணம் சித்த சாத்தியமென சொல்லப்பட்
51. டதும் கீழ் னோக்கிய கிணறும் மேல் நோக்கிய ம
52. ரமும்அவிதாளி ஆவரை கொளிஞ்சி திட்டு திடல்

*53. புத்து புனல் இது முதலான உலக ஆஸத் ஆதாயமு*
*54. ம் அங்க சுங்கம் வெள்ளைக்குடை கீதாரம் கரை*
*55. மணியமங்களம் பட்டயவரி மடத்துவரிச்சுக்கல்வரி*
*56. .... .... .... சருகணி கோவில் தீபதூப நெய்வேத்*
*57. தீயம் ஆராதனைக்கு நிற்சேப தானம் பண்*
*58. ணிக் குடுத்தபடியினா லே இந்தப்படிக்கு சந்தி*
*59. ராதித்த சந்திர பிரவேசுவரைக்கும் கல்லு*
*60. ங் காவேரியும் புல்லும் பூமியும் உள்ளவரை*
*61. க்கும் ஆண்டனுபவித்துக் கொள்வாராகவும்*
*62. இந்த தர்மத்தை மேன் மேலும் பரிபாலினம்*
*63. பண்ணின பேருக்கு ஆயிரங்கோடி கண்ணியா*
*64. தானமும் ஆயிரங்கோடி லெட்சபிராமண போ*
*65. சனம் பண்ணி லெட்சந் தேவாலயத்தில் கற்ப*
*66. கோடி திருவிளக்கு ஏத்தும் பலனு மடைவா*
*67. ராகவும் இந்த தர்மத்துக்கு யாதொருவன்*
*68. அம்சளிவு பண்ணினால் கங்கைக் கரையில்*
*69. காராம் பசுவை மாதாவை குருவை களுத்தறு*
*70. த்த தோசத்தில் போவாராகவும்.*

## 2. சிவகங்கை மொட்டை பக்கீர் தர்கா செப்பேடு

சிவகெங்கை நகரின் தென்பகுதி அகிலாண்ட ஈஸ்வரிபுரத்தில் வாழ்ந்திருந்த இஸ்லாமிய புனிதரான மொட்டைப் பக்கீர் சாயுபு என்பவருக்கு சிவகெங்கையின் முதலாவது ஜமீன்தார் படமாத்தூர் கௌரிவல்லபத் தேவர் அவர்கள் பொன்னான்குளம் மாகணம் உடையாரேத்தல் திரணி கிராமத்திலும், மங்களம் தாமுக இத்துக்குடி மாகணம் நாளிவயல் கிராமத்திலும் நஞ்சை புஞ்சை நிலங்களை சர்வ மாணியமாக வழங்கி சிறப்பித்ததை இந்த செப்பேடு தெரிவிக்கின்றது. இந்த செப்பேட்டின் காலம் சரியாக கணக்கிடப்பட்டு குறிக்கப்படவில்லை.

*1. உ சாலிவாகன சகார்த்தம் 1765 கலியத்*
*2. தம் 4765க்கு மேல் செல்லாநின்ற சோ*
*3. பகிறுதுஸ்ரீ சித்திரை 5தீ ஸ்ரீமது விசை*
*4. யரகுநாதச சிவன்னப் பெரிய உடையாத் தே*
*5. வரவர்கள் முத்துவடுகனாதத் தேவரவர்கள்*
*6. சிவகங்கையிலிருந்து மொட்டைபக்கிரி*
*7. சாயபுக்கு பொன்னாகுள மாகாணத்தில் உடை*
*8. யானெந்தல் திரணிஉள்பட விரையடி 60*
*9. ளம் மங்கலந் தாலுகாவில் இத்திக்குடி மா*
*10. காணத்தில் நாளிவயல் கிராமம் கலவிரை*
*11. யடி 40ளம் ஆக கிராமம் - உகு விரையடி - 10-ளகு*
*12. தற்ம பூசாதனம் சறுவமானியமாகப்பண்*

13. ணிக்கொடுத்தபடியினாலே இந்தக்கிறாம நா
14. ன் தெல்லைக்குள்ப்பட்ட நஞ்சை புஞ்சை தி
15. ட்டுதிடல் மேல்நோக்கிய மரம் கீள்நோக்
16. கிய கிணறு பாசிபடுகை நிதிநிட்சேபம்
17. ஸ்ரீராமஜெயம்
18. செலதரு பாஸாணம் புண்ணியகா
19. மிய சித்தசாத்தியமென்று சொல்
20. லப்பட்ட போகதேச்சுவாமியங்கனா
21. ளூம் நிலவரி கிதோரவரி வெள்ளக்குடை
22. வரி கரை மணியம் சகலமும் சறுவமா
23. னியமாக ஆண்டனுபவித்துக்கொள்
24. வரராகவும் இந்த தர்மசானத்துக்கு
25. ஆதாமொருதர் புரோவிற்த்தியாக
26. பரிபாலனம் பண்ணி வருகிற பேர்
27. காசியிலும் றாமிசுபரத்திலும் பி
28. றம்மப்பிறதிஷ்டை சிவப்பிறதி
29. ஷ்டை விஷ்னுப்பிறதிட்டை பண்ணி
30. பலனை யடைவராகவும் இந்த தற்
31. மத்துக்கு அகிதம்பண்ணின
32. பேர் ராமீசுரம் காசியில் கெ
33. ங் கையில் காராம்பசுவை வதை
34. பண்ணின பாவத்தை யனு
35. பவிப்பாராகவும் இந்தப்ப
36. டிக்கி இந்த சறுவமானியதற்
37. ம பூசாதன மெளுதினேன் சிவ
38. கெங்கையிலிருக்கும் தற்
39. மப் பள்ளிக்கூடம் திருக்கா
40. லிங்கவாத்தியார் குமார
41. ன் ஆண்டபெருமாள்
42. கையெளுத்து.

கௌரி வல்லபத் தேவர் ஜமீன்தார் ஆவதற்கு முன்னர் நான்கு மனைவிகளையும், ஜமீன்தார் ஆன பிறகு மூன்று மனைவிகளையும், மொத்தம் ஏழு பேரை மணந்து இருந்தார். இவர்களைத் தவிர பிரதானி சின்ன மருது சேர்வைக்காரரால் காளையார் கோவிலில் காவலில் வைக்கப்பட்டிருந்தபொழுது, கருப்பாயி ஆத்தாள் என்ற கணிகையைக் காதலித்து மணந்தார். அவர்தான் காளையார் கோவிலில் இருந்து அவர் தப்பிச் செல்வதற்கு உதவியவர். அங்கிருந்து தொண்டமான் சீமைக்குச் சென்று அங்கு அறந்தாங்கி காட்டில் வாழ்ந்தபொழுது மாணிக்க ஆத்தாள் என்ற பெண்ணையும் குருவாடிப்பட்டி கருப்பாயி ஆத்தாளையும் மணந்து இருந்தார். இதோ அவர்களது பெயர்கள்:

*1. வெள்ளை நாச்சியார்*
*2. ராக்கு நாச்சியார்*
*3. வேலு நாச்சியார்*
*4. முழுதார் நாச்சியார்*
*5. அங்கமுத்து நாச்சியார்*
*6. பர்வதம் நாச்சியார்*
*7. முத்து வீராயி நாச்சியார்*
*8. கருப்பாயி ஆத்தாள் நாச்சியார் (இசை வேளாளர்)*
*9. மாணிக்கம் நாச்சியார் (கள்ளர்)*
*10. குருவாடிப்பட்டி கருப்பாயி நாச்சியார் (அகம்படியர்)*

இவர்களில் முழுதார் நாச்சியார் (தொ வரிசை எண்.4), அங்கமுத்து நாச்சியார் (தொ.வ.எண்.5) முத்து வீராயி நாச்சியார் (தொ.வ.எ.10) ஆகிய மூன்று பேர்களுக்கும் குழந்தை பேறு கிட்டவில்லை. எஞ்சியுள்ள நான்கு (தொ.வ.எண். 1, 2, 3, 6) மனைவிகளில் (தொடர் வரிசை எண் 8, 9, 10)ல் கண்ட வைப்புகள் நீங்கலாக) முதலாமவருக்கு ஒரு பெண்ணும், இரண்டாமவருக்கு ஒரு பெண்ணும், மூன்றாமவருக்கு ஒரு ஆணும், மூன்று பெண்களும் இருந்தனர். ஜமீன்தார் இறக்கும்பொழுது உயிருடன் இருந்தவர்கள் அங்கமுத்து நாச்சியார் (5), பர்வத வர்த்தினி (6), முத்து வீராயி (7), இந்த மூன்று பெண்களில் வயதில் முதியவரான கைம்பெண்ணுக்கு ஜமீன்தாரது வாரீசாக சிவகங்கையின் அடுத்த ஜமீன்தார் ஆவதற்கு உரிமை இருந்தது. ஆனால், படை மாத்தூர் ஒய்யாத் தேவரது மகன் முத்துவடுகநாததேவர் தம்மிடத்தில் சிவகங்கை ஜமீனுக்கான உரிமை ஆவணம் இருப்பதாக கும்பெனியாரை ஏமாற்றியதால் அவர் கி.பி.1730-ல் சிவகங்கையின் இரண்டாவது ஜமீன்தாராக்கப்பட்டார்.

கி.பி.1731-ல் இவர் மரணம் முற்றதும், அவரது மகன் போதகுருசாமித் தேவர் மூன்றாவது ஜமீன்தார் ஆனார்.

அவ்வளவுதான். ஓராண்டிற்கு மேலாக உருவாகி வந்த ஜமீன் உரிமை பற்றிய குழப்பங்கள் நீதிமன்றத்திற்குச் சென்றன. ராணி ராக்குநாச்சியாரது பேரன் முத்து வடுக நாதத் தேவர் (1), ராணி அங்க முத்து நாச்சியார் (2), ராணி வேலு நாச்சியாரது மகள் கோட்டை நாச்சியாரது சுவீகார புத்திரன், (3), என்ற மூவரும் தங்களது உரிமை மனுக்களை கி.பி.1732-ல் தென் பிராந்திய மாநில நீதிமன்றத்தில் தாக்கல் செய்தனர். இந்த உரிமை வழக்குகளின் முடிவில் கி.பி.1735-ல் ராணி அங்க முத்து நாச்சியாரது உரிமையை அங்கீகரித்தது. இத்தீர்ப்பு வெளியிட்ட பொழுதிலும், அவைகளின் மேல் முறையீடு. ஏனைய வாரிசுதார்களது உரிமை என்பன போன்று அடுத்தடுத்து பல வழக்குகள் தொடர்ந்தன. மதுரை, சென்னை வழக்கு மன்றங்களின் தீர்ப்புரைகளுடன் அமையாமல், அவை அப்பொழுதும் லண்டனில் அமைந்து இருந்த பிரிவு கவுன்சில் என்ற உச்சநீதிமன்ற முடிவுகளுக்கும் பலமுறை சென்று வந்தன. அந்த

நூற்றாண்டு முழுவதும் சிவகங்கை ஜமீன்தார்கள் உரிமை வழக்குகள் நீதிமன்றங்களில் குவிந்து வந்தன.

இத்தகைய வழக்குகளைச் சந்தித்தவர்களாக, அந்த வழக்குகளின் தீர்ப்புரையையொட்டி சிவகங்கை ஜமீன்தார்களது பதவிக்காலமும் இருந்து வந்தது. அந்த ஜமீன்தார்களது பட்டியல் பின்வருமாறு.

| | | |
|---|---|---|
| *1.* | முத்துவடுக நாதத் தேவர் (படைமாத்தூர் ஒய்யாத் தேவர் மகன் | *கி.பி.1830-31* |
| *2.* | (ஷையார் மகன்) போத குருசாமித் தேவர் | *கி.பி.1831-35* |
| *3.* | ராணி அங்கமுத்து நாச்சியார் | *கி.பி.1835-57* |
| | (கோர்ட் அட்டாச்மென்ட்) | *கி.பி.1837-44* |
| *4.* | கௌரீ வல்லபத் தேவர் (இரண்டாவது) | *கி.பி.1844-48* |
| | (கோர்ட் ஆவ் வார்டு) | *கி.பி.1848-59* |
| *5.* | இரண்டாவது போத குருசாமித் தேவர் என்ற அரண்மனைசாமித் தேவர் | *கி.பி.1859-60* |
| *6.* | ராணி. காத்தம நாச்சியார் | *கி.பி.1864-77* |
| | (குத்தகைதாரர் பி.கிருஷ்ணசாமி செட்டி) | *கி.பி.1877-78* |
| *7.* | துரைச் சிங்கத் தேவர் | *கி.பி.1878-83* |
| | (குத்தகைதாரர்கள் ஸ்டிராநாக்கும் மற்றும் இருவரும்) | *1883-88* |
| *8.* | பெரிய சாமி என்ற உடையணத் தேவர் (துரைச்சிங்கத் தேவர் மகன்) | *கி.பி.1888-98* |
| *9.* | துரை சிங்கத் தேவர் | *கி.பி.1898-1941* |
| *10.* | து.சண்முக ராஜா | *கி.பி.1941-1963* |
| *11.* | கார்த்திகேய வெங்கடாசலபதி | *கி.பி.1963-79* |

இந்த உரிமையியல் வழக்குகள், ஜமீன்தார்களது பொருளாதார வளத்தைப் பெருமளவு பாதித்தது என்று சொன்னால் மிகையாகாது. இவர்களது சமுதாயப் பணிகளும் இதன் காரணமாக முடக்கம் பெற்றுவிட்டன. தவிர்க்க முடியாத சூழ்நிலையிலும் தங்களது பாரம்பரியப் பண்பினால் அவர்களில் சிலர் அறக்கொடை வழங்குதலையும், திருப்பணிகளை நிறைவேற்றி இருப்பதையும் கீழ்க்கண்ட சாதனைகளில் இருந்து அறிந்து கொள்ள முடிகிறது.

போதகுருசாமித் தேவர்

| | | |
|---|---|---|
| | தச்சன்குளம் | தர்மாசனம் |

ராணி காத்தம நாச்சியார்

| | | |
|---|---|---|
| கி.பி. | உளக்குடி | தர்மாசனம் |
| 1855 | நண்டு காய்ச்சி | தெய்வச் சிலைப் பெருமாள் ஆலயம், திருப்புல்லாணி. |
| 1856 | நந்தனூர் | ஊழிமானியம் |
| | உத்தமனூர் | ஊழியமானியம் |
| | முடவேலி | தர்மாசனம் |
| 1864 | வேளார் ஏந்தல் | ஊழியமானியம் |
| | சவரியப்பராஜகுளம் | தர்மாசனம் |
| | இடைகுளம் | ஊழியமானியம் |
| | இடையன்குளம் | (குதிரை ஏற்றத்திற்கு) |

உடையணத் தேவர்

| | | |
|---|---|---|
| 1892 | நெற்குப்பை | மனமொத்த கண்டீசுரர் திருக்கோயில் குடமுழுக்கு |
| | ஒழுகுமங்கலம் | குடமுழுக்கு |
| | ஆத்திக்காடு | குடமுழுக்கு |
| | வஞ்சினிப் பட்டி | குடமுழுக்கு |
| 1893 | திருக்கோட்டியூர் | சௌமிய நாராயணப் பெருமாள் கோவில் திருப்பணி |
| 1896 | செம்பனூர் | கண்டீசுவரர் கோயில் |
| | வெளியாத்தூர் | கைலாச நாத சுவாமி கோயில் |
| 1897 | சன்னவனம் | சன்னவன நாதர் சுவாமி கோயில் |
| | சாக்கோட்டை | சாக்கை அம்மன் கோயில் |
| 1907 | திருப்புவனம் | திருப்பணி, குடமுழுக்கு |

உடையணத் தேவர்

| | | |
|---|---|---|
| 1906 | கோவிலூர் | கோயில் குடமுழுக்கு |
| | எழுவன் கோட்டை | விசுவநாதர் கோயில் குடமுழுக்கு. |
| 1907 | கத்தப்பட்டு | சிவன் கோயில் திருப்பணி |
| 1908 | உஞ்சனை | ஈசுவரன் கோயில் குடமுழுக்கு. |
| 1911 | பட்டமங்கலம் | மரியாதை கண்ட விநாயகர், அம்மன் கோயில் குடமுழுக்கு |

துரைச் சிங்கத் தேவர்

| | | |
|---|---|---|
| 1924 | ஒழுகு மங்கலம் | திருமஞ்சன முடைய ஈசுவரர்கோவில் குடமுழுக்கு |
| | நெற்குளம் | மனமொத்த கண்டீசுரர் திருக்கோயில் திருப்பணி |
| 1930 | வயிரவன் பட்டி | சிவன் கோயில் திருப்பணி, குடமுழுக்கு. |
| 1934 | வடவன்பட்டி | முனியப்ப சுவாமி பிள்ளையார் கோவில் திருப்பணி, குடமுழுக்கு. |

சண்முகராஜா

| | | |
|---|---|---|
| 1942 | பட்டமங்கலம் | பிள்ளையார் கோவில் திருப்பணி |
| | ஏரியூர் | நாச்சியம்மன் கோயில் திருப்பணி |
| | அம்மச்சிப்பட்டி | கறுப்பர் கோவில் திருப்பணி, குடமுழுக்கு |
| 1954 | திருக்கோட்டியூர் | சௌமிய நாராயணப் பெருமாள் கோவில் திருப்பணி |
| 1961 | திருப்புவனம் | சவுந்திர நாயகி புஷ்பேசுவரர் ஆலயம் குடமுழுக்கு |
| | காளையர் கோயில் | ராஜகோபுர குடமுழுக்கு |

கார்த்திகேய வெங்கிடாசலபதி ராஜா

| | | |
|---|---|---|
| 1965 | மானாமதுரை | வீர அழகர் கோயில் குடமுழுக்கு |
| | சிங்கம்புணரி | சேவுகப் பெருமாள் கோயில் குடமுழுக்கு |
| | இளையான்குடி | இராஜேந்திர சோழீஸ்வரர் கோயில் குடமுழுக்கு |



# 10. சிவகங்கை ஜமீன்தாரி

## - ஒரு கண்ணோட்டம்

கி.பி.1728-ல் சேதுபதி சீமையில் இருந்து சிவகங்கைச் சீமை பிரிந்தது. மறவர் சீமையின் மகோன்னத வரலாறு படைத்த சேதுபதி மன்னர்களுக்கு ஏற்பட்ட மிகப் பெரிய பலவீனமாக இந்தப் பிரிவினை கருதப்பட்டது. இப்பொழுது, ஒரு தலைமுறைக்குப் பின்னர் சிவகங்கை மறவர்களது வீரமும் வரலாறும் மறக்கடிக்கப்பட, இவர்களது சீமையின் தன்னரசு நிலை பறிக்கப்பட்டதுதான் சிவகங்கை ஜமீன்தாரி முறை. விடுதலைப் போராட்டத்தின் வெற்றிக்குப் பதிலாக விரைந்து வந்த இந்த ஆலகால விஷத்தை அரனார் உண்டது போல சிவகங்கைச் சீமை மக்கள் இந்த வெள்ளைப் பரங்கிகளது விஷத்தை அடுத்த 150 ஆண்டுகளுக்கு சகித்துக் கொள்ள வேண்டும் என்பது தான் காலத்தின் கட்டளை.

தமிழகத்தில் இந்த ஜமீன்தாரி முறை முதன்முறையாக சிவகங்கைச் சீமையில்தான் புகுத்தப்பட்டது. ஏற்கனவே, வடக்கே கும்பெனியாரது உரிமைபெற்ற வங்காளம், பீகார், ஒரிஸ்ஸா மாநிலங்களில் கும்பெனியின் தலைவர் காரன்வாலிஸினால் இம்முறை கி.பி.1797-ல் அமலுக்குக் கொண்டு வரப்பட்டது.[187] மன்னரது பாரம்பரிய ஆட்சி முறைக்கு பதிலாக ''நிலச் சுவான் தாருக்குக் கட்டுப்பட்ட குடிகள்'' முறை இது. தங்களது உடைமையாக்கப்பட்ட தென்னாட்டுப் பகுதிகளிலும் இதனை உடனே அமுல்படுத்த வேண்டும் என்பதுதான் காரன்வாலிசின் ஆசை. ஆனால் அதற்கான சூழ்நிலை சுதேச மன்னர்கள், முந்தைய பாளையக்காரர்களது? பாளையங்களில் இருந்ததால், முதலில் சிவகங்கைச் சீமையில், கி.பி.1801-ல் ஜமீன்தாரியாக்கப்பட்டது.

---

187. History of the Inam Revenue Settlement and Abolition of intermediate Tenures (1977) Govt. of Tamil Nadu P: 35

ஆனால், மதுரை, திருநெல்வேலிச் சீமைகளின் விளை நிலங்கள், பாசன வசதி, மண்ணின் விளைச்சல் திறன் வரி விதிப்பு முறை, ஆகியவகளை ஆய்வு செய்யும் பணிகள் நடந்து கொண்டிருந்ததால், சிவகங்கை ஜமீன்தார் என்ற அதிகார பூர்வமான சன்னது படைமாத்தூர் கௌரி வல்லப உடையாத் தேவருக்கு கி.பி.1803-ல் வழங்கப்பட்டது. இந்த சன்னது ''மில்கி-யத்-இஸ்திமிரார்'' என பார்சி மொழியில் வழங்கப்பட்டது. அப்பொழுது இத்தகைய சன்னதுகள் மதுரைச் சீமையில் உள்ள சாப்டூர், திருநெல்வேலிச் சீமை எட்டையாபுரம், ஊத்துமலை, சொக்கம்பட்டி, பாரியூர், தலைவன் கோட்டை, கடம்பூர், பனைவேலி, கொல்லாபட்டி, ஏழுமாடி, அழகாபுரி, நடுவன்குறிச்சி, மணியாச்சி, சுரண்டை, மேல்மாந்தை, ஆத்தங்கரை, சுண்டையூர், ஊர்க்காடு, சிங்கம்பட்டி, மன்னர் கோட்டை, ஆவுடையாபுரம், சாத்தூர், கொல்லங்கொண்டான் ஆகிய பாளையக்காரர்களுக்கும் வழங்கப்பட்டது. இந்த சன்னது வழங்கும் நிகழ்ச்சி திருநெல்வேலி கலைக்டர் கச்சேரியில் 1803, ஜூலை மாதம் நடைபெற்றது.[188]

இந்த சன்னது என்ற பட்டயத்தில், சிவகங்கை ஜமீன்தாரின் அதிகார வரம்பிற்குட்பட்ட ஊர்கள், இனாம் கிராமங்கள், ஏந்தல்கள், புஞ்சை, நஞ்சை நிலங்களின் மொத்த பரப்பு, இந்த நிலங்களின் வகைப்பாட்டிற்கு தக்கபடி வசூலிக்க வேண்டிய தீர்வை விகிதம், அந்த தீர்வை வசூல் பணத்தில் கும்பெனியாருக்கு ஆண்டுதோறும் செலுத்த வேண்டிய கிஸ்திப் பணம் என்ற நிர்ணயத் தொகை ஆகியவை குறிப்பிடப்பட்டு இருந்தன. இதற்கான ஆண்டு முறை விவசாய காலத்தை அடிப்படையாக கணக்கிட்டு பசலி எனப்பட்டது. அதாவது ஆங்கில பஞ்சாங்க முறையில் ஜூலை மாதம் 1-ந் தேதி முதல் எதிர்வரும் ஆண்டின் ஜூன் மாதம் 30-ந் தேதி வரையான காலமாகும். இந்த ஒரு பசலி ஆண்டிற்கு சிவகங்கை ஜமீன்தார் கும்பெனியாருக்கு செலுத்தக் கடமைப்பட்ட தொகை, 1,25,626 ஸ்டார் பகோடா பணமாகும். இதற்கு கிஸ்தி என்று பெயர். அப்பொழுது சிவகங்கை ஜமீன்தாரியான 1551 சதுர மைல் பரப்பில், அமைந்து இருந்த 1937 ஊர்க்குடிகளிடமிருந்து எதிர்பார்க்கப்பட்ட மொத்த வசூல் தொகையில் ஐந்தில் மூன்று பகுதியாக இந்தத் தொகை கருதப்பட்டது.[189]

ஜமீன்தாருக்கும் குடிமக்களுக்கும் அப்பொழுது ஜமீன்தாரி முறையில் இருந்த ஒரே தொடர்பு விளைச்சலில் இருந்து குடிகள் ஜமீன்தாருக்கு தீர்வை செலுத்துவதும் ஜமீன்தார் அதனைப் பெறுவதும் என்ற நிலையில்தான் புதிய நிலச் சுவான்தாரும் அவரது குடிகளும் இருந்து வந்தனர்.

''வரப்புயர நீர்உயரும்
நீர்உயர நெல் உயரும்
நெல்உயரக் கோல் உயரும்
கோல் உயரக் குடி உயரும்''

188. Court Records Appeal No.20/1887
189. Macleairs Manual of Madras Administration

என்று கூழுக்குப் பாடிய மூதாட்டி அவ்வையின் குடிதழீகி கோலோச்சிய கோவேந்தரது ஆட்சி பதினேழாவது நூற்றாண்டில் முற்றாக முடிந்ததை ஜமீன்தாரி முறையின் தொடக்கம் தெரிவித்தது.

ஜமீன்தாருக்கு விளைச்சல் காலம் தொடங்கி கிஸ்திப் பணம் வசூப்பதிலும், அதனை குறிப்பிட்ட தவணைகளில் கும்பெனியாருக்குச் செலுத்துவதிலும் அவரது பொழுதெல்லாம் சென்றது. இதற்கிடையில் வானம் பொய்த்து விட்டாலும், வைகையாற்றில் வெள்ளம் வராமல் வறண்டு விட்டாலும் குடிகளது கையறுநிலையைப் போன்று ஜமீன்தாரரது நிலையும் மிகவும் பாதிப்புக்குள்ளாகிவிடும். ஆனைகட்டிப் போரடித்தவர்கள் மாடுகட்டிக் கூட உழவு செய்ய முடியாமல் போய்விடும். இந்த வரிவசூல் பணிக்காக சிவகங்கைச் சீமை தாலுகாக்களாகவும், மாகாணங்களாகவும் பிரிக்கப்பட்டு இருந்தது. அப்பொழுது எத்தனை தாலுக்காக்கள், மாகாணங்கள் இருந்தன என்பதற்கான ஆதாரங்கள் இல்லை. ஆனால் தொடக்கத்தில் ஒன்பது தாலுகாக்காகளாக பிரிக்கப்பட்டிருந்தன என்பது தெரிய வருகிறது.[190]

1. சிவகங்கை, 2. திருக்கோட்டியூர், 3. திருப்புத்தூர், 4. கண்டதேவி 5. திருவேகம்பத்து, 6. காளையார் கோவில், 7. இளையான்குடி, 8. மானாமதுரை, 9. திருப்புவனம். அதே போல் சோழபுரம், காளாப்பூர், சிங்கம்புணரி, கண்டிர மாணிக்கம், பட்டமங்கலம், இரவிசேரி, உருவாட்டி, எமனேஸ்வரம், மங்கலம், கோவானூர், ஆகியவை அப்பொழுது அமைந்து இருந்த சில மாகாணங்களாகும்.

வரிவிதிப்பிற்கான நிலங்கள் பொதுவாக நஞ்சை, புஞ்சை என்று வகைப்படுத்தப்பட்டன. இவைகளில் இருந்து பெறப்பட்ட தீர்வை, வாரப்பத்து, தீர்வைப்பத்து, வரிசைப்பத்து, என்ற அடிப்டையில் வசூலிக்கப்பட்டன. வேளாண்மை வேலைகளான உழவு, விதைப்பு, உரமிடுதல், நீர்ப்பாய்ச்சல், களை எடுத்தல், அறுவடை ஆகியவற்றிற்கான குடிகளது செலவுகள் பொதுச் செலவுகள் எனப்பட்டன. மொத்த மகசூலில் இவைகளைக் கழித்துவிட்டு எஞ்சியதில் சரிபாதி, ஜமீன்தாரும் விவசாயியுமாக பெற்றனர். இதற்கு வாரப்பத்து என்று பெயர். புஞ்சை நிலங்களின் மகசூலுக்கு ஏற்கனவே நிர்ணயிக்கப்பட்டுள்ள விகிதத்தில் செலுத்தப்படும் தீர்வைத் தொகைக்கு தீர்வைப்பத்து எனப்படும். இவை தவிர கொடிக்கால், வாழைத் தோட்டங்களின விளைச்சலுக்கு, சேத்துவரி என்ற பணவரி வசூலிக்கப்பட்டது. புஞ்சை நிலங்களில் ஒரு குறிப்பட்ட அளவிற்குக் குறைவாக மகசூல் வந்தால், அதற்கு நிர்ணயிக்கப்பட்ட விகிதத்தில் பணம் வரி வசூலிக்கப்பட்டது. இதனை வரிசைப்பத்து என்று குறிப்பிடப்பட்டுள்ளது.

---

190. சிவகங்கை சமஸ்தான பதிவேடுகள்.

இந்த பணவரிகளைச் செலுத்த கும்பெனியாரது பகோடா, உள்நாட்டு பூவாரகன் குழிப்பணம், சல்லிப் பணம் என்ற நாணயங்கள் செலாவணியில் இருந்தன. சில ஆவணங்களில் இந்த வகைப் பணம் சுழிப்பணம் என்றும் குறிக்கப்பட்டுள்ளது. இந்தப் பணத்தை வெள்ளி, செப்பு உலோகங்களில் அச்சிடுவதற்கு மரக்கட்டைகளில் அமைக்கப்பட்ட அச்சுகள் பயன்பட்டதால் குழிப்பணம் என்ற பெயர் ஏற்பட்டு இருக்கலாம். இந்த நாணயங்களைத் தயாரிக்க சிவகங்கை நகரில் அஃக சாலை என்ற நாணயச் சாலை அமைக்கப்பட்டு இருந்தது.

இந்த வசூல் பணிக்கு ஜமீன்தாரது சேவையில் சம்பிரிதி, கணக்கர், காவல்காரர், என்ற பணியாளர்கள் இருந்தனர். கிராமக் கணக்கர் பதிவேடுகளை, ஆண்டுதோறும் ஜமீன்தார்களது அலுவலர் ஆண்டுதோறும் தணிக்கை செய்து வந்தனர். இந்த தணிக்கைக்கு ஜமாபந்தி என்று பெயர். ஜமீனில் உள்ள மொத்த கிராமங்களின் வசூல் சம்பந்தப்பட்ட பதிவுகளை, ஜில்லாக் கலெக்டர் ஜமாபந்தி செய்வார். இந்த ஜமாபந்தி இன்றும் வருவாய்த் துறையில் சற்று மாறுதலுடன் ஆண்டு தோறும் ஒவ்வொரு தாலுகாவிலும் ஜுன் மாதங்களில் நடைபெற்று வருகிறது.

இத்தகைய தீர்வை வசூலினின்றும் வேறுபட்ட நிலத் தொகுப்புகள் இந்த ஜமீன்தாரியில் இருந்தன. அவை இனாம் நிலங்கள் அல்லது கிராமங்கள் எனப்பட்டன. பாண்டியர்கள் சோழர்கள், நாயக்க மன்னர்கள், மாவலி வாணாதிராயர்கள், சேதுபதிகள், ஆற்காட்டு நவாப் ஆகியோர் ஆட்சியில் இந்தச் சீமையில் தனியாருக்கும் திருக்கோயில், திருமடங்கள், பள்ளி வாசல்கள், தேவாலயங்கள் அன்ன சத்திரங்கள், தண்ணீர்ப் பந்தல்கள் என்ற அறப்பணிகளுக்கு சர்வ மானியமாக வழங்கியவை அவை. போர் வீரர், புலவர், பண்டிதர், அவதானி, போன்ற தனியார்களுக்கு வழங்கப்பட்ட இனாம்கள் ஜீவிதம் எனப்பட்டது. மேலும் வேத விற்பன்னர்கள், வியாகரணப் பண்டிதர்கள், ஆகியோருக்கு அளிக்கப்பட்டவை தர்மாசனம் என்றும் சுமிருதி வல்லவர்களுக்கு வழங்கப்பட்டவை சுரோத்திரியம், வித்தியார்த்திகளுக்கு வழங்கப்பட்டவை பட்டவர்த்தி என்றும் வழங்கப்பட்டன. இந்த அறக்கொடைகள் சமுதாயத்தின் நலன்களுக்காக நிறுவப்பட்டவை என்ற அடிப்படையில், அந்தப் பணிகள் தொடர்ந்து மக்களுக்குப் பயன்பட வேண்டும் என்ற பெருநோக்கில், தீர்வையின் சுமையால் இவை பாதிக்கப்படக் கூடாது என்பதற்காக, அந்தக் அறக்கொடைகளைப் பரிபாலிப்பவர்களிடமிருந்து அறக்கொடையான நிலங்கள், அல்லது கிராமங்களுக்கு பொருப்பு அல்லது குயிட்ரெண்ட் என்ற மொத்த தொகை மட்டும் ஆண்டுதோறும் வசூலிக்கப்பட்டது. இவற்றை விடுத்து சாயர் என்ற சில்லரை வரவினங்களும் ஜமீன்தாருக்குரியதாக இருந்தன. அதாவது பேட்டைகளில் வியாபாரிகளிடமிருந்து பெறப்படும் சுங்கம், நீர்

நிலைகளின் மீன்பாசி, காடுகளின் இலை காய் கனி என்ற மேற்பலன்கள் போன்றவை. இத்தகைய வசூல் பணிகளில் கண்ணும் கருத்துமாக கவனத்தைச் செலுத்த வேண்டிய பொறுப்பு மட்டும் ஜமீன்தாருக்கு இருந்தது.

முந்தைய மன்னர்களைப் போல உரிமை இயல், குற்றவியல், ஆகிய துறைகளின் வழக்குகளைப் பரிசீலித்து நியாயம் வழங்கும் உரிமையும் இந்த புதிய ஜமீன்தாரி முறையில் ஜமீன்தாருக்கு வழங்கப்படவில்லை. ''அரசு அன்று கேட்கும் தெய்வம் நின்று கேட்கும்'' என்ற பழமொழியும் பொருளற்றதாகப் போய்விட்டது. முந்தைய காவல் முறையான தலங்காவல், திசை காவல், தேசகாவல், என்ற முறைகள் அகற்றப்பட்டு சிவகங்கையில் புதிதாக காவல் துறை ஏற்படுத்தப்பட்டது. உரிமை இயல் வழக்குகளுக்கு மதுரையில், சாதர் அதாலத் என்ற நீதி மன்றமும் மேல் முறையீட்டிற்காக இராமநாதபுரத்தில் மாவட்ட நீதிமன்றமும், சென்னையில் புரொவின்சியல் கோர்ட் என்ற உயர்நீதிமன்றமும் செயல்பட்டன. இந்த மன்றங்களின் தீர்ப்புரைகளில் திருப்தியடையாத குடிமகன், இங்கிலாந்து நாட்டில் உள்ள பிரிவிகன்வுசில் என்ற கும்பெனியாரது உச்சநீதிமன்றத்தில் மேல் முறையீட்டைத் தாக்கல் செய்து நியாயம் பெற்றுக் கொள்ளும் வாய்ப்பு ஏற்படுத்தப்பட்டு இருந்தது.

இவ்விதம் புதிய ஜமீன்தாரி அமைப்பு, மக்களுக்கும், ஜமீன்தாருக்கும் உள்ள இடைவெளியினை நடைமுறையில் அதிகப்படுத்தி இருந்தாலும், காலங்காலமாக பொதுமக்களுக்கும் ஆட்சியாளருக்குமிடையில் நிலவிய விசுவாசம், நல்லுறவுகள் தொடர்ந்து நீடித்தன. பொங்கல் விழாவின் பொழுது குடிமக்கள் கரும்பு, மஞ்சள், புதுப்பானை, கருப்பட்டி ஆகிய பொங்கல் சீர்ப் பொருட்களை ஜமீன்தார்களுக்கு கொண்டு செல்லும் முறை இருந்தது. இந்த அன்பளிப்புப் பொருள்களுக்கு உலுப்பை என்று பெயர். இதே போல், மகர் நோன்புப் பெருவிழா, தீபாவளி விழா ஆகிய விழா நாட்களின் பொழுது, குடி மக்கள் அரண்மனைக்கு மகர்நோன்புக் குட்டி, கூழைக்கிடாய் என்ற ஆட்டுக் கிடாய்களை அன்பளிப்பாக ஜமீன்தாருக்கு வழங்கும் வழக்கமும் தொடர்ந்தது.[191] இதற்குப் பகரமாக அரண்மனையில் இருந்து அந்தக் குடிகளைச் சிறப்பித்து அனுப்பும் பழக்கம் இருந்தது.

மற்றும் சிவகங்கைச் சீமையின் கிராமங்களில் கோயில் விழாவில் தேரோட்டம், மஞ்சுவிரட்டு, ஆகிய விழாக்களின் பொழுது ஜமீன்தார் நேரில் சென்று குங்கும, சந்தனப் பேழைகளைத் தொட்டுக் கொடுத்தல், வடம் பிடித்துக் கொடுத்தல், ஆகியவைகளை மேற்கொண்டு, மக்களுக்கு மகிழ்ச்சியும் சிறப்பும் சேர உதவினார்.

---

191. Administrative Report of Sivagangai Samasthanam for 1943/1944

இவ்வாறு மக்கள் ஜமீன்தாரரை, முந்தைய கால மன்னராகவே மதித்துப் போற்றும் விசுவாசத்தை அறிந்த கும்பெனியார், சிவகங்கை அரண்மனையில் நூற்று இருபது சீருடை அணிந்த கும்பெனி வீரர்கள் நிலை கொண்டு இருப்பதற்கும் ஜமீன்தாரது சேவகர்கள் வாட்களுடன் பணியாற்றுவதற்கும், நாளடைவில் அனுமதி வழங்கினர். ஓரளவு ஜமீன்தாரது பதவியின் தோற்றத்திற்குச் சிறப்பூட்டுபவையாக இந்த நடைமுறைகள் அமைந்தன.

படைமாத்தூர், கௌரி வல்லப தேவர், சிவகங்கைத் தன்னரசு மன்னரது வழியினர் என்ற முறையிலும், புதிய முதல் ஜமீன்தார் என்ற முறையிலும் குடிகளுடனும், கும்பெனியாருடனும் நல்ல தொடர்புகளைக் கொண்டிருந்தனர். தமது முன்னோர்களைப் போல அறக் கொடைகளை வழங்கி இருப்பதை சிவகங்கை சமஸ்தான பதிவேடுகள் தெரிவிக்கின்றன. ஆனால் கி.பி.1829-ல் காலமான இவருக்கு ஆண் வாரிசு இல்லாததாலும், அவர் மரணமடைந்த பொழுது அவரது மனைவி பர்வதவர்த்தினி நாச்சியார் கர்ப்பவதியாக இருந்ததை சாதகமான சூழ்நிலையாகக் கொண்டு ஜமீன்தாரது இறந்து போன மூத்த தமையனார் ஒய்யாத் தேவரது இரண்டாவது மகன் முத்து வடுகநாதர், ஒரு பொய்யான மரண சாசனத்தைக் கலெக்டரிடம் காண்பித்து ஜமீன்தாராவதற்கு ஒப்புதலைப் பெற்றார்.

இவரது உரிமையை மறுத்து கி.பி. 1834-ல் இறந்துபோன முதல் ஜமீன்தார்களது மனைவிகளும், மக்களும் பல உரிமை இயல் வழக்குகளைத் தொடர்ந்தனர். தங்களுக்கு சாதகமாகவும், பாதகமாகவும் பல தீர்ப்புரைகளைப் பெற்றனர். அடுத்தடுத்துப் பாதிக்கப்பட்டவரது முறையீடு மேல் முறையீடு என்று நடவடிக்கைகளைத் தொடர்ந்ததால், ஜமீன்தாரியில் நிலையற்ற தன்மை நிலவியது. கி.பி. 1896-ம் வரை ஜமீன்தார்கள் தங்களது சொந்தப் பொறுப்பில் செய்யத் தக்க பல நல்ல பணிகளும் நடைபெறாமல் போய்விட்டன. அதே நேரத்தில் இந்த ஜமீன்தாரி வழக்குகளால் உருப்படியான நன்மை எதுவும் இல்லை என்பதை குடிகள் உணர்ந்து தவித்தனர்.

நாட்கள் ஆக, மக்கள் பெருக்கமும் மிகுதியாக, வேறு தொழில்கள், தொழில் வாய்ப்புக்கள் இல்லாத நிலையில் சிவகெங்கை சீமை மக்கள் விவசாயத்தை தொழிலாக கொள்வது அல்லது சார்ந்து நிற்பதும் அதிகரித்தது. அதே நேரத்தில் விளைச்சல் நிலப்பரப்பும், விளைச்சலும் அப்படியே இருந்தது. விவசாயத்தைச் சார்ந்துள்ளவர்களது தேவை நிறைவு செய்யப்பட முடியாத நிலை. மூன்றில் ஒரு பங்காக இருந்த விவசாயி வர்க்கம் மக்கட் தொகையில் சரிபாதி அளவிற்கு வளர்ந்தது.[192]

---

192. Palm Dutt. S. - India Today (1950)



1856-ம் ஆண்டு முத்து விஜயரகுநாத போதகுரு ராஜாவால் தொடங்கப்பட்ட மன்னர் பள்ளி. இது விஜயரகுநாத கௌரி வல்லப உடையண ராஜாவால் 1881-ம் ஆண்டு உயர்நிலைப் பள்ளியாக உயர்த்தப்பட்டது.

தொழிற்புரட்சியின் காரணமாக மேற்கு நாடுகள் தொழில் மயமாகியும், நம் நாட்டு மக்கள் விவசாயிகளாகவும் விவசாயக் கூலிகளாகவும் இருந்து வந்தனர். வறுமைக்கு மூல காரணமாக இது அமைந்துள்ளது என கி.பி. 1880-ல் அரசினரால் ஏற்படுத்தப்பட்ட ''பஞ்ச ஆய்வுக் குழுவில்'' கண்டுள்ளது.[193] அத்துடன் விவசாய உற்பத்தி முறைகளில் மாற்றம் இல்லை. விவசாயத்திற்கு ஆதாரமாக, முந்தைய அரசுகள் அமைத்த கண்மாய்களும் கால்வாய்களும் நூற்றாண்டுகள் பலவற்றைக் கண்ட நிலையில் அப்படியே பழுதான நிலையில் இருந்தன. விவசாயத்திற்கு கொண்டு வரத்தக்க கன்னி நிலங்கள் தொடர்ந்து தரிசாகக் கிடந்தன. இவைகளைச் சீர்திருத்தம் செய்து விவசாயத்திற்கு ஏற்றதாக மாற்ற குடிமக்களிடம் மனம் இருந்தாலும் அவர்கள் கையில் பணம் இல்லை என (இந்திய அரசு செயலர் சர். ஜேம்ஸ் கைர்டு அவர்களது 31.10.1879-ந் தேதி அறிக்கை) தெளிவுப்படுத்தி இருக்கிறது. இவைகளை அரசு கண்டு கொள்ளவில்லை.

மறுபுறம் இந்திய அரசு, கும்பெனியாரது வியாபார நலன்களுக்கும் ராணுவ இயக்கத்திற்கும் ஏற்ற துறைகளில் கோடிக்கணக்கான பணம் செலவு செய்தது. குறிப்பாக 1900-ல் புதிய ரயில் பாதைகள் அமைக்கச் செலவழித்த 225 மில்லியன் பவுண்டுகள் கால்வாய்களைச் செப்பனிடச் செலவழித்தது இருபத்து ஐந்து மில்லியன் பவுண்டு அதாவது ஒன்பதில் ஒரு பகுதி. பட்டினியும் பசியுமாக பாடுபடும் விவசாயிகளைப் பற்றி சிறிதும் அக்கறை கொள்ளவில்லை என்பதற்கு இது எடுத்துக்காட்டாகும்.[194] ஜமீன்தாரிமுறை மக்களது வாழ்க்கையில் வளம் சேர்க்கவில்லை. மாறாக வறுமையை வளர்த்தது. வாழ்வதற்கு வழியில்லாமல், ஜமீன்தாருக்கு தீர்வை பாக்கி செலத்த முடியாத நிலையில் மக்கள் கூட்டம் சிவகங்கைச் சீமையை விட்டு வெளியேறி தொண்டமான் சீமை, சோழ சீமைக்குச் சென்றது மட்டுமல்லாமல், இலங்கை, பர்மா ஆகிய நாட்டிற்கு சென்றனர் என்று சிவகங்கைச் சீமை பற்றிய தஞ்சை சரசுவதி மகால் நூலகச் சுவடி ஒன்று தெரிவிக்கின்றது.

சுருக்கமாகச் சொன்னால் பதினேழாம் நூற்றாண்டின் இறுதியில் கிளர்ந்து எழுந்த சிவகங்கைச் சீமை மக்களது ஆவேசத்தை அடக்கி தங்களது அரசியல் நலன்களை நிறைவேற்றிக் கொள்வதற்குரிய மூடு திரைதான் இந்த ஜமீன்தாரி முறை. ஜமீன்தாருக்கோ குடிகளுக்கோ இதனால் பலன் கிட்டவில்லையென்றாலும், கும்பெனியார் ஒரு நூற்றாண்டிற்கு மேல் கோடி கோடியாக பணம் குவிப்பதற்கு இந்த அமைப்பு உதவியது என்பதில் ஐயமில்லை.

---

193. First Report of Famine Commission (1880)
194. தஞ்சாவூர் சரஸ்வதி மகால் நூலக பதிவேடு

இத்தகைய ஜமீன்தாரி முறை மக்கள் வாழ்வில் பல அவல நிலைகளை ஏற்படுத்தினாலும் சிவகங்கையை ஆண்ட ஜமீன்தார் உடையண ராஜா தனது ஜமீனை குத்தகைக்கு விட வேண்டிய நிலைக்கு ஆளாக்கப்பட்ட பொழுதிலும் அவருடைய கொடை உள்ளத்துக்கு எடுத்துக்காட்டாக இன்றும் சிவகங்கை நகரில் சிறப்பாக இயங்கிக் கொண்டிருக்கும் மன்னர் மேல் நிலைப்பள்ளி, அலீஸ் மில்லர் மகளிர் பள்ளி, மன்னர் நடுநிலைப்பள்ளி ஆகியவை அவருடைய கல்வித் தொண்டினை பறைசாற்றிக் கொண்டிருக்கின்றன.

அவருக்கு அடுத்து வந்த துரைச்சிங்க ராஜா திருப்பத்தூரில் ஸ்வீடிஸ் மருத்துவமனை அமைவதற்கு உரிய நிலமும், நிதியமும் வழங்கினார். கால்நடை பராமரிப்பிற்கு முக்கியத்துவம் கருதி சிவகங்கை நகரில் கால்நடை மருத்துவமனையை தமது சொந்தப் பொறுப்பில் நிறுவி நடத்தி வந்தார். ஏழை மாணவர் சாதிமத பேதமற்று கல்வி பயில இலவச மாணவ விடுதி ஒன்றினை தோற்றுவித்தார்.

அவருக்குப் பின் வந்த சண்முகராஜா இதனைப் போன்று கிறித்துவ மக்களின் கல்வி முன்னேற்றத்திற்காக சிவகங்கை நகரில் திரு. தேவாரம் என்பவருக்கு நிலம் கொடுத்தார். இன்றும் அந்தப் பள்ளி ராஜகுமாரி ராஜேஸ்வரி கலா சாலை என்ற பெயரில் இயங்கிக் கொண்டிருப்பது குறிப்பிடத்தக்கது. வள்ளல் அழகப்ப செட்டியார் தனது கல்வி பணியைத் தொடங்க முற்பட்டபோது சண்முகராஜா அவர்கள் தனக்குச் சொந்தமான செக்காலைக் கோட்டையில் 100 ஏக்கருக்கும் அதிகமான நிலத்தை கொடுத்து உதவினார். சிவகங்கையில் தனது தந்தையாரின் பெயரில் கல்லூரி நிறுவினர். அதற்கு தனது சொந்த நிலத்தையும் நிதியையும் கொடுத்தார்.

அவருடைய மைந்தர் கார்த்திகேய வெங்கடாஜலபதி ராஜா சிங்கம்புணரியில் பெண்கள் உயர்நிலைப்பள்ளி தொடங்குவதற்கு 1 லட்சம் ரூ நிதியும் நிலமும் கொடுத்து பெண்கள் பள்ளி தொடங்கி இன்றும் ராணி மதுராம்பாள் நாச்சியார் அரசு பெண்கள் மேல் நிலைப் பள்ளியாக நடைபெற்று வருகிறது.

பதினேழாம் நூற்றாண்டின் இறுதியில் மதுரை நாயக்கப் பேரரசு அதிசயிக்கும் வண்ணம் பேராண்மை படைத்து விளங்கிய மறவர் சீமையின் வடபகுதி நாளடைவில் தொண்டமான் சீமை ஆயிற்று. பாம்பாற்றுக்கு வடக்கே உள்ள சோழநாட்டுப் பகுதி தஞ்சை மன்னருக்கு தானம் வழங்கப்பட்டது. பின்னர், எஞ்சியுள்ள பகுதியிலிருந்து சிவகங்கைச் சீமை பிரிந்தது. வரலாற்று நிகழ்வுகளினால் வடிவும் வலிமையும் குன்றியது. பழம் பெருமையை மட்டும் பேணிக்காத்து வந்த இந்த மறவர் சீமை அரசுகளை, வெடிமருந்து பலத்தில் விஞ்சி நின்ற ஆங்கில ஏகாதிபத்தியம், எளிதாக வீழ்த்தி, அவர்களுக்கு கட்டுப்பட்ட

ஜமீன்தார் நிலைக்குத் தாழ்த்தியது. ஆனைபடுத்தாலும் குதிரையின் உயரம் என்ற பழமொழிக் கிணங்க மனஆறுதல் பெற்றவர்களாக வாழ்ந்தனர் இந்த ஜமீன்தார்கள்.

சிவகங்கை ஜமீன்தாரியின் பெரும்பாலான குடிமக்கள் இந்து சமயத்தைச் சார்ந்த கள்ளர், மறவர், அகம்படியர் என்ற முக்குலத்தோர் இனத்தவர்கள் மற்றும் நகரத்தார், பிராமணர், வல்லம்பர், வேளார், இஸ்லாமியர், கிறித்தவர், உடையார், பள்ளர் பறையர், இசைவேளாளர் என்ற சிறுபான்மை சமூகத்தினரும், இந்தச் சீமையின் சமுதாய அமைப்பைச் சேர்ந்தவர்கள். இவர்களது வாழ்க்கை வசதிகளைப் பெருக்கிக் கொள்வதற்குப் பல தொழில்களை மேற்கொண்டிருந்தனர், என்றாலும் இவர்களில் பெரும்பான்மையினர், சாதி, மத, இன வேறுபாடு இன்றி ஈடுபட்டிருந்த தொழில் வேளாண்மைதான். இந்த ஜமீன்தாரியின் தெற்குப் பகுதியில் உள்ள வைகை நதியின் வெள்ளப் பெருக்கால் ஓரளவு வேளாண்மைத் தொழில் நடைபெற்றாலும், பெரும்பான்மையான நஞ்சை, புஞ்சைக்கு காலத்தில் பொழிகின்ற மழையின் நீர், கண்மாய்களின் தேக்கி வைக்கப்பட்டு கழனிகளில் நெல் விளைச்சலுக்குப் பயன்படுத்தப்பட்டது. இந்த நிலங்களில் விளைச்சலில் சரிபாதி அளவினை ஜமீன்தார் நிலத்தீர்வையாக நிலத் தீர்வையாகப் பெற்று வந்தார். இவ்விதம் பெறும் மொத்த வசூலில் கும்பெனியார் மூன்றில் இருபகுதியை கிஸ்தியாகப் பெற்று வந்தனர். எஞ்சியுள்ள தொகையினைக் கொண்டு ஜமீன்தார் எந்தவிதமான நன்மைகளையும் செய்ய இயலாத நிலை.

பைந்தமிழ் பயின்ற புலவர்கள் பாட்டும் உரையும் பயிலா பதடிகள் ஓட்டைச் செவியில் உயர்தமிழை எங்ஙனம் ஓதுவது என்று ஓர்ந்தவர்களாக ஓலைத்தூக்குகளைக் கட்டிப் பரணியில் போட்டனர். கல்லைத்தான், மண்ணைத்தான், காய்ச்சித்தான், குடிக்கத்தான் கற்பித்தானா? என்ற கவலை தோய்ந்தவர்களாக வாழ்ந்து வந்தார்கள். மற்றும், நாட்டுக் கணக்கு, தலங்காவல், திசை காவல் ஆகிய பணிகளுக்கு வழங்கப்பட்டிருந்த துண்டு மானிய நிலங்கள் கும்பெனியாரால் மேற்கொள்ளப்பட்டு அவர்களது பணிக்கான ஊதியம் பணமாக வழங்கப்பட்டது.

இவ்விதம் சமுதாயத்தின் பலநிலைகளில் உள்ள மக்களது வாழ்க்கையினைப் பாதிக்கும் வகையில், பரங்கியரது புதிய ஜமீன்தாரி முறை அமைந்து இருந்தது. சிவகங்கைச் சீமைக்கு மட்டும் ஏற்பட்ட ஆற்றிடைக் குறை அல்ல. இது அன்றைய சென்னை மாநிலம் முழுவதற்கும் - தமிழ்நாடு, கேரளா, ஆந்திரம், கன்னடம் ஆகிய அனைத்துப் பகுதிகளின் தலை விதியாகி இருந்தது.



# 11. சேது மன்னர் வழியில் செந்தமிழ்ப் பணி

சேதுபதி மரபினரான சிவகங்கை மன்னர்களும், தமிழுக்கு தளராது உதவி உள்ளனர். தமிழ்ப்புலவர்களைப் பெருமைப்படுத்திப் பொன்னும் பொருளும் வழங்கியதுடன் அவர்களது வாழ்க்கை, வறுமையில் முடிந்து விடக்கூடாது என்ற கருத்தில் தமிழ்ப் புலவர்களுக்கு பேரும் ஊரும் அளித்து பெருமைப்படுத்தினர். சிவகங்கை தேவஸ்தான ஆவணங்களில் இருந்து, சிவகங்கைத் தன்னரசின் முதல் மன்னரான சசிவர்ணத் தேவர், மிதிலைப்பட்டி அழகிய சிற்றம்பலக் கவிராயர் வழியினரான சிற்றம்பலக் கவிராயருக்கு கி.பி.1732-ல் ஜீவித மான்யமாக, காடன் குளம் என்ற கிராமத்தை தானமளித்தார் எனத் தெரிகிறது. இந்தக் கவிராயரது மைந்தரான மங்கைபாகக் கவிராயருக்கு கி.பி. 1733-ல் மேலக் கொன்னக்குளம் என்ற கிராமத்தை முற்றூட்டாக வழங்கிய செய்தியும் உள்ளது.[195] இவர்களது வழியினர் பின்னர் பிரான்மலையில் வாழ்ந்தனர் என்பதும் அவர்களில் ஒருவரான குழந்தைக் கவிராயரும் இந்த மன்னரால் ஆதரிக்கப்பட்டார் என்ற செய்திகளும் கிடைத்துள்ளன. இந்த மன்னர் மீது வண்டோச்சி மருங்கணைதல் என்ற துறையில் சசிவர்ணர் ஒருதுறைக் கோவை நூல் என்றும் படைக்கப்பட்டுள்ளது.

இந்த மன்னரது மாமனாரான முத்து விசைய ரகுநாத சேதுபதி மன்னர் மீது பண விடுதூது என்ற சிற்றிலக்கியத்தைப்பாடி பரிசிலும் பாராட்டும் பெற்ற மதுரை சொக்கநாதப் புலவரையும் இந்த மன்னர் ஆதரித்துள்ளார். அந்தப் புலவருக்கு ஜீவித மான்யமாக செங்குளம் என்ற ஊரை இந்த புலவருக்கு தானமாக வழங்கி செந்தமிழ் காத்த சேது மரபினர் என்ற புகழுக்குரியவராக விளங்கினார்.

---

195. சிவகங்கை சமஸ்தான பதிவேடுகள்.

ஆனால் இந்தப் புலவர் பெருமக்கள், இந்த மன்னர் மீது பாடிய தனிப்பாடல்களும், இலக்கியங்களும் இன்று நமக்கு கிடைக்கவில்லை, என்பதுதான் மிகவும் வருத்தப்பட வேண்டியதொன்று. இதற்காக யாரை நொந்து கொள்வது. இந்தப் புலவர் பெருமக்களுக்கு முன்னரும் பொன்னங்கால் அமுத கவிராயர் அழகிய சிற்றம்பலக் கவிராயர், ஆகியோர் திருமலை ரகுநாத சேதுபதி, ரகுநாத கிழவன் சேதுபதி, ஆகிய பெரு மன்னர்களின் அவைக் களத்தை அலங்கரித்து வந்தனர். அன்பளிப்பாக சர்வமான்ய ஊர்களையும் பெற்றனர்.[196]

பதினாறு, பதினேழாம் நூற்றாண்டுகளில் தமிழின் நிலை தமிழ்நாடு முழுவதும் தளர்வடைந்தது. தமிழகத்தின் ஆட்சிக் கட்டிலில் இருந்த நாயக்க மன்னர்கள் (செஞ்சியிலும், தஞ்சையிலும், மதுரையிலும்) அவர்களது தாய் மொழியான தெலுங்கிற்கும், அதன் சார்பு மொழியான சமஸ்கிருதத்திற்கும் ஆக்கமும் ஊக்கமும் அளித்துப் போற்றினர். அரசு நிலையில் மட்டுமல்லாமல், ஆலயங்களிலும் தெலுங்கு இசையும், கூத்தும் இடம் பெற்றன. தமிழ்ப்புலவர்களும் சான்றோர்களும், சமுதாயத்தில் புறக்கணிக்கப்பட்டு நலிந்து வாழ்ந்தனர். ''சனியான தமிழை விட்டுச் சதிராடக் கற்றோமில்லை'' எனச் சலித்தனர். ''கல்லைத் தான் மண்ணைத்தான் காய்ச்சித் தான் குடிக்கத்தான், இல்லைத்தான் பசியாமல் இருக்கத்தான் பதுமத்தான் எழுதினார்'' என்று பிறவியளித்த பிரம்மனையே வசையாகப் பேசும் நிலையெழுந்தது. செஞ்சி, தஞ்சை, மதுரை, மைசூர் மாறு பாஷை செந்தமிழின் சுவையறிந்து செய்ய மாட்டார் என்று முடிவு செய்த முத்தமிழ்ப் புலவர்கள் மனமொடிந்து வாழ்ந்தனர்.

இவர்களது வாட்டம் தீர்க்கும் நிலையில் ஆங்காங்கு சில வள்ளல்கள் மட்டும் உதவினர். குமரேந்திர காங்கேயன், ஆனூர் சர்க்கரை, மாவைக் கறுப்பன், புதுவை ஆனந்தரங்கம் பிள்ளை, இரசை [illegible]லையப்பிள்ளை, சேத்தூர் தலைவர், சீதக்காதி மரைக்காயர் [illegible]போர் அவர்களில் சிறப்பானவர்கள். ஆனால் இவர்களையெல்லாம் விட தங்களது வரையாத வள்ளற்தன்மையால் தமிழ்ப்புலவர்களை [illegible]ர்த்துக் காத்த தமிழ் வள்ளல்கள் சேதுபதி மன்னர்கள்

''மூவேந்தருமற்று சங்கமும் போய், பதின்மூன்றோடு எட்டுக்,
கோவேந்தருமற்று, மற்றுமொரு கொடையு மற்று
பாவேந்தர் காற்றில் இலவம் பஞ்சாய் பறக்கையிலே
தேவேந்திர தாருவொத்தாய் ரகுநாத செயதுங்கனே''

— என்று பாவேந்தர்கள் அந்த பூவேந்தர்களைப் போற்றத் தொடங்கினர். அந்த மன்னர்கள் மீது இயற்றிய ஒருதுறைக் கோவையும் தளசிங்க

196. Inam Fair Registers in the Sivangangai Collector's Office

மாலையும் தமிழ் செய்த தவப் பயனாக கிடைத்திருக்கின்றன. காலத்தால் பிந்திய இந்தக் கவிராயர்களது படைப்புகள், சேனைதழையாக்கி செங்குருதி நீராக்கி ஆனை மிதித்த அரும்பெரும் வீரம் மணக்கும் செம்மண்ணில், செந்தமிழ் மணத்தின் வாசம் பரப்புவதற்கு இன்று நமக்கு கிடைக்காதது, மிகப்பெரிய இழப்பு என்பதில் ஐயமில்லை.

இந்த மன்னரையடுத்து சிவகங்கையின் அரியணையேறிய இளம் மன்னர் முத்து வடுகநாதர், தந்தைக்கேற்ற தனயனாகத் தமிழ் வளர்த்ததில் வியப்பில்லைதான். இவரது ஆட்சிக் காலத்தில் தமிழ்ப் புலவர்களின் கூட்டம் அருகிவிட்டாலும், மிதிலைப்பட்டி அழகிய சிற்றம்பலக் கவிராயரது வழியினர் தமிழ்ப் பணி தொடர்ந்தது. இந்தக் கவிராயது பேரனான குழந்தைக் கவிராயர் பிரான்மலையில் வாழ்ந்து வந்தார். ''தைக்கோடிப் பிறைப்போலத் தமிழ்க்கோடிப் புலவர் வந்தால், திக்கோடியலையாமல் தினங்கோடி பொன்னும் பொருளும் கொடை கொடுக்கும்'' இந்த மன்னரை நாடி வந்து பாடி பொன்னும் பொருளும் சுமந்து சென்றார்,

இன்னும் அந்தப் புலவர் நூலில் பொருந்தியுள்ள பொன்னான வரிகள்,

''சந்தமும் கோட்டிச் சவுமிய நாராயணனை
வந்தனை செய் தொப்பமிடும் வண்கையான் - நல்நதுலவு
தென்குளந்தை மேவும் செயசிங்க கோகனக
மின்குழந்தை போலும் விசித்திரவான் - முன்குழந்தை
ஆயப்பருவத்தே ஆம்பொற் சுடிகாக தந்த
கோமனுக்கு நேராம் துரைராயன் - பூமன்
முரசுநிலையிட்டு முடிதரித்தே சேதுக்
கரசு நிலையிட்ட அபயன் - வரசதுரன்
தண்டளவ மாலைச் சசிவர்ண பூபனருள்
கொண்ட உபய குலதீபன் - மண்டலிகன்
ராசபுலி வடுகநாத பெரி யுடையான்
ராசன் இவன் ஆண்மை நாகரிகன்...''

மற்றும், இந்த மன்னரால் போற்றப்பட்டவர் பனசை நகர் என்று போற்றப்படும் நாட்டரசன்கோட்டை. தமிழ்ச் சக்கரவர்த்தி முத்துக் குட்டிப் புலவர். இவரது பூர்விக ஊர் காளையார் கோவிலுக்கு அண்மையில் உள்ள உருளிக் கோட்டை. இவர் இயல்பாகவே செந்தமிழில் சீர்மிகு பாடல்களை சிரமமின்றிப் பாடும் வரகவியாக இருந்தார். நாட்டரசன்கோட்டையில் திருக்கோயில் கொண்டுள்ள கொற்றவை கண்ணுடையம்மனைப் பற்றிய பள்ளும், அந்த ஊரின் காவல் தெய்வம் கறுப்பனர் பற்றிய பதிகத்துடன் பல தனிப்பாடல்களையும் பாடியுள்ளார். இவரது கண்ணுடைய அம்மன் பள்ளு நமது தமிழில் உள்ள மக்கா பள்ளு, முக்கூடற்பள்ளு, திருமலை முருகன் பள்ளு ஆகிய

சிற்றிலக்கியங்களுடன் ஒப்பிடக் கூடிய சிறந்த படைப்பாகும். இந்த நூலின் தொடக்கப் பகுதியில் மன்னர் முத்து வடுகநாதரை அவர் வாழ்த்திப் பாடிய பகுதி:

''வயனிருவர் பரவுமுத்துவடுக நாதேந்தர துரை
மார்க்கண்டன் போலிருக்க கூவாய் குயிலே
உயர்குழந்தைத் துரையரசு அரசுகள் குமார வர்க்கம்
உகந்து பெற வசந்தரவே கூவாய்குயிலே
தயவுள்ள மெஞ்ஞான துரை தர்ம சமஸ்தாணாபதி
தழைத்தோங்கி வளரவே கூவாய் குயிலே
நயமிகு கண்ணுடையவட்கு இலுப்பைக்குடியூர் கொடுத்த
ராஜசிங்க மிவனென்று கூவாய்குயிலே!''

இந்தப் புலவரது இன்னொரு படைப்பு வசன சம்பிரதாயக் கதை என்ற வசனக்காவியம். தமிழ் மொழியில் உரைநடையில் இயற்றப்பட்ட முதல் நூல் என்ற பெருமை பெற்றது. பதினெட்டாம் நூற்றாண்டின் முற்பகுதி வரை, தமிழில் உரைநடை நூல், என்ற வகையே இல்லாமல் இருந்தது. எல்லாம் செய்யுளில்தான் அமைந்து இருந்தன. இயற்றப்பட்டன. புலவர்கள் தங்களது விருப்பத்தை வள்ளல்களுக்கு அறிவிக்கும் மடல்கள் கூட, செய்யுளில் இருந்தன. அந்த வகைச் செய்யுள் சீட்டுக் கவி எனப்பட்டது. ஒருவர், மற்றொருவர்க்குச் சொல்லும் செய்திகள் கூட செய்யுள் அமைப்பில்தான். வியப்பாக இருக்கிறதல்லவா? ஆம் இந்தக் கடிதங்கள் மடல் அல்லது நிருபச் செய்யுட்கள் எனப்பட்டன. நமது சிவகங்கைச் சீமைப் புலவர்தான் இவைகளுக்கு மாற்றமான புதுமையைப் படைத்தார். வசன நடை அல்லது உரைநடை என்ற இன்றைய இயற்றமிழைக் கண்டுபிடித்தார். இந்த உரைநடையில் வந்த முதல் நூல் வீரமாமுனிவரது ''பரமார்த்த குருக்கள் கதை'' என்ற படைப்பு என்று எண்ணப்படுகிறது. ஆனால் அதற்கும் முந்தைய முதல் படைப்பு ''வசன சம்பிரதாயக் கதை''யாகும். இந்த நூல் முதன் முதலில் பர்மா நாட்டு ரங்கூனில் வெளியிடப்பட்டதால் தமிழ் நாட்டில் அதனைப் பற்றி அறிந்தவர்கள் மிகச் சிலர்.

ஒரு நாள் மகா சிவராத்திரி இரவு. சிவகங்கை மன்னரும் மக்களும் இரவு முழுவதும் விழித்து இருந்து ஒரு கதையினைக் கேட்கின்றனர். அந்தக் கதையை நமது புலவர் சொல்லுகிறார். தமிழகத்தில் உள்ள அனைத்து ஊர்ப் பெயர், மக்கள் பெயர்களை இணைத்து தல புராணங்களின் கதைக் கருக்களை பெயர்களை ஆங்காங்கே புகுத்தி ஆர்வத்துடன் கேட்கும் முறையில் அவைகளைத் தொகுத்துச் சொல்கிறார். அந்தக் கதையின் இறுதிப் பகுதி:

''.... இந்த மட்டும் ராஜ ஸ்ரீ கர்த்தாக்கள் கிருபையினாலே மேகணன் சேர்வைக்காரன் வகை, இவ்விடத்துக்கு வந்து சம்பூரணமாய் வருஷக்

கட்டளை கொடுத்து விசாரித்த முகூர்த்தமாய் நெல்லையப்ப முதலியார், பிரபலமாகி பொன்னம்பல முதலியார்புரம் அபிமான படியினாலே, நாவலோகம் பெருந்தீவிலுண்டான பறகைக்குடயார், தொட்டியபட்டியார், தொழுவூரார், கொல்லங்குடியார், சுரசனேந்தலார், கட்டார் குடியார், கன்னாரிருப்பு ஜனங்கள், ஈழம்புசையார், துலுக்கானியார், லாடபுரத்தார், பள்ளிமடத்தார், பறைக்குளத்தார், சக்கிலி வயலார், இப்படி அநேகம் வகுப்பு சொல்லப்பட்ட வர்க்கத்து ஜனங்கள் எல்லாம், அவரவர் குடிக்கும் கோத்திரத்துக்கும், கற்பித்திருக்கிற ஜாதித்தொழிலை முயற்சி பண்ணிக்கொண்டு, மேல் வரம்பு கீழ்வரம்பு அறிந்து நடந்து கொண்டு, சகல பாக்கியத்துடன் இருக்கிறார்கள். ஆகையிலே அகண்ட பரிவுகாரான சச்சிதானந்த பரப்பிரும்மாகிய ஆதிபரா பரவஸ்துவான சுவாமி அவர்களுடைய கிருபையினாலே மகாவிஷ்ணு பிம்பமாகப் பூலோகத்திலே வந்து அவதரித்து மனு நீதியோருங்கூட மண்டலாதிபதியும் அடியேங்களை ரக்ஷிக்கின்ற இராஜ வர்க்கங்களும், சுகிர்த பரிபாலன காத்தவலியரான படியினாலேயும் பூலோகத்திலே தேவாலயம், சிவலிங்கப் பிரதிஷ்டை, பிரம்மப் பிரதிஷ்டை, உபநயனங்கள், கன்னிகாதானம், அன்ன சத்திரம், ஆத்திபூஜை, திருப்பணி, தேவதாபிரார்த்தனை, தர்மத்தியானமான தண்ணீர்ப்பந்தல், பிராமண போசனங்கள், துவாதசி கட்டளை - இது முதலான நித்திய தானம் நடத்திக் கொண்டு வருகிற படியினாலே...'' என நீண்டு முடிகிறது அந்தக் கதை.

இந்தக் கதையினை கேட்டு மகிழ்ந்த மன்னர் முத்து வடுக நாதர், புலவருக்கு சாத்தசேரி என்ற ஊரினை சர்வமான்யமாக வழங்கி உதவினார். அந்த ஊரினை நேரில் சென்று பார்வையிட்டு வந்த புலவர் மன்னரிடம் இந்தப் பாட்டினை பாடினார்.

''கொம்பிரண்டும் இல்லாத மோளைக் கண்மாய்
குளக்காலும் இல்லாத சாத்தசேரி
வம்புபண்ணிப் பெருங்கரையான் வெட்டும்
வாழ்க்கைக்கு உதவாத உவட்டுப் பொட்டல்...''

அதற்கு மேல் புலவரது பாடலைக் கேட்க விரும்பாத மன்னர், உடனே தமது பிரதானியை அழைத்து வளம் மிக்க ஊர் ஒன்றினைப் புலவருக்குப்பட்டயமிட்டு கொடுக்குமாறு செய்தார். திருப்பூவண நாதர் உலா பாடிய கந்தசாமிக் கவிராயரையும் இந்த மன்னர் ஆதரித்துப் போற்றினார்.

இந்த மன்னரை அடுத்து சிவகங்கை அந்நிய ஆக்கிரமிப்புக்கு ஆளாகியது. அடுத்து கி.பி.1780-1801 வரை ராணி வேலு நாச்சியாரும், விசைய ரகுநாதப் பெரிய உடையாத் தேவரும் ஆட்சி பீடத்தில் அமர்ந்திருந்தனர். பிற துறைகளில் அவர்கள் ஓரளவு சிறந்த பணிகளைச் செய்த போதிலும்,

அவர்களது ஆட்சிக் காலத்தில் சிவகங்கைச் சீமையில் நிலவிய அரசியல் குழப்பங்களுக்கிடையில் அந்த ஆட்சியாளர்கள் எந்த அளவிற்கு தமிழுக்குத் துணையாக இருந்தனர் என்பதை தெரிவிக்கக் கூடிய ஆவணங்கள் கிடைக்கவில்லை.

அடுத்து கி.பி.1801 இறுதியில் சிவகங்கைச் சீமை தன்னாட்சி நிலையை இழந்து ஜமீன்தாரியாக மாற்றப்பட்டது. இந்த புதிய அரசியல் அமைப்பின் முதல் ஜமீன்தாராகப் பதவி ஏற்றவர் படைமாத்தூர் கௌரிவல்லபத் உடையாத் தேவர் கி.பி. 1829-ல் வரை இவரது ஆட்சி நீடித்தது. இவரைப் பற்றிய சில தனிப்பாடல்கள் வழக்கில் உள்ளன. ஆனால் அவைகளைப் பாடிய புலவர்களது பெயர்கள் அறியத் தக்கதாக இல்லை.

தனக்குப் பிறகு பிரளயம் ஏற்படும் என்று பிரஞ்சு நாட்டு மன்னர் பதினான்காவது லூயி தெரிவித்ததாக ஐரோப்பிய வரலாற்றில் ஒரு செய்திக் குறிப்பு உண்டு. அதைப் போல இந்த மன்னர்களது ஏழு மனைவிகளில் மூன்று மனைவிகளுக்கு குழந்தைகள் இல்லை. எஞ்சிய நான்கு மனைவிகள் மூலம் ஆறு பெண்கள் வாரிசாக இருந்தனர். என்றாலும் அவர்கள் புறக்கணிக்கப்பட்டு இறந்த கௌரி வல்லபத் தேவரது உடன் பிறந்த ஒய்யாத் தேவரது மகனான முத்து வடுகனாத தேவர் ஜமீன்தாராக நியமனம் செய்யப்பட்டார். இதன் காரணமாக மதுரை, சென்னை, லண்டன், ஆகிய நகர்களில் உள்ள நீதிமன்றங்களில் கி.பி.1832 முதல் தாக்கல் செய்யப்பட்ட ஏராளமான உரிமையியல் வழக்குகள், முறையீடு மேல்முறையீடு, இறுதிமுறையீட்டு தீர்ப்புரை என்ற வகையில் கி.பி. 1898 வரை நீடித்த காரணத்தினால் சீமையின் பொருளாதாரமும், சீமையின் உரிமை கொண்டாடியவர்களது வசதியும் மிகவும் பாதிக்கப்பட்டது. எது எப்படி இருந்தாலும் ஆண்டு தோறும் கும்பெனி அரசுக்கு பேஷ்குஷ் தொகையாக ரூ. 2,58,640,14,00 செலுத்தியாக வேண்டும். ஜமீன்தார் உரிமை யாருக்கு என்ற வினாவிற்கு உறுதி சொல்லக் கூடிய நீதிமன்றத் தீர்ப்புகள் மாறி மாறி வெளி வந்துகொண்டிருந்ததால் குடிகளிடமிருந்து பெற வேண்டிய தீர்வை வசூல் சரிவர நடைபெறவில்லை. இந்த இக்கட்டான சூழ்நிலையில் சிவகங்கை ஜமீன்தாரியைத் தனியார்களிடம் குத்தகைக்கு விடும் நிலை ஏற்பட்டது. கி.பி.1864 முதல் 1877 வரை ஜமீன்தாரியாக இருந்த ராணி காத்தம நாச்சியார், கும்பெனியாருக்குத் தவணை தொகையை (பேஷ்குஷ் தொகையைச் செலுத்தும் பிரச்சனையைச் சமாளிக்க திரு கிருஷ்ண சாமி செட்டிக்கு ஜமீன்தாரியை குத்தகைக்கு 1.6.1877-ல் கையெழுத்திட்டுக் கொடுத்தார்.[197]

197. Annasamy Ayyar - Sivagangai its origin and litigations (1898)

இரண்டாவது முறையாக சிவகங்கை ஜமீன்தாரி 23.5.1887-ல் ஐரோப்பிய பிரமுகர்களான ராபர்ட் கோர்டன், ஜெ.ரெயான், இ.எப்.ஸ்ரானாக் என்ற மூவருக்கும் ஜமீன்தாரி, பெரிய சாமித் தேவர் எனற உடையனத் தேவரால் இருபத்து இரண்டு ஆண்டுகள் தவணை குத்தகைக்கு கொடுக்கப்பட்டது.[198] மேலே கண்ட இரு ஜமீன்தார்களுக்கும் முன்னர். கி.பி.1859-ல் ஜமீன்தாரான போதகுரு சாமித் தேவர் கலைகள், இலக்கியங்களில் சிறந்த ஈடுபாடு உடையவராக இருந்தார். பழுத்த மரம் நோக்கித்தானே பறவைகள் வரும். இவர் தமிழ்ப் புலவர்களை ஆதரித்து உதவினார் எனத் தெரிய வருகிறது. நீல வானிலே நெகிழ்ந்த நிற மாற்றம் போல அமைந்த இந்த இளம் ஜமீன்தாரது தமிழ்ப்பணிக்கு கட்டியம் கூறுவதாக அமைந்து இருப்பது இவர் மீது பாடப்பட்டு உள்ள காதல் இலக்கியம். ''மன்னர் போதகுரு பார்த்திபன் காதல்'' என்ற இனிய சிற்றிலக்கியம். காதல் சுவையை விட தமிழ்ச் சுவை ததும்பி வழியும் தமிழ் படைப்பு. சிவகங்கை அரண்மனையில் அரங்கேறிய கடைசித் தமிழ் இலக்கியம் அதுவே.

இதனைப் போன்றே சிவகங்கைச் ஜமீன்தார்களது ஆட்சியின் பொழுது, ''சிவகங்கை வேங்கைக் கும்மி'' என்று சிற்றிலக்கியம் ஒன்றும் இயற்றப்பட்டதாக தெரிகிறது.



198. Zamindars Agreement Deed. dt. 23.5.1857

# 12. வேண்டும் விடுதலை எங்கும்

இந்த நூற்றாண்டின் தொடக்கத்தில் நாடு முழுவதும் ஆங்காங்கு பிரிடிஷ் அரசினருக்கு எதிரான பல கிளர்ச்சிகள் துளிர்விட்டன. அவைகளில் சில தனி நபர்களது பயங்கரச் செயல்களாக பரிமளித்தன. தமிழ்நாட்டில் தென்காசி ரயில் நிலையத்தில் கலைக்டர் ஆஷ் என்பவரை வாஞ்சிநாதன் என்ற இளைஞன் துப்பாக்கியால் சுட்டுக் கொன்ற நிகழ்ச்சியினை எடுத்துக்காட்டாகக் கொள்ளலாம். ஆனால் மோகன்தாஸ் கரம் சந்த் காந்தி இந்திய தேசிய இயக்கத்தின் தலைமையை ஏற்றதும், இத்தகைய வன்முறையில் இருந்து விலகி மக்கள் கட்டுப்பாட்டுடனும், ஒற்றுமையுடனும் கிளர்ச்சிகளில் பங்கு கொள்ளும் பண்பாடு ஏற்பட்டது.

இதற்குச் சிறந்த சான்றாக கி.பி.1920-ல் நடந்த கிலாபத் இயக்கம். இந்த இயக்கம் நாட்டின் சிறுபான்மையரில் பெரும்பான்மையரான இஸ்லாமியர்களையும், அணைத்தவாறு நாடுதழுவிய பேரியக்கமாக அந்தக் கிளர்ச்சி நடைபெற்றது. இதனையொட்டி வடக்கே இருந்து முகம்மது அலி சகோதரர்கள் தமிழ்நாட்டில் சுற்றுபயணம் செய்துஆதரவு திரட்டினர். அப்பொழுது அவர்கள் சிவகங்கைச் சீமையில், இளையான்குடி, மானாமதுரை, சிவகங்கை ஆகிய ஊர்களில் பொதுக் கூட்டங்களில் உரையாற்றினர். பிரிட்டிஷ் அரசின் கொடுமைகளுக்கு எதிராக வந்தேமாதரம், அல்லாஹு அக்பர் என்ற கோஷங்கள் எங்கும் எதிரொலித்தன. என்றாலும் அதே ஆண்டு, தர்மபுரியில் இருந்து வந்த சுப்பிரமணிய சிவா, காரைக்குடி மேல ஊரணிக் கரையில் பாரத மாதா ஆசிரமத்தை அமைத்து செயல்பட்ட பொழுதுதான் சிவகங்கைச் சீமை எங்கும் இந்திய தேசிய காங்கிரஸ் பற்றியும், காந்தியடிகள் பற்றியும் மக்கள் ஈடுபாடு கொள்ளத் தொடங்கினர். பத்திரிகைகள், வானொலி

போன்ற விளம்பர சாதனங்கள் இல்லாத அந்தக் காலத்தில், தியாகி சுப்பிரமணிய சிவாவும் அவரது நண்பர்களும் கால்நடையாக பல ஊர்களுக்கும் சென்று காங்கிரஸ் இயக்கம் பற்றிய பிரசாரத்தை மேற்கொண்டனர்.

பிராம்மணர், நகரத்தார், நாட்டார், அம்பலக்காரர், தேவர், உடையார், ஆதி திராவிடர், இஸ்லாமியர், கிறித்தவர் என்ற அனைத்து சமூகத்தினரும், விவசாயிகள் நெசவாளர்கள், வணிகர், பொற்கொல்லர் என்ற பல்வேறு தொழில்துறையினரும் நாட்டுப் பற்றுடன் காங்கிரஸ் இயக்கத்தில் பங்கு கொண்டு தொண்டாற்றினர். வெள்ளையரது ஆதிக்கத்தினின்றும் நாட்டை விடுதலை பெறச் செய்வதற்கு பாடுபட உறுதிபூண்டனர். கி.பி. 1923-ல் சுப்பிரமணிய சிவா, ராஜாஜி ஆகியோர் இளையான்குடி, மானாமதுரை போன்ற ஊர்களில் தீவிர பிரச்சாரத்தை மேற்கொண்டனர். அமராவதி புதூர் ராய.சொக்கலிங்கன் காரைக்குடி சொ.முருகப்பா, சா.கணேசன் ஆகிய நகரத்தர் இளைஞர்கள் கி.பி.1925-ல் இந்திய தேசிய காங்கிரசின் தொண்டர்களாக மாறினர்.

அடுத்து தமிழக சுற்றுப் பயணத்தின் பொழுது காந்தியடிகள் சிவகங்கைச் சீமைக்கும் வருகை தந்தார். திருப்புத்தூர் காரைக்குடி தேவகோட்டை ஆகிய ஊர்களில் மக்கள் பெருந்திரளாகக் கூடி வரவேற்றனர் வழியில் சிராவயல் கிராமத்தில் திரு. ப.ஜீவானந்தம், திரு. பொ.திரிகூட சுந்தரம் பிள்ளையும் நடத்தி வந்த ஏழை மாணவர் பள்ளிக்கும் வருகை தந்து திரு. ஜீவானந்தம் அவர்களது தொண்டைப் பாராட்டினார். காந்தியடிகளது பயணம் சுருக்கமாக இருந்தது. மக்களது மனத்தில் இந்தியக் காங்கிரசின் இயக்கம் பற்றிய அழுத்தமான தாக்கத்தையும் ஏற்படுத்தியது. கதர்துணி நூற்பு, கதராடை அணிதல், மதுவிலக்கு போன்ற கிராம நிர்மாணத்திட்டங்களில் மிகவும் ஒன்றியவர்களாக சிவகங்கைச் சீமை மக்கள் மாறினர்.

தொடர்ந்து சீமையெங்கும் காங்கிரஸ் தொண்டர்கள் ஒத்துழையாமை இயக்கம், அதனை அஹிம்சை வழியில் நடத்திக் காண்பிப்பது பற்றிய பிரச்சாரம் செய்தார். காந்தியடிகள் தண்டி யாத்திரை சென்று சட்டத்திற்கு புறம்பாக கைது செய்யப்பட்டு ஏறவாடா சிறையில் அடைக்கப்பட்டார். இதனை தொடக்கமாக கொண்டு நாடு முழுவதும் மக்கள் சினந்து எழுந்தனர். பக்கத்தில் உள்ள வேதாரண்யத்தில் ராஜாஜி தலைமையில் நடக்க இருந்த உப்புச் சத்தியாக்கிரகத்தில் கலந்து கொள்ள நூற்றுக்கணக்கான தொண்டர்கள் சிவகங்கையில் இருந்து புறப்பட்டனர். ஆனால் அவர்கள் அனைவரும் திருச்சியருகே தடுத்து நிறுத்தப்பட்டனர்.

இதனால் 1931-ல் இந்திய தேசிய காங்கிரஸ் அறிவித்த அந்நிய துணி எதிர்ப்பு, கள்ளுக்கடை மறியல், தனிநபர் சத்தியாக்கிரகம் ஆகிய திட்டங்களில் கணிசமான தொகையினர் கலந்து கொண்டு சிறைகளை

நிரப்பினர். தேசிய இயக்கத்தில் பங்கு கொண்டதற்காக ஓராண்டு சிறைத் தண்டனை பெற்றமுதல் நகரத்தார் என்ற பெருமை அமராவதி புதூர் ராய.சொக்கலிங்கன் அவர்களுக்கு 9.9.1932-ம் தேதி கிடைத்தது. இதனைப் போன்றே, அந்நியத் துணிமறுப்பு, இயக்கத்தில் சிறப்பான பங்கு கொண்ட பெருமை, திருப்புத்தூர் முஸ்லிம் பெருமக்களைச்சாரும். திருப்புத்தூர் மற்றும் காரைக்குடி ஆகிய ஊர்களில் அந்நிய நாட்டுத் துணிகளை விற்பனை செய்யும் துணிக்கடைகள் இல்லாததால், திருப்புத்தூர் முஸ்லிம்கள், ஒருகுழுவாக மதுரைக்கு சென்று அங்குள்ள பெரிய ஜவுளி நிறுவனமான ஹாஜி.மூஸா.சேட் ஜவுளி கடை முன்னர் மறியல் நடத்தினர். சிவகங்கை நீதிமன்றத்தில் பணிபுரிந்த நான்கு அலுவலர்கள் தங்களது பணிகளை துறந்து அலுவலகத்தை விட்டு வெளியே வந்தனர்.

சிவகங்கை, காரைக்குடி, இளையான்குடி, புதுவயல் ஆகிய ஊர்களில் உள்ள கள்ளுக்கடை, சாராயக்கடை வாயில்களில் நின்று தேசியத் தொண்டர்கள் மறியல் செய்தனர். மதுவினை வாங்கி அருந்த வேண்டாம் என குடிகாரர்களைக் கேட்டுக் கொண்டனர். ஆனால் காவல்துறையினர் தொண்டர்களை நையப்புடைத்ததுடன் சிறைகளில் தள்ளி அடைத்தனர். இந்த அகிம்சா போராட்டம் பொதுமக்களிடத்தில் நல்ல தாக்கத்தை ஏற்படுத்தியது. இந்தக் கள்ளுக்கடை மறியல் போரில் கே.வி.சேதுராமச்சந்திரன், கே.சுந்தரராஜன், கே.இராமசாமி, பி.சுப்பிரமணி, அ.சதாசிவம், மு.மாணிக்கம், இ.இபுராகிம், எஸ்.இபுராகிம் கனி, முகைதீன் பாய், பாவலர் மூக்கையா, தொண்டர் நடராஜன், சே.சுப்பராமன், வக்கீல் இராமனுஜம் ஐயங்கார், எம்.எஸ்.ஆர்.சுப்பிரமணியம் பில்லூர் சித்தாண்டி உடையநாதபுரம் மருதப்பக் கோனார், கணபதி சேர்வை ஆகியோர் கலந்து கொண்டனர்.

இதற்கிடையில் காந்தியடிகள் கி.பி.1934-ல் சிவகங்கைப் பகுதிக்குச் சுற்றுப் பயணமாக வந்தார். பாகனேரி ஆர்.வி.சுவாமிநாதன் அவர்களது விருந்தாளியாக பாகனேரியில் தங்கினார். சிவகங்கையில் கோகலே மன்றம், அருகில் நடந்த பொதுக் கூட்டத்தில் பேசினார். அப்பொழுது அவர் மீது வீசப்பட்ட சிறிய கல் ஒன்றினை ரூ.225/-க்கு மாணிக்கம் சேர்வை என்ற ஒரு தேசபக்தர் ஏலத்திற்கு எடுத்தார். அடுத்து, ஏழை மாணவர் இலவச விடுதியினை சிவகங்கையில் நடத்தி வருவதுடன் அதில் அரிசன மாணவர்களையும் சேர்த்து உதவி வருகின்ற சிவகங்கை ஜமீன்தார் துரைசிங்க ராஜா அவர்களையும், அரிசனங்களுக்கு தொண்டு செய்து வரும் நாகு ஆசாரி என்பவரையும் காந்தியடிகள் பாராட்டினார். இளையான்குடி பகுதி மக்கள் காந்தியடிகளது கிராம நிர்மாணத் திட்டங்களில் மிகுந்த ஈடுபாடு கொண்டனர். கருசா. காதர்பாட்சா ராவுத்தர் என்பவர் 233 கிராமங்களில் கிராமக் காங்கிரஸ் கிளைகளை ஏற்படுத்தியதுடன், பெண்கள் கதர் நூற்புத் திட்டத்தை பெருமளவில்

கைக் கொள்ளுமாறு செய்தார். அத்துடன் இளையான்குடியில் கிராம விவசாயிகள் மாநாடு ஒன்றினையும் கூட்டினார். இந்த மாநாட்டிற்கு ஆச்சார்யா.என்.ஜி. ரெங்கா தலைமை தாங்கினார்.

இதனை தொடர்ந்து கி.பி.1938-ல் இளையான்குடியில் பசும்பொன் முத்துராமலிங்கத் தேவர் அவர்களது முயற்சியில் அரசியல் மாநாடு ஒன்றும் கூட்டப் பெற்றது. கதர் நூற்பில் விரைவாகவும் கூடுதலாகவும் நூற்கும் முறையில் புதிய அம்பர்சர்க்கா கண்டுபிடிக்கப்பட்டதை அறிந்து, இளையான்குடி பாட்சா ராவுத்தர் என்பவர் தமது சொந்த செலவில் கோவைக்கு நெசவாளி ஒருவரை அனுப்பிவைத்து அம்பர்சர்க்காவில் பயிற்சி பெறச் செய்யுமாறு உதவி, அவர் மூலம் அந்த வட்டார மக்களுக்கு அம்பர் சர்க்கா பயிற்சி வழங்க ஏற்பாடுகள் செய்தார். தேவகோட்டையில் காங்கிரஸ் தொண்டர்களது மாநாடும் இந்த ஆண்டில் நடத்தப்பெற்றது.

1939-ம் வருடம் ஜெர்மன் நாட்டு பாசிஸ்ட் சர்வாதிகாரி ஹிட்லர் பக்கத்து நாடான போலந்து நாட்டை ஆக்கிரமித்துக் கொண்டதுடன் விரைவில் பெல்ஜியம் மற்றும் பிரான்ஸ், ஸ்பெயின் நாடுகளையும் பிடித்தது, இங்கிலாந்து ஜெர்மனி நாட்டின் மீது போர்ப் பிரகடனம் செய்தது. தனது அணியில் அமெரிக்க ஆஸ்திரேலிய அரசுகளையும் இணைத்துக் கொண்டது. இங்கிலாந்து நாட்டின் இந்திய அரசுப் பிரதிநிதியான வைஸ்ராய், இந்தியாவும், இங்கிலாந்தின் அங்கம் என்ற முறையில் அந்த இரண்டாவது உலகப் போரில் இணைந்து விட்டதாக அறிவிக்கும் சில போர்க் கால நடவடிக்கைகளை 24.9.1939-ல் அறிவித்தார். போர்க்கால நடவடிக்கைகளைச் செம்மையாக செயல்படுத்த இந்திய பாதுகாப்புச் சட்டத்தை அமல்படுத்தினார். இந்தியாவின் மாநிலங்கள் அனைத்திலும் அப்பொழுது இயங்கி வந்த தேர்ந்தெடுக்கப்பட்ட அரசுகளை செயலிழக்கச் செய்தார்.

இதனைக் கண்டித்து இந்திய தேசியக் காங்கிரஸின் அமைச்சரவைகள் அனைத்தும் பதவி விலகின. ஆத்திரமடைந்த மக்களையும் ஆர்ப்பாட்டம், வேலை நிறுத்தம் செய்த பாட்டாளிகளையும் அரசாங்கம் சிறைகளில் அடைத்தனர். காந்தியடிகள் சட்டமறுப்பு இயக்கத்தை தொடங்கினார். சிவகங்கைச் சீமையெங்கும் 1940-41-ல் தனிநபர் சத்தியாக்கிரகத்தில் நூற்றுக்கணக்கானோர் ஈடுபட்டனர். இவர்களில் குறிப்பிடத்தக்கவர்கள் டி.புதூர் பொ.சுப்பிரமணியன், சிவகங்கை கே.இராமசாமி, பாகனேரி ஆர்.வி.சுவாமிநாதன், மிளகனூர் சாமியார் என்ற இராமசாமி, மானாமதுரை காசி, திருப்புவனம் அயோத்தி வில்லாயுதம், ஒரியூர் சொக்கலிங்கம் அம்பலம், காரைக்குடி அபிசினியா நாச்சியப்பன், தேவகோட்டை டி.ஆர்.அருணாசலம் ஆகியோர். ''வங்கியில் பணம் போடாதே, பட்டாளத்தில் சேராதே, யுத்த நிதிக்கு பணம் கொடுக்காதே'' என்ற முழக்கம் நாடு முழுவதும் எதிரொலித்தது. இதனால் பீதியடைந்த ஆங்கில அரசு மக்களது தலைவர்களான இந்திய

தேசியக் காங்கிரஸ் தலைவர்களது ஒத்துழைப்பை பெறுவதற்கு பேச்சுவார்த்தைகள் நடத்தின. ஆனால் நாட்டு மக்கள் தன்னாட்சி பெறுவதற்கான அடிப்படை எதுவும் அவைகளில் இல்லை. ஆதலால் 8.8.1942-ல் பம்பாயில் மௌலான அபுல் கலாம் ஆசாத் தலைமையில் கூடிய தேசியக் காங்கிரஸ் ''வெள்ளையனே வெளியேறு'' என்ற தீர்மானத்தை பகிரங்கமாக அறிவித்தது. ஆத்திரமடைந்த அரசாங்கம் காந்தியடிகள், அபுல் கலாம் ஆஸாத், ஜவஹர்லால் நேரு, வல்லபாய் படேல், இராஜேந்திர பிரசாத் ஆகிய மக்கள் தலைவர்களை கைது செய்து சிறையில் அடைத்தது. இதனால் நாடு முழுவதம் கொந்தளித்தது.

சிவகங்கைச் சீமையில் இதன் எதிரொலி மிகவும் தீவிரமாக இருந்தது. சிவகங்கை நகரில் 9.8.1942-ம் தேதியன்று முழு கடையடைப்பு நடந்தது. அடுத்து செய்ய வேண்டிய அரசு எதிர்ப்பு, நடவடிக்கைகள் பற்றிய திட்டம் தீட்டிய ஊழியர் திரு. கே.வி.சேதுராமச்சந்திரனும் மற்றும் தொண்டர்களும் அன்று இரவு கைது செய்யப்பட்டனர். தொடர்ந்து பல ஊழியர்கள் கைது. என்றாலும் ஆங்காங்கு வெள்ளை அரசுக்கு எதிராக மக்களை கிளர்ந்து எழுமாறும் இந்திய அரசுக்கு எதிராக வெளியீடுகளும், சுற்றறிக்கைகளும் மக்களிடையே பரப்பப்பட்டு மக்களை அந்நிய அரசுக்கு எதிராகக் கிளர்ந்து எழுமாறு கேட்டுக் கொள்ளப்பட்டது. அப்பொழுது சிவகங்கை ஜமீன்தார் கோர்ட் ஆப் வார்டு பொறுப்பில் இயங்கியது. இளைஞர்களாக இருந்த ஜமீன்தாரரது மக்கள் சண்முக ராஜாவும் சுப்பிரமணியராஜாவும் தேசியத் தொண்டர்களுக்கு மறைமுகமாக பல உதவிகளை அளித்து வந்தனர். ஜமீன்தாரது அலுவலக சைக்லோஸ்டைல் அச்சுயந்திரமும், அரண்மனை ரிவால்வார் ஒன்றும் தேசியத் தொண்டர்கள் பயன்பாட்டில் இருந்தன என்றால், மேலும் விரிவாக அவர்களது உதவிகள் பற்றி வரைய வேண்டியது இல்லையல்லவா!

இவ்விதம் சிவகங்கையில் உருவெடுத்த புரட்சி இயக்கம் காரைக்குடி, தேவகோட்டை, திருவேகம்பத்து ஆகிய ஊர்களில் தீவிர நிலைகளை அடைந்தன. 17.8.1942-ல் தொண்டர்கள் மக்களைத் திரட்டி அரசாங்க எதிர்ப்பு ஊர்வலங்கள் நடத்தினர். இவர்கள் மீது போலீசார் சுட்டனர். காரைக்குடியில் ஒருவர் உயிர் துறந்தார். தேவகோட்டையில் கிருஷ்ணன் தர்மராஜன் என்ற இரு இளைஞர்களும், வள்ளியம்மை என்ற மூதாட்டியும் சுட்டுக் கொல்லப்பட்டனர். தேவகோட்டை நீதிமன்றம், திருவேகம்பத்து தாலுகா கச்சேரி, ஜமீன் களஞ்சியம் ஆகியவைகளுக்கு தீவைக்கப்பட்டன. தொண்டர்கள் 24.8.1942-ம் தேதி பனங்குடி நடராஜபுரம் ரயில் நிலையத்திற்கு தீ வைத்து தகர்த்தனர். இந்த நிகழ்வுகளை அடுத்து தேவகோட்டை வக்கீல்கள் முகுந்தராஜ ஐயங்கார், முத்துச் சாமி, வல்லத்தரசு ஆகியோரும், வளமாவூர் இராமகிருஷ்ணத் தேவர், திருநாவுக்கரசு செட்டியார், ஆர்.வி.சுவாமிநாதன், இரவிசேரி நடராஜன், சின்ன அண்ணாமலை, தியாகி கண்ணுச்சாமி அம்பலம்

ஆகியவர்கள் சிறையில் அடைக்கப்பட்டனர்.

இந்த அக்கிரம நடவடிக்கைகளால் ஆறுதல் அடையாத அன்றைய அரசாங்கம், தேசியத் தொண்டர்களான சிவகங்கை கே.இராமசாமி, சிவகங்கை பி.சுப்ரமணியன் ஆகியவர்களைக் கண்ட இடத்தில் சுட்டுக் கொல்லுமாறு உத்திரவிட்டது. பாதிக்கப்பட்ட கிராமங்களில் உள்ள பெண்மணிகளிடம் மிருகத்தனமாக நடந்து பெண்மைக்கு பழியும் பாதகமும் சேர்க்கும் பணியில் போலீஸ் ஈடுபட்டது. ஊர்கள் தோறும் தேசிய இயக்கத்தில் ஈடுபட்டதற்காக, ஊர்மக்களிடம் மொத்தமாக கூட்டு அபராதத் தொகை என்ற தண்டத் தீர்வையை வசூலித்தது. இப்படி வசூலிக்கப்பட்டது ரூ.2,93.000/- எனக் குறிக்கப்பட்டுள்ளது.

நமது நாட்டில் வேறு எங்குமே நடந்திராத வகையில் இராமநாதபுரம் சீமை, திருவாடனைக்கு அடுத்து சிவகங்கைச் சீமையில்தான் இந்த வெள்ளையனே வெளியேறு இயக்கம் மிகவும் தீவிரமான பொது மக்களது ஆவேசம் மிக்க இயக்கமாக பரிமளித்துள்ளது. இந்த சீமை மக்கள் நாட்டுப்பற்றுடனும், வீரமறவரது வழியில் நின்று தேசத் தொண்டிற்கு தங்களைப் பரிபூரணமாக அர்ப்பணித்து இருப்பதை வரலாற்றில் காண முடிகிறது.

இதந்தரு மனையினீங்கி இடர்மிகு சிறைப்பட்டாலும், பதந்திருவிரண்டுமாறி பழி மிகுத்து இழிவுற்றாலும், விதந்தரு கோடி இன்னல் விளைந்தெனை அழித்திட்டாலும், சுதந்திர தேவி நின்னைத் தொழுவதை மறக்கிலேன் என்று பாடி மறைந்த பாரதியின் வாக்கினுக்குரிய வீரவடிவங்களாக வரலாறு படைத்து வாழ்ந்து மறைந்தவர்கள் இந்தச் சீமை மக்கள். நமது நாட்டு விடுதலைக்குப் போராடிய இந்த தியாகிகளில் சிலர் இன்னும் நம்மிடையே வாழ்ந்து கொண்டு இருக்கின்றனர். அவர்களுக்கு நமது நன்றி நிறைந்த வணக்கங்கள் என்றும் உரியது.



# 13. சிவகங்கை வரலாற்றை சீரழித்த நூல்கள்

## *1. சிவகங்கை அம்மானை*

*தமிழ்நாடு அரசு பதிப்பு (1954), சென்னை.*

நாடோடி இலக்கியம் என்ற வகையில் சிவகங்கை அம்மானையில் வரலாற்றுக்கு தொடர்பு இல்லாத எத்தனயோ செய்திகள் சொல்லப்பட்டுள்ளன. அவைகளை எல்லாம் இலக்கியத்தின் கதைப் போக்கிற்காக இணைக்கப்பட்டுள்ளவை எனப் புறக்கணித்து விட்டாலும் சில முக்கியமான பகுதிகள் வரலாற்றிற்கு முரணாக மட்டுமல்லாமல் இந்த நூலின் வரலாற்று நாயகர்களான ராணி வேலுநாச்சியாருக்கும் அவரது பிரதானிகளான மருது சேர்வைக்காரர்களுக்கும் தீராத பழி ஏற்படுத்தும் பாங்கில் அமைந்திருப்பது இங்கு சுட்டிக்காட்டப்பட வேண்டியதாகும்.

அ. மருது சகோதரர்கள் மன்னர் முத்துவடுகநாதரது ஆட்சியின் பொழுது, (கி.பி. 1750-72)சிவகங்கை அரண்மனைப் பணியில் அமர்ந்தவர்கள். கி.பி.1780-ல் ராணிவேலுநாச்சியார் சிவகங்கையை ஆற்காட்டு நவாப்பிடமிருந்து மீட்டு அவர் ஆட்சியைத் தொடங்கியபொழுது அவர்கள் இருவரையும் பிரதானிகளாக நியமனம் செய்தார் என்பது வரலாறு.

கி.பி.1772-ல் நவாப்பும் கும்பெனியாரது படைகளும் இணைந்து சிவகங்கைச் சீமை மேல் படை எடுத்து வந்தனர்.காளையார் கோவில் கோட்டைப் போரின் பொழுது 25.6.1772-ல் குண்டடி பட்டு மன்னர் முத்துவடுகநாதர் தியாகி ஆனார் என்பது வரலாறு. (பார்க்க:

*தமிழ்நாடு ஆவணக்காப்பக ஆவணம்:)*

*ஆனால் சிவகங்கை அம்மானையில் (பக்கம் 127)*

''மாதுதனைக் கைப்பிடித்து வாவெளியே என்றழைத்து
வரவே உள்மண்டபத்து வாச வெளி மூலை தன்னில
உரமாய் வரும்பொழுது உபாயமுள்ள கம்பெனியார்
.....கலீரெனவே சுட்டானே பூரிதுரை
கப்பித்தான் சுட்டகுண்டு கன்னியர்க்கும் மன்னருக்கும்
ஓப்பிலையாய்ப்பட்டு ஊடுருவிப் பாய்ந்ததுவே''

**போரிலே வீரமரணம் அடைந்து பொன்றாப் புகழ்பெற்ற முத்து வடுகநாத மன்னரது தியாகத்தைச் சிறுமைப்படுத்தும் வரிகள் இவை.**

ஆ. *மருது சகோதரர்கள் மன்னர் முத்து வடுகநாதரது அரண்மனைப் பணியாளராகத்தான் இருந்து வந்தனர்.*

*சிவகங்கை அம்மானை (பக்கம் 122)*

''மன்னவனார் முத்து வடுக துரை தம்மிடமும்
தன்னவர்களாயிருக்கும் தளவாய் மருதிடமும்....''

''தளவாய் மருதிருவர் தான் கதிரோன் வந்த பின்னர்....'' (பக்கம் 123)

*என்று தளவாய் (படையணிகளின் தளகர்த்தர்) பதவியில் இருந்ததாகக் குறிப்பிடப்பட்டுள்ளது. அம்மானை பாயிரத்தில் மருது சகோதரர்களை மேலும் உயர்த்தி*

''சிவகங்கை நகராள் மன்னன், தெம்புள மருது தன்னை''
''சிவகங்கை புவிக்கொண்ட மன்னவன் மருது தன்னை''

*என்று புகழ்ச்சியின் உச்சியிலே வைத்து பொய்யுரைக்கப்பட்டுள்ளது. மருது சகோதரர்கள் காலத்தில் சிவகங்கை மன்னர்களாக மூவர் இருந்துள்ளனர் என்பது வரலாறு. முதலாவது மன்னர் முத்து வடுகநாதர் (கி.பி.1750-1772), ராணி வேலு நாச்சியார் (கி.பி.1780-1789) வேங்கன் பெரிய உடையாத் தேவர் (கி.பி.1790-1801) இவர்களையெல்லாம் மறந்து விட்டு புனைந்துரைக்கிறது அம்மானை.*

இ. *ராணி வேலு நாச்சியாரின் ஆட்சிக் காலத்தில், ராணி வேலு நாச்சியாருக்கு அவரது பிரதானிகளான மருது சேர்வைக்காரர்களுக்குமிடையில் பலமான கருத்து வேறுபாடுகள் எழுந்தன. இதன் காரணமாக மருது சேர்வைக்காரர்கள் மே.1789-ல் சிவகங்கை அரண்மனையை முற்றுகையிட்டனர். இந்த*

*முற்றுகையில் இருந்து ராணியைக் காப்பாற்ற நவாப்பின் பரிந்துரையின் பேரில் கும்பெனியாரது தளபதி ஸ்டூவர்ட் தலைமையிலான படைகள் சிவகங்கை வந்து, கொல்லங்குடி, காளையார்கோவில் ஆகிய இடங்களில் நடந்த போர்களில் மருது சேர்வைக்காரர்களை தோற்கடித்தன. திண்டுக்கல் சீமைக்கு ஓடிச்சென்ற அவர்கள், 1789-ல் திருப்புத்தூர் கோட்டையை மீண்டு கைப்பற்றினர். மேலும் ரத்தக்களரியைத் தடுத்து சிவகங்கைச் சீமையில் அமைதியை நிலைநாட்ட ஆற்காட்டு நவாப்பும், கும்பெனித் தலைமையும் பிரதானிகளுடன் பேசி சமரச உடன்பாட்டினை எட்டுகின்றனர்.*

*இதன்வழி, ராணி வேலுநாச்சியார், அரசி தலைமைப் பொறுப்பில் இருந்து விலகிக் கொள்வதென்றும், சக்கந்தி வேங்கன் பெரிய உடையாத் தேவர் சிவகங்கை மன்னராக பதவி ஏற்பதெனவும் முடிவாயிற்று. கி.பி.1790 முதல் கி.பி.1801 வரை அவர்தான் சிவகங்கைத் தன்னரசின் மன்னராக இருந்தார். (பார்க்க தமிழ்நாடு அரசு ஆவணக் காப்பக தொகுதிகள்:)*

*சிவகங்கை சீமை அம்மானையோ இந்த முக்கியமான நிகழ்ச்சியை மிகவும் இயல்பாக, உண்மைக்கு மாற்றமாக,*

''மங்கையந்தராணி மகாராணி வேலுலகு
தங்க கனமருது துரை வேந்தை தானழைத்து
மிக்க புகழ் விளம்புகிறேன் இப்போது
சக்கந்தி மாநகரந் தன்னில் குடி வளரும்
வெங்கணப் பெரிவுடையார் வேந்தனுக்கு வாந்தகமாய்
தங்கமுடி மகுடம் தரிக்க என்றாள் அப்பொழுது....
வைத்தார் முடியெடுத்து மங்கையருமே கொடுக்க'' (பக்கம் 164)

*என்று ராணி வேலுநாச்சியார் வேங்கன் பெரிய உடையாத் தேவருக்கு முடிசூட்டியதாக வரலாற்றிற்கு முரணான செய்தி கொடுக்கப்பட்டுள்ளது. அத்துடன் படைமாத்தூர் கௌரி வல்லப ஒய்யாத் தேவர் கும்பெனியாருக்கு வரைந்த முறையீட்டில், அவருக்கு காளையார் கோவிலில் ஏற்கனவே சிவகங்கை மன்னராக முடிசூட்டப்பட்டதை தெரிவித்துள்ளார். (பார்க்க சென்னை தமிழ்நாடு ஆவணக் காப்பகம்:* Military consultantions Vol.285. (A) 28.6.1801 - Page 5039)

*இவையெல்லாவற்றையும் விட முக்கியமான, ஆனால் மிகவும் பாதிப்பை ஏற்படுத்திய பகுதி, ராணி வேலுநாச்சியாருக்கும் மருது சகோதரர்களுக்கும் இருந்த தொடர்பைக் குறிப்பிடும் பகுதியாகும்.அம்மானையில் பல இடங்களில் ராணியாரை*

*மருதிருவர் விளித்துச் சொல்வதாக வருமிடங்களில்*

''எந்தாயே இவ்விடத்தில் இனி இருக்கப் போகாது'' (பக்கம் 130)
''வருந்தாமல் மாதாவே மறைபாதம் நோகாமல்....'' (பக்கம் 132)
''தன்னை... தனியிருத்தி தாயே போய் வாரோமென்று....'' (பக்கம் 139)
''அருகே சிவிகை தன்னை அடுத்து இருவர் எந்தாயே....'' (பக்கம் 156)

''தேவியுடைச் சேவகராய்ச் சென்று இருந்து நாங்களுமே
வந்தோம் பழையபடி மாநிலத்தை ஆளவைத்து
எந்தாய் வளந்தேறி இருக்க வென்று....'' (பக்கம் 157)

*மருது சகோதரரர்கள், ராணி வேலுநாச்சியாரை, தாயாகவே மதித்துப் பணிந்து சொல்வதாகப் பாடும் நூலாசிரியர், ராணியாரும் மருது சகோதரர்களும் சிவகங்கையை விட்டு, திண்டுக்கல் சீமையில் சீப்பாலக் கோட்டையில் ஓராண்டு தங்கியிருந்ததைக் குறிப்பிடும் பொழுது,*

''நாட்டியர்மனையும் நலமாகவே அமைத்து
வீற்றிருந்தார் மன்னர் மெய்மகிழ்ந்து ராணியுடன்...'' (பக்கம் 139)

*என்று குறிப்பிட்டுள்ளார். ''மெய்மகிழ்ந்து'' வாழ்ந்தனர் என்ற குறிப்பை அம்மானை ஆசிரியர் எத்தகைய உள்ளக் குறிப்புடன் பயன்படுத்தினார் என்று இப்பொழுது நம்மால் அறுதியிட்டுச் சொல்ல முடியவில்லை. ஆனால், பிந்தைய கால நூலாசிரியர்கள் இந்த தொடருக்குப் பொருத்தமான பொருளைக் கொள்ளவில்லை என்பது அவர்கள் எழுத்துக்களில் இருந்து தெரிய வருகிறது.*

*இந்த அம்மானை, சிவகங்கை பற்றிய நூல்களில் மிகவும் பழமையானதால் (கி.பி.1840), பின்னர் சிவகங்கை பற்றி எழுதிய நூலாசிரியர்களும், இந்தத் தொடரினால் பாதிக்கப்பட்டவர்களாக, மருதிருவருக்கும் வேலு நாச்சியாருக்குமிடையில் உள்ள தொடர்புக்கு மாசு கற்பிக்கும் நிலைக்குச் சென்றுவிட்டனர் என்பதை அவர்களது எழுத்துக்கள் தெரிவிக்கின்றன. இன்றைய நூலாசிரியர் ஒருவர் கூட மிகவும் துணிச்சலாக பெரிய மருதுவை விதவை ராணி வேலு நாச்சியார் ''மறுமணம்'' செய்து கொண்டதாக எழுதி இருக்கிறார். இதற்குச் சான்றாக அவர் சொல்லக் கூடிய ஆதாரங்கள் எதுவும் இருக்கிறதா அல்லது இருப்பதைக் குறிப்பிட்டு இருக்கிறாரா என்றால், அவரது சொல்விளக்கத்தை தவிர வேறு இல்லை.*

*இவையெல்லாம், ஆணுக்குப் பெண் சமம். ஆண்களைப் போன்று பெண்களுக்கும் வாய்ப்புகள், சொத்துரிமை, என்பன போன்ற உரிமைக்குரல் ஒலிக்கப்படுகின்ற இந்த இருபதாவது நூற்றாண்டின் இறுதியில் கூட, பெண்களை குறிப்பாக மேலிடத்து மகளிரை*

எளிதாக இழிவுப்படுத்தும் ஆண் ஆதிக்க உணர்வு விஞ்சி இருப்பதையே இவை சுட்டினாலும், அது வரலாற்றிற்கு மிகப் பெரிய தீங்கினை விளைவித்துள்ளது.

2.6.1772-ல் இராமநாதபுரம் கோட்டையைப் பிடித்த நவாப் கும்பெனிப் படைகள் சிவகங்கை சீமையில் காளையார் கோவில் கோட்டையைப் பிடிக்க 25.6.1772-ல் போர் நடத்தினர் என்பதுதான் வரலாறு. ஆனால் இந்தப் போருக்கு முன்னதாக மறவ மங்கலத்தில் மருதிருவர் நவாப் படைகளுடன் வீரப்போர் புரிந்ததாக (பக்கங்கள் 123-127) புகழ்ந்து பாடல் பாடப்பட்டுள்ளது. இடைச் செருகல் இலக்கியங்களில்தான் உண்டு. வரலாற்றிலும் ''இடைச்செருகல்'' உண்டு என்பதற்கு சிவகங்கை அம்மானை ஒரு எடுத்துக் காட்டாக உள்ளது. இது ஒன்று மட்டும் அல்ல. சிவகங்கையை விட்டு விருபாட்சியில் தங்குவதற்கு முன்னர் ராணி வேலு நாச்சியாரும் மருதிருவரும் ஓராண்டு திண்டுக்கல் கோட்டையில் தங்கியது, திப்பு சுல்தானைச் சந்தித்தது, (அப்பொழுது மைசூர் சுல்தானாக இருந்தவர் ஹைதர்அலி). வத்தலக்குண்டில் யானை வேட்டை, மேலூர் வழி திண்டுக்கல் சென்றவர்கள், சோழவந்தான், மதுரை, திருப்புவனம், மானாமதுரை, காளையார் கோவில் வழியில் திரும்பியது என்பன போன்ற பல நிகழ்ச்சிகள் 'இடைச்செருகள்' ஆகும்.

## மறைக்கப்பட்ட நிகழ்ச்சிகள்

1. மருது சகோதரரர்கள் சிவகங்கை மன்னரிடம் அடப்பப் பணியில் இருந்தனர் என்பதை ''அடப்ப வெள்ளைக்காலுடையாரீன்ற மருது இருவர்'' (பக்கம்....) எந்தப் பணியில் இருந்தனர் என்பதைக் குறிப்பிடவில்லை.

2. கிழக்கே இருந்து கும்பெனி படைகளும் மேற்கே இருந்து திருப்புவனம் கோட்டையைப் பிடித்து தளபதி பௌஷேர் சிவகங்கை வருவதையும் நன்கு அறிந்த மன்னர் முத்து வடுகநாதர் காளையார் கோவில் கோட்டையில் அவர்களைச் சந்தித்துப் போர் செய்ய ஆயத்தம் செய்தார் என்பதும், முன்னே வந்து விட்ட தளபதி, ஜோஸப் சுமித்துடன் பிரதானி தாண்டவராய பிள்ளை 21.6.1772-ல் சமரசப் பேச்சு பேசினார் என்பது வரலாறு. (பார்க்க பேராசிரியர் - ராஜையனது History of Madura (1974) பக்கம் 261)

3. 25.6.1772-ல் நடைபெற்ற போரில் மன்னர் முத்து வடுகநாதர் பிரதானி தாண்டவராய பிள்ளை ராணியையும் அவரது பெண் குழந்தையையும் பத்திரமாக காப்பாற்றுவதற்கு விருப்பாட்சிக்கு அழைத்துச் சென்றார். பிறகுதான் மருதிருவர் விருபாட்சி போய்ச் சேர்ந்தார்கள். (பார்க்க பேராசிரியது அதே நூலின் அதே பக்கம்)

4. ராணி வேலு நாச்சியாருக்கும் சின்ன மருது சேர்வைக்காரருக்கும் கருத்து வேறுபாடுகள் மிகுந்து, ராணியையும் அவரது குடும்பத்தாரும் உள்ள சிவகங்கை அரண்மனையை அவர்களது படைகள் முற்றுகையிட்டதும், பின்னர் 8.5.1789-ல் வந்த கும்பெனித் தளபதி ஸ்டுவர்ட் கொல்லங்குடி, காளையார் கோவில், பிரான்மலைப் போர்களில் மருது இருவரைத் தோற்கடித்து திண்டுக்கல் சீமைக்குள் பின் வாங்குமாறு செய்தது.

5. கி.பி.1792-ல் சிவகங்கை இளவரசி வெள்ளச்சி இறந்ததும், அவரது கணவரும் சிவகங்கை மன்னருமான வேங்கண் பெரிய உடையாத் தேவருக்கு பெரிய மருது தமது மகளைத் திருமணம் செய்து வைத்தது. இவையனைத்தும் அம்மானையில் இடம் பெறவில்லை.

## 2. சிவகங்கைச் சரித்திரக் கும்மி

தமிழ்நாடு அரசு பதிப்பு (1954), சென்னை.

சிவகங்கை அம்மானை இயற்றப்பட்டு நாற்பத்து இரண்டு ஆண்டுகள் கழிந்த பின்னர் (கி.பி.1882-ல்) சாலைக் கிராமம் முத்துசாமி என்பவரால் இயற்றப்பட்டது. ஏறத்தாழ அம்மானையை ஒட்டியே இந்தக் கும்மியும் பாடப்பெற்று இருந்தாலும், வரலாற்றிற்கு முரணான செய்திகள் இந்த நூலிலும் மிகுதியாக காணப்படுகின்றன. அவைகளில் முக்கியமான இரண்டு மட்டும் இங்கு தொகுத்துக் கொடுக்கப்பட்டுள்ளது.

அரளிக்கோட்டைச் செப்பேட்டின்படி, முல்லையூர் தாண்டவராய பிள்ளை கி.பி.1747-ல் மன்னர் சசிவர்ணத் தேவர் உயிருடன் இருந்த பொழுதே, பிரதானிப் பணியை ஏற்றார் என்பது தெரிகிறது. அடுத்து, மன்னர் முத்து வடுகநாதரது ஆட்சி முழுவதிலும் பிரதானி பதவியை வகித்ததுடன், காளையார் கோவில் கோட்டைப் போரில் மன்னர் இறந்த ஆறு மாதங்களுக்குப் பிறகு, பிரதானி கி.பி.1772-ல் இறுதியில் இறந்தார் என்பது உண்மை வரலாறு.

அ. ஆனால் சிவகங்கைக் கும்மி கூறுவது,

''கட்டழகன் பிரதானி தாண்டவராயன்
எட்டியே வயது சென்றதினால்
அடப்பப்பிடி வெள்ளைக் காலுடையாரீன்ற
அண்ணன் தம்பி யிருமருதும்
திடத்துடன் சுத்தவீரன் பெரியமருது
தீரன் சின்ன மருது புத்திசாலியுமாய்
சீமைய யதிகாரம் செலுத்தி வந்தார்....'' (பக்கம் 10-11)

என்பன சிவகங்கைக் கும்மி கூறும் இருபெரும் பொய்யான செய்திகளாகும். தாண்டவராய பிள்ளை மூப்பு காரணமாக பதவி

விலகினார் என்பதும் மருது சகோதரர்கள் பிரதானிகளாக ஆதிக்கம் செலுத்தி வந்தனர் என்பதும் அந்தச் செய்தி.

ஆ. காளையார் கோவில் கோட்டைப் போரில் 25.6.1772-ல் மன்னர் முத்து வடுகநாதர் தியாகியானார் என்ற வரலாற்று உண்மைக்கு முரணாக,

''தூங்கின துரையும் ராணியுந்தான்
இப்ப வெடிச்சத்தம் ஏதெனவே
இருபெரும் கைகோர்த்து வெளியில் வந்தார்
கண்ட சிப்பாயும் சுட்டிடவே
கர்த்தனாம் ராணியும் பட்டிடவே....''

என்று மன்னர் முத்து வடுகநாதரது தியாகத்தை மறைத்து அவரது பெயருக்கு இழுக்கு ஏற்படுத்தும் வகையில் இந்தக் கும்மித் தொடர் அமைக்கப்பட்டு உள்ளது.

சிவகங்கையை மீட்டபிறகு, ராணி வேலு நாச்சியார் மருதிருவரை பிரதானி தளகர்த்தராக நியமனம் செய்தார். அவர்கள் இருவரும் கி.பி.1780 முதல் அந்தப்பணியில் இருந்து வந்தனர். தமக்கு ஆண்டுதோறும் பேஷ்குஷ் தொகையை செலுத்த வேண்டும் என்ற அடிப்படையில், புதிய அரசை நவாப் அங்கீகரித்து இருந்தார். அந்தத் தொகை செலுத்தப்படாததால் 4.8.1783-ல் தளபதி புல்லர்ட்டன் தலைமையில் கும்பெனியாரது படைகள் சிவகங்கை வந்தது. பிரதானிகளான மருதிருவரிடமிருந்து நாற்பதினாயிரம் பொன்னும், பாக்கிக்கு பொறுப்பும் எழுதி வாங்கிய பிறகு அந்தப் படையணிகள் விலக்கிக் கொள்ளப்பட்டன. (பார்க்க தளபதி புல்லர்ட்டனது அறிக்கை)

ஆனால் சிவகங்கை கும்மி, மருதிருவரும் சென்னை சென்று கவர்னரைப் பேட்டி கண்டதாகவும், அவர் அவர்களை சிவகங்கைச் சீமைக்கு பேஷ்குஷ் தொகை செலுத்த வேண்டாமென்று தெரிவித்து விட்டதாகவும் தெரிவிக்கின்றது. மருதிருவர் சென்னை சென்றதாக எந்த செய்தியும் இல்லை. இப்பொழுது சிவகங்கைக் கும்மி வரிகளைப் பார்ப்போம்.

''......மருதிருவர்
தெளிந்து முகமலர்ந்து தீர்வை
பகுதிக்குத் தரவு என்ன என்றும்
கும்பினிக்கு நீங்கள் பிள்ளையென்று
குறிப்பிட்டு நாங்கள் எண்ணினதால்
அன்புடன் நீங்கள் நமக்கு மட்டும்
ஆன பகுதி தர வேண்டா மென்றார்....
சீராய் நடந்து புவிசெல்லு மென்றார்.''

## *3. சிவகங்கைச் சீமை (1976)*

*ஆசிரியர்: துர்க்காதாஸ் சாமி*
*பதிப்பு : அருணாபதிப்பகம், சென்னை-17.*

*இது ஒரு சிறிய கையடக்கப் புத்தகம். சிவகங்கைச் சரித்திரக் கும்மி, அம்மானை நூலினைப் பெரும்பாலும் தழுவியும் வேறு சில ஆவணங்களின் அடிப்படையில் வரையப்பட்ட நூல். அதனால் உண்மையான வரலாற்றிற்கு முரணான பல செய்திகள் இந்த நூலிலும் காணப்படுகின்றன. அவைகளில் சிலவற்றை இங்கே காணலாம்.*

(அ) பக்கம்: 23

> ''சந்தா சாகிபுவின் சொந்தக்காரரான ஆலம்கான் என்பவன், இராமநாதபுரம் சிவகங்கை ஆகிய பகுதிகளில் கிடைத்த கப்பத்தொகையை ஆற்காட்டு நவாப்பிற்கு சேராத வண்ணம் ஏப்பம் விட்டுக் கொண்டு இருந்தான்.''

*மறவர் சீமையின் மன்னர் என்ற முறையில் சேதுபதி மன்னரோ அல்லது சிவகங்கைச் சீமை பிரிந்த பிறகு சிவகங்கைச் சீமை, இராமநாதபுரம் சீமை ஆகிய இரு தன்னரசு மன்னர்களும் யாருக்கும் எப்பொழுதும் கப்பம் செலுத்தியது இல்லை என்பதுதான் வரலாறு.*

(ஆ) பக்கம்:60

> ''முத்து வடுகநாதருக்கு அமைச்சர்களாக தாண்டவராயபிள்ளை, தாமோதரம் பிள்ளை என்ற இரு அமைச்சர்கள் இருந்தனர்.... சகோதரர்களான அவர்கள் மறவர் நாட்டின் ஒற்றுமைக்குப் பாடுபட்டனர்.''

*சிவகங்கை மன்னர் சசிவர்ணத் தேவர் காலம் முதல் சிவகங்கைச் சீமைக்கு ஒரே ஒரு அமைச்சர் தான் இருந்து வந்தார். இரு அமைச்சர்கள் இருந்தது இல்லை. மேலும் தாண்டவராய பிள்ளையும் தாமோதரம் பிள்ளையும் சகோதரர்கள் அல்லர். தாண்டவராய பிள்ளை அரளிக் கோட்டையை அடுத்த முல்லையூர்க்காரர்.தாமோதரம் பிள்ளை இராமநாதபுரத்தை அடுத்த தீயனூர்க்காரர் என்பன உண்மை வரலாறு.*

(இ) பக்கம்: 97

> ''சிவகங்கைச் சீமையைக் கைவசப்படுத்திக் கொண்ட நவாப் கி.பி.1773-ல் அதை ஜப்தி செய்து ஏலத்துக்கு விட்டார். அதை மாத்தூர் நவாப் எடுத்துக் கொண்டார்.''

*தமிழ் நாட்டில் நவாப் பட்டத்துடன் அப்பொழுது இருந்த ஒரே நபர்,கர்நாடக நவாப் வாலாஜா முகம்மது அலி ஒருவர்தான். மாத்தூர்*

*நவாப் என்று யாரும் இருந்தது கிடையாது. 25.6.1772-ல் சிவகங்கையைக் கைப்பற்றிய நவாப், தொடர்ந்து அதனை எட்டு ஆண்டுகள் அவரது நேரடி நிர்வாகத்தில் வைத்து இருந்தார். கி.பி.1780-ல் ராணி வேலு நாச்சியார் தலைமையில் மருது சகோதரரர்கள் சீமையை மீட்கும் வரை. இதற்கு முரணாக உள்ளது மேலே கண்டவைகள்.*

(ஈ) பக்கம் 99

> ''....அப்போது கி.பி.1780 கர்ப்பவதியாக இருந்த வேலு நாச்சிக்குப் பிறக்கவிருந்த சிவகங்கை வாரிசு ஆணா அல்லது பெண்ணா என்பது தெரியாமல் இருந்ததால். ... அவள் பட்டத்து ராணியாக்கப்பட்டாள்.''

*இராணி வேலுநாச்சியாரது கணவர் முத்து வடுகநாதர் காளையார் கோவில் கோட்டைப் போரில் 25.6.1772-ல் இறந்த பிறகு பிரதானி தாண்டவராயபிள்ளை வேலுநாச்சியாரையும் அவரது மகள் வெள்ளச்சியையும் அழைத்துக்கொண்டு விருப்பாச்சி சென்றார் என்பது வரலாறு. (சிவகங்கைச் சீமை நூலில் பக்கம் 96-ல் இதே ஆசிரியர் குறிப்பிட்டுள்ளார்) ஆனால் கணவனை இழந்த வேலு நாச்சியார் கி.பி.1780-ல் சிவகங்கை வந்த பொழுது ''கர்ப்பவதியாக'' இருந்தார் என்பது ஆதாரமற்றது. சிவகங்கை ராணியாருக்கு இழுக்கை ஏற்படுத்துவது.*

*ராணி உண்மையில் கர்ப்பவதியாக இருந்தார் என்றால் அவர் என்ன குழந்தையை எப்பொழுது பிரசவித்தார் என்பதையும் குறிப்பிட்டிருக்க வேண்டும். கி.பி.1801 வரை சிவகங்கை வரலாற்றை விவரித்துள்ள அவர், ராணியாரது வாரிசை ஏன் குறிப்பிடவில்லை. வேண்டுமென்றே கைம்மை நிலையில் எட்டு ஆண்டுகளைக் கழித்த ராணி வேலு நாச்சியாருக்கு களங்கம் கற்பிப்பதற்காகவே ஆசிரியர் இதனை எழுதியுள்ளார் எனத் தெரிகிறது.*

*தொடர்ந்து இந்த நூலின் ஆசிரியர், அவரது நூலின் பக்கம் 106-ல்* '''முத்து வடுகநாதரின் முதல் மனைவி வேலு நாச்சியாருக்கும் வெள்ளை மருதுவுக்கும் தொடர்பு இருந்திருக்கிறது'' *என எவ்வித ஆதாரமும் இல்லாமல் பகிரங்கமாகக் குறிப்பிட்டு இருப்பதும் இதனை உறுதிப்படுத்துகிறது. வாய்புளித்ததோ, காய் புளித்ததோ என்ற பாணியில் பொறுப்பற்ற முறையிலான எழுத்து, இந்த ஆசிரியருடையது.*

## *4. வீராங்கனை வேலு நாச்சியார் (1983)*

*ஆசிரியர்: சிரஞ்சீவி*
*பதிப்பு : அபிராமி பப்ளிகேஷன்ஸ், சென்னை-1.*

*தலைப்பிற்கு சம்பந்தமில்லாமல் வரையப்பட்ட நூல்களில் இதுவும் ஒன்று. பதினெட்டாம் நூற்றாண்டு சிவகங்கைச் சீமை வரலாற்றை தக்க*

*ஆதாரமில்லாமல் வரையப்பட்டுள்ள இதிலும் ஆங்காங்கு சிவகங்கைச் சீமை அரசியலுக்கு முரணான பகுதிகள் சில பட்டியலிட்டுக் காட்டப்பட்டுள்ளன.*

பக்கம் 66

''இனி வெள்ளைக்காரனின் உதவியை எதிர்பார்க்கக்கூடாது என்ற தீர்மானத்தில்தான் தளபதி வெள்ளையன் சேர்வை **சிவகங்கை மன்னரான செல்லத் தேவரோடு** கலந்து ஆலோசித்து டச்சுக்காரர்களை நண்பனாக ஆக்கிக் கொண்டார்.''

*''சேதுபதியின் சீமைத் தளபதி வெள்ளையன் சேர்வை காலத்தில் சிவகங்கை மன்னராக இருந்தவர் முத்து வடுகனாத தேவர். சிவகங்கையில் செல்லமுத்துத் தேவர் என்ற மன்னரும் இருந்தது இல்லை. குறிப்பிட்ட நிகழ்ச்சியும் நடைபெறவில்லை.*

பக்கம் 75

''சேது நாட்டில் ராணி முத்துத் தளவாய் நாச்சியாரையும், ஒன்பதே வயது நிரம்பிய முத்துராமலிங்க சேதுபதியையும் திருச்சிக் கோட்டையில் சிறை வைத்தான். இந்நிகழ்ச்சியால் பேரதிர்ச்சியுள்ள சிவகங்கை அரசி வேலு நாச்சியார், தனது செல்வாக்கினால் நவாப்பின் கொடுங்கோன்மையை மறைமுகமாக மக்களிடம் எடுத்துக் கூறுவதில் தீவிரமாக முனைந்தார்.''

*ஆதாரமற்ற செய்தி. சேதுபதி ராணியும் சேதுபதி இளவரசரும் கைதான இருபது நாட்களில், ராணி வேலுநாச்சியார், கணவரை இழந்து விருபாட்சியில் தஞ்சமடைந்து விட்டார் என்பது வரலாறு.*

பக்கம் 88

''...மறவர் குல மக்கள், ஈட்டுத் தொகையாக ரூ. 1,50,000 கொடுத்தால் ராணி நாச்சியாரையும் சேதுபதி இளவரசரையும் விடுதலை செய்வதாக நவாப் அறிவித்தார். எனவே வீராங்கனை வேலுநாச்சியார் தாம் சேகரித்து வைத்திருந்த தொகையின் ஒரு பகுதியை அனுப்பி வைத்தார்... இளவரசரும் ராணியும் விடுவிக்கப்பட்டு சேதுநாட்டிற்கு அனுப்பி வைக்கப்பட்டார்.''

*புதிய வரலாறு. ஆசிரியரது அருமையான கற்பனை! சரியான செய்திக்கு பார்க்க இந்த நூல் ஆசிரியரது ''விடுதலைப் போரில் சேதுபதி மன்னர்'' (1987)*

பக்கம் 92

''... நாட்டைவிட்டு திண்டுக்கல்லில் தங்கி இருக்கும் ராணி வேலு நாச்சியாரிடம் நாட்டை ஒப்படைக்க முடிவு செய்தான் (நவாப்). வீராங்கனை வேலு நாச்சியாரை வரவழைத்து சிவகங்கைச் சீமையை

அவரிடம் ஒப்படைத்தனர்.''

*''ஆட்சிப் பொறுப்பை ஒப்படைத்துவிட்டு துறவற வாழ்க்கையை மேற்கொள்ள முடிவு கட்டினார். மருதிருவரை அழைத்து வரச் செய்தார்... வாளை பெரிய மருதுவிடமும், முத்திரை மோதிரத்தை சின்ன மருதுவிடமும் ஒப்படைத்தாள். அரசியல் வாழ்வில் இருந்து ஒதுங்கிக் கொண்டார்.'' (வேலு நாச்சியார்)*

*மிக அருமையான புதிய கண்டுபிடிப்பு. ஆசிரியருக்கு இந்தச் செய்திகள் எங்கிருந்து கிடைத்ததோ! நல்ல பகல் நேரத்து உறக்கத்தில் உதயமாகி இருக்க வேண்டும்.*

பக்கம் 127

''.... சசிவர்ணத் தேவர் வழிவந்தவரே மருது பாண்டியர் என்பதற்கும் அவர்கள் சீமையை ஆளும் உரிமையைப் பெற்றுள்ளனர் என்பதற்கான ஆதாரத்தைக் காட்டும்படி (கலெக்டர்) கட்டாயப்படுத்தினான்.''

*இதற்கான ஆதார ஆவணம் எதுவும் இல்லை.*

பக்கம் 147

''.... வேலுநாச்சியாருக்கு நேரிடையான வாரிசுகளில் யாரையேனும் ஒருவரை மருது சகோதரர்கள் தேர்ந்தெடுத்து இருக்கலாமல்லவா?''

*வேலு நாச்சியாரது மகள் வெள்ளச்சியை மணந்த சக்கந்தி வேங்கன் பெரிய உடையாத் தேவரைப் பற்றி ஆசிரியர் அறிந்து இருக்கவில்லை எனத் தெரிகிறது!*

## 5. சுதந்திர பூமியில் வெள்ளை நாரைகள் (1986)

*ஆசிரியர்: கோவி.மணிசேகரன்*
*வெளியீடு: வானதி பதிப்பகம், சென்னை-17.*

ஒரு காட்சி

மறக்குலத்துப் பெண் ஒருத்தி அதிலும் அரச மரபைச் சேர்ந்தவள். குதிரைச் சவ்வாரி செய்யும்பொழுது அவளது குதிரை மிரண்டு காட்டுக்குள் ஓடுகிறது. இதனை எதிர்பார்த்து இருநதவனைப் போன்ற ஒரு முரட்டு இளைஞன் ஒருவன் வழியில் இருந்த ஒரு மரத்தின் மேலிருந்தவாறு அவளை பற்றி தூக்கி காப்பாற்றுகிறான். இருவரும் காதல் கொள்கின்றனர்.

அவனை தனது அரண்மனைக்கு அழைத்துச் சென்று தனி அறையில் தங்குமாறு செய்கிறாள். அவனிடம் வாய் பயிற்சியும் வளரிப் பயிற்சியும் பெறுவதற்காக! அழகுமிக்க அந்த அறையில் விரிக்கப்பட்ட இரத்தின

கம்பளத்திற்கு மேல் உள்ள பெரிய கட்டில் அதில் தடித்த பஞ்சு மெத்தைகள், இருக்கைகள் - இவைகளை கூர்ந்து கவனிக்கும் அவனைப் பார்த்து, ''எதற்கும் அவசரம் கூடாது'' என்று சொல்லி பொறுமையாக இருக்குமாறு அவள் புத்திமதி சொல்கிறாள்.

கொய்யாத பழமான அவளை விரும்புவதாக அவன் சொன்னதற்கு அவள் ''எதற்கும் ஒரு காலம் இருக்கிறது'' என்று சொல்லி காத்திருக்கப் பணிக்கிறாள். காத்திருக்கலாம் என்பதற்கு என்ன அத்தாட்சி என அவன் கேட்கிறான். தனது ஒற்றைக் கல் மோதிரத்தை அவனது விரலில் அணிந்து அதனை அத்தாட்சியாக கொள்ளுமாறு சொல்கிறாள் அவள்.

## இன்னுமொரு காட்சி

சிவகங்கை அரண்மனையில் ஒரு இரவு கூத்து நடக்கிறது. அதனைப் பார்த்து பொறுமை இழந்த அந்தக் கன்னிகை இடையில் எழுந்து அவளது அரண்மனையில் மாடியிலுள்ள தனியறைக்கு செல்லுகிறாள்.

தனது ஆபரணங்களை கழற்றி ஒரு பேழையில் வைத்துவிட்டு பொன் வேய்ந்த இரவிக்கையை களைந்தாள். உள்ளே இறுக்கமாக இருந்த கச்சினை கழற்றியெறிந்துவிட்டு இடுப்பில் பாவாடை போன்ற சுற்றி இருந்த துணியை தளர்த்திவிட்டாள். அதுவும் கூட அவளுக்கு பளுவாகவும் சங்கடமாகவும் இருந்தது போலும். அதனையும் அவிழ்த்துப் போட்டாள். ஆடைதாங்கியில் இருந்த மெல்லிய சேலையை எடுக்கப் போனாள். அப்பொழுது அவளது கட்டிலின் கீழ் ஒளிந்து இருந்த வெள்ளை மருது வெளியில் வந்தான். நிர்வாணமாக இருந்த தன்னுடைய கட்டுக்கோப்பான உடலை மெல்லிய துணி கொண்டு மறைக்க படாதபாடுபட்டாள். அலங்கோலமாக வாரிச் சுருட்டிப் போர்த்தி உடலை மறைக்க முனைந்தாள்.

''ஏன் இந்த சிரமம் நான்தானே இருக்கிறேன், வேறு யார் இருக்கிறார்கள்?'' அந்த இளைஞனது கேள்வி. அரண்டு மிரண்டு போன வேலுநாச்சியின் உடலோடு ஒட்டியிருக்கும் சேலை நழுவி விழுந்ததை எடுத்து தனது கரத்தால் அவள் மீது போட்டோன். அப்போது அவனது முரட்டு விரல்கள், அவளது கவர்ச்சியான அங்கங்கள் மீது பட்டு மின்னல் உணர்வை தூண்டி ஒரு கணம் சிலிர்க்க வைத்தது. அவள் நாணத்தால் தலைகுனிந்த வண்ணம் ''இது மாளிகை கீழே காவல் வீரர்கள் காத்து இருக்கிறார்கள், மெதுவாகப் பேசுங்கள்'' என்றாள்.

## மற்றும் ஒரு காட்சி

இரவு அந்தகாரத்தில் ஆழ்ந்து கிடந்தது. குகையில் இரண்டு தீப்பந்தங்கள் செவ்விய ஒளியைப் பரப்பிக் கொண்டிருந்தன. எழுந்து

சென்ற அந்த மனிதன் வான்வெளியை அண்ணாந்து நோக்கினான். இன்றும் நிலவு உதயமாகவில்லை.

அந்த பெண்மணி உறங்கிக் கொண்டிருந்த குகையை நாடிச் சென்றான். அவள் கோரிக்கையற்று கிடக்கும் வேரில் பழுத்த பலாவாகக் காட்சி அளித்தாள். அதனை சுவைத்தால் என்னயென்று எண்ணம் அவனுக்கு தோன்றியது.

மேலாடை விலகியிருந்தது. கணுக்காலுக்குக் கீழே ஆடையில்லை. அயர்ந்த தூக்கம். பூந்தனங்கள் கொழிப்புடன் கோபுரக் கலசம் போல காட்சி அளித்தன. அன்றோரு நாள் இரவு அவன் கண்ட அவளது பிறந்த மேனிக் காட்சி நினைவுக்கு வந்தது. நாவில் இப்போது நீர் ஊறியது. ஒருவித வேகச் சுழிப்புடன் உள்ளே நுழைந்து அவளது திரண்ட தோள்களைப் பற்றிக் குலுக்கினான்.

திருதிருவென்று விழித்த அவளுக்கு உண்மை புரிந்து விட்டது. ''இப்பொழுது உங்களுக்கு என்ன தேவை?'' - அவள்.

''நீ'' - அவன்.

''இப்போதே தேவையா?'' - அவள்.

''ஆம்'' - அவன்.

''சுதந்திர ஒளி - தமிழ் ஒளி இந்த நாட்டில் படரட்டும் - படரவிட முயற்சி செய்யுங்கள். அப்போது நான் உங்கள் மடியில் தலை வைத்து தூங்குவேன்'' - அவளுடைய பதில்.

*இங்கே சுட்டப் பெற்ற இந்த மூன்று காட்சிகளையும் படித்துப் பார்த்த வாசகர்கள், இதனை ஏதோ ஹாலிவுட் திரைப்படத் தொகுப்பாகத்தான் கருதுவார்கள். ஆனால் இது ஒரு சிறந்த தமிழ்ப் புதினப் படைப்பாளர் ஒருவரது படைப்பில் இருந்து தொகுக்கப்பட்டது என்பதை தெரிவித்துக் கொள்கிறோம். ஆம். திரு. கோவி.மணிசேகரன் என்பவரால் எழுதப்பெற்று சென்னை வானதி பதிப்பகத்தினரால் 1986-ல் வெளியிடப் பெற்ற ''சுதந்திர பூமியில் வெள்ளை நாரைகள்'' (ராணி வேலு நாச்சியார்) என்ற நூல்தான் அந்தப் புதினம்.*

*இன்னும் ஒரு முக்கியமான செய்தி மறந்துவிடக் கூடாத செய்தி, மேலே கண்ட காட்சிகளிலும் நாம் காண்கின்ற கதாபாத்திரங்கள் - இளைஞன் வெள்ளை மருது என்ற பெரிய மருது சேர்வைகாரர், ராணி வேலுநாச்சியார். ஆம். சந்தேகமே இல்லை. சிவகங்கை சீமையில் சுதந்திர முழக்கமிட்ட சிம்மங்கள். ஏன்? இந்திய விடுதலை இயக்கத்தின் இணையற்ற தியாகிகள்; வெள்ளை ஏகாதிபத்தியத்தின் வெடிமருந்து பேராண்மை வெடித்து சிதறி சின்னாபின்னமாகும்படி மக்களின் அசுர*

பலத்தை திரட்டி நாடெங்கும் புரட்சித் தீயைப் புடம் போட்டுக் கொளுத்தியவர்கள். இத்தகைய இணையற்ற உத்தமர்களின் ஓவியத்தை இதைவிட தமிழில் சித்தரிக்க முடியாது. தாய் நாட்டுப் பற்றும் வரலாற்று உணர்வும் தேங்கியுள்ள இதயங்கள் இந்தக் காட்சிகளை எளிதில் ஜீரணிப்பது என்பது இயலாத ஒன்று.

இவைகளை இரசித்துப் படித்த சில அப்பாவி உள்ளங்கள் இந்த நூல் வரலாற்று நூல் அல்ல, புதினந்தானே என் வாயடைக்க முயலுகின்றனர். இது புதினம் என்பதை யாரும் மறுக்க மாட்டார்கள். ஆனால் இதில் புகுத்தப்பட்டவர்கள் சிவகங்கை சீமையின் வரலாற்று நாயகர்கள் என்பதை யாரும் மறுக்க முடியாது. ஏற்கனவே இந்தப் பேரண்மைமிக்க பெருமக்களது வரலாற்றை படித்து அறிந்தவர்கள், இந்த நூலைப் படித்து இந்தக் காட்சிகளைக் காணும்பொழுது அவர்களது கற்பனைகளில் அற்புத மனிதர்களாக, சமுதாய விடிவெள்ளிகளாக வாழ்ந்து வருகிறவர்களை இவ்வளவு இழிந்த உள்ளத்தினரா என்று எண்ணி நெகிழ மாட்டார்களா? சிவகங்கை மன்னர் முத்து வடுகநாதரது ராணி வேலு நாச்சியாருக்கும், பெரிய மருது சேர்வைக்காரருக்கும் இப்படியொரு கள்ளத் தொடர்பு இருந்ததை எந்த வரலாற்று ஆவணத்திலும் குறிக்கப்பட்டு இருக்கிறதா? என்று வரலாற்று ஆவணங்களைத் தேடி அலுத்துப் போய் ஆறுதலடைபவர்கள் எத்தனை பேர்? இறுதியில் இவை அனைத்தும் இந்தப் புதின ஆசிரியரது நொந்து அழுகிய ஆபாச கற்பனைகளே என ஓர்ந்து உள்ளம் அமைதி கொள்பவர் எத்தனை பேர்?

இன்னொரு கோணத்திலும் இந்தப் புதினக் காட்சிகளைப் பார்ப்போம். இந்தக் கதாபாத்திரங்கள் வரலாற்று நாயகர்கள் என்பதை மறந்துவிட்டு சாதாரண புதினப் பாத்திரங்களாக எடுத்துக் கொள்வோம். அப்பொழுதும்கூட இந்த இரு கதாபாத்திரங்களும் சமுதாயத்தினின்றும் பெரிதும் வித்தியாசமானவர்களாக தமிழக பாரம்பரியத்திற்கும் பண்பாட்டிற்கும் அப்பாற்பட்டவர்களாக காட்சியளிக்கின்றனர்.

வேலுநாச்சியாரிடம் காதல் வசப்பட்ட பின்னர் பெரிய மருது சேர்வைக்காரர் கவுண்டன் கோட்டை எந்த ஊரைச் சேரந்த இள மங்கையையும் அடுத்து முக்குளம் என்ற ஊரைச் சேர்ந்த ராக்காத்தாள் என்ற பெண்ணையும் மணம் செய்து கொள்கிறார். அப்படி இருந்தும் இந்தப் பெரிய மனிதரது ஆசைக்கு அளவில்லாமல் போய்விட்டது. வேரில் பழுத்த பலாவாக விளங்கிய வேலுநாச்சியார் மீதான ''காதல்'' மீக்கூர அவளது தோள்களைப் பற்றி தனது இன்ப நினைப்பை எடுத்துச் சொல்கிறார். அதற்கு வேலுநாச்சியாரும் மறுப்புச் சொல்லாமல் தவணை சொல்கிறாள். அரச குலத்தைச் சேர்ந்த, பிற பெண்களுக்கு வழிகாட்டியான வேலுநாச்சியாரின் பதில் விபரீதமாக இருக்கிறது? ''பெண்ணின் பெருந்தக்கயாவுள'' என வினவிய வள்ளுவர் வரைந்துள்ள இல்லக் கழத்தியா இந்தப் பெண் என எண்ணத் தோன்றுகிறது.

ஒருவனுக்கு ஒருத்தி என்ற உயர் பண்பினை, உள்ளப் பாங்கினை சங்க காலத்தில் இருந்து உயிர் மூச்சாகக் கொண்டுள்ள தமிழ் குலத்தின் பிரதிநிதிகளா இந்த இருவரும்! நிச்சயமாக இருக்க முடியாது. ஆம். அப்படித்தான் இந்தப் புதின நூலாசிரியரது எழுத்துக்கள் இந்தப் பத்திரங்களின் உள்ளக் கிடக்கையாக இந்தப் புதினத்தில் உருப்பெற்றுள்ளன. தமிழ் மக்களுக்கும், தமிழரது பண்பாட்டிற்கும் தீராத களங்கத்தை ஏற்படுத்தியதுடன் சிவகங்கை வரலாற்றையும் தடம் புரளச் செய்துள்ளன, இந்த இழிவு சேர்த்த எழுத்துக்கள்.

வரலாற்றுக்கு முரணான இன்னும் சில எழுத்துக்கள் கீழே கொடுக்கப்பட்டுள்ளன.

பக்கம் 66

''சிவகங்கையின் அரசர் முத்து வடுகநாத உடையாத் தேவர், மனைவியின் பிரிவாற்றாமையால் மனங்கலங்கி காணப்படுகிறார்.''

பக்கம் 69

''அதற்காக நான் கிழவரையா மணப்பது?'' - வேலுநாச்சியாரது வினா!

பக்கம் 74

''இளமை கொழிக்கும் வேலுநாச்சி, முதுமையின் தளர்ச்சிக் கதவங்களைத் தட்டிக் கொண்டிருக்கும் முத்து வடுகநாதரை மணக்க ஒப்புக் கொண்டது...''

மன்னர் முத்து வடுகநாதரது முதல் மனைவியின் பெயரை குறிப்பிடவில்லை. அவர் எப்பொழுது இறந்தார் என்பதோ அப்பொழுது மன்னருக்கு வயது என்ன என்பதும் தெரிவிக்கப்படவில்லை. ஆனால் சென்னை உயர்நீதிமன்ற ஆவணம் ஒன்றின்படி மன்னர் 1736-ல் பிறந்தார், 25.6.1772-ல் நடைபெற்ற காளையார் கோவில் போரில் தியாகியானார். மொத்தம் அவரது வாழ்நாள் 36 ஆண்டுகள். அவருக்கு ஒரே மனைவி ராணி வேலுநாச்சியார். இவருக்கு முன்னாள் எந்த நாச்சியாரை மணந்தார். எப்பொழுது அந்தப் பெண்மணி மரணமுற்றார் என்ற செய்திகளை எங்கிருந்து பெற்றார் என்பது தெரியவில்லை.

பக்கம் 70

''......இராமநாதபுரத்து இளவரசர் கோழையா?'' (வேலுநாச்சியார்)

''கோழையல்ல கயமை நிரம்பியவன். அவன் பேடியைவிடக் கேவலமானவன்...'' (வீரத்தேவர்)

இங்கு குறிப்பிடப்பெறும் இராமநாதபுரம் மன்னர் செல்லமுத்துச் சேதுபதி, கி.பி.1749-62 வரை ஆட்சி செய்தவர். இவரைப் பற்றி இவ்வளவு மோசமாக இந்த நூலாசிரியர் ஏன் எழுதினார் என்பது தெரியவில்லை.

*அறியாமையை ஆயுதமாகக் கொண்டு, எதைப் பற்றியும் எப்படியும் எழுதுவது என்பது நல்ல எழுத்தாளனது பண்பாகாது.*

*இந்த மன்னரது சாதனைகளாக வரலாற்றில் பல நிகழ்ச்சிகள் உள்ளன.*

*கி.பி.1891-ல் வெளியிடப்பட்ட* "Manual of Ramnad Samasthanam" *என்ற நூலின் பக்கங்கள் 241/43 பார்த்தால் இந்த மன்னர் மிகப்பெரிய வெற்றி வீரன், தஞ்சை மராத்தியப் படைகளையும், மைசூர் தளபதியையும், டச்சுக்காரரது கப்பற்படை மிரட்டலையும், சிறப்பாக சமாளித்தவர் என்பதும் பல அறக்கொடைகளுக்கும் நாயகர் என்பதையும் அறியலாம்.*

பக்கம் 100

> "கான் சாகிப் கேட்டனுப்பிய கப்பத்தைத் தாங்கள் கட்டியாய் விட்டதா?" "சென்ற வாரம்தான் அனுப்பி வைத்தேன்!"

*சேதுபதி மன்னர்கள் யாருக்கும் கப்பம் செலுத்தாதவர்கள் என்பதுதான் சென்னையில் உள்ள ஆங்கில கிழக்கிந்திய கம்பெனியரது ஆய்வுக்குழுவின் முடிவு. அத்துடன் சேதுபதி சீமை உள்ளிட்ட மதுரைச் சீமை கி.பி.1801 வரை ஆற்காட்டு நவாபுக்கு கட்டுப்பட்டு இருந்தது. மதுரை ஆளுநராக இருந்த கம்மாந்தன் கான் சாகிபு செல்லமுத்துத் தேவருடன் நல்ல உறவுகளைக் கொண்டு இருந்தார். செல்லமுத்து சேதுபதி மதுரைக் கான் சாகிபுக்கு கப்பம் செலுத்தினார் என்று குறிப்பிட்டு இருப்பது வரலாற்றுக்கு முரணான பொய்ச் செய்தி.*

(*பார்க்க:* Yousuff Khan, the Rebel Commandant by S.C.Hill (1932) History of Pudukottai P.241)

பக்கம் 349

> "அமைச்சரே! இக்கணம் முதல் நமது பெரிய மருதுவை மகா சேனாதிபதியாக நியமிக்கிறேன்."

*வெள்ளை மருதுவும் அவரது சகோதரரும் மன்னர் முத்து வடுகநாதர் ஆட்சிக் காலம் வரை அவரியம் அடைப்பம் பணியில்தான் இருந்து வந்தனர் (25.6.1772 வரை) கி.பி.1780-ல் ராணி வேலுநாச்சியார் சிவகங்கையை மீட்டிய பொழுதுதான் இந்த சகோதரர்களை சிவகங்கை பிரதானிகளாக நியமித்தார் என்பது வரலாறு.*

*(பார்க்க: மாவீரர் மருதுபாண்டியர் (1989)*

பக்கம்: 362-364

> "சேது நாட்டை அடைந்தன
> தஞ்சைப் படைகள்......."
>
> "காளையார் கோயிலிலிருந்து மறவர்

படைகள் புறப்பட்டன......''

''அருகே சேது நாட்டில் தாமோதரப்
பிள்ளை, படை கொண்டு எதிர்க்கச் செய்தார்.....''

''தஞ்சை வேந்தனைச் சிதறியடித்து
ஓட ஓட விரட்டின........''

இந்த நிகழ்ச்சியை இது தொடர்புடைய செய்திகளைப் பார்க்கும்பொழுது, நூலாசிரியர் கி.பி. 1754-ல் அனுமந்தக்குடி மீதான தஞ்சைத் தளபதியின் படையெடுப்புடன் கி.பி.1771-ல் இராமநாதபுரம் மீது தஞ்சை மன்னர் தொகுத்த படை எடுப்புடன் குழப்பிக் கொண்டுள்ளார் என்பது தெளிவாக தெரிய வருகிறது.

இந்தப் போரில், இராமநாதபுரம் கோட்டை மீதான முற்றுகை நாற்பது நாட்களுக்கு மேலாக நடைபெற்றாலும் தஞ்சைக்கு வெற்றி கிட்டவில்லை. ஆதலால் இராமநாதபுரம் ராணியுடன் உடன்பாடு கண்டு திரும்பினார் என்பது வரலாறு.

(பார்க்க: Dr. K.Rajayyan - History of Madura) ஆதலால் இங்கு நூலாசிரியர் குறிப்பிட்டிருப்பது போல தஞ்சை மன்னர் புறமுதுகிட்டு ஓடவில்லை. அவரது உடலிலும் பலத்த காயங்கள் ஏற்படவில்லை. ஆனால் அவர் சிவகங்கை மீது படையெடுத்தபோது, ஆற்காட்டு நவாப்பினால் தஞ்சைக்கு அபாயம் ஏற்பட்டதால், திட்டத்தை கைவிட்டு தஞ்சை திரும்பினார். இதுதான் வரலாறு.

பக்கம்: 405-408

''1772 ஆம் ஆண்டு மே மாதம்......''

''12, 18 பவுண்டு எடையுள்ள குண்டுகள் தேவைப்பட்டன. அந்த இராமநாதபுரத்துச் சிறு கோட்டையைத் தாக்க!! அதன்பின் கோட்டை தகர்ந்தது. இப்படியாகச் சில நாள் முற்றுகை...''

''பெரியசாமி.... அமைச்சர் தாமோதரம் பிள்ளையைக் காணச் சென்றான்...''

''சற்றும் எதிர்பாராத வகையில் துரோகி பெரியசாமி, கட்டாரியுடன் தாமோதரப் பிள்ளையின் மீது பாய்ந்து கொலை செய்து விட்டான்.''

''......இளவரசன் இராமலிங்க சேதுபதி,
....... கட்டாரியை எடுத்துக் குறி பார்த்து எறிந்தான்... புழுவாய்
துடித்துத் தரையில் சாய்ந்தான் துரோகி பெரியசாமி.''

இந்த நிகழ்ச்சி முழுமையும் கற்பனையானது. இராமநாதபுரம் அமைச்சர்

தாமோதரம்பிள்ளை கி.பி.1772-ல் ஆற்காடு - கும்பெனி படையெடுப்பின்போது உயிருடன் இல்லை. அதற்கு முன்னரே இறந்துவிட்டார். இந்தப் படையெடுப்பின்பொழுது ராணி முத்து திருவாபி நாச்சியாருடன் இருந்த சமரசப் பேச்சில் கலந்து கொண்ட அமைச்சர் பிச்சைபிளளை, பேச்சுக்கள் தோல்வியுற்ற பிறகு தான் பரங்கியரின் இராமநாதபுரம் மீதான கோட்டைத் தாக்குதல் 1.6.1772, 2.6.1772 இரு நாட்கள் மட்டும். (பார்க்க: Major Vibart - History of Madras Engineers and Pioneers.)

பக்கம் 414

> ''ஓ வேலுநாச்சி... சிம்ம சொப்பனமாக உச்சரித்தனர்! ராணி வேலுநாச்சியின் வீரப் போர்க் காட்சி, கண்டோர் நெஞ்சில் கனலைப் பரப்பியது!''

> ''மறுநாள் மீண்டும் போர் தொடங்கியது... இப்படியாகச் சில தினங்கள் வரை போர் முடிவற்று நடந்து கொண்டே இருந்தது''

நூலாசிரியரது சிறந்த கற்பனைக்கு இந்த எழுத்துக்களும் நல்ல எடுத்துக்காட்டு! இந்தக் காளையார் கோயில் கோட்டைப் போர் பற்றிய கும்பெனியாரது ஆவணங்கள் முழுமையாகவும், தெளிவாகவும் உள்ளன. சென்னை தமிழ்நாடு ஆவணக் காப்பகத்தில், 25.6.1772 நடைபெற்ற காளையார் கோயில் போர் ஒரு நாளில் முடிவடைந்தது. மன்னர் முத்து வடுகநாதருடைய தியாகத்துடன்! இந்தப் போரில் ராணி வேலு நாச்சியாருக்கு எந்தப் பங்கும் இல்லை. அண்மைக் கால வரலாற்றை தமது இஷ்டம் போல கற்பனைக் காட்சியாகத் திரித்து மறைத்து எழுதுவது மன்னிக்க முடியாத குற்றம். (பார்க்க: தமிழ்நாடு ஆவணக் காப்பக ஆவணங்கள் - Military Consultations Vol. 42/26.6.1772/pp 414-607)

பக்கம்: 423-426

> ''காளையார் கோயிலுக்கு மேற்கே மூன்று கல் தொலைவிலிருக்கும். 'சுப்புணி சவுக்கு' என்று அந்நாளையில் விளங்கிய சவுக்குத் தோப்பை அடைந்தனர்...''

> ''மறுநாள் அவர்கள் அனைவரும் மதுரையை அடைந்தனர்... ஏறத்தாழ மூன்று மாத காலம் இப்படியாகக் கழிந்தது''

> ''எப்படியோ இரண்டாண்டு காலமாக அவர்கள் தலைமறைவாக வாழ்ந்தனர்.''

நூலாசிரியர் அளித்துள்ள இந்தப் புதுமையான நிகழ்ச்சிகளும் எந்த வரலாற்று ஆவணங்களிலும் காணப்படாதவை. நூலாசிரியருக்கு

வளமான கற்பனைகளை சுகமான எழுத்துக்களில் சுதந்திரமாக வடித்துள்ளார்.

காளையார் கோவில் போர் முடிவிற்குப் பின்னர், அமைச்சர் தாண்டவராயபிள்ளை, ராணியாரையும் அவரது குழந்தையையும், காப்பாற்றும் பொருட்டு மைசூர் மன்னர் ஹைதர் அலிக்குச் சொந்தமான திண்டுக்கல் சீமையில் விருபாச்சியில் பத்திரமாக இருக்கச் செய்துவிட்டு சிவகங்கைச் சீமையில் ஆற்காடு நவாப்பிற்கு எதிராக மக்களைக் கிளர்ச்சிகளுக்கு ஊக்குவித்து வந்தார் என்பதும், கி.பி.1772-ல் அவரது மறைவிற்குப் பின்னர் ராணி வேலுநாச்சியார் இந்தப் பொறுப்பை மேற்சொன்னவாறு எட்டு ஆண்டுகள் கழித்து மைசூர் மன்னர் ஹைதர் அலியின் இராணுவ உதவி பெற்று கி.பி.1780-ல் சிவகங்கைச் சீமையில் ஆற்காடு நவாப்பின் ஆக்கிரமிப்பில் இருந்து மீட்டார் என்பதுதான் உண்மையான வரலாறு.

இவ்வித உண்மையான வரலாற்றை கற்பனை நயங்கள், உத்திகள் வழி, மக்களுக்குத் தெளிவாக வழங்கும் புதினத்தை படைப்பதற்குப் பதில் எடுத்துக் கொண்ட வரலாற்று நிகழ்ச்சிகளை திரித்து புரட்டி, புனைந்து வரையும் வழக்கத்தை சில நூலாசிரியர்கள் செய்து வருகின்றனர். சுயநலத்திற்காக பணம் புரட்ட, எளிதில் பேரும் புகழும் பெற அதற்கு பாலியல் என்ற நஞ்சை படிப்பாளிகள் இதயங்களில் பக்குவமாக பறிமாறும் கைவந்த கலையும் அவர்கள் கற்று வளர்த்து வந்து இருப்பதும் பிரதான காரணமாகும்.

இதன்வழி, தமிழ் புதின இலக்கியங்கள் ஏனைய இந்திய மொழிகளின் புதினங்களைப் போல அனைத்து இந்திய அளவில் குறிப்பாக மலையாளம், வங்கம், அஸ்ஸாம் மொழிகளின் படைப்புகளைப் போல படிப்பாளிகளது உள்ளங்களை கவர முடியாத முடங்களாகி வருகின்றன. அமரர் அகிலனுக்குப் பிறகு தமிழ் எழுத்தாளர் யாரும் ''ஞானபீட'' பரிசினைப் பெற இயலாததற்கும் இதுவே காரணமாகும்.

எதிர்காலத்தில் வழிகாட்டியான உண்மை வரலாற்றை சமுதாய உணர்வுடன் பொறுப்பாக புதினத்தின் வழி மக்களிடம் புகுத்தும் பணியை இந்த நூலாசிரியர் மேற்கொள்ளத் தவறிவிட்டார் என்பது இவரது எழுத்துக்களில் இருந்து காணக்கூடியதாக உள்ளது. ஆனைக்கு அடி சறுக்குவது இயல்புதானே!

## 6. மருது பாண்டிய மன்னர்கள் (1994)

ஆசிரியர்: திரு. மீ.மனோகரன்
வெளியீடு: அன்னம் பதிப்பகம், சிவகங்கை

நூல் தலைப்பைப் படித்தவுடன் இப்படியும் மன்னர்கள் சிவகங்கைச் சீமையில் இருந்தனரா என்ற வினாவை எழுப்பும் வகையில் நூலின் தலைப்பு மட்டும் அமைக்கப்படவில்லை. நூல் முழுவதும் மருதிருவர்

சிவகங்கைச் சீமை மன்னர்களாக இருந்தனர் என்பதை நிலை நாட்டுவதற்காகவே, இந்த நூல் எழுதப்பட்டுள்ளது. சிவகங்கை அம்மானையும் சிவகங்கைச் சீமைக் கும்மியும், மருது பாண்டியர்களுக்கு இலக்கிய வழக்காக துரை, வேந்தர், மன்னர், ராஜன் என்று சிறப்பு அடைகளைப் பயன்படுத்தி இருப்பதை உண்மையென உரைக்க முற்படும் இந்த நூல் அந்த இரண்டு நாடோடி இலக்கியங்களையே பெரிதும் சார்ந்து வரையப்பெற்று இருப்பதுடன் நாடோடி இலக்கியம் என்ற வகையில் அவைகளில் மிகைப்படுத்தி இட்டுக்கட்டி சொல்லப்பட்ட செய்திகளை, உண்மை வரலாறாக வரைந்துள்ள இந்த நூலின் சில பகுதிகளை இங்கு பார்ப்போம்.

இந்த நூலின் தொடக்கத்தில் சிவகங்கைச் சிம்மாசனம் என ஒரு ஒளிப்படம் அச்சிடப்பட்டுள்ளது. அதன் கீழே ''இந்த சிம்மாசனத்தை அடையத்தான் கௌரி வல்லவர் ஆங்கிலேயர் அணியில் சேர்ந்தார்'' என்று வரையப்பட்டுள்ளது.

வாசகப் பெருமக்கள் அந்தப் படத்தை உற்றுப் பார்த்தால் உண்மையிலேயே இந்த சிம்மாசனம் சிவகங்கைத் தன்னரசு மன்னர்களுடையது தானா என்பது விளங்கும். இப்பொழுது பாருங்கள். சிம்மாசனத்தின் உச்சியில் ஒரு கிரீடத்தின் உருவம் காணப்படுகிறது. இது நமது நாட்டு மன்னர்கள் சூடிக் கொள்ளும் முடி போன்றது இல்லையல்லவா?

அடுத்து, அந்தச் சிம்மாசனத்தின் மேல்பகுதியின் இரு பக்கங்களிலும் முறையே சிங்கம், குதிரை ஆகியவைகள் அமர்ந்த நிலையில் இதுவும் நமது நாட்டு பாணி இல்லை தானே.'

அடுத்து, மன்னரது இருக்கையின் பின்புறம் மேல் பகுதியில் பூ வேலைப்பாடுகளுக்கு மத்தியில் ஒரு கேடயம் போன்ற உருவம் இதைப் பற்றியவாறு இருபுறமும் மீண்டும் சிங்கமும் குதிரையும் அமர்ந்த நிலையில். கேடயம் போன்ற நடுப்பகுதி உருவத்தில் ஒரு சிலுவை உருவம், அந்தக் கேடயத்தின் மீது ஒரு சிங்க உருவம். இப்பொழுது சிந்தித்துப் பாருங்கள். இத்தகைய சிம்மாசனத்தின் மீது அமர்ந்தா சிவகங்கை மன்னர்கள் ஆட்சி செலுத்தினர். இல்லவே இல்லை. இந்த சிம்மாசனத்தில் அமைப்பு, கிரீடம், சிங்க, குதிரை உருவங்கள் கேடயத்தில் காணப்படும் கிறித்தவரது சிலுவை உருவம் இவையனைத்தும் இங்கிலாந்து மன்னர்களது அரசு இலச்சினையாகும். கி.பி.1921-ல் இந்தியாவிற்கு வருகை தந்த இங்கிலாந்து நாட்டு வேல்ஸ் இளவரசருக்கு சென்னை மெமோரியல் ஹாலில் சென்னை நகரப் பெருமக்கள் சார்பாக வரவேற்பு அளிக்கும் பொருட்டு இளவரசருக்காக புதிதாக அமைக்கப்பட்டது, இந்த போலி சிம்மாசனம். விழா முடிந்தவுடன் சம்பந்தப்பட்ட சாமான்களை ஏலத்துக்கு விட்டு

விற்றபொழுது, இந்தப் போலி சிம்மாசனத்தை அப்பொழுது சென்னையில் இருந்த சிவகங்கை ஜமீன்தார் திரு. துரைசிங்கத் தேவர் அவர்கள் வாங்கி வந்து அரண்மனையில் வைத்து இருந்தார். அதனை 1978-ல் இராமநாதபுரம் மாவட்டக் கலெக்டர் திரு. நாராயணன் ஐ.ஏ.எஸ். பெற்று, இராமநாதபுரம் அரசு அருங்காட்சியகத்தில் சேர்த்தார்.

இவ்விதம் நூலின் தொடக்கமே, உண்மைக்கு மாறாகத் தடம் புரண்டது போல இந்த நூலின் பல நிகழ்ச்சிகளும் வரலாற்றுக்கு முரணான பார்வையில் வழிமாறி இருப்பதைப் பார்க்கலாம்.

பொதுவாக வரலாற்றுச் சான்றுகள், நேர்முகத் தடயங்கள் இல்லாத நிலையில், கோயில் ஒழுகு தலபுராணம், இலக்கியங்கள் ஆகியவைகளில் குறிக்கப் பெற்றுள்ள செய்திகளை அவைகளின் உண்மைத் தன்மைகளை ஆய்ந்துணர்ந்த பிறகு அவைகளை வரலாற்றின் கூறுகளாக நம்பத்தக்கதாகக் கொள்ளலாம் என்பதே வரலாற்று வல்லுனர்களது முடிவு. பேராசிரியர் திரு. நா.வானமாமலை அவர்கள் இந்த பொருள்பற்றி கொடுத்துள்ள எச்சரிக்கையை இங்கு குறிப்பிடுதல் பொருத்தமானதாகும்.

''... இந்தப் பாடல்களைக் கொண்டு மட்டும் சரித்திர நிகழ்ச்சிகளை நாம் உறுதியாக அறிந்து கொள்ள முடியாது. இவற்றை ஒதுக்கித் தள்ளிவிட்டும் உண்மையான நிகழ்ச்சிகளை அறிந்து கொள்ளவும் இயலாது. கிடைக்கும் சரித்திர சான்றுகளையும், நாட்டுப்பாடல்களையும், உற்று நோக்கி உண்மைகளைச் சரி பார்த்து முடிவுக்கு வரவேண்டும்.''

தமிழகத்தின் தொன்மைக்கால, பிற்கால வரலாற்றினை தெரிந்து கொள்ள இலக்கியங்கள், கல்வெட்டுப் பதிவுகள், செப்பேடுகள், ஓலைமுறிகள், கோயில் ஒழுகுகள், வெளிநாட்டுப் பயணிகளது பயணக் குறிப்புகள் ஆகியன துணை புரிகின்றன. ஆனால் அண்மைக்காலமாகிய பதினெட்டு, பத்தொன்பதாவது நூற்றாண்டு நிகழ்வுகளைப் புரிந்து கொள்வதற்கான நம்மவர்களது ஆவணங்கள் மிகக் குறைவு. இராமநாதபுரம், சிவகங்கை சமஸ்தான ஆவணங்கள், மதுரை மிஷன் ஆவணங்கள், சிங்கம்பட்டி, எட்டையாபுரம் ஜமீன் ஆவணங்கள், துபாஷ் ஆனந்தரங்கம் பிள்ளை நாட்குறிப்புகள், சுவார்ட்ஸ் பாதிரியார் குறிப்புகள், ஆற்காட்டு நவாப் ஆவணங்கள், புதுக்கோட்டை தர்பார் ஆவணங்கள், ஆகியவைகளில் ஆற்காட்டு நவாப் ஆவணங்கள் (பார்சி மொழியில் அமைந்தவை) ஆவணக் காப்பகத்தில் பாதுகாக்கப்பட்டு வருவதும் இந்த ஆவணங்களை, இதுவரை ஆங்கிலத்திலோ அல்லது தமிழிலோ மொழியாக்கம் செய்யப்படவில்லை. தொகுதிகளாக பிரிக்கப்பட்டு தொகுதிச் சுருக்கமும் பட்டியலும் தயார் செய்யப்படவில்லை. புதுக்கோட்டை மன்னரது தர்பார் ஆவணங்களும், இதுவரை வரலாற்று ஆய்வாளர்களுக்கு எட்டாக் கனியாகவே இருந்து வருகின்றன.

மற்றும், இராமநாதபுரம், சிவகங்கை சமஸ்தான ஆவணங்களைப் பொறுத்த வரையில், சரியான பராமரிப்பு இல்லாத காரணத்தினால் இவைகளில் மிகப் பெரும்பாலான பயனுள்ள ஆவணங்கள் அழிந்து விட்டன. அல்லது அழிக்கப்பட்டு விட்டன. ஏனைய ஆவணங்களில் கிடைக்கக்கூடிய செய்திகள் வரலாற்றுக்கு பயன்படுவது மிகவும் குறைவு. இந்த நிலையில், தமிழ்நாடு அரசு ஆவணக் காப்பகத்தில் உள்ள ஆங்கில கிழக்கிந்திய கும்பெனியாரது ஆவணங்கள் மட்டுமே அண்மைக்கால தமிழக வரலாற்றுக்கு கை கொடுத்து உதவக்கூடியதாக உள்ளன. இதனை அரிச்சந்திரனின் வாக்கு என ஏற்றுக் கொள்ளலாமா என இந்த நூல் ஆசிரியர் இடித்துரைப்பது எந்த வகையிலும் நியாயமற்றதாகவே தெரிகிறது. காரணம் நூலாசிரியருக்கு தமிழக அரசின் ஆவணக் காப்பகத்தில் உள்ள ஆவணங்களில் ஒரு பகுதியைக் கூட படித்து தெளிவு பெறுவதற்கான வாய்ப்பும் வசதியும் கிட்டவில்லை என்றே தோன்றுகிறது.

பேராசிரியர் கே.இராஜையன் போன்றவர்கள் ஆங்கில ஆதிக்க கால தமிழகத்தைப் பற்றி பல நூல்கள் வரைந்து தமிழக வரலாற்றிற்கு பெருமை சேர்த்து இருக்கிறார்கள் என்றால், அவரது எழுத்துக்களுக்கு முழுவதும் ஆதாரமாக அமைந்துள்ளவை சென்னை ஆவணக் காப்பக ஆவணங்களும் ஆவணக் காப்பக நூலக நூல்களும் தான். அவைகளிலும் கிழக்கிந்தியக் கும்பெனியின் அலுவலர்களாக இருந்த மெக்கன்சி போன்றவர்கள், தங்களது பணியின் பொழுது சென்ற ஊர்களில் கண்டவைகளையும் கேட்டவைகளையும், பிறரைக் கொண்டு வரையச் சொல்லி சேகரித்து வைத்துள்ள எழுத்துச் சுவடிகளும் மேஜர் விபார்ட், கர்னல் வெல்ஷ், ராபர்ட் ஊர்மே, ஆகிய கும்பெனியாரது ராணுவத் தளபதிகள் அவர்கள் போர்ப்பணிகளை மேற்கொண்ட பொழுது, அப்பொழுதைக்கு அப்பொழுது வரைந்து அனுப்பிய விவரமான அறிக்கைகள், தளபதி பானர்மேன், தளபதி புல்லர்டன், தளபதி ரீட், தளபதி வில்சன் ஆகியோரது நீண்ட அறிக்கைகள், மற்றும் கும்பெனிக் கலெக்டராக பணியாற்றிய மக்ளாயிட், லூஷிங்டன், ஹாா்திஸ், மன்றோ ஆகியவர்கள் கும்பெனித் தலைமைக்கு அனுப்பிய கடிதங்கள் ஆகியவை பதினெட்டாவது நூற்றாண்டு தமிழக வரலாற்றை வரைவதற்கு, இன்றியமையாத, தவிர்க்க முடியாத வரலாற்றுத் தடயங்களாகும்.

இவை தவிர, சென்னைக் கோட்டையில் கும்பெனி கவர்னராகப் பணியாற்றிய மக்கர்ட்னி, போன்றோர் கடிதங்களும் தமிழக வரலாற்றிற்குத் துணைபுரியும் ஆவணங்களாகும். இந்த ஆவணங்களில் கண்ட வரலாற்றுச் செய்திகளை ஏற்க மறுப்பதும், இந்த ஆவணங்களை ஆக்கிரமிப்பாளர்களது புனைந்துரையாகக் கொண்டு தீண்டத்தகாதவையாக ஒதுக்கிவிட்டு வரலாறு எழுத முனைவதும் அரங்கின்றி வட்டாடிய விந்தைச் செயலாகத்தான் அமையும். அத்துடன் இது நம்மை நாமே

ஏமாற்றிக் கொள்வதுடன் மற்றவர்களையும் ஏமாற்ற முயல்வதும் ஆகும். இந்த ஆவணங்கள் இல்லையென்றால் நமது நாட்டில் பதினெட்டாவது நூற்றாண்டில் புயல்முகம் கொண்ட மக்கள் கிளர்ச்சிகளையும் அவைகளைத் தலைமை ஏற்று நடத்திய சித்திரங்குடி மயிலப்பன் சேர்வைக்காரர், மீனங்குடி கனக சபாபதித்தேவர், முத்துக் கருப்பத்தேவர், கொளத்தூர் நாகராஜ மணியக்காரர், காடல்குடி கீர்த்தி வீர குஞ்சு நாயக்கர், ராஜசிங்கமங்கலம் குமாரத் தேவர், ஜகந்நாத ஐயன், கமுதி சிங்கன் செட்டி, பாஞ்சை கட்ட பொம்மு நாயக்கர், ஊமைத்துரை, இராமநாதபுரம் முத்து இராமலிங்க சேதுபதி, இன்னும் ஊர் பேர் தெரியாத தியாகிகளான எத்தனையோ ஏகாதிபத்திய எதிர்ப்பு முன்னோடிகளை இனம் கண்டு இருக்க முடியாது. நாட்டுப்பற்றுடன் தியாகிகளான அந்த வீரத் தலைவர்களது நினைவிற்கு அஞ்சலி செலுத்த இயலாத, நன்றி உணர்வு இல்லாத மக்கள் என்று அல்லவா நம்மை எதிர்கால வரலாறு வசைமொழியும் நிலை ஏற்பட்டு இருக்கும்.

இப்பொழுது இந்த நூலாசிரியரது வரலாற்றுக்கு முரணான வரை வினைப் பார்ப்போம்.

பக்கம் 88

> ''மன்னர் முத்து வடுகநாதர் காளையார் கோவில் காட்டுக்கு வேட்டையாடச் சென்றார்... பெரிய ராணி (வேலுநாச்சியார்) கர்ப்பிணியாக இருந்ததால் கொல்லங்குடியில் தங்கச் செய்து, மன்னரையும் இளைய ராணியையும் காளையார் கோவில் அனுப்பி வைத்தனர்.''

பக்கம் 116

> ''திண்டுக்கல், விருபாட்சி செல்லும் பொழுது வெள்ளச்சி பிறக்கவே இல்லை''

சிவகங்கை கும்மி அம்மானைச் செய்திகளைப் பயன்படுத்தி இந்த நூலினை எழுதி ,உள்ள ஆசிரியர், இந்த நூலினுள்ளும் சொல்லாத செய்திகளை இப்படி திரித்துவிட்டு இருக்கிறாரே? அது எப்படி? ஒரு வேளை துர்க்காதாஸ் எஸ்.கே.சாமியின் கண்டுபிடிப்புகளை ஆதாரமாக கொண்டதாகவும் அடிக்குறிப்பு இல்லையே!

''கொல்லங்குடி தன்னில் பெரிய ராணி
குணமுடனே அங்கு இருந்து தொண்டாள்''

*(பக்கம் 117)*

என்று மட்டும்தான் அம்மானை குறிப்பிடுகிறது. அவர் கர்ப்பிணியாக இருந்த விவரம் அம்மானையில் எங்கும் இல்லை. அதைப் போல

*வெள்ளச்சி பற்றிய குறிப்பும் அந்த இலக்கியங்களில் காணப்படவில்லை. ''ராணியார் விருப்பாட்சி செல்லும் பொழுது (கி.பி.1772)ல் கர்ப்பிணியாக இருந்தார். வெள்ளச்சி அப்பொழுது பிறக்கவில்லை' என்ற பேருண்மை எந்த அடிப்படையில் எழுந்தது என்று இந்த ஆசிரியர் குறிப்பிடப்படவில்லை.*

*இன்னொரு நகைப்புக்குரிய விஷயம். 3.6.1772-ல் இராமநாதபுரம் கோட்டையைப் பிடித்த கும்பெனியார் நவாப்பினது படைகள், சிவகங்கை நோக்கி வருவதை ஒற்றர்கள் மூலம் அறிந்த மன்னர் முத்து வடுகநாதர் அவர்களது படையெடுப்பைச் சமாளிப்பதற்கு காளையார் கோவில் காட்டரண்தான் பொருத்தமானது என முடிவு செய்து 20.6.1772-க்கு முன்னதாக அவர் எதிர்த்தாக்குதல் ஆயத்தப் பணிகளில் ஈடுபட்டிருந்தார். 21.6.1772-ம் தேதியன்று சிவகங்கையை பிடித்தப் பிறகு கும்பெனியார் இரு அணிகளாக கொல்லங்குடி வழியாகவும், சோழபுரம் வழியாகவும் கிழக்கே காளையார் கோவில் நோக்கி புறப்பட்டனர் என்பது தான் வரலாறு. ஆனால், மன்னர் காளையார் கோவில் காட்டில் வேட்டைக்காக சென்றதாகவும் அப்பொழுது திடீரென கும்பெனிப் படைகள் அங்கு மங்கலம் வழியாக வந்தது என்று அம்மானைப் பாடுகிறது எவ்வளவு முரண்பாடு?*

*மன்னர் முத்து வடுக நாதர் இந்தப் போரில் சிந்திய செங்குருதியால் சிவந்த மண்ணின் மாண்பை மன்னரது தியாகத்தை, மக்களது மனத்தினின்றும் அகற்றுவதற்காகத் திட்டமிட்டு தொடுக்கப்பட்ட புரட்டு அம்மானையின் வரிகள் என்பதைத்தான் உணர முடிகிறது. அதனை இந்த நூலாசிரியரும் வழிமொழிந்துள்ளார்.*

பக்கம் 92-93

> ''கர்ப்பிணியான வேலு நாச்சியாரைக் காப்பாற்றுவதே மருதிருவரின் தலையாய கடமையாயிற்று.
>
> அத்துடன் மன்னர் முத்து வடுகநாதருக்கு ஆண் வாரிசு இல்லாததால், அவரால் வளர்க்கப்பட்டு வந்த வெங்கண் உடையனனையும் கண் போல காக்க வேண்டிய கடமை வேறு. விருபாட்சி பாளையக்காரர் ஆங்கில ஆதிக்க எதிர்ப்பாளர். எனவே மருது பாண்டியர்கள் அரசியை அங்கு அழைத்துச் செல்வது சிறந்து எனக் கருதி அங்கு கொண்டு சேர்ந்தனர்.''

*கர்ப்பிணியான வேலு நாச்சியார் என்று எவ்வித ஆதாரமும் இல்லாமல் குறிப்பிட்டது போல இங்கும் இரு செய்திகள் எவ்வித ஆதாரமில்லாது குறிப்பிடப்படுகின்றன. சிவகங்கைச் சரித்திரக் கும்மியும் அம்மானையும், மருதிருவர் ராணி வேலுநாச்சியாரை மேலூர் வழியாக திண்டுக்கல் விருபாட்சிக்கு அழைத்துச் சென்றார்கள் என்பது ஒன்று. ஜுன்*

25 தேதி நடைபெற்ற போரில் மன்னர் முத்து வடுகநாதரும் ஏராளமான ஆதரவாளர்களும் போரில் மடிந்தனர். மன்னரது விதவை ராணியும் மகளும் விருபாட்சிக்கு பிரதானி தாண்டவராய பிள்ளையினால் அழைத்துச் செல்லப்பட்டனர். பின்னர் மன்னரது பணியாட்களான மருதிருவரும் அங்கு போய்ச் சேர்ந்தனர் என்பது மற்றொன்று. கும்பெனியாரது ஆவணங்கள் ஆதாரத்தில் மதுரை வரலாறு வரைந்த பேராசிரியர் கே.ராஜையன் இதனை உறுதிப்படுத்தியுள்ளார்.

இப்பொழுது ராணியார் விருபாட்சி போய்ச் சேர்ந்தது பற்றி ஜூலை 1772-ல் சென்னைக் கோட்டையில் நடைபெற்ற கும்பெனி ஆளுநரது கூட்டத்தில் தெரிவிக்கப்பட்ட இந்தச் செய்திகளைக் கொண்ட ஆவணத்தை ஏற்றுக் கொள்வதா? அல்லது இந்த நிகழ்ச்சி நடைபெற்று ஆறுபத்து எட்டு ஆண்டுகளுக்குப் பிறகு (கி.பி.1840) பாடப் பெற்ற சிவகங்கை அம்மானை, மற்றும் அதற்குப் பிறகு நாற்பத்து இரண்டு ஆண்டுகளுக்குப் பின்னர் (கி.பி.1882)-ல் பாடப்பெற்ற கும்மியின் வரிகளை உண்மையெனக் கொள்வதா? நூலாசிரியர் அம்மானையும் கும்மியையும்தான் அரிச்சந்திர வாக்காக கொண்டிருப்பது எப்படி பொருந்தும்?

மேலும் கும்மியும் அம்மானையும் ஓரிடத்தில் கூட விருபாட்சி செல்லும் பொழுது கர்ப்பிணியாக இருந்தார் என்றோ அல்லது விருபாட்சியில் இருந்த பொழுது பெண் மகவினை (வெள்ளச்சியை) பிரசவித்தார் என்றோ குறிப்பிடாதிருக்கும்பொழுது, நூலாசிரியரது புதுமுகக் காண்டத்தில் இந்த புதுமைக் கற்பனை இடம் பெறச் செய்யப்பட்டியிருப்பதின் நோக்கம் என்னவோ? இது சம்பந்தமாக சிவகங்கைச் சீமை நூலாசிரியருக்கு குழப்பம் என்று குறிப்பிடும். இந்த நூலாசிரியரது எழுத்துக்களிலும் தெளிவு காணப்படவில்லை. இவருக்குத்தான் குழப்பம் குவிந்துள்ளது.

பக்கம் 137-138

> தளபதி புல்லர்ட்டின் அறிக்கையில், ''மருதிருவருடன் இளைய ராஜாவும் காளையார் கோவில் காட்டிற்கு ஓடினர்'' என்ற செய்திக்கு விளக்கம் செய்துள்ள நூலாசிரியர், புல்லர்ட்டன் குறிப்பிடுகின்ற இளையராஜா, நாலுகோட்டை குடும்பத்தைச் சேர்ந்த வெங்கண் பெரிய உடையாத் தேவர் என்றும், விருபாட்சிக்கு செல்லும் பொழுது, இந்தச் சிறுவனுக்கு பெண் வேடமிட்டு அழைத்துச் சென்று கண் போல் காத்து வந்தனர் என்றும் வரைந்துள்ளார்.

இதற்கும் எந்த ஆதாரமும் இல்லை. அப்படியானால் இந்தச் செய்தியும் அரிச்சந்திரனது வாக்காகிய சிவகங்கை அம்மானை, கும்மியில் குறிப்படப்பட்டு இருக்கிறதா? இல்லையே! வேறு பேராசிரியர்

கதிர்வேலு? பேராசிரியர் கே.ராஜையன்? குறிப்பிட்டு இருக்கின்றனரா? இல்லையே. இந்த நூலாசிரியரது அடிக்குறிப்பு ஒன்றும் இல்லையே. அப்படியானால் இதுவும் நூலாசிரியரது கண்டுபிடிப்பா? அல்லது கற்பனையா? நதிமூலம், ரிஷிமூலம் பார்க்கக்கூடாது! என்றாலும் நமக்குக் கிடைத்துள்ள ஆவணங்களைப் பார்ப்போம். நாலுகோட்டை பெரிய உடையாத் தேவரது கொடி வழி (இணைப்பு கொடுக்கப்பட்டிருக்கிறது) எப்படி வேங்கன் பெரிய உடையாத் தேவர் நாலுகோட்டை வழியினர் அல்ல. அடுத்த ஆவணம் அறந்தாங்கிக் காட்டில் தலைமறைவு வாழ்க்கையில் இருந்த படைமாத்தூர் கௌரி வல்லப உடையாத் தேவர் புதுக்கோட்டை ரெசிடெண்ட் பிளாக்பர்னுக்கு, ரௌத்திரி ஆண்டு, வைகாசி மாதம் 27-ம் தேதி ஒப்பமிட்ட கடிதம் கீழே கொடுக்கப்பட்டுள்ளது. அதனை இப்பொழுது பார்ப்போம்.

''..... சிவகங்கை மன்னருக்கு நெருங்கிய உறவினர் என்ற முறையில் மன்னர் முத்துவடுகநாதர், தமது பெண்ணை எனக்கு திருமணம் செய்ய நிச்சயம் செய்து, என்னை அவரது வாரிசாகவும் நியமனம் செய்தார். காளையார் கோவில் போரில் முத்து வடுகநாதர் மடிந்தவுடன் பெரிய ராணியுடன் நானும் ஓடிப்போய் ஹைதர் அலியின் சீமையில் தஞ்சம் புகுந்தோம்... பின்னர் என்னை அவர்கள் (பிரதானிகள்) வரவழைத்து, காளையார் கோவிலில், முக்கியமான குடிமக்கள் மற்றும் பிரதான நாட்டு தலைவர்கள் (சேர்வைக்காரர்கள்) முன்னிலையில், ஏனைய பார்வையாளர்கள் மத்தியில் என்னை சிம்மாசனத்தில் அமரச் செய்து எனது அதிகாரத்தை அங்கீகரிக்கும் முறையாக கூப்பிய கரங்களுடன் என் முன்னர் தெண்டனிட்டனர். இந்த நிகழ்ச்சிக்கு நான்கு மாதங்கள் கழித்த பின்னர் எனக்கும் மருதிருவருக்குமிடையில் கருத்து வேறுபாடுகள் எழுந்தன. திடீரென்று அவர்கள் என்னையும் எனது நண்பர்களையும் கைது செய்து சிறையிலிட்டனர். எனக்கு திருமணம் செய்ய நிச்சயம் செய்யப்பட்டு இருந்த பெண்ணை (சிவகங்கை இளவரசியை) எந்த வகையிலும் எங்களுக்குச் சொந்தமில்லாத, தகுதியில்லாத சக்கந்தி மறவர் ஒருவருக்கு திருமணம் செய்து வைத்தனர். சிறிது காலத்தில் அந்தப் பெண் இறந்தவுடன், அவர்கள் முறையே தங்களது பெண்களில் ஒருவரை அவருக்கு மணம் புரிந்தது அவரது அதிகாரத்தை ஓரளவு மதித்தவர்களாக, அவர்களே முன்னைப் போல் ஆட்சி செய்தனர். பிறகு அவர்கள் என்னைக் கொன்று விடுவதற்கு முடிவு செய்தார்கள். அதிர்ஷ்டவசமாக அங்கியிருந்து தப்பி ஓடிவந்து கடந்த ஏழெட்டு ஆண்டுகளாக அறந்தாங்கியில் வாழ்ந்து வருகிறேன்.''

இந்த மடலின் வாசகத்திலிருந்து சின்ன ராஜா, வேங்கண் பெரிய உடையாத்தேவர் அல்ல. அவர் படைமாத்தூர் கௌரி வல்லப ஒய்யாத் தேவர் என்பதும் வேங்கண் விருபாட்சி சென்றது பற்றி ஆசிரியர்

குறிப்பிட்டிருப்பது அவரது சொந்த கற்பனை என்பதும் புலனாகிறது.

பக்கம் 102

> ''....முல்லையூரில் பிறந்து, ராணி அகிலாண்டேசுவரி நாச்சியாருடன் இராமநாதபுரம் விட்டு சிவகங்கைக்கு அமைச்சராக வந்து, வாழ்நாளெல்லாம் சிவகங்கையின் வளர்ச்சிக்குத் தொல்லைகள் ஏற்ற அவர்... விருபாட்சியில் மறைந்தார்.''

அகிலாண்டேசுவரி நாச்சியாரைத் திருமணம் செய்த சசிவர்ண பெரிய உடையாத் தேவர், நாலுகோட்டை திரும்பும் பொழுது, அவருக்கு உதவியாக இருப்பதற்கு சேதுபதி மன்னர் தாண்டவராய பிள்ளையையும் அனுப்பி வைத்தார் என்ற சிவகங்கை அம்மானையின் செய்தியை அரிச்சந்திர வாக்காகக் கருதி நூலாசிரியர் மேலே கண்டவாறு குறிப்பிட்டுள்ளார். பிரதானி தாண்டவராயபிள்ளை இராமநாதபுரம் சேதுபதி மன்னரது பணியில் இருந்து அகிலாண்டேசுவரி நாச்சியாருடன் சிவகங்கை வந்தது உண்மைதானா என்பதைப் பார்ப்போம்.

பிரதானி தாண்டவராயபிள்ளை மீது குழந்தைக் கவிராயர் என்பவர் மான்விடு தூது என்ற சிற்றிலக்கியமொன்றைப் பாடியுள்ளார். (டாக்டர் உ.வே.சாமிநாதையர் பதிப்பு. 1954) இதில் பாட்டுடைத் தலைவனைப் போற்றப்படும் தசாங்கத்தில்

''..... விரிந்த மணிக்
கூடமும் மேல்வீடும் கோபுரமும் மாமறுகும்
மாடமும் சேர் தென்முல்லை நகரான்.'' (கன்னி.88)

என தாண்டவராய பிள்ளையின் ஊரைக் கவிராயர் குறிப்பிடுகிறார். மேலும் இந்த நூலின் பதிப்புரையில் டாக்டர் உ.வே. சாமிநாதைய்யர் அவர்கள் ''இன்றைக்கு 230 வருடர்களுக்கு முன்னர் (கி.பி.1725-ல்) கார் காத்த வேளாளர் குலத்தில் காத்தவராய பிள்ளை என்பவருக்குப் புதல்வராகப் பிறந்தார். (தாண்டவராயபிள்ளை) இவருடைய ஊர் முல்லையூர் என்பது. இவருடைய பரம்பரையினர் கணக்கெழுதும் உத்தியோகமுடையவர்கள்'' என்றும் குறிப்பிடுகிறார்.

வருவாய்த்துறை ஆவணங்களைப் பரிசீலனை செய்ததில் முல்லையூர் என்பது சிவகங்கை வட்டம் அரளிக் கோட்டைப் பகுதியில் உள்ள முல்லைக் குளம் என்ற இனாம் கிராமம் என்பது தெரிய வருகிறது. கள ஆய்வின் பொழுது அரளிக் கோட்டையில் இன்னும் பிரதானி தாண்டவராய பிள்ளையின் வழியினர் இருந்து வருவதும் தெரிய வந்தது. அத்துடன், அவர்களில் ஒருவரான திரு. இராமச்சந்திர பிள்ளை என்பவர் (தற்பொழுது சென்னையில் இருப்பவர்) வசம் ஒரு செப்பேடும் இருப்பது தெரிய வந்தது. இந்த செப்பேட்டின்படி (இணைப்பில்

கொடுக்கப்பட்டுள்ளது.) இதில் கண்டுள்ள வாசகத்தின்படி பிரதானி தாண்டவராய பிள்ளையின் தகப்பனார் காத்தவராயபிள்ளை நாலுகோட்டை பெரிய உடையாத் தேவரது பணியில் இருந்தவர் என்பதும், அவரது பணியின் தொடர்பாக அரசு நிலையிட்ட சசிவர்ணப் பெரிய உடையாத் தேவர் தாண்டவராய பிள்ளையை கி.பி.1747-ல் தமது அரசுப் பணியில் நியமனம் செய்தார் என்பதும் அந்தச் செப்பேட்டில் இடம் பெற்றுள்ளது.

இத்தகைய உண்மைச் செய்தியும் ஆவணமும் இலக்கியச் சான்றும் முல்லையூர் தாண்டவராய பிள்ளையைப் பற்றிய செய்திகளைத் தரும்பொழுது அம்மானை ஆசிரியரது பாடல் வரிகள் உண்மைக்கு புறம்பான கற்பனை என்பதும் அதனை மருது பாண்டிய மன்னர் நூலாசிரியர் வேலிக்கு ஓணான் சாட்சி என வழிமொழிந்து வரைந்து இருப்பது சரித்திரப் புரட்டு என்பதைத் தவிர வேறு என்னவாக இருக்க முடியும்? அத்துடன் இந்த பொய்யான செய்தி பாண்டியன் தன் மகனைச் சோழனுக்கு திருமணம் செய்து தனது அவைப் புலவர் புகழேந்தியையும் சோழநாட்டிற்கு அனுப்பி வைத்தார் என்ற பாட்டி கதையையும் நினைவூட்டுவதாக உள்ளது.

பக்கம் 138

> ''... தனக்கு கிட்ட வேண்டிய ஆட்சியைக் கூட நாட்டு நலன் கருதி மருது பாண்டியர்களுக்கு விட்டுக் கொடுத்தார். (வேங்கண் பெரிய உடையார்)

நூலாசிரியர் இவ்விதம் குறிப்பிட்டிருப்பது அவர் நூலில் முன்னே குறிப்பிட்டிருப்பதற்கு முரணாக இந்த வாசகம் அமைந்துள்ளது. 1780 ஜூலை மாதத்தில் சிவகங்கையை மீட்ட சில நாட்களில் ராணி வேலுநாச்சியார் அவர்கள் தமது ஆட்சியை, சிவகங்கைச் சீமையை மருதிருவரிடம் ஒப்படைத்து விட்டார் என்று வரைந்துள்ளார். (பார்க்க: மருது பாண்டியர் மன்னர், பக்கம் 120/293) அடுத்து, பக்கம் 286-ல் ''புல்லர்டன் தன் படையெடுப்பின் பொழுது அவர்கள் ராஜாக்களாக விளங்கியதைக் கண்டு எழுதியதை'' குறிப்பிட்டு இருக்கிறார். (ஒரு நாட்டிற்கு ராஜா என்று ஒருவர்தானே ஒரு சமயத்தில் இருக்க முடியும் என்று வாசகர்கள் கேட்டு விடாதீர்கள்.)

மற்றும், பெரிய மருது சேர்வைக்காரர் ராணி வேலு நாச்சியாரை மறுமணம் செய்து கொண்டதன் மூலம் (பார்க்க: மருது பாண்டியர் மன்னர் பக்கம்: 116-120) சிவகங்கைத் தன்னரசின் மகுடம் சூடிய மன்னர் ஆகி விட்டனர் என்றும் குறிப்பிட்டுள்ளார். இவை எல்லாம் நிகழ்ந்தது கி.பி.1780-ல். இவ்விதம் இறையாண்மை பெற்ற ''அந்த மன்னர்களுக்கு'' வேங்கன் பெரிய உடையாத் தேவர் கி.பி.1783-ல் ராணி வேலுநாச்சியாரது

மகள் வெள்ளச்சியை மணந்தவருக்கு, ஆட்சியுரிமை எப்படி ஏற்பட்டது? அவர் எப்படி அதனை ஏன் விட்டுக் கொடுத்தார்? முரண்பாடாக அல்லவா ஆசிரியர் கூற்று அமைந்துள்ளது. ஏன் இந்த குழப்பம்?

முழுப் பூசுணிக்காயை ஒரு தட்டுச் சோற்றில் அமுக்கி மறைப்பது என்றால் இயலாத காரியம்தான். அப்பொழுது குழப்பமும் மயக்கமும் ஏற்படுவது இயல்பு. கி.பி.1780 ஜூலை மாதம் முதல் கி.பி.1789 நவம்பர் வரை ராணி வேலு நாச்சியார் சிவகங்கையின் ராணியாகவும் கி.பி.1789 டிசம்பர் முதல் கி.பி.1801 செப்டம்பர் வரை சக்கந்தி வேங்கன் பெரிய உடையாத் தேவர் சிவகங்கை மன்னராகவும் இருந்தனர் என்பதற்கான ஆவணங்கள் சிவகங்கை தேவஸ்தானத்திலும், சென்னை தமிழ்நாடு அரசு ஆவணக் காப்பகத்திலும் ஏராளமாக இருக்கும் பொழுது, இவைகளையெல்லாம் மறைத்து ஒரு புதிய சரித்திரப் புரட்டை நிலை நிறுத்துவது எளிதான செயல் அல்லவே!

இவ்விதம் சக்கந்தி உடையாத் தேவரவர்கள் சிவகங்கையின் இளவரசி வெள்ளச்சி நாச்சியாரை மணந்து கி.பி.1790-1801 வரை சிவகங்கை மன்னராக இருந்த பாவத்திற்காகத்தானே அவரை, கும்பெனியார் விட்டு வைக்கவில்லை. மலேஷியத் தீபகற்பத்தில் உள்ள பினாங் தீவிற்கு நாடு கடத்தி அங்கேயே 19.9.1802-ல் மரணமடையும் துர்பாக்கிய நிலையை அவருக்கு ஏற்படுத்தினர். மேலும் வேங்கண் பெரிய உடையாத் தேவர் சிவகங்கை மன்னராக இருந்த காரணத்தினால் தானே, வெள்ளச்சி நாச்சியார் கி.பி. 1793-ல் இறந்த பிறகு பிரதானி பெரிய மருது சேர்வைக்காரர் தமது மகளை வேங்கன் பெரிய உடையாத் தேவருக்கு இரண்டாவது தாரமாக மணம் செய்து வைத்தார். இந்தச் செய்தி இந்த நூலில் குறிப்பிடப் படாமல் விடுபட்டு இருப்பது இத்தகையதொரு உள்நோக்கம் கொண்டது போலும்.

பக்கம் 151

> ''... வேங்கன் பெரிய உடையாத் தேவரை அரசராக்குவதென்றும், மூன்று லட்சம் ரூபாய் பேஷ்குஷ் தொகையென்றும், மருதிருவர் அமைச்சர்களாக இருப்பர் என்றும் அந்த சமரச உடன்பாடு கூறுகிறது. செயல்படாமல் நின்று போன உடன்பாடு இது. மருது பாண்டியர்கள் தொடர்ந்து மன்னர்களாக இருந்தனர்.''

நூலாசிரியரது ஆசைப்படி ''மருது பாண்டியர்கள் தொடர்ந்து மன்னர்களாக இருந்தனர்'' (அதாவது ஜூலை 1780 முதல் 1801 வரை மருது சகோதரர்கள் இருவரும் சிவகங்கைச் சீமை மன்னர்கள்) என்பதை இங்கு வாதத்திற்காக ஏற்றுக்கொண்டு அந்த வாதத்தின் மறுபக்கத்தைச் சற்று உற்று நோக்குவோம்.

பொதுவாக மன்னர்கள் தங்கள் ஆட்சிக் காலத்தில், தங்களது சாதனைகள்

- அறப்பணிகள், அறக்கொடைகள், திருப்பணிகளை, கல்லிலும் செம்பிலும் வெட்டி வைப்பது மரபு. சிவகங்கை மன்னர்களும் அவ்விதமே கல்வெட்டுக்களில் செப்பேடுகளில் பதிவு செய்து உள்ளனர். இத்தகைய சிவகங்கை ஆவணங்கள் கி.பி.1733 முதல் அதாவது மன்னர் அரசு நிலையிட்ட சசிவர்ணப் பெரிய உடையாத் தேவர் காலம் முதல், மன்னர் முத்து வடுக நாதப் பெரிய உடையாத் தேவர், ஏன் கி.பி.1780 முதல் 1789 வரை ராணியாக இருந்த அரசி வேலு நாச்சியார், அவரை அடுத்து கி.பி.1790 முதல் கி.பி.1801 வரை சிவகங்கை மன்னராக இருந்த முத்து விசைய பெரிய உடையாத் தேவர் (சக்கந்தி வேங்கன் பெரிய உடையாத் தேவர்) ஆகியோர் தங்களது பெயரில் ''குளந்தை நகராதிபன்'' ''தொண்டியந்துறைக் காவலன்'' ''அரசு நிலையிட்ட'' என்ற விருதுப் பெயர்களுடன் பல அறக்கொடைகளை வழங்கியுள்ளனர். அவற்றில் சிலவற்றை இந்த நூலின் வேறு பக்கங்களில் குறிப்பிட்டுள்ளோம். மருது பாண்டியர்கள் மன்னர்களாக இருந்ததாகக் கொள்ளப்படும் கி.பி.1780-1801 வரையான கால கட்டத்தில் கூட ராணி வேலு நாச்சியாரும், மன்னர் விசைய ரகுநாதப் பெரிய உடையாத் தேவரும் வழங்கிய அறக்கொடைகள் உள்ளன. (அவைகளில் சில செப்பேடுகளின் நகல்கள் இந்நூலில் கொடுக்கப்பட்டுள்ளன. இந்த அறக் கொடைகள் ஆட்சியில் இல்லாத மன்னர்களால் (நூலாசிரியரது கருத்துப்படி) எப்படி வழங்கி இருக்க முடியும்? இந்த அடிப்படைச் சான்றுகளையும் ஒதுக்கி வைத்து விடுவோம். கி.பி.1780 ஜூலை முதல் தொடர்ந்து சிவகங்கை மன்னர்களாக இருந்த மருதிருவர் அறக்கொடைகளுக்கான ஆவணங்களை வழங்கியிருக்கின்றார்களா என்பதை பரிசீலிப்போம். இதோ மூன்று செப்புப் பட்டயங்கள் உள்ளனவே! மன்னர்கள் மருது பாண்டியர் அளித்தவை. ''தேசிய ஆவணங்களான - தொல்லியல் சான்றுகள் என்று மருது பாண்டிய மன்னர் நூலின் பக்கம் 678-688-லில் நூலாசிரியர் கொடுத்து இருக்கின்றார் அல்லவா? சரி அவைகளையும் பரிசீலிப்போம்.

**ஓலைச்சாசனங்கள்**

1. தஞ்சாக்கூர் ஓலைச்சாசனம் கி.பி.1784-ல் வரையப்பட்டது. ''அரசு நிலையிட்ட விசய ரெகுநாத பெரிய உடையாத் தேவரவர்களுக்குப் புண்ணியமாக ''ராயமானிய பெரிய மருது சேர்வைக்காரர் அவர்களும்'' (வரிகள் 3-4) என்று மட்டும்தான் வரையப்பட்டுள்ளது.

2. குன்றக்குடி ஓலைச்சாசனம் மூன்றும் கி.பி.1790-ம் வரையப்பெற்றன. அவைகளில் ''சிவகங்கைச் சீமை ஆதீன கர்த்தா பெரிய மருது சேர்வைக்காரர்'' என்று மட்டும்தான் குறிப்பிடப்பட்டுள்ளது.

## செப்பேடுகள்

1. சூடியூர் சத்திர செப்பேடு கி.பி.1795-ல் வழங்கப்பட்டது (ம.பா.ம. பக்கம் 680-681-ல்) இந்தப் பட்டயத்தின் வரிகள் 19-21ல் ''ஸ்ரீமது அரசு நிலையிட்ட விசைய ரகுநாதப் பெரிய உடையாத் தேவரவர்கள் பிரிதிவி ராச்சியம் பரிபாலனம் பண்ணி அருளா நின்ற சாலிவாகன சாகத்தம் 1716....''

''சேது மார்க்கத்தில் பிரதானி மருது சேர்வைக்காரர் சூடியூர் சத்திரம் அன்னதானத்திற்கு....'' வரையப்பட்டுள்ளது.

## சிறு வயல் செப்பேடு

இந்த செப்பேட்டை இந்த நூலாசிரியர் 1991-ல் நடைபெற்ற தொல்லியல் துறை அஞ்சல் வழிக் கருத்தரங்கிற்கு தமது நீண்ட விளக்கத்துடன் அனுப்பி வைத்தார். அந்தக் கருத்தரங்க தலைமைப் பொறுப்பில் அப்பொழுது இருந்த நான் வரைந்த அதே தலைமை உரையை (ஏற்கனவே அச்சில் வந்ததை) இப்பொழுது இங்கு கொடுத்து இருக்கிறேன். இந்தச் செப்பேடு போலியானது என்பதை தெரிவித்துக் கொள்கிறேன்!

கல்போல் எழுத்து என்ற பழைய வழக்கை ஒட்டி கல்லிலும் செப்பிலும் வெட்டி வித்தனர். ''அரசு ஆணைகள், அறக்கொடைகள், மறச்செயல்கள் பற்றிய செய்திகளை ''சந்திர ஆதித்த காவலர் வரை'' சாட்சி பகர்வதற்காக செப்பேடுகளில் அமைத்தனர். பொதுவாக, கல்வெட்டுக்களை போன்று செப்பேடுகளும், மங்கலச் சொல்லுடன் துவங்கி, ஆண்டு, திங்கள், நாள், வழங்கப்படுவதின் நோக்கம், பட்டயத்தை வரைந்தவர், காப்புநிலை என்ற பகுதிகளுடன் பொறிக்கப்படுவது வழக்கம்.[199] ஆனால் இந்த செப்பேட்டில் அந்த பகுப்புகள் காணப்படவில்லை. அவைகளுக்கு மாறாக ''சாலிவாகன சகாப்தம் 125க்கு மேல் நிலையான கானப்பேர் என்கிற'' தொடருடன் துவங்கி அந்த ஊரின் பழமையை அறுதியிட்டு சொல்கிறது. அந்த ஊர் பற்றிய இத்தகு தொன்மைக்கு உறுதியான காலவரம்பு எப்படி நிர்ணயம் செய்யப்பட்டது என்பது புரியவில்லை. புறப்பாடல் ஒன்றில் இந்த ஊர் குறிப்பிடப்படுவதால் சங்க காலத்துக்கு முன்னர்கூட இந்த ஊர் நிலைத்து இருந்திருக்கலாம். செப்பேட்டின் 20வது வரியில் ''1800 வருஷம்'' என்ற சொற்றொடர் இருப்பதினால் இந்த செப்பேடு கி.பி.1800க்கு பின்னர் வரையப்பட்டிருக்க வேண்டும் என்ற உண்மை உறுதிபடுத்த வேண்டியிருக்கிறது. அத்துடன் வெள்ளை மருது சேர்வைக்காரர் உத்தரவின்படி (வரி 26) ''தளவாய் நைனப்பன்

---

199. Subramaniyam & Venkatraman - Tamil Epigraphy a survey (1980) P: 18
200. Rajayyan.Dr.K. - History of Madura (1974) P: 277

சேர்வைக்காரரால்'' செப்பேடு வழங்கப்பட்டதாக தெரிகிறது. இந்த செப்பேட்டில் கண்ட சிறப்பினைப் பெறுபவர் வெள்ளை மருது சேர்வைக்காரரின் மைத்துனர் மகனாக இருக்கும்பொழுது இதனை ஏன் வெள்ளை மருது சேர்வைக்காரரே வழங்கவில்லை என்ற வினாவும் எழுகிறது. மேலும் மருது பாண்டியர்கள் சிவகங்கை சீமையில் பிரதானிகளாகத்தான் பணிபுரிந்து வந்தனரே ஒழிய ஆட்சியாளர்களாக (அரசராக) அல்ல, பிரதானி பதவி என்பது அன்றைய நாளில் அமைச்சர், தளவாய் என்ற இருபெரும் பொறுப்புக்களை இருபெரும் பொறுப்புக்களை கொண்டதாகும். மருதுபாண்டியர்கள் கி.பி.1789 வரை சிவகங்கை அரசி வேலுநாச்சியாரது பணியிலும், பின்னர் சிவகங்கை மன்னர் வேங்கன் பெரிய உடையார் தேவரது பணியிலும் தளவாயாக இருக்கும்பொழுது அவருக்கு மற்றுமொரு தளவாய் நைனப்பன் சேர்வை எப்படி அமர்த்தப்பட்டார் என்பதும் புரியவில்லை. அரசு ஆணைப்பதிவுகளில் தளவாய் நைனப்பன் சேர்வை பெயர் காணப்படவில்லை. அதாவது காளையார் கோவில் போரின்பொழுதும் அல்லது போருக்குப் பின்னர் பிடிக்கப்பட்டவர்கள், தூக்கிலிடப்பட்டவர்கள், நாடு கடத்தப்பட்டவர்கள் என்ற இனங்கள் எதிலும் அவர் பெயர் காணப்படவில்லை.

இந்த செப்பேடு இன்னும் சில ஐயப்பாடுகளையும் எழுப்புகின்றது. வரி 11/12-ல் ''சிறுவயல் ஜமீன்தார் வெள்ளைமருது சேர்வைக்காரர்'' என குறிப்பிடுகிறது. சிறுவயலில் சின்ன மருதுவும், அவரது குடும்பத்தினரும் குடியிருந்தவரே ஒழிய ஜமீன்தாராக அன்று அவர்கள் வாழவில்லை. ஜமீன்தார் என்ற சொல் சிவகங்கை சீமை வரலாற்றுக்கு புதியது. சிவகங்கை மன்னர் வேங்கன் பெரிய உடையார் தேவருக்கு எதிராக படைமாத்தூர் ஒய்யாத்தேவரை பரங்கிகள் சோழபுரத்தில் வைத்து சிவகங்கை ஜமீன்தார் என முதல்முறையாக சிவகங்கை சீமை முழுவதற்குமே நியமனம் செய்து அறிவிப்பு செய்தனர்.[201] ஆதலால் அந்த நிகழ்ச்சி முன்னரும் பின்னரும் கும்பெனியாரால் அங்கீகரிக்கப்பட்டு சிறுவயல் ஜமீன் இருந்தது கிடையாது.

வரி 18-ல் ''மதுரை ஜில்லா' என்ற சொல் காணப்படுகிறது. சீமை என்ற சொல்தான் அப்போது வழக்கில் இருந்தது. அத்துடன் விருபாட்சி, திண்டுக்கல் கலெக்டரது அதிகாரத்திற்கு உட்பட்ட திண்டுக்கல் சீமையில்தான் இருந்தது. மதுரை ஜில்லாவில் அல்ல. ''தோப்பாபணம் 1500 கட்டி குடுத்து அபிமானிச்சு'' என வரி 27-ல் குறிக்கப்பட்டுள்ளது. தோப்பாபணம் என்பது நாணய வகை அல்ல. வடுகபாளையக்காரர்கள் அவர்கள் செலுத்தி வந்த கப்பத் தொகையை பெரும்பாலும்

---

201. Revenue Consultations. Vol.30. P: 247

தோப்பாபணம் என்றே வழங்கி வந்தனர். ஆதலால் வெள்ளை மருது சேர்வைக்காரர் தமது மைத்துனர் மகன் வீரபாண்டியனுக்கு அன்பளிப்பாக வழங்கி சிறப்பு செய்திருந்தால், அந்தப் பணம் அப்பொழுது சிவகங்கை சீமையில் செலாவணியில் இருந்த ஸ்டார் பக்கோடா அல்லது சூளிச்சக்கரம் அல்லது போட்டோ நோவோ பக்கோடா - இவைகளில் ஏதாவது ஒரு வகை நாணயத்தில் தான் கொடுத்திருக்க வேண்டும்.[202] அதற்கு மாறாக தோப்பா பணத்தை கொடுத்து அபிமானிச்சதாக குறிப்பிட்டு இருப்பது பொருத்தமற்றதாக உள்ளது.

விருபாச்சி பாளையக்காரராக கி.பி.1762 முதல் 181 வரை இருந்தவர் திருமலை குப்பல் சின்னப்ப நாயக்கர். (19வது பட்டத்துக்காரர்) என்பதை பாளையபட்டு வமிசாவழி குறிப்பிடுகிறது[203] கும்பினியாரின் ஆவணங்களும் இந்த பாளையக்காரரை கோபால நாயக்கர் என குறித்துள்ளன. ஆனால் இந்த செப்பேடு, அந்த பாளையக்காரரை ''சஜபூதி'' என (வரி 19) குறிப்பிட்டிருப்பது வரலாற்றுக்கு முரணாக உள்ளது.

மேலும், வரிகள் 20-24ல் ''1800-ம் வருஷம் கம்பளத்தார் நாயக்கன் வசம் பொன்னையம்மா, வெள்ளையம்மா நாமாச்சியம்மாள், வேலைக்கா ஆகியவர்கள் ''கனம் பொருந்திய கும்பினியான் துரை கைது செய்து கடாட்சம் வரும்படி சொன்னதின் பேரில் - மேற்படியாளர்களை மீட்டு வந்ததற்காக'' என்ற வாசகம காணப்படுகிறது. இதில் அடங்கிய செய்தி அந்த நான்கு பெண்களையும் கும்பெனியார் விருப்பப்படி விருபாட்சியில் இருந்து கைப்பற்றி வரப்பெற்றது என்பதுதான். ஆனால் திருமனோகரன் ''மீட்டு'' என்ற வார்த்தையினைக் கொண்டு கும்பினியாரினால் விருபாட்சி அரண்மனையில் இருந்த அந்த பெண்மக்களை, வீரபாண்டிய சேர்வைக்காரர் மீட்டு வந்து உரியவர்களிடம் சேர்ப்பித்தார் என வரைந்துள்ளது பொருத்தமானதாக இல்லை. இந்த நான்கு பெண்களது பெயர்களும் விருபாட்சி கைபீதியில் குறிப்பிடப்பட்டு இருப்பதுடன் திண்டுக்கல் மலைக்கோட்டையில் பரங்கியர் பாதுகாப்பில் இருந்து வந்தனர் என்றும் நாமாச்சியம்மாள் தவிர ஏனைய பெண்கள் கும்பினியார் தயவினாலே கைவிட்டு அவரவர் இருப்பிடத்திற்கு அனுப்பப்பட்டதாகவும் நாமாச்சியம்மாளும் இன்னும் ஐவரும் கி.பி. 1815 செப்டம்பர் வரை கைதுலே இருந்து'' என குறிப்பிடப்பட்டுள்ளது. ஆதலால் அவர்களை மீட்டு வந்ததற்கான ஆதாரமும் மருதுபாண்டியர் பற்றிய ஆவணங்களில் இல்லை. மற்றும் செப்பேடு வரி 22-ல் ''கனம் பொருந்திய கும்பினியான் துரை'' என

202. Military Consultations Vol.285(A) / 11.6.1801 Page: 5051-52
203. பாளையப்பட்டு வமிசாவழி (தொகுதி II) பக்: 24, 26, 28, 54, 102, 182

கண்டிருப்பது ஓலை முறியில் இருந்து பட்டயத்தை பெயர்த்து எழுதியவரது தவறு போல திரு. மனோகரன் வரைந்துள்ளார். அவரது கூற்றுப்படியே அந்தப் பெண்கள் கொண்டுவரப்பெற்றதை ஏற்றுக்கொண்டாலும், ''கனம் பொருந்திய கும்பினியான் துரை'' என்ற தொடருக்கு என்ன பொருள் கொள்வது? ஆங்கிலேயரை எதிர்த்த மருதுபாண்டியரது பட்டயத்தில் ஆங்கிலேயரை இவ்விதம் மிகுந்த மரியாதையுடன் குறித்து இருப்பது புதுமையானது அல்ல.

ஆதலால் மருதுபாண்டியர்களை வரலாற்று நோக்கில் ஆய்வு செய்தல் பட்டயத்தை மட்டும் அல்லாமல் அதனுடைய பின்னணியையும் புரிந்து கொள்வதற்கு உதவும். அதற்கு மருதுபாண்டியர்கள் ஆங்கிலேயரை எப்பொழுது, எந்தச் சூழ்நிலையில் எதிர்த்தனர் என்பதை புரிந்து கொண்டால் பயனுடையதாக இருக்கும் என நினைக்கின்றேன். மருதுபாண்டியர்கள் கி.பி.1780 முதல் 1801 வரை சிவகங்கை சீமையின் பிரதானிகளாக இருந்து வந்தனர். அப்பொழுது அவர்களும் தென்னாட்டில் இருந்த ஏனைய பாளையக்காரர்களைப் போன்று - குறிப்பாக மணியாச்சி, மேலமாந்தை சொக்கன்பட்டி, எட்டயபுரம். புதுக்கோட்டை போன்ற பாளையக்காரர்களை போன்று - கும்பினியாரது விசுவாசமிக்க பாளையக்காரர்களாகவே இருந்து வந்தனர் என்பதை அவர்கள் 8.7.1794, 4.2.1801, 13.6.1801, 31.7.1801 ஆகிய தேதிகளில் எழுதிய கடிதங்களிலிருந்து தெரிய வருகிறது. 16.6.1801-ம் தேதி அன்றுதான் பரங்கியருக்கு எதிராக வெளியிட்ட அறிக்கைக்குப் பிறகுதான் அவர்கள் கும்பினியாரது பகிரங்க எதிரிகளாக இருந்தனர் என்பதை வரலாற்றில் காணமுடிகிறது. ஆதலால் இந்தச் செப்பேடும் ஜூன் 1801க்கு முன்னதாக வரையப்பட்டிருக்க வேண்டும் என்பது தெளிவு.

மற்றும் விருபாட்சி பாளையத்தைப் பற்றிய ஒருசில விவரங்களையும் இங்கு தெரிவிக்க விழைகிறேன். 25.6.1772 அன்று சிவகங்கை மன்னர் காளையார் கோவில் போரில் இறந்துபட்டவுடன் அவரது பிரதானி தாண்டவராயபிள்ளை ராணி வேலுநாச்சியாரையும், அவரது பெண் குழந்தையையும் சிவகங்கை சீமைக்கு வடமேற்கே உள்ள விருபாட்சிக்கு அழைத்துச் சென்று[204] அரசியல் புகலிடம் பெற்றார். அப்பொழுது விருபாட்சி மைசூர் சீமையின் ஏனைய பாளையங்களை போன்று, அமைதியாக இருந்தது. கி.பி.1792 மைசூர் மன்னர் திப்புசுல்தானது மங்களூர் உடன்படிக்கையின்படி விருபாட்சியைக் கொண்ட திண்டுக்கல் சீமையை ஆங்கிலேயர் தங்களது சொத்தாக மாற்றினார். அதனை அடுத்து அங்குள்ள பாளையக்காரர் தலைமையில் கி.பி.1794-க்கு பிறந்தான். அங்கு வெள்ளையர் எதிர்ப்பு கிளர்ச்சிகள் துவங்கின. முன்னால் மைசூர்

---

204. Rajayyan. Dr. K. - History of Madura (1974) P: 261
Military Country Correspondence Vol.21. 16.12.1772. P: 202

தளபதியும் கிளர்ச்சித் தலைவருமான தூன்தியாநாக் என்பவர் விருபாட்சிக்கு அனைத்து உதவிகளையும் அளித்து ஏகாதிபத்திய எதிர்ப்பு போருக்கு ஆயத்தப்படுத்தினார். தென்னாட்டு கிளர்ச்சி தலைவர்கள் திண்டுக்கல்லில் கூடியபொழுது மராட்டிய மாநில கோல்காபூரில் இருந்து தமிழ்நாட்டு நாங்குநேரி (நெல்லை மாவட்டம்) வரைக்கும் கிளர்ச்சிகளை தொடர்வது என்றும் அதன் துவக்கமாக கோவையில் 3.6.1800-ல் கும்பினியார் பாசறையை தாக்கி அழிப்பது எனவும் முடிவு செய்யப்பட்டது[206] கோவை நகருக்கு 10 மைல் தொலைவில் 500க்கும் அதிகமான குதிரை வீரர்கள தாக்குதல் தொடுப்பதற்கு கூடியிருந்த தகவல் கும்பெனி தளபதி மக்காலிஷ்டருக்கு எட்டியது. அவன் தம்மிடமிருந்த ஐரோப்பிய, ராஜபுத்திர படை அணிகளைக் கொண்டு கிளர்ச்சிக்காரர்களை வளைத்து பிடித்து கிளர்ச்சியை நசுக்கினான். இந்த கிளர்ச்சியில் பங்குகொண்டவர்கள் பெரும்பாலும் முன்னாள் மைசூர் ராணுவ குதிரை வீரர்கள் ஆகும்.[206] தூக்கிலே தொங்கி தியாகிகள் ஆகிய 42 பேரில் 13 பேர் மைசூர் மாநிலத்தைச் சேர்ந்தவர்கள்.[207] இந்தக் கிளர்ச்சியில் விருபாட்சி நாயக்கர் கலந்து கொள்ளவில்லை. அப்பொழுது அவர் திண்டுக்கல் சீமையில் கிளர்ச்சியில் ஈடுபட்டிருந்தார் என்பது நினைவு கொள்ளத்தக்கது.

மற்றும் மேலே கண்ட முரண்பாடுகளை தவிர செப்பேட்டின் சொற்றொடர் அமைப்பும் சரியாக இல்லை குறிப்பாக வரி 12-ல் ''வெள்ளை மருது சேர்வைக்காரர் இந்த செப்புப்பட்டயத்தை'' என்று தொடங்கிய தொடர் ''........ வீரபாண்டிய சேர்வைக்காரர் சேவைக்கும்'' (வரி 15 முடிவு) ''......காவல் காத்து வருவதற்கும் (வரிகள் 17, 18) ....மீட்டு வந்ததற்காக (வரிகள் 24, 25) என எச்சமாக நின்றுவிட்டு, பின்னர், ''தளவாய் நைனப்பசேர்வைக்காரரால் ......கட்டி, குடுத்து, அபிமானிச்சு தெரியப்படுத்துகிறது (வரிகள் 26, 28) என முடிகிறது. மாறாக வெள்ளை மருது சேர்வைக்காரர் உத்தரவின்படி தளவாய் நைனப்பன் சேர்வைக்காரரால் (வரி 26) என்ற தொடர், வரி 12-ஐ தொடர்ந்து வந்து ஏனைய தொடர்களுடன் முடிந்திருந்தால் பட்டயத்தின் செய்தி இன்னும் தெளிவாக இருந்திருக்கும்.

இதுவரை கிடைத்துள்ள மடப்புரம் காவேரி அய்யனார் கோவில் பட்டயம்[208] தொண்டி கைக்கோளன் ஊரணி கல்வேட்டு[209] ஆகியவைகளின் சொற்றொடர் அமைப்புகளிலிருந்து இந்தப்பட்டயம் வேறுபடுவதால் போலிப்பட்டயமாக கருதப்படுகிறது.

---

205. Rajayyan.Dr.K. Selections from the History of Tamil Nadu (1978) P: 278
206. Political consultations. Vol. 1(A) 11.6.1800. P: 17-20
207. Ibid. Vol. 2(A) 21.9.1800. P: 562
208. மறவர் சீமை ஓலைச் சாசனங்கள் (கல்வெட்டு இதழ் எண்:18) - திரு. வெ.வேதாசலம்
209. தஞ்சை தமிழ்ப் பல்கலைக்கழக பேராசிரியர் திரு. செ.ராசு 1985-ல் படியெடுத்தது

## கல்வெட்டுக்கள்

1. தொண்டி கல்வெட்டு: கி.பி.1795-ல் பதிவு செய்யப்பட்டது இதன் வரி. 5, 6-ல் ''ராசமானியரான மருது பாண்டியன் உபயம்'' என்ற தொடர் மட்டும் தான் காணப்படுகிறது.

2. சிங்கம்புணரி கல்வெட்டு: கி.பி.1801-ல் பதிவு செய்யப்பட்ட இந்தக் கல்வெட்டின் வரிகள் 5, 9-ல்

''ராச ஸ்ரீ அரசு நிலையிட்ட விசைய ரகுநாதப்
பெரிய உடையாத் தேவர்கள் காரியத்துக்கு
கர்த்தரான ராச ஸ்ரீ மருது பாண்டியர்கள்''
என்று மட்டும் பதிவு செய்யப்பட்டுள்ளது.

எனவே மேலே கண்ட நூலாசிரியர் தமக்கு ஆதரவாகக் குறிப்பிட்டுள்ள இந்த ''தேசிய ஆவணங்கள்'' மருதிருவரை ஓரிடத்தில் கூட மன்னர் என்று குறிப்பிடாதிருக்கும் பொழுது, ஏன் மருதிருவர்களே தங்களைச் சிவகங்கை மன்னர்களாக பிரசித்தம் செய்து கொள்ளாத பொழுது, இந்த நூலாசிரியர் மட்டும் அவர்களை மன்னர்களாகப் பெருமைப்படுத்தி எழுதியுள்ளார். அது அவருக்கு இந்தியக் குடியுரிமை சாசனம் அளித்துள்ள ஆதார உரிமைகளின்படி ஏற்பட்டது, என்றாலும், அவர் தமது இந்தக் கருத்தை இந்த நூலின் வழி மக்களிடத்து திணிக்க முயற்சித்து இருப்பது வரலாற்றிற்கு முரணான சரித்திரப் புரட்டாகத் தான் வரலாற்று ஆய்வாளர்களும் அறிஞர்களும் கருதுவர் என்பது உறுதி.

பக்கம் 260-261

> ''கீழிறக்கிக் காட்ட கிடைக்குமா ஆதாரம்?'' என்ற தலைப்பில் ''இருபத்து ஒரு ஆண்டுகள் மருது பாண்டியர்கள் மன்னர்களாக விளங்கியதை ஒப்புக்கொள்ள மனமில்லாத ஆங்கிலேயர் அவர்களை அந்தஸ்த்தில் குறைந்தவர்களாகத் தங்களது ஆவணங்களில் கீழிறக்கி காட்டி வரைந்துள்ளனர்'' அடைப்பக்காரர் என்பதற்காவது ஆதாரம் காட்ட முடிந்து இருக்கிறதா? என்று நூலாசிரியர் கேட்கிறார்.

தமிழ்நாடு அரசு ஆவணக் காப்பகத்தில் உள்ள ஆங்கிலேயரின் ஆவணங்களைக் கடந்த பன்னிரண்டு ஆண்டுகளாகப் படித்துப் பார்த்து பரிசீலித்து வரும் வரலாற்று ஆய்வாளன் என்ற முறையில் இதனை எழுதுகிறேன்.

அன்றைய சூழ்நிலையில் இந்த நாட்டு அரசியலைத் தங்களது சொந்த நலன்களுக்கு உகந்த முறையில், கைப்பற்றுவதற்கு ஏற்ற சூழ்ச்சி, ராஜ தந்திரம், வன்முறை ஆகிய வகையில் ஈடுபட்ட பரங்கியர் என்ற கும்பெனியார் வெற்றியும் கண்டனர். ஆதிக்கவாதிகளான அவர்களது நோக்கில் சூழ்நிலைகளைப் புரிந்து பதிவு செய்துள்ளவை அவர்களது

அறிக்கைகள், கடிதங்கள், பதிவேடுகள். இவைகளில் அவர்களது நலன்களுக்கு எதிரான இந்த நாட்டு மன்னர்கள், மக்கள் தலைவர்கள், அவர்களைப் பற்றி என்ன நினைத்தார்கள், எத்தகைய எதிர் நடவடிக்கைகளில் ஈடுபட்டனர், அவர்களது மனப்பண்புகளும், செயல்முறைகளும் எப்படி இருந்தன என்பதையும் தவறாமல் பதிவு செய்து உள்ளனர். இந்த ஆவணங்களும் இன்று நமக்கு கிடைத்திராவிட்டால் தமிழகத்தின் பதினேழாவது, பதினெட்டாவது நூற்றாண்டு வரலாற்றை வரையறை செய்து வரைவதே இயலாததாகி இருக்கும்.

இந்நிலையில் கும்பெனியாரது ஆவணங்களைத் தங்களது கருத்துக் கோர்வைக்கு இயைந்ததாக இல்லையென்பதற்காக அவைகளை முற்றிலும் ஒதுக்கி விடமுடியுமா? எட்டாக் கனியென்றால் அது புளிக்குமா? துஷ்டன் மருது என்று வரைந்துள்ள தளபதி வெல்ஷ் தான், அரண்மனை சிறுவயல் காட்டு சாலையமைப்பு பணியில் மருது சேர்வைக்காரர்களது சிவகங்கைச் சீமைத் தியாகிகள் எத்தகைய நாட்டுப் பற்றுடனும் வீராவேசத்துடனும் போராடி கும்பெனியாரது திட்டத்தை நிறைவேற்ற விடாமல் சீர்குலைத்து வீராதி வீரரான தளபதி அக்கினியூவை சோழபுரத்திற்குப் பின் வாங்குமாறு செய்த மகத்தான நிகழ்ச்சியைத் தெளிவாக வரைந்து வைத்துள்ளார். சிவகங்கை கும்மியும், அம்மானையிலும் இந்தச் செய்தி விவரித்து இருக்கிறதா? இல்லையே! சிவகங்கையின் இறுதி மன்னரான வேங்கன் பெரிய உடையாத் தேவர் சீமை நிர்வாகத்தை தமது பிரதானிகளான மருதிருவர் நடத்துமாறு அனுமதித்து வீட்டு பெயரளவில் மன்னராக இருந்த குற்றத்திற்கு நாடு கடத்தப்பட்டு, அவரும் மற்றும் சிவகங்கை, இராமநாதபுரம், மதுரை, திருநெல்வேலிச் சீமைகளைச் சேர்ந்த வீரத் தலைவர்கள் எழுபத்து இரண்டு பேர், 11.2.1802-ம் தேதி தூத்துக்குடியில் இருந்து நாடு கடத்தப்பட்டு எண்பது நாட்கள் கடற்பயணத்திலும், பின்னர் பினாங் தீவிலும் அவர்கள் பட்ட துயரங்களின் கண்ணீர்க் கதையை சிவகங்கைச் சரித்திரக்கும்மியும், அம்மானையுமா சொல்லுகிறது? தெரிவிக்கிறது? நமது நூல்களில் இந்தச் சிறப்பான செய்திகளைப் பார்க்க முடிகிறதா?

கி.பி.1783-ல் சிவகங்கைக்கு பேஷ்குஷ் தொகை வசூலுக்கு வந்த தளபதி புல்லர்டன், மதுரை திருநெல்வேலி, திண்டுக்கல், சீமையில் கும்பெனியாரது குத்தகைகாரர்கள் மக்களைக் கசக்கிப் பிழிந்து இழிவான முறையில் எப்படி கும்பெனியாருக்காக வசூல் செய்கின்றனர் என்பதைத் தெளிவாக மேலிடத்திற்கு நீண்ட அறிக்கை அனுப்பியுள்ளார். இந்த மக்கள் படும் கஷ்டங்களை நமது நாடோடி இலக்கியங்கள் பாடி இருக்கின்றனவா? இவைகளையெல்லாம் கும்பெனியாரது ஆவணங்களைத் தவிர வேறு இந்த ஆவணத்திலும் கிடைக்காத வரலாற்றுத் தொகுப்பு ஆகும். இவைகளை விடுத்து, தமிழக வரலாற்றை

எவ்விதம் எழுத முடியும்? அரண்டவனுக்குத்தான் இருண்டதெல்லாம் அச்சமூட்டும். சமன் செய்து சீர் தூக்கி நிகழ்ச்சிகளை ஆய்வு செய்பவர்களுக்கு இந்த ஆவணங்கள் புறக்கணிக்க முடியாத வரலாற்றுப் புதையலாக அமையும்.

அடுத்து, மருது சகோதரர்கள் மன்னர்களாக இருந்தனர் என்பதைக் குறிக்க ஆசிரியர் வரலாற்று ஆவணம் எதையாவது சுட்டியிருக்கின்றனரா என்றால் இல்லை. கி.பி.1780-1801 வரை மருது இருவர் தொடர்ந்து மன்னராக இருந்தபொழுது, அவர்களுடன் தொடர்பு கொண்டிருந்தவர் கும்பெனியார் - இவர்களது ஆவணங்களை ஒதுக்கி விடுவோம். அடுத்து இவர்களுடன் சம்பந்தப்பட்டவர்கள் புதுக்கோட்டை தொண்டமான, இராமநாதபுரம் சேதுபதி மன்னர் ஆகியவர்கள் மட்டுமே. அவர்களது ஆவணங்களில், அந்தச் சீமை வரலாற்று நூல்களில், இவர்கள் சிவகங்கைச் சீமை மன்னராக இருந்தனர் என்பதற்குரிய குறிப்புகள் இருக்கிறதா என்றால் இல்லையே! பிறகு எந்த ஆதாரத்தைக் கொண்டு அவர்களை உயர்த்திக் காட்டுவது?

பக்கம் 261

> ''மருதிருவரின் தந்தை சேதுநாட்டில் சேதுபதியிடம் ஒருபடைத் தலைவராக இருந்து வந்ததற்கு தொல்லியல் சாசன ஆதாரம் உள்ளது'' என்ற கூற்றுக்கு நண்பர், வேதாசலம் அவர்கள் ''கல்வெட்டு'' இதழ் எண்18-ல் எழுதிய கட்டுரையில் குறிப்பிட்டுள்ள அனுமந்தக்குடி ஓலைச்சாசனம் சுட்டப்பட்டுள்ளது. இந்த ஓலைச் சாசனத்தில் சாட்சிக் கையொப்பம் இட்டு இருப்பவர்கள் ஒருவர் வணங்காமுடி பளநியப்ப சேர்வைக்காரர், இன்னொருவர் மேற்படி அணியாபதி அய்யன அம்பலம்.

இந்தப் பெயரில் இருந்து அதாவது, ''வணங்காமுடி பளநியப்ப சேருவைக்காரன்'' என்ற சொற்றொடரைக் கொண்டு கட்டுரை ஆசிரியர், ''மருது சகோதர்களின் தந்தையார் உடையார் சேர்வை என்ற மொக்கப் பளனியப்ப சேர்வைக்காரர் தான் அவர் என்றும் அவர் முத்துராமலிங்க சேதுபதி மன்னரது படையில் பணியாற்றியிருக்க வேண்டும். அவரே இந்த ஓலையிலும் சாட்சிக் கையெழுத்து இட்டு இருக்க வேண்டும் என்ற அவரது ஊகத்தை அடுக்கியவாறு வெளியிட்டுள்ளார். இதை ஒரு தொல்லியல் சாசனமாக எப்படி ஏற்றுக் கொள்வது? சேதுநாட்டில் பளனியப்பன் சேர்வை என்று அப்பொழுது அந்த ஒருவர் மட்டும்தான் இருந்தாரா? அவரும் மருது சேர்வைக்காரரது தந்தைதானா? பொதுவாக சாட்சிக் கையெழுத்துப் போடுபவர் தனது ஊரையும் குறிப்பிட்டு கையெழுத்து இடுவது அன்றைய மரபு. வனங்காடி என்பது அந்தப் பளனியப்ப சேர்வைக்காரரின் ஊராக ஏன் இருக்கக் கூடாது? பரமக்குடி வட்டத்தில் வணங்கான் அல்லது வணங்கான் ஏந்தல் என்று ஒரு ஊர்

உள்ளது இங்கு குறிப்பிடத் தக்கது. அத்துடன் அந்த ஓலைச்சாசனத்தில் கையெழுத்து போட்டுள்ள மற்றொருவர் அனியாபதி அய்யன அம்பலம் என்பவர். அனியாபதி, அனுமந்தக்குடிக்கு கிழக்கே மூன்று கல் தொலைவில் உள்ள ஊர் என்பதும், இங்கு குறிப்பிடத்தக்கது. இந்தப் பட்டயத்தின் வரியில் பிரதானி முத்திருளப் பிள்ளை என்று பணியின் பெயர் குறிப்பிட்டு இருப்பது போல தளபதி வணங்காமுடி பள்ளியப்ப சேருவைக்காரன் என்ற குறிப்பும் இல்லை. இராமநாதபுரம் சம்ஸ்த்தான வரலாறான மானுவலில், சேதுபதி மன்னர்களது, பிரதானி, தளபதிகள் யார் என்பது கொடுக்கப்பட்டுள்ளது. (பக்கம் 274) மன்னர் முத்து இராமலிங்க சேதுபதி ஆட்சியில் பணியாற்றிய பிரதானிகள் எழுவர் பெயர்கள் மட்டுமே கொடுக்கப்பட்டுள்ளது. தளபதி பளனியப்ப சேருவைக்காரன் என்ற பெயர் அந்தப் பட்டியலில் காணப்படவில்லை!

ஆதலால் வணங்காமுடி பளனியப்ப சேர்வை, என இந்த ஓலைச்சாசன சாட்சி, நூலாசிரியரது கற்பனையான மருது சகோதரர்கள் தந்தை என்பது தெளிவு.

பக்கம்: 53 - 54

> ''சசிவர்ணத் தேவர் கி.பி.1749-ல் உயிருடன் இல்லை. பூதக்காள் நாச்சியார் கி.பி.1742-லோ அதற்கு பின்னரோ அரசியாராக இருந்து இருக்கலாம்...''

இந்த தொடரின்படி மன்னர், கி.பி.1749 வரை இருந்திருக்கும் பொழுது மூத்தராணியும் அவர் மக்களும் இருக்கும் பொழுது இளையராணி கி.பி.1742-ல் எப்படி ஆட்சிக்கு வந்திருக்கமுடியும்? இதனைப்பற்றி ஆசிரியர் சிந்தித்ததாகத் தெரியவில்லை. நீதிமன்ற ஆதாரங்களைக் குறிப்பிடும் நிலை ஏற்பட்டால் நீதி மன்றத்தின் தீர்ப்புரையைத்தான் ஆதாரமாகக் கொள்ளலாமேதவிர, நீதிமன்றத்தில் தாக்கல் செய்யப்பட்ட மனு, மறுப்புரை ஆகியவைகளை ஆதாரங்களாகக் கொள்வது மரபு இல்லை. ஆசிரியர் புதுமையாக பல இடங்களில் இவைகளையே நீதிமன்ற ஆவணங்களாகச் சுட்டி உள்ளார்.

நாலுகோட்டை, படைமாத்தூர், சிவகங்கை குடும்ப கொடி வழியொன்று நீதிமன்றத்தில் தாக்கல் செய்யப்பட்டுள்ளது. (இணைப்பில் கொடுக்கப்பட்டுள்ளது) இதன்படி பூதக்காள் நாச்சியார் கி.பி.1746-ல் இறந்துவிட்டார் என்பதும் அவருக்கு முத்து வடுகநாதர் கி.பி.1736-ல் பிறந்தார் என்றும் தெரிகிறது.

மற்றும் மன்னர் சசிவர்ணத் தேவர் வழங்கிய செப்பேடுகள் கி.பி.1748 வரை கிடைத்துள்ளன என்பதும் இங்கு குறிப்பிடத்தக்கது. கணவர் கி.பி.1748 வரை மன்னராக இருந்தபொழுது கி.பி.1742 முதல் இரண்டாவது மனைவி எப்படி ஆட்சிக்கு வந்திருக்க முடியும்?

பக்கம்: 147, 148

> ''...காளையார் கோயிலில் மருது பாண்டியர்கள் நிகழ்த்திய முதல் போர் சிவகங்கை மன்னர் முத்து வடுகநாதரை ஆங்கிலத் தளபதிகள் சுமித், பான்ஜோஜர் களத்தில் கி.பி.1772-ல் நிகழ்ந்தது. அதே காளையார் கோவிலில் இரண்டாவது போரை மருது பாண்டியர்கள் சந்தித்தனர்.

*காளையார் கோவிலில் 25.6.1772-ல் நடந்த போரில் மன்னர் முத்து வடுகநாதரது தலைமையில் நின்று போராடிய சிவகங்கை சீமை மறவர்களது செங்குருதியினால் காளையார் கோவில் மண் சிவப்பேறியது. மன்னரும் வீர மரணம் அடைந்தார். இது காலத்தால் அழிக்க இயலாத வரலாற்று ஏடு.*

**சாதாரண மனிதர்களும் இந்தச் சிறப்பான நிகழ்ச்சியையும் சிவகங்கை மன்னரது தியாகத்தையும் எந்த வகையிலும் சிறுமைப்படுத்திவிட முடியாது. அது சூரிய வெளிச்சத்திற்கு எதிரே ஒளிரும் மின்மினிப் பூச்சியின் முயற்சியாகத்தான் இருக்க முடியும். ஆனால், அரிச்சந்திர வாக்காக அம்மானை பாடியுள்ளவரோ, காளையார் கோவிலில் இரத்தக்களரி எதுவுமே நடக்காதது போல, பாடியிருப்பதைப் படியுங்கள்.**

''... கும்பெனியார்
அடர்ந்தார்கள் காளையார் ஆலயத்தைச் சுற்றிவந்து
படர்ந்தார் திசையனைத்தும் படர்ந்து வருமுன்னேதான்
அங்கேதான் காளையார் ஆலயத்தின் னுள்ளேதான்
முங்கையுடன் முத்து வடுகநாத துரை
பந்தயமாயத்தாமிருவர் பஞ்சணை மெத்தையின் மேல்
சந்தோசமாயிருந்து சதுரங்கம் பார்ப்பளவில்

''..... கோட்டைனைப்
பிடித்தார் மயிலேறி பெரியகொடிக் செண்டாக்கள்
அடித்தார். பீரங்கிகளில் அனேகமெனக் குண்டு விட்டு
எழுப்பினார் சத்தம்....
''நாடுபுகழ் வடுகராசனுமே மீது சத்தம்
எனவே எண்ணி எழுந்து திடுக்கிட்டவனும்
மாதுதனை கைப்பிடித்து வர வெளியே
வரவே உள்மண்டபத்து வாசல்வெளி மூலைதன்னில்
உரமாய் வரும் போது உபாயமுள்ள கம்பெனியார்
மதிலேறி நின்று மாட்டியனும் பூரியும்தான்
...... கலீரெனவே சுட்டானே பூரிதுரை
(சிவகங்கை அம்மானை பக்கம் 126-127.)

*அந்தக் குண்டு பட்டு மன்னர் முத்து வடுகநாதர் இறந்தார் என்று வரைந்துள்ளார். இவரைப் பற்றி மருது பாண்டியர் மன்னர் ஆசிரியர்,*

''அம்மானை ஆசிரியர் மருது பாண்டியர் ஆட்சிக் காலத்தில் இளைஞராய் இருந்து விடுதலைப் போரினைப் பார்த்த பேறு பெற்றவர்'' (மருது பாண்டிய மன்னர் பக்கம் எண்13) என்று நற்சான்று வழங்கியுள்ளார். இந்த ஆசிரியர் எந்தப் போரைப் பார்த்தாரோ தெரியவில்லை!

ஏனெனில் காளையார் கோவில் முதல்போரினை 25.6.1772-ல் நடைபெற்றதை காதால் கேட்டு அறிந்தவராகக் கூட தெரியவில்லை. ஆதலால் வரலாற்றுப் புகழ் பெற்ற அந்தப் போரைப் பாடாதது மட்டுமல்ல, சிவகங்கை மன்னர் தற்செயலாக குண்டுபட்டு இறந்தார் என்று மன்னரது தியாகத்தை மறைத்து, சிறுமைப்படுத்தும் தொண்டினை அல்லவா செய்துள்ளார்.

சிவகங்கை கும்மி ஆசிரியரோ,
''காளையார் கோவில் சென்றேகிக்
கல்மதிலேறியே ஏணி வைத்து
துப்பாக்கி வார் பண்ணிச் சுட்டிடவே
தூங்கிய துரையும் ராணியும்தான்
இப்ப வெடிச் சத்தம் ஏதனவே
இருபெருங் கை கோர்த்து வெளியில் வந்தார்
கண்டந்த சிப்பாயி சுட்டிடவே
காந்தனும் ராணியும் பட்டிடவே...''

(சிவகங்கை கும்மி பக்கம் 19)

என்று உறங்கி வெளிவந்த மன்னர் முத்து வடுகநாதர் குண்டுபட்டு உயிர் துறந்தார் என்று பாடியுள்ளார் அம்மானையாரை அடியொற்றி.

அப்பொழுது மருது இருவரும் முறையே மங்கலத்திலும், சிவகங்கையிலும் இருந்தனர் என்பதையும் மன்னர் இறந்தபிறகு தான் காளையார் கோவில் வந்தனர் என்றும் அவர்கள் வரைந்துள்ளனர். இதற்குப் பிறகு ''மருது வீரர்கள் போரில் இறங்கினர்... சிவகங்கைக்கு ஏற்பட்டு வரும் பெரும் சேதத்தை எண்ணி போரை அன்று மாலையே முடிவுக்கு கொண்டு வந்தனர்'' (ம.பா.ம.பக்கம் 92-93) எனக் குறிப்பிட்டுள்ளது. இதற்கு ஆதார அடிக்குறிப்பாகக் கொடுக்கப்பட்டுள்ள மேஜர், விபார்ட்டின்'' எழுத்தில்,

மன்னர் கொல்லப்பட்ட பிறகு மருது வீரர் போரை அன்று மாலை வரை நீடித்தனர் என்ற செய்தியே இல்லை!

அம்மானை, கும்மி ஆசிரியர்களும் மன்னர் இறந்தபிறகு, மருது வீரர்கள் காளையார்கோவில் வந்து அன்று மாலை வரை சண்டையிட்டதாகச் சொல்லவில்லையே!

''ஆனாலும் பொறாதும் அகற்றுவோம் நமது துரை
சாமி போனாலும் தளம் போய் விசனமில்லை
உலோகமாதாவை நொடிக்குள் தப்ப வைத்து
சாகாமல் காத்தல் தருமமே யாகுமதல்...''

(சிவகங்கை அம்மானை பக்கம் 129)

''தாட்டிக ரிருவரும் செத்தா ரென்று
தளவாய் இருவரும் தாமறிந்து
கையில் வளரியைத் தானெறிந்து
கன்னத்தில் அறைந்து அழுதலறி
வையத்திலினிச் சண்டையென்ன
வந்த படையெல்லாம் போங்களென்று
அண்ணனும் தம்பியும் யிருபேரும்...''

(சிவகங்கை கும்மி பக்கம் 19)

*அப்புறம், மருது வீரர் போர் தொடர்ந்து பற்றிய செய்திகளை மருது பாண்டிய மன்னர், நூலாசிரியர் எங்கிருந்து பெற்றார்? என்ன ஆதாரம்? அவருக்கு மட்டும் தெரிந்து இருந்ததால் தானே தெளிவாக வரைந்துள்ளர்! நிச்சயமாக இது அவரது கற்பனையில் கண்ட போராகத் தானிருக்க வேண்டும்.*

பக்கம்: 157 - 158

> ''... சேதுபதி இளைஞர். அவரிடம் வேலு நாச்சியாரது புதல்வி வெள்ளச்சி பற்றிய ஆசைக் கனவுகளை நாளுக்கு நாள், கொஞ்சம் கொஞ்சமாக வளர்ந்திடச் செய்தார் கௌரிவல்லவர்.''
>
> ''... பாரம்பரிய பெருமை மிக்க சேதுபதி எப்படி அவ்வளவு எளிதாக கௌரிவல்லவரின் சூழ்ச்சியில் விழுந்தார் என்பது விந்தையே, என்றாலும் நடந்து முடிந்து விட்ட வரலாற்று நிகழ்ச்சியை நாம் நம்பித்தான் ஆக வேண்டும்.''

*இவ்விதம் ''சூர்ப்பனகை சூழ்ச்சிப்படலம்'' என்ற தலைப்பில் எழுதியுள்ளார். படிப்பதற்கு இலக்கியம் நன்றாகத்தான் இருக்கும். ஆனால் வரலாற்றை, கற்பனையும் ஒப்பனையும் மிக்கதாகத் திரித்து விடமுடியாதே. இரண்டாயிரம் ஆண்டுகளுக்கு முன்னர் இருந்த சமுதாயத்தின் பிரதிநிதியாகச் சித்தரிக்கப்பட்ட, ''அரக்கர் செய்த பாவமும் அல்லவை செய்த அறமும் ''ஆன சூர்ப்பனகை, இராவணன் ஆகியோருடன் படமாத்தூர் கௌரி வல்லவரையும் சேதுபதி மன்னரையும் ஒப்பிட்டுக் காட்டியிருப்பது அருவருக்கத் தக்கதாக இல்லையா?*

கௌரி வல்லபர் காளையார் கோவில் சிறையில் இருந்து உயிர் தப்பி வந்த பொழுது தான் (கி.பி.1792-ம் ஆண்டின் இறுதியில்) இராமநாதபுரம் கோட்டையில் சேதுபதி மன்னரைச் சந்தித்தார். தமக்கு இழைக்கப்பட்ட தீங்குகளைத் தெரிவிப்பதற்காக. அப்பொழுது சேதுபதி மன்னர் மூன்று மனைவிகளுக்குக் கணவனாக இருந்தார் அவருக்கு வயது 34. ஆனால் மருது பாண்டியர் மன்னர் நூலாசிரியர் அப்பொழுது சேதுபதி மன்னருக்கு வயது இருபது (''ம.பா.ம.பக்கம் 157) என்று எவ்வித ஆதாரமில்லாமல் வரைந்துள்ளார். அத்துடன் தமக்கு நிச்சயிக்கப்பட்ட பெண்ணை மணந்து கொள்ளுமாறு வேறு ஒருவரிடம் சென்று யாராவது நிர்ப்பந்திப்பார்களா? இதுவும் இலக்கியத்தில்தான் நடக்க முடியும். தான் காதலித்த இளவரசி தமயந்தியை, சுயம்வரத்தின் பொழுது இந்திரனுக்கு மாலை சூட்ட வற்புறுத்துவதற்கு, அதே தமயந்தியிடம் நளன் தூது சென்றதாக நளவெண்பா, நைடதம் ஆகிய இலக்கியங்களில்தான் காணமுடிகிறது.

ஆனால் சேதுபதி மன்னருக்கும் சிவகங்கைப் பிரதானிகளுக்கும் இடையில் எழுந்த ''சகோதர யுத்தங்களுக்கு'' காரணம் இது அல்ல வேறு உள.

முதலாவதாக சேதுபதி மன்னர் திருச்சிக் கோட்டை சிறையில் இருந்த பொழுது நவாப்பினது ஆட்சியில் சேதுபதி சீமையின் வடக்குப் பகுதி முழுவதையும் மன்னரது தாய்மாமனாரான ஆறுமுகம் கோட்டை மாப்பிள்ளைச் சாமித் தேவர், ஐதர் அலியின் படை உதவி பெற்று அவரது ஆக்கிரமிப்பில் வைத்து இருந்தார். கி.பி.1780-ல் சிவகங்கை மீட்சி பெற்ற பொழுது சிவகங்கைப் பிரதானிகளும் சேதுபதி நாட்டின் சில பகுதிகளைத் தங்களது கைவசம் வைத்திருந்தனர். கி.பி.1781 ஏப்ரலில் ஆற்காடு நவாப் அவரை விடுதலை செய்து மறவர் சீமையின் மன்னராக அங்கீகரித்து மீண்டும் இராமநாதபுரத்தில் அமர்ந்த பொழுது, மன்னர் முத்துராமலிங்க சேதுபதி மாப்பிள்ளைத் தேவன், மருது இருவர், ஆகியவர்களது ஆக்கிரமிப்பை அகற்றி மீட்டார். கி.பி.1795-ல் மீண்டும் சிறைப்படுத்தப்பட்ட பொழுது மன்னர் கம்பெனி கவர்னருக்கு எழுதிய கடிதத்தில் இதனைக் குறிப்பிட்டுள்ளார். மருதிருவர் மீது குரோதம் கொள்வதற்கான முதற்காரணம் இது.

அடுத்து, சிவகங்கைச் சொந்தமான தொண்டி துறைமுகத்தில் ஏற்றுமதி, இறக்குமதி செய்யப்படும் அனைத்துப் பொருள்களும் தொண்டிக்கு மேற்கே பத்துக்கல் தொலைவில் உள்ள இராமநாதபுரம் சீமையான திருவாடானையில் உள்ள சுங்கச்சாவடியில் உரிய சுங்கம் செலுத்திய பிறகுதான் வெளியே அனுமதிக்கப்படும். தஞ்சையில் இருந்து சிவகங்கைக்கு தொண்டி வழியாக எடுத்துச் சென்ற நெல் மூட்டைகளுக்கு சிவகங்கை அரசு செலுத்த வேண்டிய சுங்கவரி பாக்கி ரூபாய் பதினாயிரத்தை செலுத்தாமல் சிவகங்கை பிரதானிகள் இழுத்தடித்தனர்.

*இதனால் கோபமுற்ற சேதுபதி மன்னர் சேதுநாட்டின் வழியாகத் தொண்டி செல்லும் வாணிகச் சாத்துக்களின் வழியை மாற்றியமைத்து சிவகங்கைக்கு பட்டநல்லூர் (தற்பொழுதைய பார்த்திபனூர்) சுங்கச் சாவடி மூலமாக கிடைத்த வருவாயை இழக்குமாறு செய்தது. இதற்கு பதிலடியாக சிவகங்கைப் பிரதானிகள் சிவகங்ச்சை சீமையைக் கடந்து சேதுபதி சீமைக்குள் செல்லும் ஆற்றுக்கால்களை அடைத்து சேதுபதி சீமையின் வேளாண்மைக்கு ஆற்றுநீர் கிடைக்காமல் செய்தது.*

*இன்னும் இராமநாதபுரம், சிவகங்கைச் சீமைகளின் எல்லைகளில் நடைபெற்ற கால்நடை திருட்டு, தானியக் கதிர்கள் திருட்டு என்ற பல தொல்லைகள் இரு நாடுகளது அரசியல் உறவுகளுக்கு குந்தகம் விளைவித்தன என்பதுதான் வரலாறு வழங்கும் உண்மையாக உள்ளது. சூர்ப்பனகை நாடக சூழ்ச்சி அல்ல.*

பக்கம்: 220

> ''... சாசனத்தின் ஆண்டு கி.பி.1783 எனக் குறிப்பிட்டு இருப்பதால், கி.பி. 1772-ல் காலமான முத்து வடுக நாதரால் வழங்கப்பட்டிருக்க முடியாதென்பதும், கி.பி.1780 — 1801 வரை ஆட்சி பொறுப்பில் இருந்த மருதுபாண்டியர்களாலேயே வழங்கப்பட்டதென்பதும் உறுதியாகிறது.''

பக்கம் 289

> ''கி.பி.1794 சூடியூர் சத்திரத்திற்கு அதன் அக்தார் வெங்கடேசுவர அவதானிக்கு கிராமங்கள் அளித்து முத்து வடுகநாத பெரிய உடையாத் தேவர் வழங்கியதாகக் குறிப்பிடும் செப்புச்சாசனம்..''

*மருது இருவர் மன்னரே என்று நூலாசிரியது நிலையை உறுதிப்படுத்த குறிப்பிடப்பட்டுள்ள பதினோரு தொல்லியல் சாசனங்களில் இரண்டைப்பற்றித்தான், மேலே குறிப்பிடப்பட்டுள்ள இரண்டு சாசனங்களும் இவை அவரது கருத்துக்கு நேர்மாறான, வலுவான, சான்றுகள் ஆகும் என்பதை அவர் அறியவில்லை. காரணம் அவருக்கு கல்வெட்டு, செப்பு சாசனம் ஆகியவைகளைப் படித்தறியும் வாய்ப்பு இல்லை போலும்!*

*இந்த சாசனங்கள் முறையே கி.பி.1783-லும், 1794-லும் வழங்கப்பட்டவை. வழங்கியவர் சிவகங்கை மன்னர் விசைய ரகுநாதப் பெரிய உடையாத் தேவர் என்று இந்தச் செப்பு பட்டயங்களில் தெளிவாகக் குறிப்பிடப்பட்டுள்ளன. (பக்கம் 133 பார்க்க) அப்படியிருந்ததும் ''கி.பி.1772-ல் காலமான முத்து வடுகநாதத் தேவரால் வழங்கப்பட்டிருக்க முடியாது என்றும், இந்த அறக்கொடைகள் மருது பாண்டியர்களால் வழங்கப்பட்டது'' என்றும் நாலாசிரியர் முடிவு*

செய்துள்ளார். வரலாற்றுச் சான்றுகளை எவ்விதம் ஆய்வு செய்து எத்தகைய முடிவு மேற்கொண்டுள்ளார் பார்த்தீர்களா? கி.பி.1772-ல் முத்து வடுக நாதர் காலமாகிவிட்டார். உண்மை, முக்காலும் உண்மை. கி.பி. 1782-லும் கி.பி.1794-லும் அல்லவா அவை வழங்கப்பட்டுள்ளன. இந்த ஆண்டுகளில் சிவகங்கையில் மன்னர்கள் இல்லையா? ஆமாம். இப்பொழுதுதான் நினைவுக்கு வருகிறது கி.பி.1780 முதல் 1801 வரை சிவகங்கையில் மருது இருவர் ஆட்சி நடந்தது என்பதை நிலை நாட்டத்தானே ஆசிரியர் இந்த நூலை எழுதியிருக்கிறார். அப்படி மருதிருவருக்கு விசைய ரெகுநாத பெரிய உடையாத் தேவர் என்ற சிறப்பு பெயர்கள் இருந்ததா...? இல்லையே! ஆமாம் என்று எழுதிவிட்டால் பிரச்சனையே இல்லாது போய் இருக்கும்! மருது இருவர் வழங்கிய பட்டயங்கள் என்று யாரும் எளிதில் சொல்லிவிடுவார்களே!

களவுத் தொழில் ஈடுபட எண்ணியவன் முதலில் தலையாரி வீட்டில் கைவரிசை காட்டினான், என்பது மறவர் சீமையில் வழங்கும் பொது மொழி. கி.பி.1780 முதல் கி.பி.1801 வரை தொடர்ந்து இருபத்து ஒரு ஆண்டுகள் மருதிருவர் சிவகங்கை மன்னராக இருந்தனர் என்று தொல்லியல் சாசனங்களைத் துணைக்கு எடுக்கப்போய், தென்னைமரத்திலே ஏறியவனுக்கு தேள் கொட்டிய கதையாக நூலாசிரியர் சொல்லக்கூடிய அந்த இருபத்து ஒரு ஆண்டுகால கட்டத்தில் வேறு ஒருவர், மருது பாண்டியர் அல்லாதவர், சிவகங்கை மன்னராக இருந்தார் என்ற உண்மை, பொய்யையும் சரித்திரப்புரட்டையும் புழுதியிலே புரட்டிவிட்டு பூதாகரமாக எழுந்து நிற்கிறது. அந்த மன்னர் யார் தெரிகிறதா? அவர் தான் சிவகங்கை இளவரசி வெள்ளச்சி நாச்சியாரை மணந்த சக்கந்தி வேங்கன் பெரிய உடையாத் தேவர், அவரது அரசு பெயர்தான் அரசு நிலையிட்ட விசைய ரகுநாதப் பெரிய உடையாத் தேவர் ஆவார். ''அரசு நிலையிட்ட,'' ''விசைய ரகுநாத'' என்ற பொதுவான சிவகங்கை மன்னர்களது விருதுகளுடன் அவரது இயற் பெயரான பெரிய உடையாத் தேவர் என்பதும் சேர்ந்ததுதான் இந்த அரசுப் பெயர். நூலாசிரியர் குறிப்பிட்டுள்ள இரண்டு செப்பு பட்டயங்களில் மட்டுமல்ல. இந்த மன்னர் ஏராளமான அறக்கொடைகளை ''அரசு நிலையிட்ட விசைய ரகுநாதப் பெரிய உடையாத் தேவர்'' என்ற பெயரில், கி.பி.1800-ம் ஆண்டுவரை வழங்கி உள்ளார். அவர் வழங்கியுள்ள செப்பேடுகளில் சிலவற்றின் உண்மை நகல்களும் இந்த நூலில் இணைப்பாக கொடுக்கப்பட்டுள்ளன.

பக்கம்: 303

> ''பதினைந்து வயதான துரைச்சாமி கடைசியாகப் பிடிபட்டு நாடு கடத்தப்பட்டார். அவரை பற்றிய கடைசிச் செய்தியைத் தருவது பேராசிரியர் ராக்கப்பனின் அறிக்கை. அதன்படி துரைச்சாமி எந்த வாரிசுதாரையும் விட்டுச் செல்லவில்லை... எனவே கி.பி.1821-ல்

> பினாங்கில் இருந்து திரும்பி துரைச்சாமி உறுதிக்கோட்டை வரவில்லை. மதுரை வந்து அங்கு தங்கிவிட்ட துரைச்சாமி மணம் செய்து கொண்டோ அல்லது மணம் செய்து கொள்ளாமலோ வாரிசின்றி அங்கே காலமானார் எனத் தெரிகிறது.''

*மேலே குறிப்பிட்டிருப்பதில் துரைச்சாமி மதுரையில் காலமானார் என்பது மட்டும்தான் உண்மை. தளபதி வெல்ஷ்" குறிப்பிட்டிருப்பது போல, துரைச்சாமி கைது செய்யப்பட்டு பினாங்கிற்கு அனுப்பப்பட்ட பொழுது அவருக்கு வயது 15 அல்ல இருபதிற்கு மேல். திருமணமாகி மகனும் இருந்தான். அந்தச் சிறுவனது பெயரும் மருது தான். அவர்கள் மீது பரிவு கொண்ட ஜமீன்தார் கௌரி வல்லப உடையாத் தேவர், பகைவரது குடும்பம் என்று கருதாமல் அவர்களுக்கு மாதந்தோறும் இருநூறு சுழி சக்கரம் பணம் (ரூ.253.9.11) வீதம் கி.பி.1805 வரை கொடுத்து உதவி வந்தார். பிறகு இராமநாதபுரம் ஜமீன்தார் அவரது ஆட்சிக் காலம் வரை (கி.பி.1812) அந்தக் குடும்பத்திற்கு மாதந்தோறும் படி கொடுத்து பராமரித்து வந்தார். பின்னர் அவர்கள் வறுமையில்தான் வாழ்ந்தனர். (பார்க்க தமிழ்நாடு ஆவணக் காப்பக மதுரை மாவட்ட தொகுதி 4669 பக்கம் 99)*

*பினாங்கில் இருந்து திரும்பிய துரைச்சாமி, மதுரை வந்து மாலபட காவல் துறை கண்காணிப்பாளரைச் சந்தித்து தாம் மதுரையில் தங்கி வாழ விரும்பவுதாகவும் அதற்கான உதவிகள் கோரி மனுக் கொடுத்தார். ஆனால் திடீரென்று அவரது உடல் நலம் மோசமாகி மரணமடைந்தார். (வைகாசி 11) அவரது சடலம் காளையார் கோவிலுக்கு எடுத்துச் செல்லப்பட்டு ஜமீன்தார் கௌரி வல்லப உடையாத் தேவரது பொருட் செலவில் அவரது அடக்கம், அந்திமக் கிரிகையை நடத்தப்பட்டன.*

*இந்த விவரங்கள் அனைத்தும் துரைச்சாமியின் மகள் மருது சேர்வைக்காரர்கள் கி.பி.1821 மே மாதம் இராமநாதபுரம் கலைக்டருக்கு கொடுத்த மனுவில் காணப்படுகின்றன. (பார்க்க மதுரை மாவட்ட பதிவேடு தொகுதி 4669/பக்கம் 101-102)*

*இன்று காளையார் கோவில் ஆலயத்திற்கு எதிரில் உள்ள சந்தில் காணப்படும் சமாதியும் அங்குள்ள தனியான சிலையும் துரைச்சாமியாகத்தான் இருக்க வேண்டும் என்று நம்பப்படுகிறது.*

பக்கம்: 487

> ''போராளி இயக்கத்திற்குத் தன்னை அர்ப்பணிப்பதற்காக முத்துக் கருப்பத் தேவர் திருமணம் செய்து கொள்ளவில்லை. இன்று இராமநாதபுரத்தில் உள்ள அவரது வழியினர் (அவருக்குத் திருமணம் ஆகாததால்) நேரடி வாரிசுகள் அல்ல, அண்ணன் தம்பி வழியினர்.''

பக்கம் 488

"மருதிருவருடன் அவரும் 24-10-1801 தேதி அன்று திருப்புத்தூரில் தூக்கில் போடப்பட்டார்."

*மீளங்குடி முத்துக் கருப்பத் தேவர் பற்றி மருது பாண்டியர் மன்னர் நூலாசிரியர் வரைந்துள்ளவை பச்சை பொய் என்பதை கும்பெனியாரது ஆவணங்கள் உறுதியளிக்கின்றன. மீனங்குடி முத்துக் கருப்பத் தேவர் திருமணமானவர். அவருக்கு ஒரே தம்பி மட்டும் இருந்தார். பெயர் கனக சபாபதித் தேவர். கி.பி.1799-ம் ஆண்டு கிளர்ச்சியில் தீவிரமாக ஈடுபட்டதற்காக 16.11.1801-ம் தேதியன்று அவர் அபிராமத்தில் கும்பெனியரால் தூக்கிலிடப்பட்டார். (பார்க்க மாவீரர் மருது பாண்டியர் பக்கம் 160) காளையார் கோவில் போர் முழுத் தோல்வியில் முடிந்தவுடன், மருதிருவர் அணியில் கும்பெனியாரது பிடியில் சிக்காமல் தப்பித்தவர்கள் மாவீரன் மயிலப்பன் சேர்வையும், மீனங்குடி முத்துக் கருப்பத் தேவரும் தான். காரணம், காளையர் கோவில் போரின் பொழுது அவர்கள் இருவரும் இராமநாதபுரம் சீமையில் கும்பெனியாரது இலக்குகளை அழிப்பதில் ஈடுபட்டு இருந்தனர். பின்னர் முத்துக் கருப்பத் தேவரை, அவர் போட்டி அரசு அமைத்து இருந்த இராமநாதபுரம் சீமையின் குத்தகை நாட்டில் (அனுமந்தக்குடி, ஓரூர்பகுதி) கி.பி.1803-ல் கைது செய்யப்பட்டு இராமநாதபுரம் கோட்டையில் தளபதி மார்டின் கண்காணிப்பில் காவலில் வைக்கப்பட்டார்.*

*(பார்க்க* Madura Collectorate Records Vol. *1146/23-9-1803/பக்கம்.39)*

*காவலில் வைக்கப்பட்ட அவரது குடும்பத்தினர்.*

| | | |
|---|---|---|
| *1.* | *முத்துக் கருப்பத் தேவர்* | *1* |
| *2.* | *அவரது தாயார்* | *1* |
| *3.* | *மனைவிகள்* | *2* |
| *4.* | *அவரது குழந்தைகள்* | *4* |
| *5.* | *முத்துக் கருப்பத் தேவரது தங்கை* | *1* |
| *6.* | *முத்துக் கருப்பத் தேவரது தங்கை கணவர்* | *1* |
| | *ஷயாரின் குழந்தைகள்* | *3* |
| *6.* | *தியாகியான தம்பி கனகசபைத் தேவரது மனைவி* | *1* |
| *7.* | *ஷையாரது கைக்குழந்தை* | *1* |
| *8.* | *பணியாட்கள், ஆடவர், மகளிர்* | *10* |
| | *மொத்தம்* | *26* |

*(பார்க்க: மாவீரர் மருது பாண்டியர், பக்கம் 160 தமிழ்நாடு ஆவணக் காப்பக பதிவேடு, எம்.டி.ஆர். தொகுதி எண் 1146/1803, 24.10.1803/ பக்கம் 9)*

*இதனையடுத்து படிச் செலவு வழங்கிய உத்திரவோ அல்லது முத்துக் கருப்பத் தேவரை, விசாரணைக்கு உட்படுத்தி தண்டனை வழங்கிய விவரம் அல்லது அவரது தலைக்கு விளம்பரப்படுத்தப்பட்ட ஓராயிரம் சக்கரம் பணம் பரிசு வழங்கப்பட்டது போன்ற விவரங்கள் கிடைக்கவில்லை. இவருடன் இணைந்து செயலாற்றிய சித்திரங்குடி மயிலப்பன் சேர்வைக் காரரைக் கைது செய்தவுடன் அவர்மீது பாளையங்கோட்டை சிறையில் பகிரங்க விசாரணை நடத்தப்பட்டு அவருக்கு மரண தண்டனை வழங்கப்பட்டது. அபிராமத்தில் 15.7.1803-ல் தூக்கில் தொங்கவிடப்பட்டார். ஆனால் முத்துக்கருப்பத்தே வரைப்பற்றிய கி.பி.1816-ல் வருட ஆவணம் உள்ளது. அப்பொழுது கலைக்டர் அவரது மனு ஒன்றினை 15.8.1816 தீயன்று மேலிடத்திற்கு பரிந்துரைத்தது அது.*

*ஆதலால் முத்துக் கருப்பத் தேவர் மீதும் விசாரணை நடத்தப்பட்டு தண்டனையும் வழங்கப்பட்டிருக்க வேண்டும் என ஊகிக்கப்படுகிறது.*

பக்கம்: 482, 83

> ''இக்கிளர்ச்சியில் மக்களது ஆவேசம் மோசமான அடக்குமுறையினாலும், சிவகங்கைச் சீமை சேர்வைக்காரர் துரோகத்தினாலும் ஒடுக்கப்பட்டு ஓய்ந்தது'' (விடுதலைப் போரில் சேதுபதி மன்னர், பக்கம் 121-22) மேலே கண்ட எனது எழுத்துக்களை மருது பாண்டியர் மன்னர் நூலாசிரியர் இந்தப் பக்கத்தில் அப்படியே எடுத்துக் கொடுத்துவிட்டு ''வாழ்நாளெல்லாம் ஆங்கிலேயரை எதிர்ப்பதையே இலட்சியமாகக் கொண்டிருக்க சின்னப் பாண்டியரின் ஒரே ஒரு செயலை மட்டும் வைத்துக் கொண்டு சிவகங்கைச் சீமை சேர்வைக்காரரின் துரோகம் என்று கூறிவிடுவதா? ஒரே ஒரு நிகழ்ச்சியை வைத்து ஒருவரை எடை போட்டு விடலாமா?'' என்று கேட்டு விட்டு மீண்டும், ''இந்தப் பிரச்சினையில் குற்றம் சாட்டுகிறவர், தீர விசாரணை செய்தாரா? இல்லை ஆங்கிலேயரால் பாதுகாக்கப்பட்டு வந்துள்ள அதாவது ஒரு தரப்பு ஆவணத்தை வைத்துக் கொண்டு முடிவுக்கு வந்துள்ளார். மருது பாண்டியர் தரப்பு ஆவணங்களைத் தேடியதாகக் குறிப்பு இல்லை. உண்மை அறிய வரலாற்றில் புகுந்து விசாரணையாவது மேற்கொண்டாரா?''

*இந்த வினாவையும் அந்த நூலாசிரியர் எழுப்பி உள்ளார். ஆதலால் இந்தப் பக்கங்களில் அந்த வினாவிற்கான விளக்கத்தையும் கொடுப்பதற்கு கடமைப்பட்டுள்ளேன். பொதுவாக சிவகங்கைச் சீமை பற்றிய வரலாறு நூல் எதுவும் இதுவரை வெளியிடப்படாத நிலையில், எனது இந்த நூல் வரையுமாறு கேட்டுக் கொண்ட பல அன்பர்களது வேண்டுகோளுக்கு இணங்க இந்த முயற்சியை மேற்கொண்டுள்ளேன். சிவகங்கைச் சீமையின் மாவீரர்களான மருது பாண்டியரது விடுதலை இயக்கத்திலும்,*

